மக்கள் வெளியீடு



# மயிலை சீனி. வேங்கடசாமி
# ஆய்வுக் கட்டுரைகள்



மக்கள் வெளியீடு

பதிப்பாசிரியர்கள்

மே.து. ராசு குமார் - ப. சரவணன்

# மயிலை சீனி. வேங்கடசாமி ஆய்வுக் கட்டுரைகள்

தொகுதி - 4

*பதிப்பாசிரியர்கள்*

மே.து. ராசு குமார் – ப. சரவணன்

*தொகுப்பாசிரியர்*

ப. சரவணன்

விலை ரூபாய் தொன்னூறு

முதற்பதிப்பு டிசம்பர் 2001

மக்கள் வெளியீடு 64

*கோப்பு*

ராகவேந்திரா லேசர் பிரிண்டர்ஸ்

15 தானப்ப தெரு திருவல்லிக்கேணி சென்னை 600 005

*அச்சு*

தேவா ஆப்செட் சென்னை 600 005

*நூலமைப்பு*

மக்கள் அச்சகம் சென்னை 600 002



**மக்கள் வெளியீடு**

49 உனிசு அலி சாகிப் தெரு எல்லிசு சாலை சென்னை 600 002

தொலைபேசி அலு. 8545532 இல் 8475561

# உள்ளடக்கம்

## தொகுதி - 4

## பொது

## கதை



## மொழிபெயர்ப்பு

## பெருமக்கள்



## நேர்காணல்



## அணிந்துரை

**முன்னுரை**

# சம்பாபதி

தமிழர், தெலுங்கர், வடுகர், மராடர், மலையாளர், வங்காளர், பாஞ்சாலர், நேப்பாளர் முதலிய பல வகைப் பாஷை பேசும் பல வகைக் குழுவினர் வசிக்கும் இத்தேசத்தை இப்போது இந்தியா என்னும் பெயரால் வழங்குகின்றோம். இவ்விந்திய நாட்டைப் 'பரதகண்டம்' என்றும் சொல்லுவார்கள். மிகப் பழைய காலத்தில் - பன்னூற்றாண்டுகளுக்கு முன் - இந்நாட்டின் தென்பகுதியிலிருந்தவர் இந்தியாவை 'நாவலந்தீவு' என்னும் பெயரால் வழங்கி வந்தனர். அப்புராதன காலத்தில்தானே வட பகுதியிலிருந்தவர் இந்நாட்டை 'ஜம்புத்தீவு' என்று பெயரிட்டழைத்தனர். நாவலந்தீவு என்றாலும் ஜம்புத்தீவு என்றாலும் பொருள் ஒன்றே.

இந்திய மக்களாகிய நம்மை ஈன்றெடுத்த அன்னையாகிய இந்தியத் தாயை - பாரத மாதாவை - இக்காலத்துள்ள நாம் மறந்திருந்தோம். அரசாங்க சம்பந்தமாய் மாறுகொண்டிருப்பதன் காரணமாக அதாவது தேசீய இயக்கத்தின் காரணமாக, இப்போது 'இந்தியத் தாய், பாரத மாதா' என்னும் பெயர்களை மாத்திரம் வெறும் வாய்பாடமாகச் சொல்லக் கற்றுக் கொண்டோம்! அத்திருப் பெயர்களையாவது வாயினாற் சொல்லக் கற்றுக் கொண்டது நம் பெரும் புண்ணிய வசமாகும். ஏனென்றால், அத்திருநாமங்களை யுச்சரிப்பதனாலேயே உலகத்தில் உன்னத பதவியை நாம் அடையக்கூடும்; அத்திருப்பெயர்கள் தேசாபிமானத்தையும் வீரத்தையும் நம் உள்ளத்தில் உதிக்கச் செய்கிறதாகையால், நம் அன்னையாகிய இந்தியத் தாயிடம் நாம் ஆர்வத்தோடும் பணிவோடும் அன்போடும் இருக்க வேண்டுமென்பதை முற்றும் மறந்து விட்டோம். அவ்வன்னை நம் மாட்டு எவ்வளவு கருணையுங் கனிவுங் கொண்டிருக்கிறா ளென்பதை யறியாமலு மிருந்து விட்டோம்.

இந்திய நாட்டின் உன்னத நிலைமைக்கும் பெருமைக்கும் சிறப்புக்கும் காரணர்களாயிருந்த நம் மூதாதையர், நம் அன்னையாகிய இந்தியத் தாயின் உண்மையான சற்புத்திரர்களாய் அவள் மாட்டு அன்பும் பணிவு முள்ளவர்களாய் அவ்வன்னையைக் கண் போல் பாவித்து வழிபட்டு வந்தார்கள்.

இந்திய மாதாவின் பெருமைக்காகவும் அவள் சிறப்புக்காகவும் தங்கள் இரத்தத்தைச் சிந்தினார்கள், உயிரையுங் கொடுத்தார்கள். ஆகவே, அக்காலத்தில் இந்தியத் தாய் பெருமையடைந்தாள்; எல்லா நாடுகளையும்விடச் சிறந்து விளங்கினாள். நம் இந்தியத் தாய்க்கு இப்போது ஏதேனும் பெருமையும் சிறப்பும் உள்ளதாமானால், அப்பெருமையும் சிறப்பும் நம்மால் ஏற்பட்டனவல்ல; நம் மூதாதையர்களால் ஏற்பட்டன வென்றே உறுதியாகச் சொல்லலாம்.

இந்தியத் தாய் என்றும் பாரத மாதா என்றும் இக்காலத்து நாம் வழங்குகிற அன்னையை, நம் மூதாதையர் 'சம்பாபதி' என்னும் அழகிய திருப்பெயரிட்டு அழைத்தனர். நம் அன்னைமாட்டு நம் மூதாதையர் கொண்டிருந்த ஆர்வத்தின் மிகுதியை என் என்போம்! அவர்கள் 'குச்சாக்குடிகை' என்னும் பெயரமைந்த ஒரு சிறந்த ஆலயமமைத்து, அவ்வழகிய ஆலயத்தில் சம்பாபதியின் (இந்தியத் தாயின்) திருவுருவை அமைத்துப் பூசித்துப் போற்றினார்கள். ஒவ்வொரு நாளும் சிறுவர் சிறுமியர், ஆண் மக்கள் பெண் மக்கள் முதலிய அனைவரும் சம்பாபதியின் ஆலயம் சென்று அவ்வன்னையைப் புதிய மலர்களால் பூசித்து வந்தார்கள். இது, நம் நாடு உன்னத நிலையிலிருந்த காலை நடந்தவையாகும்.

சம்பாபதி, இச்சம்புத் தீவுக்கு (இந்தியாவுக்கு) காவல் தெய்வமாக விளங்கினாள்; விளங்குகிறாள். இந்தியா தேசத்திலுள்ள 'துறையுமன்றமுந் தொல்வலிமரனும், உறையுளுங் கோட்டமும்...............' ஆகிய எல்லா இடங்களையும் பொருளையும் காப்பவளாகிய அவ்வன்னை, தன் மணி வயிற்றில் தோன்றிய இந்திய மக்களின் துன்பத்தைப் போக்குவதில் கண்ணுங் கருத்துமாக உள்ளவள். நம் சீர்மையையும் நன்மையையுங் கண்டு களிப்பவள்; நம் சிறுமையையும் துன்பத்தையுங் கண்டு மனம் வருந்தி நாம் நன்மை பெற வேண்டி நற்றவம் புரிபவள். 'நாவலோங்கிய மாபெருந் தீவினுட், காவற்றெய்வம்' என்று *மணிமேகலையிற்* சிறப்பித்துச் சொல்லப்படும் இவ்வன்னை, முன் ஒரு காலத்து இந்திய நாட்டின் பகைவர்களாகிய அரக்கர்களால் நேரிட்ட துன்பங்களைக் கண்டு வருந்திக் கண்ணீர் உகுத்து, தன் மக்கள் அரக்கர் துயரம் நீங்கி இன்ப வாழ்வடையும்படி நாவல் மரத்தின் கீழிருந்து அருந்தவம் புரிந்து அத்துன்பத்தை நீக்கினாள். இதை,

> இளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து
> விளங்கொளி மேனி விரிசடை யாட்டி
> பொன்றிகழ் நெடுவரை யுச்சித் தோன்றித்

> தென்றிசைப் பெயர்ந்தவித் தீவகத் தெய்வதஞ்
> சாகைச் சம்பு தன்கீழ் நின்று
> மாநில மடந்தைக்கு வருந்துயர் கேட்டு
> வெந்திற லரக்கர்க்கு வெம்பகை நோற்ற
> சம்பு வென்பாள் சம்பா பதியினள்

என்னும் அடிகளால் உணரலாம். சம்பாபதி என்னுந் திருப் பெயருடைய இவ்வன்னை, என்றும் குமரியாகவே விளங்கு கின்றாள் என்றும் நற்றவத்திற் சிறந்த இவ்வன்னையின் திருமேனியும் சடையும் பொன் ஒளி போல் பொலிகின்றன வென்றும் பண்டைப் பனுவல்கள் பகர்கின்றன.

இந்தியத் தாயாகிய இவ்வன்னை, இப்போது நாமிருக்கும் நிலைமையைக் கண்டு பரிதபித்து மனம் வாடுகின்றாள். ஏனென்றால், அவ்வன்னையின் மணி வயிற்றில் தோன்றிய நாம் நம்முளொருவர்க்கொருவர் ஒற்றுமையின்றி சாதி வித்தியாசம் சமய வித்தியாசங்களையே பெரிதெனக் கொண்டு ஒருவருக் கொருவர் அன்பின்றி வாழாமல் வாழ்கின்றோம்.

அயல்நாட்டினின்று வந்தவரை நன்கு மதிப்போம்; அவரைத் தீண்டுவோம். அவரைச் சமமாகப் பாவிப்போம்; அவரோடு உண்போம். ஆனால், நம்மோடுடன் பிறந்தவரைத் தீண்டோம்; அவரோடு உறவாடோம்; அவர் நம்மின் தாழ்ந்தவர், அவரை ஒருபோதும் நன்கு மதியோம் என்னும் அநாகரிகத்தை மேற்கொண்டோம். சமவாய வாழ்க்கைக்கு இன்றியமையாத நன்மைகளையெல்லாம் கைவிட்டோம்; தீமைகளையெல்லாம் ஒன்று விடாமல் கைக்கொண்டோம்; துயர வாழ்வை மேற் கொண்டோம்; சிறந்த வாழ்வைத் துறந்தோம்.

அன்பை மறந்தோம்; ஒற்றுமையைக் குலைத்தோம். வீரத்தை மறந்தோம், சுதந்திரத்தை இழந்தோம். இவற்றோட மையாது, ஒப்பற்ற செல்வமாகிய பாரத மாதாவாகிய சம்பா பதியின் திருவடி தொழுவதையே மறந்து விட்டோம்.

ஆனால், நந்தாய் நம்மை மறந்தாளில்லை. பாரத மாதா என்றும் இந்தியத் தாய் என்றும் சம்பாபதி என்றும் சொல்லப்படுகின்ற நம் அன்னை, முன்னொரு காலத்து அரக்கரால் நேரிட்ட துயரம் நீங்க அருந்தவம் புரிந்தது போலவே, இன்றும் நம் துயரம் நீங்க நற்றவம் புரிந்து வருகின்றாள். அவள் புரியும் நற்றவத்தின் அறிகுறியாகவே இப்போது சில உத்தம புருஷர்கள் தோன்றி பல நற்செயல் புரிந்து வருகிறார்கள் என்பது தவறாகாது, சம்பாபதி என்னுந் திருப்பெயருடைய நம் இந்தியத் தாய், எல்லா உலகங்களையும் அண்டங்களையும் இயக்கும் அருட்சத்தியின் கூறாயிருப்பவள் என்பது சொல்லவும் வேண்டுமோ? எனவே, அவ்வன்னையின்

மக்களாகிய இந்தியர் அருட்சத்தியின் வன்மை யமையப் பெற்றவர் என்பது அங்கை நெல்லிக் கனியன்றோ?

நாம் ஒவ்வொரு நாளும் உண்மையன்போடு இந்தியத் தாயை (சம்பாபதியை)ப் போற்றிப் பணிந்து வருவோமாயின், எல்லாச் செல்வங்களோடும் சிறந்த சுதந்தர வாழ்வும் பெறுவோம் என்பதில் ஐயமுண்டோ? தாயை நேசித்து அன்பு பாராட்டாத பிள்ளை இருந்தென்ன? இறந்தென்ன? தாய் நாட்டை அன்புடன் நேசிக்காத மக்கள் வாழ்ந்தா லென்ன? அழிந்தா லென்ன? இந்தியத் தாயின் மக்களாகிய ஒவ்வொரு வரும், தாம் பிறந்த தாய் நாட்டுக்கு, பெருமையையோ மேன்மையையோ உண்டு பண்ணும் காரியத்தைச் செய்த பின்னரே தங்கள் உயிரை விடுவது உத்தமமாகும். அதுவே அழியாப் புகழும் இன்பமுமாகும். அதுவே பாரத மாதாவின் மனதுக்கு இன்பந் தருவது மாகும்.

நம் உயர்வும் தாழ்வும் நம்மிடத்திலேயே இருக்கின்றன. நமக்குள் வீரம் இருந்தால் நாம் உயர்வடைவோம். கோழை களாக இருந்தால் தாழ்வும் சிறுமையும் வறுமையும் இழிவும் அடைவோம். சுய ஆட்சி விரும்புவோன், அதாவது சுதந்தரப் போர்வீரன் வீரனாகவே விளங்கவேண்டும். அவனிடத்தில் அடிமைத் தனமும் கோழைத் தனமும் இருக்கக்கூடாது.

> நன்னிலைக் கட்டன்னை நிறுப்பானும், தன்னை
> நிலைகலக்கிக் கீழிடுவானும் நிலையினு
> மேன்மேலு யர்த்து நிறுப்பானுந் தன்னைத்
> தலையாகச் செய்வானுந் தான்.

இவ்வெண்பாவின் கருத்தை ஒவ்வொருவரும் கடைப் பிடித்தொழுகுவோமாக.

*லக்ஷ்மி*, மலர் 1, இதழ் 7, 1924

# ஆசார சீர்திருத்தம்

பண்டைக் காலந்தொட்டு ஒரு சமுதாயத்தில் பரம்பரையாக ஒழுகி வரும் பழக்க வழக்கங்கள் ஆசாரம் என்று சொல்லப்படும். இந்த ஆசாரங்கள் அல்லது பழக்க வழக்கங்கள், தேசத்திற்குத் தேசம், ஜாதிக்குஜாதி காலத்திற்குக் காலம் வெவ்வேறாகவும் ஒன்றுக்கொன்று முரணாகவும் காணப்படுகின்றன. ஒரு தேசத்தாரின் பழக்க வழக்கங்கள் பிறிதொரு தேசத்தாருக்கு இழிந்த ஒழுக்கமாகத் தோன்றுகிறது. ஒரு ஜாதிக்கு உகந்ததாகவுள்ள ஆசாரம் பிறிதொரு ஜாதிக்காரருக்கு முரண்படத் தோன்றும். எடுத்துக்காட்டாகச் சில ஆசாரங்களைச் சொல்வோம். இந்துக்களுள் உயர்ந்த ஜாதியாருள் கைம்பெண்கள் மறுமணம் புரிவது அநாசாரமாகக் கருதப்பட்டு வருகிறது. முகமதியர், ஐரோப்பியர் முதலியவர்களுள் கைம்பெண் மறுமணம் புரிவது, உகந்ததோர் ஆசாரமாகக் கருதப்படுகிறது. இந்துக்களுள் ஒருவன், தனக்கு ஒரு மனைவி இருக்கும்போதே, வேறு பல மனைவியரை (விருப்பமிருந்தால்) மணஞ்செய்து கொள்வது ஏற்புடைய வழக்கமாக இருந்து வருகிறது. ஆனால், கிறிஸ்தவர்களுக்குள் ஒருவன் தன் மனைவி, உயிருடன் இருக்கும்போது, வேறு மனைவியை மணந்து கொள்வது அநாசாரமாகக் கருதப்படுகிறது. ஐரோப்பியருள் ஆணும் பெண்ணும் கை குலுக்குவது ஆசாரமாக இருந்து வரினும், இந்துக்களுள் அவ்விதம் செய்வது அநாசாரமாகக் கருதப்படுகிறது. இங்ஙனம் பற்பல பழக்க வழக்கங்கள், பற்பல சாதியாராலும் பற்பல தேசத்தாராலும் ஒழுகப்பட்டு வருகின்றன.

தொன்றுதொட்டுப் பரம்பரையாக நடைபெற்று வருகிற இப்பழக்க வழக்கங்களில் பல, சமூகத்திற்கு நன்மை தரத்தக்கனவா யிருக்கின்றன. என்றாலும் அவற்றில், சிற்சில ஆசாரங்கள் (பழக்க வழக்கங்கள்) தீமை பயப்பனவாகவும் உள்ளன. அதாவது, தமது மூதாதைகளால் கையாளப்பட்ட சில பழக்க வழக்கங்கள், அக்காலத்தில் அவர்களுக்கு நன்மை பயந்தனவாயிருந்தாலும், கால வேறுபாட்டால் இக்காலத்தில் நமக்குத் தீமை புரிவனவா யிருக்கின்றன; அல்லது தீமைகளுக்குந் துன்பங்களுக்கும் முதற் காரணமாயிருக்கின்றன.

துன்பங்களுக்குந் தீமைகளுக்குங் காரணமாயுள்ள அவ்வழக் கங்களை நாம் விட்டுவிட வேண்டும், அல்லது, அவற்றைச் சீர்திருத்தி நன்மை பயக்கக் கடவனவாக அமைத்துக் கொள்ள வேண்டும். இதுதான் அறிவாகும்; நாகரிகமு மாகும்.

ஒவ்வொரு ஜாதியாருக்கும், தேசத்தாருக்கும் சீர்திருத்தங்கள் அவசிய மாகும். சீர்திருத்தந்தான் மக்கள் வாழ்க்கையை உயர்த்தும் ஏணி. சீர்திருத்தங் காரணமாகப் பல தேசங்கள் முதன்மை பெற்று நாகரிகமடைந்து உன்னத நிலையில் நிற்கின்றதை, நாம் நமது கண் முன்பாக இப்பொழுது காண்கின்றோம். இந்தியா தேசம், நம் தாய் நாடு, இத்தகைய உன்னத நிலையை அடைய வேண்டுமானால், இந்திய மக்களுள் சீர்திருத்தங்கள் அவசியம் செய்ய வேண்டும். தற்காலத்துக்குப் பொருந்தாத பல ஆசாரங்கள் (பழக்க வழக்கங்கள்) நம்மவர் களின் வழக்கத்தில் இருந்து வருகின்றன. அவை நம்மவர் உயர்ந்த வாழ்க்கையை நடாத்துதற்குப் பெருந் தடைகளாக உள்ளன. நமக்கு இதுகாலை ஆசார சீர்திருத்தங்கள் எவ்வளவு இன்றியமையாதன என்பதை ஒவ்வொருவரும் உணர வேண்டும்.

ஆசார சீர்திருத்த மென்றால் எல்லா ஆசாரங்களையும் அடியோடு ஒழித்துவிட்டுப் புதுப்புது ஆசாரங்களைக் (பழக்க வழக்கங்களை) கைக்கொள்வது அன்று. தீமைகளுக்குக் காரணமாயுள்ள ட'ழைய ஆசாரங்களை (வழக்கங்களை) ஒழித்துவிட்டு, அல்லது சீர்திருத்திக்கொண்டு பழைமையாக உள்ள நல்ல ஆசாரங்களைக் கைவிடாமல் மேற்கொண் டொழுகுவதுதான் ஆசார சீர்திருத்தமாகும். ஆசார சீர்திருத் தங்களினால் மக்கள் வாழ்க்கை சிறப்படையும் என்பது மாத்திரமல்ல, அதுவே சுய ராஜ்ஜியத்திற்கும் அடிப்படையாக விருக்கிறது. இக்காலத்து, நமது நாட்டில் பல அரசியல் கட்சியாரும், சுயராஜ்ஜியத்தைப் பெறும் நோக்கத்துடன் பற்பல அரசியல் சீர்திருத்தங்கள் கேட்கிறார்கள். நமது நாட்டிற்கு அரசியல் சீர்திருத்தங்கள் எவ்வளவு அவசியமாக விருக்கின்றனவோ, அவ்வளவு அவசியமாக (அதைவிட அதிகமாகவே) ஆசார சீர்திருத்தங்களும் இதுகாலை நமக்கு வேண்டியதாயிருக்கின்றன. தீண்டாமை ஒழிப்பது, தீண்டப் படாதவர்களை ஆலயங்களுக்குள் செல்ல அனுமதிப்பது, தீண்டப்படாத மக்களுக்குப் பொதுச் சாலைகளிலும், குளங் களிலும், வேறு நிலையங்களிலும் உரிமை கொடுப்பது முதலிய சீர்திருத்தங்கள் கிராமாந்தரங்களிலும் நடைபெற்றாலன்றோ, நமது நாடு உண்மையான சுயராஜ்ய நாடாக விளங்கும்?

ஆசார சீர்திருத்தங்களில் ஒரு சிலவற்றை இங்கு கவனிப் போம். பெண் மக்களைப் பற்றிய சீர்திருத்தம் இது காலை மிகவும் அவசியமாகும். சீர்திருத்தத்தைப் பற்றிப் பேசும்போது, முக்கியமாய்ப் பெண் மக்களின் சீர்திருத்தத்தைப் பற்றிப் பேசும்போது, அதை எதிர்த்து நின்று பல திக்குகளிலிருந்தும் கூக்குரல்கள் எழுகின்றன. சில ஆண்டுகளுக்கு முன் பெண் கல்வியைப் பற்றிச் சீர்திருத்தக்காரர்கள் பேசியபோது பெண் கல்வி கூடாது என்று சொல்லிப் பற்பல மூலைகளிலிருந்து கூக்குரல்கள் உண்டாயின. பெண் மக்கள் கல்வி கற்பதனால் ஜாதி கெட்டுவிடும், பெண் மக்கள் கெட்டுப் போய் விடுவார்கள், தேசத்திற்கே நாசமுண்டாகும் என்று பழைய பாட்டிமார்களும், போலி வைதீகர்களும், சீர்திருத்த விரோதிகளும் பெருங் கூச்சலிட்டு ஊரைக் கலக்கினார்கள். இவ்வளவு எதிர்ப்புகளுக்கும் தோல்வியுறாமல் 'பெண் கல்வி' என்னும் சீர்திருத்தம் நல்ல காலமாக இப்போது வேரூன்றி விட்டது. இப்போது பெண் கல்வியை வெறுப்பவராவது, எதிர்ப்பவராவது இல்லை என்றே சொல்லலாம்.

'பெண் கல்வி' விஷயத்தில் இவ்வளவு கூக்குரலிட்ட வர்கள், பெண் மக்களுள் கைம்பெண்களாக விருப்பவர்கள் ‘மறுமணம் புரிந்து கொள்ளலாம்’ என்னும் சீர்திருத்தத்தைப் பற்றிப் பேசினாலும் எழுதினாலும் சீர்திருத்த விரோதிகளும், பழமை பழமை என்று சொல்லும் பாட்டிமார்களும், போலி வைதீகர்களும் எவ்வாறு நிந்தித்துச் சபிப்பார்களென்று நமக்குத் தெரியும். வானம் இடிந்து விழுந்துவிட்டதுபோல அவர்கள் கதறுவார்கள். ஆனால், உண்மை அறிவாளிகள் இச் சீர்திருத்த விரோதிகளின் நிந்தனைக்கும் செவி கொடுக்கக் கூடாது. அற்ப சொற்ப விஷயங்களுக்கெல்லாம் நமது நாட்டில் பெருங் கூச்சல் கிளம்புவதும், விடா முயற்சியுள்ள முற் போக்கான மனிதர் அச்சீர்திருத்தங்களைச் செய்து காண்பித்த பிறகு கூச்சலிட்டவர்கள் கூக்குர லொழிந்து, தாங்களும் அச்சீர்திருத்தத்தின்படி ஒழுகி வருவதும் நமது நாட்டின் (முக்கியமாகத் தமிழ்நாட்டின்) இயற்கையாக விருக்கிறது. இவ்வளவு ஏன்? சில வருஷங்களுக்கு முன் நமது நாட்டுச் சிறுவர்கள் தலை மயிரை மேற்குத் தேச முறைப்படி 'கிராப்' செய்து கொள்ளத் தொடங்கியபோது ஆசாரம் கெட்டுவிட்ட தென்றும், மதம் கெட்டுவிட்டதென்றும், சாதி கெட்டுவிட்ட தென்றும் பலர் பேசினார்கள்; தூற்றினார்கள். இப்பொழுதோ 'கிராப்' வழக்கம் சாதாரணமாகப் போய்விட்டது. முன் தூற்றியவர்கள் இப்பொழுது வாயடங்கி வாளா கிடக் கின்றனர். சில வருஷங்களுக்கு முன் ஆங்கில கலாசாலையில்

படிக்கும் பிராமணச் சிறுவன் கலாசாலையிலிருந்து வந்தவுடன் வீட்டிற்குள் செல்ல விடப்பட்டானல்லன். அவன் சட்டைகளையும் புத்தகங்களையும் வாசலிலே வைத்துவிட்டுக் குளித்துச் சுத்திசெய்து கொண்ட பிறகுதான், வீட்டிற்குள் நுழைய வேண்டியிருந்தது. ஆனால், அந்த வழக்கம் இப்பொழுது எங்கே போய்விட்டது? இப்பொழுது பிராமணச் சிறுவர்கள் ஆங்கில கலாசாலைகளிலிருந்து மாத்திரமல்ல, வேறு பல இடங்களுக்குச் சென்றிருந்து வீட்டுக்குத் திரும்பியவுடன் தாராளமாக உள்ளே நுழைகிறார்கள். சொற்ப ஆண்டுகளுக்கு முன் இருந்த ஆசாரம் (வழக்கம்) இப்பொழுது மாறுபட்டு விடவில்லையா? ஆகவே காலத்திற்குத் தக்கவாறு ஒழுக்கங்கள் (ஆசாரங்கள்) மாறுபடுவதினால் யாதொரு இழுக்கும் உண்டாகாது. ஆனால் எந்தச் சீர்திருத்தமானாலும் முதன்முதலில் எதிர்க்கப்பட்டுத்தான், பின்னர் நிறைவேறும். நமது நாட்டின் போக்கு அவ்விதமானது. ஆகவே, கைம்பெண்களின் மறுமணத்தைப் பற்றிப் பேசும்போதும், கூக்குரலும் வசை மொழிகளும் முதன்முதல் அதிகமாகப் புறப்படும். அவற்றையெல்லாம் சீர்திருத்தக்காரர்கள் பொருட் படுத்தக் கூடாது.

நமது நாட்டில், ஆண் மக்களைவிடப் பெண் மக்கள் அதிகமாக இருக்கிறார்கள். மற்ற தேசத்தோடு நமது தேசத்தையும் நோக்கும்போது நம் தேசத்தில் கைம்பெண் களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது. அதிலும் மிகுந்த வருத்தந் தரத்தக்கது என்னவென்றால், நமது நாட்டில் இளங் கைம்பெண்கள் அதிகமாக இருக்கிறார்கள் என்பதே. இவற்றிற் கெல்லாம் காரணம் நமது பழைய ஆசாரங்களே யாகும். கைம்பெண்களுக்கு மறுமணம் செய்யக் கூடாது என்னும் ஆசாரம் (வழக்கம்) நமது நாட்டில் ஏராளமான கைம் பெண்களைப் பரிதாப நிலைமையில் வைத்திருக்கிறது. பாலிய விவாகம் என்னும் கொடிய வழக்கம் (இந்த ஆசாரம் பிராமணர்களில் அதிகம்) நமது நாட்டில் இளங் கைம் பெண்களை ஏராளமாக உற்பத்தி செய்து வருகின்றது.

ஆண்மகன் ஒருவன் தன் மனைவி இறந்துவிட்டால் (ஏன் உயிருடன் இருக்கும்போதுகூட) மற்றொருவளை மணம் புரிந்து கொள்ளலாம்; ஆனால் பெண்மகள் தன் கணவன் இறந்துவிட்ட பிறகு, அவள் எவ்வளவு இளமை வயதுடை யவளா யிருந்தாலும்கூட, மறுபடியும் மணம் புரிந்து கொள்ளக் கூடாதாம்! மனைவியை இழந்த ஆண்மகன் செய்வதுபோலக் கணவனை இழந்த பெண்மகள் ஏன் மறுமணம் புரிந்து கொள்ளக்கூடாது என்பதுதான் விளங்கவில்லை. ஐம்புலனை

அடக்கிக் கொள்ளும் வல்லமை ஆண் மக்களுக்கு இல்லையா? அல்லது பெண் மக்களுக்கு மாத்திரம் அத்தகைய சக்தி அதிகமாக விருக்கிறதா? புலனை அடக்கும் வன்மை ஆண்மகனுக் கில்லையானால், பெண் மக்களுக்கும் புலனை அடக்குதல் இயலாத தொன்றாகும்.

ஆகவே, இளங் கைம்பெண்களுக்கு மறுமணம் புரிவது அவசியமான சீர்திருத்தமாகும். இச்சீர்திருத்தத்தைப் பற்றிச் சொன்னால் சீறி விழுவோரும், வசை புராணம் படிப்போரும், நிந்திப்போரும் நாற்புறத்திலும் சூழ்ந்து கொள்கிறார்கள். இளங் கைம்பெண்களுக்கு மறுமணம் புரியாதிருப்பதின் தீமைகளை அவர்கள் சற்றும் சிந்திப்பதில்லை. கைம்பெண்கள் மறுமணம் புரியும் வழக்கம் (ஆசாரம்) நமது நாட்டில் இல்லாத படியால், அவர்களில் எத்தனை பேர் மறைமுகமாகக் கூடா ஒழுக்கங் கொண்டு காலங் கழிக்கின்றனர்; எத்தனை பேர் அக்கூடாவொழுக்கம் வெளிப்பட்டது காரணமாகச் சுற்றத் தாரையும், பெற்றோரையும் விட்டுச் சென்றனர்; எத்தனை கைம்பெண்கள் அவமானம் பொறுக்க மாட்டாமல் தற்கொலை புரிந்திருக்கின்றனர்; எவ்வளவு சிசுக் கொலைகள் நடந்திருக்கின்றன; அக்கொலை காரணமாக எத்தனை கைம்பெண்கள் தீவாந்திர தண்டனை அடைந்திருக்கின்றனர்! இவற்றையெல்லாம் அனைவரும் சிந்திக்க வேண்டும். நாள்தோறும் ஆயிரக்கணக்கான குற்றங்கள் கைம்பெண் களால் நடைபெறுகின்றன. இவ்விதம் எழுதுவதனால், நமது நாட்டிலுள்ள எல்லாக் கைம்பெண்களும் இவ்விதம் செய்கிறார்கள் என்பதல்ல. பெரும்பான்மையாக இளங் கைம் பெண்களால் நடைபெறுகின்றன என்பதேயாகும். இத்தகைய குற்றங்கள் நடைபெறவில்லை என்று யாவரேனும் மறுத் துரைக்க முடியாது. பெரும்பாலும் இக்குற்றங்கள் யாவும் புறந் தெரியாமல் மறையுண்டிருக்கின்றன; அல்லது மறைக்கப்படு கின்றன. தப்பித் தவறி இரண்டொரு குற்றங்கள் வெளிப்பட்டுப் பத்திரிகைகளில் வெளிவருகின்றன. இதைக் கொண்டு அத்தகைய குற்றங்கள் உலகத்தில் நடைபெறவில்லை என்று நினைப்பது தவறாகும். சீர்திருத்த விஷயத்தில் தலையிட்டு உழைக்கும் சீர்திருத்தக்காரர்கள் இதனை நன்கறிவார்கள். இப்படிச் சொல்வது கைம்பெண்களின் மீது வீண்பழி சுமத்து வதாகச் சிலர் நினைப்பார்கள். அத்தகைய நண்பர்களைக் கைம்பெண் மக்களால் மேற்சொல்லப்பட்ட குற்றங்கள் செய்யப்படாமலிருக்கின்றனவா என்று தங்கள் நோக்கத்தைச் செலுத்தி அனுபவ வாயிலாக அறியும்படி கேட்டுக் கொள்கிறேன்.

ஆனால், இத்தகைய குற்றங்களுக்கு நமது ஏழைக் கைம்பெண்கள் காரணமல்ல. நமது பழைய ஆசாரங்களே காரணமாயிருக்கின்றன. இளங் கைம்பெண்கள் மறுமணம் புரியக்கூடாது என்னும் ஆசாரம் (வழக்கம்) நமக்குள் இருப்பதனால்தான் மேற்சொல்லப்பட்ட குற்றங்குறைகள் நேரிடுகின்றன. நமது ஏழைக் கைம்பெண்களைத் தற்கொலை, அவமானம், சாதிப்பிரஷ்டம், சிசுஹத்தி, ஜெயில் வாசம், சிறுமை, நிந்தனை இவைகளுக்கெல்லாம் உள்ளாகும்படி செய்கிற கைம்மை நோன்பை அதாவது கைம்பெண்கள் கலியாணம் செய்து கொள்ளக்கூடாது என்னும் வழக்கத்தை நாம் ஏன் சீர்திருத்திக் கொள்ளக்கூடாது? குற்றங்குறைகளும், அவமானங்களும் இன்றும் என்றும் நமது நாட்டில் நடைபெற வேண்டுமா? கைம்மை நிலையை அழித்துக் கைம்பெண்கள் மறுமணம் புரியும் வழக்கத்தை யுண்டாக்கிக் குற்றங்குறைகள் நேரிடாதபடி சீர்திருத்துவது அநாசாரமாகுமா? இழிவாகுமா? தேசம் பாழாய்ப் போய்விடுமா? சீர்திருத்த விரோதிகள் இவற்றை எல்லாம் ஏன் ஆழ்ந்து யோசிப்பதில்லை.

வயது சென்ற கைம்பெண்களையும், மறுமணம் புரிய விருப்பமற்ற கைம்பெண்களையும் கட்டாயப் படுத்திக் கலியாணம் செய்து வைக்க வேண்டுமென்று யாரும் சொல்ல வில்லை. இக்கைம்பெண்களால் மேற்சொல்லப்பட்ட குற்றங் குறைகள் உண்டாவது மில்லை. மணஞ் செய்து கொள்ள விரும்பும் இளங் கைம்பெண்களைப் பற்றித்தான் இங்கு நாம் பேசுவதெல்லாம். இவ்விளங் கைம்பெண்களுக்கு ஏன் அச்சுதந்தரத்தைக் கொடுக்கக்கூடாது? ஏன் அவ்வழக்கத்தை யுண்டாக்கி வைக்கக்கூடாது? அவ்விதம் செய்வது அவர்களை யாதொரு குற்றத்திற்கும், அபவாதத்திற்கும், நிந்தைக்கும் இடந் தராதபடி நல்வழியில், மாசற்ற வாழ்க்கையில் புகுத்துவதாகு மன்றோ? பெரியபெரிய தேசாபிமானிகளும், அறிவாளிகளும் ஆழ்ந்து யோசித்துக் கைம்பெண்களுக்கும் மணம் புரிவ தவசியம் என்னும் முடிவுக்கு வந்திருக்கிறார்கள். அவர்களின் முயற்சியால் இதுபோது கைம்பெண் மறுமணம் நடைபெறா மலில்லை. ஆனால் அவ்விதம் அபூர்வமாக நடைபெறும் கைம்பெண் கலியாணங்கள் செல்வந்தர் குடும்பங்களிலேதான் நடைபெறுவதாகத் தெரிகிறது. பொதுமக்களிடையில் இச்சீர்திருத்தம் நாளுக்குநாள் பரவவேண்டும் என்பதே எமது கருத்தாகும். இச்சீர்திருத்தத்தினால் பல நன்மைகள் உண்டாவது திண்ணம். கூடா வொழுக்கங்களும், கொலைகளும் ஒழிவ தோடல்லாமல் மக்கள் வாழ்க்கையில் ஓர் உயர்வு உண்டாகும். அம்மட்டுமல்ல, இச்சீர்திருத்தத்தை மேற்கொள்வதினால் சுயராஜ்யப் படிகளில் ஒன்றைக் கடந்தவர்களாவோம்.

மனைவியை யிழந்து தபுதார நிலையடைந்த ஒருவன் இரண்டாந்தரம் மணம் புரியும்போது, கணவனை யிழந்து தாபத நிலையுடைய ஒரு கைம்பெண்ணைக் கலியாணம் செய்துகொள்வது நன்று. இவ்விதம் செய்வதனால், நமது நாட்டில் உள்ள விதவைகளின் எண்ணிக்கை குறையும். இங்ஙனமன்றி, இரண்டாந்தரம் மணம் புரியும் ஒருவன், தன் வயதுக்கேற்ற ஒருவளை மணம் புரியாமல் இளங் கன்னிகை களை மணந்து கொள்வது, கைம்பெண் மக்கள்தொகை அதிகமாவதற்குக் காரணமாயிருக்கின்றது. இளங் கைம்பெண்கள் நமது நாட்டில் அதிகமாயிருப்பதற்கு மற்றொரு காரணம் பால்ய விவாகம் என்னும் கொடிய அநாகரிக வழக்கமாகும். இது பிராமணர்களுக்குள் அதிகமாக உண்டு. இவ்வழக்கம் முகமதியர் காலத்தில் உண்டானதாகச் சொல்லுகிறார்கள். தமிழரசர் காலத்தில் இல்லாமல், முகமதியர் காலத்தில் தோன்றிய இந்த பால்ய விவாகம் என்னும் ஆசாரம் ஆங்கில அரசாட்சியில் ஏன் இருக்கவேண்டும்? இவ்வழக்கத்தின் பலனாக பால்ய விதவைகள் உற்பத்தியாகிக் கொண்டிருக்கிறார்கள். அது மட்டுமல்ல, அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளும் தேக பலமற்றுப் போய் விடுகிறார்கள். பொதுவாக நோக்குமிடத்து இவ்வழக்கம் தேசத்தின் பலஹீனத்துக்கே காரணமாக இருக்கிறது. அப்படியிருந்தும் இக்கொடிய வழக்கத்தை நம்மவர் பொன்னே போல் போற்றுவது எவ்வளவு அறியாமை?

மேற்சொன்ன கைம்பெண் மறுமணம் புரிதல், பால்ய விவாகத்தை ஒழித்தல் என்னும் இரண்டு சீர்திருத்தங்களையும் மேற்கொண்டு ஒழுகுவார்களானால், பெண் மக்கள் வாழ்க்கை மாசற்று விளங்குவதோடு தேசம் முன்னேற்றமடைந்து உயர்நிலையடையும் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

நமது நாட்டில் சுயராஜ்யக் கூச்சல்களும், பேச்சுக்களும் அதிகமாயிருக்கின்றன. ஆனால், சுயராஜ்யத்திற்கு அடிப்படை யான சீர்திருத்தங்களைப் பேசுவோர் மிகச் சொற்பமாக இருக்கிறார்கள். பேச்சளவில் நிற்காமல் சீர்திருத்தங்களைச் செய்கையளவில் பயன்படுத்தினாலன்றிப் பயன் என்? இந்திய தேசம் சுயராஜ்யம் பெறுவதற்கு முன் சீர்திருத்த வேலைகள் மும்முரமாக நடைபெற வேண்டும். சீர்திருத்தங்களின்றி, மக்கள் சுயராஜ்யம் பெற முடியாது. முக்கியமாக இந்துக்களின் பழக்க வழக்கங்கள் மிகுந்த ஊழலாக விருக்கின்றன. அவை யாவும் சீர்திருத்தப்படாத வரையில் இந்துக்களுக்கு ஒரு நாளும் சுயராஜ்யம் கிட்டாது.

*லக்ஷ்மி,* மலர் 3, இதழ் 1, 1926

# சென்சஸ் உற்பத்தி அதிகாரிகளுக்கு ஒரு யோசனை

சென்சஸ் என்னும் ஜனத்தொகைக் கணக்கு எடுக்கப் போவதாக அறிக்கை செய்யப்பட்டிருக்கிறது. சென்சஸ் கணக்கு எடுக்கப்படவேண்டிய அவசியத்தைப் பற்றியும் அதன் உபயோகத்தைப் பற்றியும் வாசகர்கள் அறிந்திருப்பார்கள். ஆதலால் அதைப்பற்றி எழுத நான் முன்வரவில்லை. ஆனால், சென்சஸ் கணக்கு எடுப்பதைப் பற்றி எனக்குத் தோன்றுகிற ஒரு யோசனையைப்பற்றி இங்கு எழுதுகிறேன். என் அபிப் பிராயத்தை எழுது முன் சென்சஸ் கணக்கு வரலாற்றை (சரித் திரத்தை) இங்கு எழுதுவது அவசியம் என்று தோன்றுகிற படியால் சுருக்கமாக எழுதுகிறேன்.

உரோமாபுரியை அரசாண்ட அரசர்கள்தான் முதன்முதல் ஜனத்தொகை கணக்கு (சென்சஸ்) எடுக்கும் வழக்கத்தை ஏற்படுத்தினார்கள். அதாவது இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் சென்சஸ் எடுக்கும் வழக்கம் உண்டாயிற்று. ஸ்வீடன் தேசத்தில் 1749ம் ஆண்டில் சென்சஸ் கணக்கு எடுக்கப்பட்டு அது முதல் நடைபெற்று வருகிறது. 1753ம் வருஷம் இங்கி லாந்தில் சென்சஸ் எடுக்கவேண்டுமென்று ஒரு சட்டம் பார்லிமெண்டு சபையில் கொண்டுவந்தபோது அது தோற்றுப் போயிற்று. ஏனென்றால் சென்சஸ் எடுப்பது மதத்துக்கு விரோதமானது என்னும் மூடநம்பிக்கை அக்காலத்து ஜனங் களுக்கிருந்தபடியால், சென்சஸ் எடுக்கும் சட்டத்தை அக் காலத்து ஜனங்கள் எதிர்த்தார்கள். ஆனால் 1800ம் வருஷம் மேற்படி மசோதா பார்லிமெண்டு சபையில் கொண்டு வந்தபோது அது ஒப்புக்கொள்ளப்பட்டுச் சட்டமாக்கப் பட்டது. அமெரிக்காவில் 1790ம் வருஷத்தில் முதல்முதல் சென்சஸ் எடுக்கப்பட்டது. பிரான்ஸ் தேசத்தில் 1801ம் வருஷம் முதல் சென்சஸ் எடுக்கப்படுகிறது. ஆங்கில அரசாட்சி வந்த பிறகுதான் நமது இந்தியா தேசத்தில் சென்சஸ் எடுக்கும் வழக்கம் ஏற்பட்டது என்பதைச் சொல்லவேண்டியதில்லை. பிரான்ஸ் தேசத்திலும் ஜெர்மெனி தேசத்திலும் 5 வருஷத்துக்கு ஒரு முறை ஜனத்தொகைக் கணக்கு எடுக்கப்படுகிறது. பிரிட்டீஷ்

தீவுகளிலும் பிரிட்டீஷ் ஆட்சிக்குட்பட்ட தேசங்களிலும், யுனைடேட் ஸ்டேட்ஸ், ருஷியா, இத்தலி, ஆஸ்ட்ரியா, பெல்ஜியம், நார்வே ஆகிய தேசங்களிலும் பத்து வருஷத்துக்கு ஒரு முறை ஜனத்தொகைக் கணக்கு எடுக்கப்படுகிறது.

**ஒரு யோசனை**

அடுத்த 1931ம் வருஷ முதலில் நமது தேசத்தில் ஜனத்தொகை கணக்கு எடுக்கப் போகிறதாகத் தெரியப்படுத்தி யிருக்கிறார்கள். ஒவ்வொரு ஜாதியிலும் இத்தனை பேர் இருக்கி றார்கள், ஒவ்வொரு மதத்தில் இத்தனை பேர் இருக்கிறார்கள், படித்தவர் இத்தனை பேர் படிக்காதவர் இத்தனை பேர் என்பது போன்ற விஷயங்கள் சென்சஸ் ரிப்போர்ட்டுகளில் அறிவிக்கப் படுகின்றன. ஆனால், நமது நாட்டில் எத்தனை குருடர் இருக்கிறார்கள், எத்தனை ஊமையர் இருக்கிறார்கள் என்பதை சென்சஸ் கணக்கில் காணக்கூடவில்லை. ஆகவே அதிகாரி களுக்கு நான் சொல்லும் யோசனை என்னவென்றால், இப்பொழுது எடுக்கப்போகிற சென்சஸ் கணக்கில் நமது நாட்டில் எத்தனை குருடர்கள் இருக்கிறார்கள், எத்தனை ஊமைகள் இருக்கிறார்கள் என்பதையும் கணக்கெடுக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டும் என்பதே. குஷ்டரோகிகள் எத்தனை பேர் இருக்கிறார்கள் என்பதையும் கணக்கெடுப்பார்களே யானால் இன்னும் நலமாயிருக்கும். பிரான்ஸ் முதலான தேசங்களில் குருடர்களின் சென்சஸ் எடுக்கப்படுகிற வழக்கம் உண்டு. நமது தேசத்திலும் குருடர்கள், ஊமைகள் இவர்களின் சென்சஸ் கணக்கையும் எடுக்கவேண்டும் என்று அதிகாரி களைக் கேட்டுக்கொள்கிறேன். வழக்கமாக எடுக்கப்போகும் சென்சஸ் கணக்கோடு சேர்த்து இதையும் பதிவு செய்து கொள்வதால் அதிகச் செலவோ அல்லது அசௌகரியமோ ஏற்படாது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

நமது தேசத்தில் இப்போது ஊமைகளுக்கும் குருடர்களுக்கும் பாடசாலைகளை (அரசாங்கத்தாரும், ஸ்தல ஸ்தாபனங்களும், மற்ற தனிப்பட்ட நபர்களும்) ஏற்படுத்தி யிருக்கிறபடியால் குருடர்கள், ஊமைகள் இவர்களின் ஜனத் தொகைக் கணக்கு எடுக்கவேண்டியது அவசியமாகிறது. இவர்களின் ஜனத்தொகைக் கணக்கு எடுக்கப்படுமானால் படிக்கும் குருடர் ஊமையர் இத்தனை பேர், படிக்காத குருடர் ஊமையர் இத்தனை பேர், மொத்தக் குருடர் ஊமையர் இத்தனை பேர் என்பதைத் தெரிந்து கொள்ளக்கூடும்.

*குடி அரசு,* **23–1–1930**

# தேச பாஷை புத்தகச்சாலை

நமது இந்தியா தேசத்தில் நமது அரசாங்கத்தார் எத்தனையோ புத்தகச் சாலைகளை மேற்படுத்தியிருக்கிறார்கள். இதற்காக நாம் அரசாங்கத்தாருக்கு வந்தனம் செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால் அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்டுள்ள இத்தனை புத்தகச்சாலைகளும் ஆங்கில பாஷை புத்தகச்சாலைகளே. இந்தியாவில் வழங்கும் பாஷைகளில் அதாவது தேச பாஷைகளில் ஒன்றுக்கேனும் நமது அரசாங்கத்தார் இது வரையில் ஒரு புத்தகச்சாலையையாவது ஏற்படுத்தவேயில்லை. நம்மைப் பொறுத்த மட்டில் சென்னை மாகாணத்தை எடுத்துக் கொள்வோம். இம்மாகாணத்தில் முக்கியமாக வழங்கிவருகிற பாஷைகள் மூன்று; அவை: தமிழ், மலையாளம், தெலுங்கு என்பன. தேச மக்களால் பேசப்படும் இம்மூன்று தேச பாஷைகளில் ஒரு பாஷைக்கேனும் நமது அரசாங்கத்தார் ஒரு புத்தகச்சாலையையேனும் ஏற்படுத்தியிருக்கிறார்களா? இல்லவே இல்லை. ஆனால் பெரும் பணம் செலவு செய்து கனிமரா புத்தகச்சாலை என்னும் நகரத்தில் நெடுநாளைக்கு முன்னமே ஏற்படுத்தி நடத்திக் கொண்டு வருகிறார்கள். இக்கனிமரா புத்தகச்சாலையில் ஆங்கிலப் புத்தகங்கள்தான் உண்டு. தேசபாஷைப் புத்தகங்கள் கிடையா. இக்கனிமரா புத்தகச்சாலை, இந்தியாவிலுள்ள அரசாங்கப் புத்தகச்சாலைகளுள் முதன்மை வாய்ந்தது. இத்தகைய புத்தகச் சாலைக்காக நமது வரிப்பணம் செலவு செய்யப்படுவதற்காக நாம் ஒன்றும் குறைகூறவில்லை. இப்புத்தகச்சாலையினால் நமது சென்னை மாகாணத்துக்கே ஒரு பெருமைதான். ஆனால் நாம் கேட்பதென்னவென்றால், நமது சென்னை மாகாணத்தில் வழங்கும் மூன்று முக்கிய தேச பாஷைகளுக்கும் நமது அரசாங்கத்தார் புத்தகச்சாலைகளை அமைக்க வேண்டும் என்பதே.

ஆனால் தேச பாஷைகளுக்காக அரசாங்கத்தார் ஏட்டுப் புத்தகச்சாலையொன்றை (Oriental Manuscript Library) ஏற்படுத்தியிருக்கிறார்களே, அது தேச பாஷைப் புத்தகச்சாலையல்லவா என்று சிலர் கேட்கக்கூடும்.

ஆம். இவ் ஏட்டுப்பிரதி புத்தகச்சாலையை நாமும் அறிவோம். தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலிய பாஷைகளில் எழுதப்பட்ட ஓலைச்சுவடிகள் இப்புத்தகச் சாலையில் சேகரித்து வைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், இப்புத்தகச்சாலையினால் பொது ஜனங்களுக்கு ஏதேனும் பயன் உண்டோ? இல்லை என்று சொல்ல வேண்டும். 100க்கு 98 அல்லது 97 பேருக்கு அதாவது பெரும்பான்மையான பொது ஜனங்களுக்கு இப்புத்தகச்சாலையினால் யாதொரு பிரயோசனமும் கிடையாது. ஏனென்றால், அச்சுப் புத்தகங்கள் ஏராளமாகவுள்ள இக்காலத்தில் பனையோலைப் புத்தகங்களைப் படிக்க ஒருவரும் விரும்புவதில்லை. நாகரிகம் பரவியுள்ள இக்காலத்தில் ஏட்டுச் சுவடிகளைத் தேடிப் படிப்போர் மிகச்சிலரே. ஆனால் இந்த ஓலைச் சுவடி புத்தகச்சாலையினால் யாதொரு பயனும் இல்லையோ என்றால் பெரும் பயன் உண்டு. நூலாராய்ச்சி செய்வோருக்கும் பாடபேதங்களை ஒத்திட்டுப் பார்த்து புதிதாக நூல்களை அச்சிடுவோருக்கும் இந்த ஓலைச்சுவடிப் புத்தகச்சாலையினால் பெரும் பயன் உண்டு. ஆனால் பொது ஜனங்களில் 100இல் 98 அல்லது 97 பேருக்கு இப்புத்தகச்சாலையால் ஒரு சிறிதும் பயனில்லை.

ஆனால் நாம் தேச பாஷைப் புத்தகச்சாலை வேண்டும் என்று சொல்வதன் கருத்து என்ன? காகிதத்தாளில் புத்தகமாக அச்சிடப்பட்ட தேச பாஷைப் புத்தகங்களைக் கொண்ட புத்தகச்சாலைகளே நாம் இப்பொழுது வேண்டும் என்று கேட்கிறோம்.

சென்னை மாகாணத்தில் சுமார் 150 ஆண்டுகளுக்கு முன் அச்சுயந்திரத் தொழில் ஆரம்பிக்கப்பட்டது. இந்த 150 ஆண்டுகளாக எத்தனையோ புத்தகங்கள் தமிழ், தெலுங்கு முதலான தேச பாஷைகளில் அச்சிட்டு வெளிப்படுத்தப் பட்டன. ஆனால் அப்பழைய காலத்துப் புத்தகங்களில் ஒன்றேனும் இக்காலத்தில் கிடைக்கவில்லை. பழைய பதிப்புப் புத்தகங்களைத் துருவித்துருவித் தேடினாலும் எங்கேயோ ஒருவர் இருவரிடத்தில் ஒன்றிரண்டு புத்தகங்கள் கிடைக்கக் கூடும். அதுவும் கிடைக்குமோ என்பதும் சந்தேகந்தான். புத்தகங்களைப் பாதுகாப்பதும் நம்மவருக்கு வழக்கமில்லை. பழைய பதிப்புப் புத்தகங்கள் யாவும் மறைந்துவிட்டன. புதிய புதிய பதிப்புகள் தோன்றி மறைந்து கொண்டேயிருக்கின்றன. இவ்விதம் உலகத்தில் மனிதர் பிறந்து இறந்து மறைந்து விடுவதுபோல புத்தகங்களும் தோன்றி மறைந்துகொண்டே யிருக்கின்றன. ஒரு தேச பாஷைப் புத்தகச்சாலை, அதாவது அச்சிடப்பட்ட தேச பாஷைப் புத்தகச்சாலை ஏற்படுத்தப் பட்டிருந்தால் மறைந்துவிட்ட நூல்கள் அனைத்தும் இன்னும்

நிலைத்திருக்குமன்றோ? பல வருஷங்களுக்கு முன்னையே ஆங்கில பாஷைப் புத்தகச்சாலைகள் ஏற்படுத்தப்பட்டபடியால் பழைய காலத்தில் அச்சிடப்பட்ட ஆங்கில புத்தகங்கள் அழியாமல் இன்றைக்கும் நாளைக்கும் நிலைபெற்று நிற்கின்றன.

சென்ற காலம் சென்றுவிட்டது. இனியேனும் நாம் விழித்துக் கொண்டு அச்சுப் புத்தகங்களைக் கொண்ட தேச பாஷைப் புத்தகச்சாலையை ஏற்படுத்தும்படி நாம் அரசாங்கத்தாரைக் கேட்க வேண்டும். ஏனென்றால் தட்டினால் தான் திறக்கப்படும் கேட்டால்தான் கொடுக்கப்படும். ஒவ்வொரு சங்கமும், கழகமும் இதைப்பற்றிக் கவனிக்க வேண்டும். மகாநாடுகளில் இது சம்பந்தமாகத் தீர்மானங்கள் நிறைவேற்றி அரசாங்கத்தாருக்கு அனுப்பவேண்டும்.

இது சம்பந்தமாக ஒரு தீர்மானம், நாளது ஜனவரி 20ஆம் தேதி பண்ணுருட்டியில் நடைபெற்ற வன்னியகுல க்ஷத்திரியர் மகாநாட்டில் திருவாளர் S. தருமலிங்க நாயகர் கொண்டு வரப்பட்டு ஏகமனமாக நிறைவேற்றப்பட்டதை யறிந்து சென்னை மாகானத்துப் பொது ஜனங்கள் சந்தோஷமடைந்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். அந்தத் தீர்மானம் வருமாறு;

"சென்னை மாகாணத்தில் தமிழ், தெலுங்கு, மலையாளம் ஆகிய மூன்று முக்கிய தேச பாஷைகள் வழங்கி வருவதை யறிந்தும் அரசாங்கத்தார் மேற்படி பாஷைகளுக்கென்று அச்சிடப்பட்ட தேச பாஷைப் புத்தகச்சாலைகளை ஏற்படுத்தாமல் இருப்பதற்காக இம்மகாநாடு வருந்துகிறதோடு கூடிய சீக்கிரத்தில் அச்சிடப்பட்ட புத்தகங்களைக் கொண்ட தேச பாஷைப் புத்தகச்சாலைகளை ஏற்படுத்த வேண்டுமென்று இம்மகாநாடு அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்கிறது."

இத்தகைய தீர்மானம், நாளது ஜூன் மாதத்தில் நடைபெறப் போகிற ஆரம்பாசிரியர் மகாநாட்டிலும் கொண்டு வரப்பட்டு நிறைவேற்றி அரசாங்கத்தாருக்கு அனுப்பிவைக்கும்படி சென்னை மாகாண ஆரம்ப ஆசிரியர்கள் அனைவரையும் மிகவும் வேண்டிக் கொள்கிறேன். அன்றியும் சட்டசபை மெம்பர்களைக் கொண்டும் இத்தகைய தீர்மானங்களைச் சட்டசபையில் நிறைவேறச் செய்யும்படியும் செய்வது நலம். நமக்கு வேண்டுவது எல்லாம் அச்சிடப்பட்ட புத்தகங்களைக் கொண்ட தேச பாஷைப் புத்தகச்சாலையே. அரசாங்கத்தார் இதைப்பற்றிக் கவனிப்பார்களா? அல்லது வழக்கம் போல் பணம் இல்லை என்று ஒரே வார்த்தையில் பதில் அளித்து விடுவார்களா?

*ஆரம்பாசிரியன்,* **மலர் 5, இதழ் 1, 1929**

# முதல் வகுப்பில் தமிழ் கற்பிக்கும் முறை

குழந்தைப் பருவம் மாறாத சின்னஞ் சிறுவர்கள் அடங்கிய முதல் வகுப்பில் பாடங்களைக் கற்பிக்கும் உபாத்தியாயர் மிகவும் அனுபவமும் ஆற்றலும் வாய்ந்தவராயிருக்க வேண்டும். மிகச் சிறு வகுப்பாயிருந்தபோதிலும், இவ்வகுப்பைக் கையாளும் உபாத்தியாயருக்கு, மிகப்பெருங் கஷ்டங்கள் இருக்கின்றன. பிள்ளைகளின் கல்வி என்னும் கட்டடம் இவ்வகுப்பில்தான் கடைக்காலிடப்படுகிறது. கட்டடம் பலமுள்ளதாய் இருக்க வேண்டுமானால், கடைக்கால் ஆழமும் உறுதியுமுள்ளதாய் இருக்கவேண்டும். அதைப்போலவே, பிள்ளைகளின் கல்வி யாகிய கட்டடத்திற்கு முதல் வகுப்பிலேதான் பலமுள்ள கடைக்கால் நாட்ட வேண்டும். ஆகவே இவ்வகுப்பின் உபாத்தி மாருக்கு மிகுந்த பொறுப்பு ஏற்பட்டிருக்கிறது.

இங்கு முதல் வகுப்புக்குத் தாய்மொழியாகிய தமிழை எவ்விதம் கற்பிக்க வேண்டும் என்பதைப் பற்றி எழுதப் படுகிறது. தமிழைக் கற்பிப்பது என்றால், எழுத்துக்களைக் கற்பிக்கும் விதம், உச்சரிப்பைப் பழக்கும் விதம் லகர, ளகர, ரகர, றகர, ந, ண, ன கரங்களின் பேதங்கள் முதலியவைகளைப் பற்றியன்று நான் இங்கு எழுதத் துணிந்தது. ஆனால், சொற்களையும் சொற்றொடர்களையும் (அதாவது எழுத்துக் கூட்டும் முறை) கற்பிப்பதைப் பற்றியேயாகும். அன்றியும், தமிழ் கற்பிக்கப்படும் முறை என்றிருந்தாலும் ஏனைய தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலிய பாஷைகளுக்கும் இங்கு எழுதப்படும் முறை பொருந்தும்.

எல்லா விஷயங்களிலும் இங்கிலீஷ் முறைகளையே பின்பற்ற வேண்டும் என்று தவறாக நினைத்து, இக்காலத்துச் சிலர் ஆங்கில முறைகளைக் கல்வி விஷயத்திலும் கையாளத் தலைப்பட்டுவிடுகிறார்கள். இப்படிச் சொல்வதனால், மேல் நாட்டு முறைகள் எல்லாம் பொருத்தமற்றவை என்று சொல் வதாகக் கருதக்கூடாது. எந்தெந்த முறைகள் எந்தெந்த விஷயத்திற்கு எவ்வளவு தூரம் பயன்படும் என்பதை யோசித்தே செய்ய வேண்டும்.

முதல் வகுப்பில் தமிழ்ச் சொற்களைக் கற்பிக்கும்போது, இக்காலத்துச் சில உபாத்திமார் ஆங்கிலச் சொற்களை

எழுத்துக் கூட்டுவது போன்ற முறையையே கையாண்டு வருகிறார்கள். அதாவது ஆங்கிலச் சொற்களாகிய CAT, HOUSE முதலிய சொற்களை எழுத்துக் கூட்டும்போது C + a + t = cat என்றும் H + o + u + s + e = House என்றும் கற்பிப்பது போலவே தமிழ்ச் சொற்களைக் கற்பிக்கும் போது கற்பித்து வருகிறார்கள். அதாவது அப்பம், கலயம் முதலிய வார்த்தை களை எழுத்துக்கூட்டும் போது அ+ப்+ப+ம் = அப்பம் என்றும் க+ல+ய+ம் = கலயம் என்றும் கற்பித்து வருகிறார்கள். இவ்விதமாகக் கற்பிப்பதனால் விளையும் தீமைகளை இவர்கள் அறிவதில்லை.

ஆங்கிலச் சொற்களை எழுத்துக்கூட்டும் முறை வேறு, தமிழ்ச் சொற்களை எழுத்துக்கூட்டும் முறை வேறு. ஐரோப்பிய பாஷைகளின் அமைப்புமுறை வேறு; இந்திய பாஷைகளின் அமைப்புமுறை வேறு. இதையுணராமல், ஆங்கில பாஷை யைப் போலவே தமிழ்ப் பாஷையையும் எழுத்துக்கூட்டப் பழக்குவதனால், பிள்ளைகள் எதிர்பார்க்கப்படுகிற அவ்வளவு பயன் அடைகிறதில்லை. அதாவது, தாய்மொழிக் கல்வி ஆணித்தரமாய்ப் பிள்ளைகளின் மனத்தில் பதிவதில்லை. இவ்விதமாகப் பழக்கப்பட்ட பிள்ளைகள் சொற்களை ஒன்றாகச் சேர்த்துப் படிக்க மிகவும் இடர்படுகிறார்கள். அம்மட்டோ? குற்றெழுத்துக்கும் நெட்டெழுத்துக்கும் வித்தியாசந் தெரியாமல் தவிக்கிறார்கள். கேட்டெழுதுவதில் (டிக்டேஷன் எழுதும்போது) கணக்கற்ற பிழைகளைப் போட்டு எழுதுகிறார்கள்.

கீழ்க்கண்ட இந்திய முறையைப் பின்பற்றி எழுத்துக் கூட்டப் பழக்கினால், பிள்ளைகள் வாசிக்கவும் எழுதவும் ஆணித்தரமாகக் கற்றுக் கொள்கிறார்கள். ஆகவே, கீழ்க்கண்ட இந்திய முறையைத்தான் அனுபவசாலிகளாகிய தற்காலத்து உபாத்திமார்களும் பண்டைக்காலத்திய உபாத்திமார்களும் கையாண்டு வருகிறார்கள், கையாண்டு வந்தார்கள். இம்முறை வருமாறு: அப்பம், கலயம் முதலிய சொற்களை எழுத்துக் கூட்ட வேண்டுமானால் அ+ப்+=அப், +ப=அப்ப, +ம் = அப்பம் என்றும் க+ல = கல, + ய = கலய, + ம் = கலயம் என்றும் ஒவ்வொரு எழுத்தையும் தனித்தனியே ஒவ்வொன்றாகச் சேர்த்துக் கூட்டிப் படிப்பிக்க வேண்டும். இந்த இந்திய முறையைக் கற்பிப்பதில் உபாத்திமாருக்கும் பிள்ளைகளுக்கும் முதலில் சற்றுச் சிரமமாகத்தான் தோன்றும். ஆனால் இவ்விதம் கற்பிப்பதனால் பயன் அதிக முண்டு. இவ்வித முறையில் பழக்கப்பட்ட பிள்ளைகள், கடினமான பதங் களையும் மற்றவர் உதவியில்லாமலே தாங்களாகவே

எழுத்துக்கூட்டிச் சரியாகப் படித்துக் கொள்கிறார்கள். சொற்றொடர்களையும், வாக்கியங்களையும் சிரமமின்றிப் படிக்கத் தொடங்குகிறார்கள். குற்றெழுத்து, நெட்டெழுத் துக்களின் வித்தியாசங்களை நன்கறிந்து வாசிக்கிறார்கள். இன்னும் டிக்டேஷன் எழுதுவதில் பிழையின்றி எழுது கிறார்கள். பிழையிருந்தாலும் அதிகப் பிழையில்லாமல் இரண் டொரு பிழைகளுக்கு மேலிராது.

முதல் சொல்லிய ஆங்கில முறை சுலபமாக இருக்கிறது என்று அதைப் பின்பற்றினால், பிள்ளைகள் தகுந்த பலனை அடைகிறதில்லை. உபாத்தியாயரின் நோக்கமும் முற்றுப் பெறுகிறதில்லை. மேல்வகுப்புக்குத் தகுதியானவர்களாகவும் அவர்களைச் சொல்ல முடியாது (மேல்வகுப்புக்குச் சென் றாலும் இப்பிள்ளைகளால் உண்டாகும் கஷ்டங்கள் கொஞ்சமல்ல). சில சமயங்களில் பெற்றோர்கள்கூட "என்ன, வாத்தியாரே! வருஷம் ஒன்றாச்சு; ரெண்டு வார்த்தையைச் சேர்த்துச் சரியாகப் படிக்கத் தெரியவில்லையே" என்று குறை கூறுகிறார்கள். இவ்வளவும் ஆங்கிலமுறையைப் பின்பற்றிப் போதிப்பதனால் உண்டாகிற கஷ்டங்களாகும்.

பின் சொல்லிய இந்திய முறையைப் பின்பற்றித் தமிழ்ப் பாடங்களை முதல் வகுப்புக்குப் போதித்தால் அதிக பலனும் நன்மையும் அடையலாம். இவ்விஷயத்தில் சந்தேகம் உள்ளவர்கள், முதல் வகுப்பை இரண்டு பிரிவாகப் பிரித்து ஒரு பிரிவுக்கு ஆங்கில முறையையும் மற்றொரு பிரிவுக்கு இந்திய முறையையும் பின்பற்றிப் போதித்து வந்து, வருஷக் கடைசியில் இவ்விரண்டிற்குமுள்ள ஏற்றத்தாழ்வுகளை நேரில் அறிந்து கொள்வார்களாக.

**_ஆரம்பாசிரியன்,_ மலர் 5, இதழ் 2, 1929**

# கல்வியைக் குறித்த பழமொழிகள்

1. அடி உதவுகிறது போல் அண்ணன் தம்பி உதவுவார் களா?
(A whip for a foal and a rod for a school is always in good season)
2. அடியாத மாடு படியாது.
(Spare the rod and spoil the child)
3. அப்பியாசம் கூசா வித்தை.
(Practice makes a man perfect)
4. அப்பியாச வித்தைக்கு அழிவில்லை.
5. அரைகுடம் ததும்பும், நிறைகுடம் ததும்பாது, குறை குடம் கூத்தாடும்.
(Empty vessels give the greatest sound)
6. அறப்படித்தவன் அங்காடி போனால் விற்கவு மாட்டான்; கொள்ளவும்மாட்டான். அறப்படித்த பூனை சாடிப்பானையில் தலைபோடும்.
(Experience without learning is better than learning without exp erience)
7. அறிவின்மை இன்மையுள் இன்மை.
(It is better to be a beggar than a fool)
8. அறிவு தரிவு இல்லாதவனுக்கு அரை மட்டில் வயிறு; நீக்குபோக்கு இல்லாதவனுக்கு நெஞ்சுமட்டில் வயிறு.
(A bellyful of gluttony will never study willingly)
9. அறிவுடையாரை அடுத்தால் போதும்.
(Keep good company, and you shall be of the number)
10. ஆசானுக்கும் அடவு தப்பும்.
(A good marksman may miss)
11. இளமையிற் கல்வி எப்போதும் நிற்கும்.
(Youth and white paper take any impression).
12. இளமையிற் பழக்கம் எப்போதும் மறவாது; இளமையிற் பழக்கம் முதுமையிற் சுபாவம்.
(Coustom in infancy becomes nature in old age)
13. உடைமை என்பது கல்வியுடைமை.
(Learning is an ornament in prosperity, a refuge in adversity, and provision in old age).

14. எண் இல்லாதவர் கண் இல்லாதவர், எழுத்து இல்லாதவர் கழுத்து இல்லாதவர்.
(Learning is the eye of the mind)
15. எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.
(Knowledge is second light, and hathe bright eyes)
16. எல்லாம் அறிந்தவனும் இல்லை; ஒன்றும் அறியாத வனும் இல்லை. கற்றது கைமண்ணளவு; கல்லாதது உலகளவு.
(No living man all things can)
17. எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்.
(They who educate children well, are move to be honoured than they who produce them; for these only gave them life, those the art of living well)
18. கண்டது கற்கப் பண்டிதனாவான்.
(knowledge is no burden)
19. கண்டது கையளவு; காணாதது உலகளவு.
(Art is long; life is short)
20. கல்லாதவரே கண் இல்லாதவர்.
(Learning is the eye of the mind)
21. கல்வி அழகே அழகு.
(Learning is an ornament in prosperity, a refuge in adversity, and a provision in old age)
22. கல்வி என்ற பெயருக்குக் கண்ணீர் என்ற மழை வேண்டும்.
(Spare the rod and spoil the child.
There is no royal rod to learning)
23. கல்வி கரையில, கற்பவர் நாள் சில.
(Art is long; life is short)
24. கல்வியுள்ள வாலிபன் கன கிழவன்.
(Wisdom goes not always by years)
25. கற்ற இடத்திலா வித்தையைக் காட்டுகிறது.
(I taught you to swim, and now you would drown me)
26. கற்றலிற் கேட்டலே நன்று.
(Conversation teaches more than meditation. Education begins a gentleman, conversation completes him)
27. கற்றாரைக் கற்றாரே காமுறுவர்; மூர்க்கரை மூர்க்கரே முகப்பர்.
(The wise and the fool have their fellows)

28. கற்றும் கற்றறிமோழை, கண்ணிருந்தும் குருடு.
கற்றும் கற்றறி மோழையா.
(It is altogether in vain to learn wisdom and yet live foolish. Natural folly is bad enough; but learned folly is intolerable)
29. கற்றோருக்குச் சென்றவிடமெல்லாஞ் சிறப்பு.
(An Artist lives everywhere. He who has an art, has everywhere a part)
30. குருவில்லார்க்கு வித்தையும் இல்லை. முதலாளி யிலார்க்கு இலாபமும் இல்லை.
(He that teaches himself has a fool for his master)
31. குருவேஷம் கொண்டவன் எல்லாம் குரு ஆவானா?
(It is not the gay coat makes the gentleman)
32. குறைவேலையை அம்பலத்திற் கொண்டு வரலாமா?
(Children and fools should not see a work that is halfdone)
33. கேள்வி முயல்
(He that nothing questioneth nothing learneth)
34. கைப்பொருள் தன்னிலும் மெய்ப்பொருள் கல்வி.
(The truest wealth is that of learnings)
35. கோலாடக் குரங்கு ஆடும்.
(There is no argument like that of the stick)
36. சிறுபோது படியாத கல்வி அழுக்குச் சேலையில் சாயம் ஏற்றினது போல.
37. பிள்ளைக்கு வாத்தியாரும் பெண்ணுக்கு மாமியாரும்.
(The best horse needs breaking, and the aptest child needs teaching)
38. வித்துவான் தனவான்.
(The truest wealth is that of the understanding)

*ஆரம்பாசிரியன்,* மலர் 5, இதழ் 2, 1929

# சிறு மணித்திரள்

Rice - ரைஸ் = அரிசி. ரைஸ் என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு அரிசி என்பது தமிழ்ப் பொருளாகும். ஆனால், இந்த ரைஸ் என்னும் ஆங்கிலச் சொல் அரிசி என்னும் தமிழ்ப் பதத்திலிருந்து உண்டானதுதான். பல நூற்றாண்டுகளுக்கு முன்னே நமது நாட்டிலிருந்து (முக்கியமாய் தென் இந்தியா விலிருந்து) அரிசி, இஞ்சிவேர் (இஞ்சி), துணி முதலிய பொருள்களும் சந்தனக்கட்டை, ஏலக்காய் முதலிய வாசனைப் பொருள்களும் ஐரோப்பா கண்டத்திற்கு ஏராளமாக ஏற்றுமதி செய்யப்பட்டன. அக்காலத்தில் ஐரோப்பா கண்டத்தில் யவனர்கள் (கிரேக்கர், ரோமர்) செல்வமும் செல்வாக்கு முடையவராய் விளங்கியதோடு இந்தியாவுடன் கப்பல் மூலமாக வியாபாரமும் நடத்தி வந்தார்கள். அவ்வூரில் கிடைக் காத பொருள்கள் இவ்விடத்திலிருந்து கொண்டு போகப் பட்டன, இவ்விடத்தில் கிடைக்காத பொருள்கள் அவ்விடத் திலிருந்து கொண்டு வரப்பட்டன. ஐரோப்பியருக்கு அரிசி நூதனமான பொருள். ஆகவே அரிசிக்கு அவர்கள் பாஷையில் பெயர் கிடையாது. அவர்கள் அரிசி என்னும் தமிழ்ப் பெயரையே வழங்கினார்கள். ஆனால், அரிசி என்னும் சொல்லைச் சரியாக உச்சரிக்க முடியாமல் ரைஸ் என்று உச்சரித்தார்கள். இவ்விதமாக அரிசி என்னும் தமிழ்ச் சொல் யவனர்களால் ரைஸ் என்று வழங்கப்பட்டு வந்ததை இப்போது ஆங்கிலேயர்களும் வழங்கி வருகிறார்கள். ஆங்கிலேயர்களால் நம் நாட்டிற்கு நூதனமாகக் கொண்டு வரப்பட்ட சோப் (Soap) என்னும் பொருளை நாமும் சோப் என்றே வழங்கி வருகிறோம் அல்லவா?

Ginger - ஜிஞ்சர் = இஞ்சிவேர் (இஞ்சி). இஞ்சி அல்லது இஞ்சி வேருக்கு ஆங்கிலத்தில் ஜிஞ்சர் (Ginger) என்று பெயர். (ஜீரனமாகாவிட்டால் ஜிஞ்சர் பீர் என்னும் பானகத்தை வாங்கிக் குடிக்கிறோம். இது இஞ்சி சேர்த்துச் செய்யப்பட்டது).

இந்த ஜிஞ்சர் பீர் என்னும் சொல்லும், இஞ்சி வேர் என்னும் தமிழ்ச் சொல்லின் சிதைவேயாம். முற்காலத்தில் நமது நாட்டிலுள்ள மலையாளக் கரையிலிருந்து இஞ்சி வேர் ஐரோப்பா தேசங்களுக்கு ஏராளமாக ஏற்றுமதி செய்யப் பட்டது.

Betel - பீற்றில் - வெற்றிலை. வெற்றிலை போடும் வழக்கம் இந்தியாவில்தான் உண்டு. வெற்றிலையும் நமது நாட்டுப் பொருளே. இதனை ஆங்கிலத்தில் பீற்றில் என்று சொல்லு கிறார்கள். பீற்றில் என்பது வெற்றிலை என்னும் தமிழ்ச் சொல்லின் சிதைவே. வண்டி - பண்டி, வெல்லம் - பெல்லம், வாலி - பாலி என்பது போல வெற்றிலை என்பதில் உள்ள வகரம் பகரமாயிற்று. லை என்னும் எழுத்தைச் சரியாக உச்சரிக்கமாட்டாமல் ல் என உச்சரித்தார்கள். இவ்விதம், நமது நாட்டிற்கு வந்த போர்த்துகீசியர், ஆங்கிலேயர் முதலிய ஐரோப்பியர்கள் வெற்றிலையை பீற்றில் என்று வழங்கி வருகிறார்கள்.

கட்மரம் - கட்டு மரம். நமது நாட்டுக் கடற்கரை யோரத்தில் வசிக்கும் மீன் பிடிப்பவர்களாகிய பட்டினவர்கள் கட்டுமரத்தை உபயோகப்படுத்தி வருவது எல்லோருக்கும் தெரியும். 5 பெரிய நீண்ட மரக்கட்டைகளை ஒன்றாகச் சேர்த்துக் கட்டி உண்டாக்கப்படுவதால் கட்டுமரம் என்று காரணப்பெயர் உண்டாயிற்று. இத்தமிழ்ப் பெயரையே ஆங்கிலேயர் கட்மரம் என்று வழங்கி வருகிறார்கள்.

மிளகாய், ஆங்கிலேயர் நமது நாட்டில் வந்ததுமல்லாமல் பல்வேறு பொருள்களை நமது நாட்டில் கொண்டு வந்து குடியேற்றி விட்டார்கள். அவை குடிவகைகளும், இங்கிலீஷ் காய்கறி வகைகளும், குட்டிப்பலா (Bread Fruit tree) முதலிய மரங்களும், இன்னும் பல பழக்க வழக்கங்களுமாம். இவர்களால் குடியேற்றப்பட்ட பொருள்களில் நன்மை பயப்பனவும் உண்டு; தீமை பயப்பனவும் உண்டு. ஆனால் பெரும்பான்மையும் தீமை பயப்பனவே. இங்கு தோட்டி முதல் தொண்டைமான் வரையில் நம்மவர் அனைவராலும் நாடோறும் கையாளப்பட்டு வருகிற சிலவற்றை மாத்திரம் கவனிப்போம்.

மிளகாய் என்பது இப்போது எல்லோருக்கும் அறிமுக மானதும் நாடோறும் உபயோகிக்கப்பட்டு வருவதுமான ஒரு பொருள் என்பது உண்மையே. ஆனால் இது நமது நாட்டுப் பொருளல்ல. 200 வருஷங்களுக்கு முன்னிருந்த நமது மூதாதையருக்கு மிளகாய் என்பது இன்னதென்று தெரிய மாட்டாது. மலையாள மொழியில் இதற்குக் கப்பல் மிளகு என்று பெயர். இப்பெயரே, இதனை வெளி நாடுகளிலிருந்து கப்பலில் கொண்டு வரப்பட்டது என்று நன்கு விளக்குகிறது. இந்தியராகிய நாம் முக்கியமாகத் தென் இந்தியராகிய நாம் நாளுக்கு நாள் தலைமுறைக்குத் தலைமுறை வலி குன்றி உரனற்றுப் போவதற்கான பல காரணங்களுள் முக்கியமானது

இந்த மிளகாய்தான். இது உடல் நலத்திற்கு முக்கிய காரண மான இரத்தத்தைக் கெடுத்து விடுகிறது. இதன் துர்க் குணத்தைப் போக்க கொத்தமல்லி விதை (தனியா) இதனுடன் சேர்த்துச் சமைக்கப்படுகிறது. என்றாலும் இதன் துர்க்குணம் போவதில்லை. இதனை அடியோடு நீக்கிவிடுவது உத்தமம். இதற்குப் பதிலாக மிளகை உபயோகிப்பது எவ்வளவோ நன்மை பயக்கும் ஆனால், மிளகு அதிக விலையுள்ளதாகவும், மிளகாய் குறைந்த விலையுள்ளதாகவும் இருப்பதால் எல்லா மக்களும் மிளகாயையே வாங்கி உண்டு வருகிறார்கள்.

நமது பண்டைக் காலத்துப் பெரியோர்கள், உணவுப் பொருள்களில் மிளகு சேர்த்து உண்டுவந்தார்கள். ஆகையால் அவர்கள் எவ்வளவோ தேக சுகத்தோடிருந்து வந்தார்கள். இப்பொழுதும்கூட ஐரோப்பியர் ஆகாரத்தில் மிளகைத்தான் சேர்த்து உண்டு வருகிறார்கள். இப்போதுங்கூட மிகுந்த ஆசாரமான குடும்பங்களில் சிரார்த்தம் முதலிய வைதிகமான காலங்களில் மிளகை உபயோகப்படுத்தி வருகிறார்கள். நமது பண்டைக்காலத்து புராண இதிகாசங்களிலும்கூட மிளகைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறதேயன்றி மிளகாயைப் பற்றி ஒன்றுமே காணப்படவில்லை. மிளகினால் உண்டாகும் குணத்தை நன்கறிந்த ஐரோப்பியர்கள், நமது நாட்டு மிளகையுண்டு தேக சுகத்தோடு வாழ்ந்து வர, நாம் மிளகை அவர்களுக்கு விற்றுவிட்டு, குறைந்த விலையுள்ளதும் ஆனால் பெருந்தீமை விளைவிப்பதுமான மிளகாயை உண்டு நாளுக்குநாள் இரத்தங் கெட்டுப் பலங்குன்றி வருகிறோம். இது என்ன மதி! மிளகாய் நமது நாட்டில் இப்போது நிலைத்து நமது நாட்டுச் சொந்தப் பயிராக ஆய்விட்டபடியால் நமது நாட்டு மக்கள் மிளகாயைத் தின்னாமல் பகிஷ்காரம் செய்ய முற்பட மாட்டார்கள் என்பது உறுதி.

புகையிலை: இதுவும் அயல் நாட்டிலிருந்து ஐரோப்பியர் களால் கொண்டு வரப்பட்ட பொருள், இதுவும் நமது நாட்டில் நிலைத்துவிட்டது. புகையிலை உபயோகிக்காத மனிதர் இல்லை. மூக்குத் தூள், பீடி, சிகரெட், சுருட்டு, வாய் புகையிலை முதலிய பல விதமாக இது உபயோகப்பட்டு வருகிறது. இதன் தீமைகளை டாக்டர்கள் நன்கு எழுதியிருக்கிறார்கள். நாமும் அத்தீமைகளை எடுத்துச் சொன்னால், புகையிலையிலேயே மூழ்கிக் கிடக்கிற இந்த உலகம் எழுதுகிறவரை எள்ளி நகையாடும். அன்றியும், காற்சட்டையும் மேற் சட்டையும், காலர் டையும் நாகரீகமாயணிந்து உல்லாசமாய் நடக்கும் நாகரீகர்களுக்கு அழகு செய்வது புகையிலையில் செய்த சிகரெட் அல்லவா? ஆகையால் நம்மை நாட்டுப் புறத்தான்

என்று கேலி செய்வார்கள். இதன் தீமையை அவரவர்களே அறிந்து நீக்கி விடுவார்கள் என்பது எமது கருத்து.

காபி - தேயிலை : காபியும் தேயிலையும் கூட அந்நிய நாட்டுப் பங்காளிகள்தான். இதன் தீமைகளைப் பற்றி கவனிக் காமல் எல்லோரும் இவற்றைச் சாப்பிட்டு வருகிறார்கள். இவற்றைச் சாப்பிட்டவுடன் நரம்புகளுக்கு ஒரு வித உற்சாகத்தைக் கொடுத்துப் பிறகு நரம்புகளைப் பலவீனமாக்கி விடும். அன்றியும் காபி மலபந்தத்தை உண்டாக்குகிறது. தேயிலை தூக்கத்தைக் கெடுத்து விடுகிறது. மலபந்தப்பட்டு தூக்கமும் கெடுமானால் மனிதனுக்கு வேறே வினை வேண்டியதில்லை. இவற்றைக் காரணமாகக் கொண்டு மற்ற எல்லா வியாதிகளும் தொடர்ந்து வந்துவிடும். நகர வாசங்களில் காபி தேயிலைப் பானம் நாகரீக முறையில் கையாளப்பட்டு வருகிறது. அன்றியும் நகரத்தில்தான் நோய்களும் டாக்டர் களும் ஏராளமாகக் காணப்படுகிறார்கள்.

இது ஒருபுறமிருக்க, காபி, தேயிலை நம்மவர்களால் பயிர் செய்யப்படவில்லை. நமது நாட்டில் நீலகிரி, மேற்குத் தொடர்ச்சி மலை முதலிய விடங்களில் ஐரோப்பியர்கள் வந்து இவைகளைப் பயிர் செய்கிறார்கள். அவர்கள் பயிர் செய்வதை நாம் வாங்கி உபயோகித்து வருகிறோம். அதாவது அவர்கள் பொருளை வாங்கி அவர்களைச் செல்வந்தராக்கி விடுகிறோம். ஆகவே இதில் இரண்டு விதமான தீமைகள் இருக்கின்றன. ஒன்று; நாம் ஆங்கிலேயர்களின் பொருளை வாங்கி அவர் களுக்கு நமது பணத்தைக் கொடுக்கிறோம். இதனால் நமது பணம் இங்கிலாந்துக்குப் போகிறது. இரண்டாவது; அவ்விதம் காசு கொடுத்து வாங்கிச் சாப்பிடும் காபி, தேயிலைகளால் உடம்புக்குத் தீமையுண்டாகிப் பலவித நோய்களுக்குக் காரணமாயிருக்கிறது. ஆனால், நாட்டுப்புறத்துவாசிகள் கூட "மோர் சாப்பிடுகிறீரா? நிசித் தண்ணீர் சாப்பிடுகிறீரா?" என்று கேட்பது அகௌரவம் என்று நினைத்து "காபி சாப்பிடுகிறீரா?" என்று சொல்லி விருந்தாளியை உபசாரம் செய்து வருகிற இக்காலத்தில் காபி சாப்பிடாதே, தேத்தண்ணீர் அருந்தாதே என்று சொன்னால், அப்படிச் சொல்லுகிறவரைப் பயித்தியக் காரன் என்று சொல்லாமல் இருப்பார்களா?

உருளைக்கிழங்கு: இதுவும் நமது நாட்டில் குடிபுகுத்தப் பட்ட பொருள்தான், இப்போது நமது நாட்டில் குளிர்ச்சி யான இடங்களில் பயிரிடப்படுகிறது. காபி, டீ, புகையிலை, மிளகாய் இவைகளைப் போலவே இதுவும் தினசரி உபயோகப் படுத்தும் பொருளாய் விட்டது. ஹோட்டல்களிலும் கலியாணம் முதலிய விசேஷ விருந்துகளிலும் இது இடம்

பெற்று விட்டதென்றால் இது நம்முடன் எவ்வளவு நெருங்கிப் பழகுகிறது என்பது சொல்லாமலே விளங்கும். ஆனால் காபி, டீ, மிளகாய் முதலியவைகளைப் போல் இது தீமை பயக்கும் பொருளல்ல. ஆகையால் இதனை ஒருவரும் பகிஷ்கரிக்க வேண்டியதில்லை; ஐயமின்றி தாராளமாக உபயோகப்படுத்தலாம்.

*ஆரம்பாசிரியன்,* மலர் 5, இதழ் 4, 1929

# அமெரிக்கா

கொலம்பஸ் அமெரிக்கா கண்டத்தைக் கண்டுபிடித்த விஷயம் உலகமுழுவதும் அறியும். ஆனால் கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடிக்க வேண்டும் என்னும் நோக்கத் தோடு சென்றவனல்ல; இந்தியாவைக் கண்டுபிடிக்க வேண்டும் என்னும் கருத்தோடு ஐரோப்பாவுக்கு மேற்கே அட்லாண்டிக் மகா சமுத்திரத்தின் வழிபோய் யாத்திரை செய்தான். பூமி உருண்டையாய் இருப்பதனால், ஐரோப்பா கண்டத்துக்கு மேற்கு முகமாகக் கடலில் பிரயாணம் செய்தால், ஐரோப்பாவுக்குக் கிழக்குப் பக்கத்தில் வெகுதூரத்தில் உள்ள இந்தியா தேசத்தைக் காணலாம் என்று கொலம்பஸ் நினைத்தான். என்றாலும், அவன் பணக்காரனல்ல; இறக்கும் போதும்கூட அவன் ஏழையாகவே இருந்தான். அவன் இந்தியாவைக் கண்டுபிடிக்கத் தனக்கு உதவி செய்ய வேண்டுமென்று சில அரசர்களை வேண்டிக் கொண்டான். கடைசியாக ஸ்பெயின் தேசத்து அரசியின் உதவி அவனுக்குக் கிடைத்தது. மூன்று கப்பல்களை ஓட்டிக்கொண்டு அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் நெடுந்தூரம் பயணம் செய்தான். கடைசியாகச் சில தீவுகள் காணப்பட்டன. அந்தத் தீவுகளுக்கு மேற்கு இந்தியத் தீவுகள் என்னும் பொருளுடைய 'வெஸ்ட் இண்டீஸ்' என்று பெயரிட்டான். கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்தது 1492ஆம் வருஷமாகும். ஆனால், கொலம்பஸ் தான் கண்டுபிடித்த தேசத்தை இந்திய தேசமென்றே நம்பினான். அமெரிக்கா என்னும் பெயர் கொலம்பஸ் இறந்துவிட்ட பிறகு அக்கண்டத்திற்கு இடப் பட்டது. ஆகவே, தான் கண்டுபிடித்த கண்டத்திற்கு அமெரிக்கா என்னும் பெயர் இடப்பட்டது கொலம்பஸுக்குத் தெரியாது.

இக்கண்டத்திற்கு அமெரிக்கா என்னும் பெயர் ஏன் கொடுக்கப்பட்டது. கொலம்பஸ் கண்டுபிடித்த நிலப்பரப்பின் கரைப் பிரதேசங்களை (எல்லைப் பிரதேசங்களை) அமெரிக்கா வெஸ்பூகி (Amerigo Vespucci) என்பவன் யாத்திரை செய்து சோதித்தான். இவன் கொலம்பஸ் கண்டுபிடித்தது இந்திய தேசமல்லவென்றும் தனிப்பட்ட ஒரு புதிய உலகம் என்றும்

கண்டறிந்து ஜனங்களுக்குத் தெரிவித்தான். அது முதல் ஜனங்கள் அந்நிலப்பரப்பைப் 'புதிய உலகம்' என்றே அழைத்து வந்தனர். கடைசியாக கி.பி. 1506 ஆம் வருஷத்தில் தான் புதிய உலகத்திற்கு 'அமெரிக்கா' என்னும் பெயர் இடப்பட்டது. இப்பெயர், புதிய உலகத்தின் கரைப் பிரதேசங் களைச் சோதித்த அமெரிக்கா வெஸ்பூகியின் பெயரைக் கொண்டு அழைக்கப்பட்டது.

ஆதிகாலத்தில் ஆசியா, ஆப்ரிக்கா, ஐரோப்பா ஆகிய மூன்று கண்டங்கள்தான் உலகத்தாருக்குத் தெரிந்திருந்தது. ஆகையால் இக்கண்டங்களுக்குப் பழைய உலகம் என்று பெயர். அமெரிக்கா கண்டுபிடிக்கப்பட்ட பிறகு அதனை நாலாவது கண்டம் என்று வழங்கினார்கள். அமெரிக்கா கண்டுபிடிக்கப்பட்டு சற்றேறக்குறைய 100 ஆண்டுகளுக்குப் பிறகுதான் ஆஸ்டிரேலியா கண்டம் கண்டுபிடிக்கப்பட்டது. இக்காரணம் பற்றிதான் அமெரிக்காவை நான்காவதாகவும் ஆஸ்ட்ரேலியாவை ஐந்தாவதாகவும் சொல்லுகிறோம்.

இப்பொழுது புகையிலையும் உருளைக் கிழங்கும் உலக முழுவதும் பெரும்பான்மையாக உபயோகிக்கப்பட்டு வருகிறது. ஆனால் அமெரிக்கா கண்டுபிடிக்கப்படுமுன் பழைய உலகத்தாருக்கு இப்பொருள்களைப் பற்றி ஒன்றுமே தெரியாது. ஏனென்றால் புகையிலை, உருளைக்கிழங்கு இன்னும் Tomato என்னும் சீமைத்தக்காளி, Turkey என்று சொல்லப்படும் வான்கோழி முதலியவை அமெரிக்கா கண்டத்திற்குச் சொந்தமான பொருட்கள். "கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி" என்னும் செய்யுள் ஐரோப்பியர் நமது நாட்டிற்கு வந்த பிறகு, அதாவது வான்கோழி ஐரோப்பியரால் நமது நாட்டிற்குக் கொண்டுவரப்பட்ட பிறகு, பாடப்பட்ட தாகச் சிலர் சொல்லுவதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டிய தாகத்தான் இருக்கிறது.

வான்கோழி, உருளைக்கிழங்கு முதலிய தன் நாட்டுப் பொருள்களை அமெரிக்கா பழைய உலகத்திற்குக் கொடுத்து தவினாலும் இப்பொருள்களைவிட மிக முக்கியமான பொருள்களை பழைய உலகத்திலிருந்து கடன் வாங்கிக் கொண்டது. அமெரிக்கா கண்டத்தில் நாயைத் தவிர, மனிதருக்கு இன்றியமையாத ஆடு, மாடு முதலிய கால்நடை களும் கோழிகளும் ஆதிகாலத்தில் இல்லை. ஐரோப்பியர் அமெரிக்காவுக்குக் குடியேறிய பிறகுதான் ஆடு, மாடு, கோழி முதலியவை அமெரிக்காவுக்குக் கொண்டுபோகப்பட்டன.

அமெரிக்கா, அட்லாண்டிக் மகா சமுத்திரத்திற்கும், பசிபிக் மகா சமுத்திரத்திற்கும் இடையில் வடக்குத் தெற்காக

அமைந்திருப்பதும், வட அமெரிக்காவும் தென் அமெரிக்காவும் சந்திக்கும் இடத்தில் பூமி குறுகிப் பூசந்தியாயிருப்பதும் அனைவரும் அறிந்த விஷயமாகும். இந்தப் பூசந்திக்குப் பனாமா என்று பெயர். இப்பனாமா பூசந்தியை வெட்டி இடையே ஒரு பெரிய கால்வாய் ஏற்படுத்தி அட்லாண்டிக் சமுத்திரத்தையும் பசுபிக் சமுத்திரத்தையும் ஒன்று சேர்க்கும் ஜல சந்தியாகச் செய்திருக்கிறார்கள். இக்கால்வாய்க்குப் 'பனாமா கால்வாய்' என்று பெயர். இக்கால்வாய் வழியாகக் கப்பல்கள் அட்லாண்டிக் சமுத்திரத்திலிருந்து பசுபிக் சமுத்திரத்திற்குப் போகின்றன. இக்கால்வாய் 1881இல் தொடங்கப்பட்டது. செங்கடலுக்கும் மத்தியதரைக்கடலுக்கும் இடையே சூயஸ் கால்வாயை வெட்டியமைத்த பெயர்போன இஞ்சினியர் Delesseps என்பவரால் இவ்வேலை ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் 35,00,00,000 டாலர் செலவு செய்யப்பட்டு பின்னர் கைவிடப்பட்டது. 1903 ஆம் வருஷம் யுனைடெட் ஸ்டேட்ஸ் அரசாங்கத்தார் மேற்படி கால்வாயைப் பூர்த்தி செய்ய ஒப்புக்கொண்டு வேலையை ஆரம்பித்தார்கள். கடைசியாக 1914 ஆம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 13ஆம் தேதி இக்கால்வாய் வெட்டி முடிக்கப்பட்டது.

*ஆரம்பாசிரியன்*, மலர் **5**, இதழ் **4**, **1929**

# பிள்ளைகளின் அறிவு வளர்ச்சி

பிள்ளைகளின் அறிவு வளர்ச்சியைப்பற்றி பெற்றோர் களும் உபாத்திமார்களும் தகுந்தபடி கவனித்து வரவேண்டும். சில பெற்றோர்கள் பிள்ளைகளுக்கு உணவு உடைகளைக் கொடுத்துச் செல்லமாக வளர்த்து வருகிறார்களே தவிர, பிள்ளைகளின் அறிவு வளர்ச்சி விஷயத்தில் சற்றும் கவலை கொள்வதில்லை. இது மிகவும் விசனிக்கத்தக்கது. உபாத்தி மார்கள்கூட பாடங்களைப் பற்றி மாத்திரம் கவனித்துவிட்டு வாளாவிருந்து விடாமல் சமயம் ஏற்படும் போதெல்லாம் பிள்ளைகளின் அறிவு வளர்ச்சியைப் பற்றியும் கவனிக்க வேண்டும். பிள்ளைகளின் அறிவு வளர்ச்சி என்றால் எல்லா விஷயங்களையும் பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும் (பிள்ளைகளின் மனத்தில் புகுத்த வேண்டும்) என்பதல்ல. பிள்ளைகளுக்கு ஊன்றிப் பார்க்கும் சக்தியையும் யோசிக்கும் சக்தியையும் அதிகப்படுத்த வேண்டும் என்பதே யாகும். இவ்விதம் ஊன்றிப் பார்க்கும் சக்தியை வளரச் செய்வதற்கு சமயத்திற்கும் இடத்திற்கும் தகுந்தாற்போல் அனேக முறைகள் உண்டு. முக்கியமான ஒருமுறை என்ன வென்றால், புதிய பொருள்களைப் பார்த்துவிட்டு வந்தால் பெற்றோர்களாவது உபாத்தியாயர்களாவது அவர்கள் சென்று பார்த்த இடங்கள் அல்லது பொருள்களைப் பற்றி பல நுட்பமான கேள்விகள் கேட்பதேயாகும். உதாரணமாக பிள்ளைகள் ஒரு கோயிலுக்குப் போய் வந்தார்கள் என்று வைத்துக் கொள்வோம். அவர்கள் வந்தவுடன் பெற்றோர்கள் இவ்விதக் கேள்விகளைக் கேட்கலாம்: கோயிலுக்கு எத்தனை வாயில்கள் இருக்கின்றன? சுவாமி சந்நிதி எந்தத் திசையை நோக்கியிருக்கிறது? திருக்குளம் கோயிலுக்கு எந்தப் புறத்தில் இருக்கிறது? கோயிலில் என்னென்ன மரங்கள் இருக்கின்றன? தேர் எங்கேயிருக்கிறது? இன்னும் இவைபோன்ற பல கேள்விகளைக் கேட்போமானால், இக்கேள்விகள் சாதாரண மானதாகத் தோன்றிய போதிலும் பிள்ளைகள் முதலில் சற்றுச் சிரமப்பட வேண்டியிருக்கும். ஆனால் அடுத்த தடவை கோயிலுக்குப் போகும்போது பிள்ளைகள் இவ்விஷயங்களை யெல்லாம் கூர்மையாகக் கவனிப்பார்கள். அடிக்கடி

இவ்விதமாக பிள்ளைகள் பார்க்கிற பல விஷயங்களைப் பற்றிக் கேள்விகள் கேட்டு வருவோமானால் பிள்ளைகளுக்கு ஊன்றிப் பார்க்கும் சக்தியும் கூர்மையான அறிவும் விருத்தி யடைய ஏதுவாகும். சிறுவயதில் இப்பழக்கம் பிள்ளைகளுக்கு ஏற்பட்டுவிடுமானால் பிற்காலத்தில் அதனால் விளையும் நன்மைகள் பல. ஆகவே இவ்விஷயத்தைப் பற்றி உபாத்தி மாரும் பெற்றோரும் கவனிப்பார்கள் என்று நம்புகிறோம்.

*ஆரம்பாசிரியன்*, இதழ் 5, மலர் 5, 1929

# குருடர்களுக்குக் கல்வி புகட்டிய முதல் ஆசிரியர் யார்?

தமக்கென வாழா பிறர்க்குரியாளர் என்று சொல்லப்படும் அறிவுசான்ற பெரியோர்கள், ஏழை மக்களுக்கு நன்மை செய் வதிலேயே தங்கள் வாழ்நாட்களைச் செலவு செய்கிறார்கள். மக்களில் வறுமையினால் ஏழ்மை நிலையடைந்துள்ளவர் களின் வாழ்க்கை மிகவும் பரிதபிக்கத் தக்கது. இதைவிடப் பரிதாபமானது குருடர், செவிடர், ஊமைகளின் வாழ்க்கை. மனிதப் பிறப்பில் மிக்க துரதிஷ்டசாலிகள் இவர்களேயாவர். இத்தகைய ஏழைச் சகோதரர்களுக்குக் கல்வியைப் புகட்டி கூடுமானவரையில் அவர்களின் வாழ்க்கையைச் செம்மைப் படுத்திச் சந்தோஷமாக்குவதற்குப் பல பெரியோர்கள் முயன்று ஊமை செவிட்டுப் பள்ளிக்கூடங்களையும் (Deaf and Dumb Schools) குருடர்களுக்குப் பள்ளிக்கூடங்களையும் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். குருடர்களுக்கும், ஊமை செவிடர்களுக்கும் கல்வி கற்பிக்கும் முறைகளில் எவ்வளவோ வித்தியாசம் உண்டு.

குருடர்களுக்குக் கல்வி கற்பிப்பதற்காகத் தனிப்பட்ட புத்தகங்கள் உண்டு. இப்புத்தகங்களில் எழுத்துக்கள் மேடுள்ள தாகவிருக்கும். குருடர்கள் இந்த மேடான எழுத்துக்களைக் கைவிரல்களால் தடவிப் பார்த்தும் படிக்கப் பயிற்றுவிக்கப் படுகிறார்கள். ஆனால் முதன்முதல் குருடர்களுக்கு இவ்விதப் புத்தகத்தைக் கண்டுபிடித்து உதவியவர் யார்? அப்பெரியார் இந்த முறையை எவ்வாறு கண்டறிந்தார்? அவரைப்பற்றி அறிந்து கொள்ள வேண்டுவது உபாத்திமாராகிய நமது கடமையல்லவா?

நெடுங்காலமாக குருடர்களின் வாழ்க்கை இருளடர்ந்த வாழ்க்கையாகவே இருந்து வந்தது. குருடர்மேல் அன்பு கொண்டு அவர்கள் வாழ்க்கையைச் செம்மைப்படுத்த முன்வந்தவர் ஒருவருமில்லை என்றே சொல்ல வேண்டும். கடைசியாக வெலன்டைன் ஹாவி என்பவர் குருடர்களுக்கு கல்வி புகட்ட எழுத்துக்களைக் கண்டுபிடித்து உதவினார். இவருடைய சரித்திரத்தைப் பிரஞ்சுக்காரரான எம். டுபால் (M. Dufall) என்பவர் எழுதியிருக்கிறார்.

வாலன்டைன் ஹாவி (Valantine Havy) என்பவர், துரதிஷ்டசாலிகளான குருடர்களைப்பற்றி நெடுநாள் கவலை கொண்டு அவர்கள் வாழ்க்கையை எந்த விதத்தில் சந்தோஷமுள்ளதாகச் செய்யலாம் என்று யோசித்துக்கொண்டிருந்தார். ஒருநாள் அவர் வெளியே உலாவச் சென்றபோது ஒரு குருட்டுப் பிச்சைக்காரனைக் கண்டார். அக்குருட்டுப் பிச்சைக் காரனுடைய பரிதபிக்கத்தக்க நிலைமையை யோசித்துக் கொண்டே வாலன்டைன் ஹாவி, தமது சட்டைப்பையில் கையைவிட்டு ஒரு காசு எடுத்து அக்குருடனுக்குக் கொடுத்து விட்டுத் தன் வழியே சென்றார். ஆனால் இவர் இரண்டடி நடப்பதற்குள் குருடனாயிருந்தாலும் யோக்கியனாகிய அந்தப் பிச்சைக்காரன் அவரைக் கூப்பிட்டு "ஐயா நீர் தவறு செய்து வீட்டீர். ஒரு ஸௌ கொடுப்பதற்குப் பதிலாக ஒரு பிராங்க் கொடுத்துவிட்டீரே" என்று சொன்னான் (ஸௌ என்பது பிரான்ஸ் தேசத்தில் வழங்கப்படும் மிகச் சிறு மதிப்புள்ள நாணயம். பிராங்க் என்பது அதிக மதிப்புள்ள நாணயம்).

இதைக் கேட்டதும் அவருக்கு மிகுந்த ஆச்சரியமுண்டாய் விட்டது. குருடனாகிய இவன் நாணயங்களின் வித்தியாசத்தை எவ்விதம் தெரிந்து கொண்டான் என்று அவருக்கு அதிசய முண்டாய்விட்டது. "நீ இதை எப்படித் தெரிந்து கொண்டாய்" என்று அவர் குருடனை வினவினார்.

"ஓ! அதிலென்ன கஷ்டமிருக்கிறது. என் விரலினால் காசைத் தடவிப்பார்த்தால் போதுமானது. உடனே அது இன்ன நாணயம் என்று சொல்லிவிடுவேன்" என்று விடையளித்தான் குருடன்.

வாலண்டைன் ஹாவி, குருடன் சொன்ன விடையை யோசித்துக் கொண்டே வழிநடந்தார். இந்தக் குருடன், நாணயத்தின்மேல் உள்ள எழுத்துக்களைத் தடவிப்பார்த்து இதைத் தெரிந்து கொண்டான். இதைப்போலவே மேடுள்ள தாக அமைக்கப்பட்ட எழுத்துக்களை, உருவங்களை அல்லது ஏதேனும் அடையாளங்களை விரல்களால் தடவிப்பார்த்துக் குருடர்கள் தெரிந்து கொள்ளக் கூடுமல்லவா என்று அவர் சிந்தித்தார். இதைப் பற்றி அவர் நன்றாக யோசித்துக் கடைசியாக, குருடர்கள் படிப்பதற்கான ஒரு முறையைக் கண்டுபிடித்தார். பிறகு ஒரு குருட்டுச் சிறுவன் ஒரு கோயில் வாயிலின் அருகில் நின்று கொண்டு பிச்சை வாங்குவதைக் கண்டு, அவனை அழைத்துக் கொண்டுபோய், அவனுக்குத் தான் புதிதாகக் கண்டுபிடித்த முறைப்படி கல்வி கற்பித்தார். இக்குருட்டுச் சிறுவன், இவர் ஆச்சரியப்படும்படியாக வெகு சீக்கிரத்தில் மேடாக அமைக்கப்பட்ட எழுத்துக்களைக்

கூட்டிப் படிக்கக் கற்றுக் கொண்டான். பிறகு வாலண்டைன் ஹாவி தனது குருட்டு மாணவச் சிறுவனை பொது ஜனங்களின் எதிரில் படிக்கும்படிச் செய்தார். குருட்டுப் பையன், மேடாக அமைக்கப்பட்ட எழுத்துக்களை விரலால் தடவிப் படிப் பதைக் கண்ட ஜனங்கள் ஆச்சரியமடைந்ததோடு அந்த எழுத்துக்களைக் கண்டுபிடித்த இப்பெரியாரைப் புகழ்ந்து வாழ்த்திக் கொண்டாடினார்கள்.

வாலண்டைன் ஹாவி, தாம் கண்டுபிடித்த குருடர் களுக்குக் கல்விபுகட்டும் முறையை மேன்மேலும் சீர்த்திருத்தம் செய்தார். கடைசியாக குருடர்கள் பள்ளிக்கூடம் ஒன்றை ஏற்படுத்துவதற்காகப் பணவுதவி வேண்டுமென்று பொது ஜனங்களிடம் விண்ணப்பம் செய்து கொண்டார். தயாள குணமுள்ள பலர் பொருளுதவி செய்தார்கள் அதைக் கொண்டு ஹாவி முதன்முதல் ஒரு குருடர் பாடசாலையை ஏற்படுத் தினார்.

ஊனக்கண் அற்ற குருடர்களுக்கு ஞானக் கண்ணாகிய கல்விக்கண் கொடுத்த வாலன்டைன் ஹாவியின் பெயர் என்றென்றும் புகழப்படுவதாக! அவர் ஆவி என்றென்றும் இன்புற்று விளங்குக. “கண்ணுடைய ரென்பவர் கற்றோர், முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர்” என்னும் *திருக்குறள்* கருத்துப்படி, இப்பெரியார் குருடர்களுக்கு ஞானக்கண் கொடுத்து அவர்கள் வாழ்க்கையைச் செம்மைப்படுத்திவிட்ட பேருபகாரத்தை ஒருவரும் மறக்க முடியாது.

*ஆரம்பாசிரியன்,* மலர் 5, இதழ் 7, 1929

# சிறு மணித்திரள்

ஜெர்மனி தேசம் கல்வி அபிவிருத்தியில் ஏனைய நாடுகளைவிட முன்னணியில் நிற்கிறது. ஜெர்மனி தேசத்தில் எழுதப்படிக்கத் தெரியாத மனிதர் மிகச் சொற்பமென்றே சொல்லலாம். நாம் சிறு குழந்தைகளுக்குக் கற்பிக்கும் கிண்டர்கார்டன் முறை முதன்முதல் ஜெர்மனியர்களால்தான் கண்டுபிடிக்கப்பட்டது. ஜெர்மனியர்கள் கல்வி விஷயத்தில் எவ்வளவோ முயற்சி எடுத்துக் கொள்கிறார்கள். ஆரம்பக் கல்வி மட்டுமல்ல, உயர்தரக் கல்வி விஷயத்திலும் அவர்கள் அதிக ஊக்கம் எடுத்துக் கொள்கிறார்கள். ஏனைய நாடுகளைப் போலல்லாமல், அங்கு உயர்தரப் பாடசாலைகளில் மிகக் குறைந்த சம்பளத்தைப் பிள்ளைகளிடமிருந்து வசூல் செய்கிறார்கள். குறைந்த சம்பளமாயிருப்பதால் ஏழை மக்களும் கூடத் தங்கள் பிள்ளைகளை உயர்த்தரப் பாடசாலைக்கு அனுப்பி உயர்த்தரக் கல்வியைக் கற்பித்து வருகிறார்கள். ஜெர்மனி தேசத்தில் பல பல்கலைக்கழகங்கள் (Universities) இருக்கின்றன. அன்றியும் மாணவர்களின் வாழ்க்கைக்கான செலவும் அதிகமில்லை. கைத்தொழில் முறைகளைக் கற்பிப்பதிலும் அவர்கள் அதிகக் கவனம் செலுத்தி வருகிறார்கள்.

* * *

ஜெர்மனியர்கள் எல்லோருக்கும் சண்டை செய்யத் தெரியும். ஏனென்றால் ஒவ்வொரு மனிதனும், தனது 20ஆவது வயதில் கட்டாயம் சேனையில் சேர்ந்து, 5 வருஷம் வரையில் சிப்பாய்த் தொழிலில் பழக வேண்டும். முதல் இரண்டு வருஷம் வரையில் காலாட்படையிலும் (Infantry) அதற்கடுத்த மூன்று வருஷம் வரையில் குதிரைப் பட்டாளத்திலும் (Cavalry) சேர்ந்து பழகவேண்டும். நோய் முதலான முக்கியக் காரணங்களிலிருந்தால் தவிர ஒருவரும் இந்தச் சட்டத்தை நிராகரிக்க முடியாது. ஆனால் கடற்கரையையடுத்து வசிக்கும் ஜெர்மனியர்கள் பட்டாளத்தில் சேர்ந்து பயிற்சி பெறவேண்டிய அவசியமில்லை. என்றாலும், அவர்கள் கட்டாயமாகக் கப்பற்படையிற் சேர்ந்து பயிற்சி பெறவேண்டும். இவ்வித கட்டாய மிலிட்டெரி பயிற்சி ஜெர்மனியர்களுக்கு ஏற்பட்டிருப்பதால் அவர்கள் தங்கள் தேசத்தைக் காத்துக்கொள்ள எப்பொழுதும் தயாராயிருக்கிறார்கள். ஜெர்மனியில் சக்கரவர்த்தியாயிருந்த

இரண்டாவது வில்லியம் (William II) தரைப்படைக்கும் கப்பற் படைக்கும் தளகர்த்தராகவிருந்தார். சிப்பாய்கள் விஷயத்தில் ஒரு அற்ப காரியம் முதல் முக்கியமான விஷயம் வரையில் எல்லா விவகாரங்களையும் அவர் தாமே பார்வையிட்டு வந்தார். கப்பற்படையை அவர் அதிகமாகக் கவனித்து வந்தார். அவர் அரசராயிருந்த காலத்தில் எத்தனையோ சண்டைக் கப்பல்கள் புதிதுபுதிதாகக் கட்டப்பட்டன.

* * *

ஜெர்மனியர்கள் கல்வியபிவிருத்தியில் கண்ணுங் கருத்து மாய் இருக்கிறார்கள், என்று சொன்னோம். அது மாத்திரம் அல்ல; சிறுவர்களின் தேகசுகத்தைப் பற்றியும் அவர்கள் அதிக கவலை எடுத்துக் கொள்கிறார்கள். பழைய வழக்கங் களையே பின்பற்றிக் கொண்டிராமல் அடிக்கடி கல்வி சம்பந்தமான புதியபுதிய முறைகளைக் கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறார்கள். ஐரோப்பா கண்டத்தில், சிறுவர் களைத் தோட்டங்களில் அழைத்துக் கொண்டுபோய் மர நிழலில் அவர்களை அமர்த்தி, தாவர சாஸ்திரங்களைக் கற்பிக்கும் வழக்கத்தை முதலில் ஜெர்மனியர்கள்தான் உண்டாக்கினார்கள். பள்ளிக்கூடங்களில் மட்டுமல்ல, வீடுகளிலுங்கூட, பிள்ளைகள் காற்றோட்டமுள்ள வெளி யிடங்களில் வசிப்பதால் உண்டாகும் நன்மைகளைப்பற்றிப் பெற்றோர்களால் கற்பிக்கப்படுகிறார்கள். முற்காலத்தில் ஜெர்மனி தேசம் விவசாய நாடாகவிருந்தது. அக்காலத்தில் அது தானியங்களையும் கிழங்குகளையும் ஏராளமாகப் பயிரிட்டு வந்ததோடு ஆடு, மாடு, குதிரைகளையும் அதிகமாக உற்பத்தி செய்து வந்தது. ஆனால் இப்போது ஜெர்மனி கைத்தொழில் நாடாக மாறிவிட்டது. லிப்ஸிக் (Leipzig) என்னும் பட்டினம் ஜெர்மனியில் புத்தக வியாபாரத்தில் பேர்போனது. ஜினா (Jena) என்னும் நகரம் பூதக்கண்ணாடி (microscopes), தூரதிருஷ்டிக் கண்ணாடி (Telesclopes)களை உற்பத்தி செய்வதில் உலக முழுவதும் பேர்பெற்றது. ஜெர்மனி தேசத்தின் வடமேற்குப் பாகத்தில் பருத்தி, பட்டுநூல் சாமான்கள் ஏராளமாகச் செய்யப்படுகின்றன. ரூர்பிரதேசங் களில் (Ruhr Valley) இரும்பு எஃகு சாமான்கள் ஏராளமாகச் செய்யப்படுகின்றன. இந்த இடத்தில்தான் எஞ்சின்களும், ஸ்டீமர், சண்டைக் கப்பலுக்கு வேண்டிய இரும்புச் சாமான் களும், பாய்லர்களும் ஏராளமாகச் செய்யப்படுகின்றன. நூரம்பெர்க் (Nuremberg) என்னும் பட்டினம் பண்டைக் காலத்தில் ஒரு பெரிய வியாபார ஸ்தலமாய் இருந்தது. இப்போது இப்பட்டினம் ஜெர்மன் பொம்மைகளுக்குப் பேர் போனது. உலக முழுவதும் விற்கப்படும் ஏராளமான

ஜெர்மன் பொம்மைகள் இந்த ஊரிலிருந்துதான் அனுப்பப் படுகின்றன. Frankfort on the Main என்னும் நகரம் சாயத் தொழிலுக்குப் பேர்போனது. உலகத்திலேயே ஜெர்மனிதேசம் தான் சாயத்தொழிலுக்குப் பேர்பெற்று விளங்குகிறது. ஜெர்மனியர் சயன்ஸ் என்னும் சாஸ்திரத்தில் நிபுணர்கள். ஆகையால் Coal-Tar எனப்படும் ஒருவிதப் புகையிலிருந்து இச்சாயத் தொழிலைத் திறமையாகச் செய்கிறார்கள்.

* * *

ஆஸ்ட்ரியா ஹங்கேரி (Austria Hungary) என்பது ஐரோப்பாவில் உள்ள ஒரு சிறு தேசம். இது ஆஸ்ட்ரியா, ஹங்கேரி என்னும் இரண்டு தேசங்கள் சேர்ந்தது. ஆனால் இது வெகு வினோதமான தேசமாகும். இத்தேசத்தில் வசிப்பவர்கள் பலவகைப்பட்ட ஜாதியர்கள். ஆதிகாலத்தில் இது பல நாடு களாகப் பிரிந்திருந்தது. காலக்கிரமத்தில் இவை யாவும் ஒன்று சேர்ந்து ஆஸ்ட்ரியா ஹங்கேரி என்னும் பெயர் பெற்று விளங்குகிறது. இப்பொழுதுங்கூட ஹங்கேரி தேசத்தாருக்கும், ஆஸ்ட்ரியா தேசத்தாருக்கும் பகைமை உண்டு. இரண்டு தேசங்களுக்கும் தனித்தனியே சட்டசபைகள் இருக்கின்றன. ஆனால் அதே சமயத்தில் இரண்டையும் அரசாளும் ஒரு அரசரும் இருக்கிறார். இப்பொழுது அரசராயிருப்பவர் முதலாவது சார்லஸ் (Charles I) என்பவர். இவரை, ஹங்கேரியின் அரசர் என்றும் ஆஸ்ட்ரியாவின் சக்கரவர்த்தி என்றும் சொல்லுவார்கள். இவர் 1916ஆம் ஆண்டு பட்டம் பெற்றார். ஆஸ்ட்ரியா அரசாங்கம் 17 மாகாணங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. அரசாங்கத்தின் சட்டங்கள், Reichsrat என்று சொல்லப்படும் ஒரு சபையால் ஏற்படுத்தப்படுகின்றன. இச்சபை ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளும் அரசரால் நியமிக்கப்பட்ட பிரபுக்களும் அடங்கியது. தேர்தல் 6 வருஷங்களுக்கு ஒரு தடவை நடைபெறும். 24 வயதுக்கு மேற்பட்ட ஒவ்வொரு மனிதனுக்கும் ஓட்டு உரிமை உண்டு.

அங்கு, சில மாகாணங்களில் ஓட்டுக் கொடுக்க வராமலிருக்கும் ஜனங்களுக்கு அபராதமும் விதிக்கிறார்கள். சட்டமாக்கப்பட வேண்டிய மசோதாக்கள் சட்டசபையில் பெரும்பான்மையோர் வாக்குகளால் வெற்றி பெறவேண்டும். வெற்றிபெற்ற பிறகு சக்கரவர்த்தியால் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும். சபையில் ஜனப் பிரதிநிதிகள் இருந்த போதிலும், இன்னும் அரசருக்குத்தான் செல்வாக்கு அதிகமாயிருக்கிறது. ஏனென்றால், அரசருக்குப் பெருந்தொகையான பிரபுக்களைச் சபையின் அங்கத்தினராக நியமிக்கும் உரிமை இருக்கிறது. அதோடு நியமிக்கப்பட்ட பிரபுக்கள் ஆயுள் காலம் வரையில் அங்கத்தினராக விருக்கலாம். இஃதன்றியும், அரச குடும்பத்தைச் சேர்ந்த ஒவ்வொரு அரச குமாரனுக்கும் சபையில் அங்கத்தி

னராகவிருக்கும் உரிமையுண்டு. எனவே அரசனுடைய செல்வாக்கு அதிகம் என்று சொல்வது அனாவசியமாகும். காபினட் மெம்பர்கள் பதினொருவர் இருக்கிறார்கள். இவர்கள் சட்டசபைக்கு நேர் உத்திரவாதிகளாவார்கள்.

ஹங்கேரி தேசத்தின் பதினேழு மாகாணங்களில் பொஹிமியா (Bohemia) என்பதும் ஒன்று. இந்த மாகாணத்திற்கு மாத்திரம் ஸ்தல சுய ஆட்சி அளிக்கப்பட்டிருக்கிறது. இந்த மாகாணம் சுய ஆட்சி பெற்றிருக்கிறபடியால் பள்ளிக்கூடங்களில் பொஹிமியன் பாஷை கற்பிக்கப்படுகிறது. கல்லூரிகளிலும் பொஹிமிய பாஷை கற்பிக்கப்படுகிறது. இஃதன்றியும் அனேக சுதந்தரங்களையும் அடைந்திருக்கிறார்கள்.

* * *

ஹங்கேரி தேசத்திற்குத் தனியாக ஒரு சட்டசபை இருக்கிறது. இச்சபை புடாபஸ்ட் (Budapest) என்னும் நகரத்தில் கூடுகிறது. இந்தச் சபையும், பிரபுக்கள் சபை என்றும் பிரதிநிதிகள் சபை என்றும் இருபிரிவாக உளது. பிரதிநிதிகள் 5 ஆண்டுக்கொரு தடவை ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். 20 வயதுக்கு மேற்பட்டவரும் சிறு தொகை வரிசெலுத்துபவருமாகிய மனிதர்கள் மாத்திரந்தான் ஓட்டுக் கொடுக்க உரிமையுடையவர்கள். இச்சபைக்குக் கீழ்பட்டு 10 காபினட் மெம்பர்கள் உண்டு. இவர்கள் மேற்படி சட்டசபைக்கு உத்தரவாதிகள். குரோடியா - ஸ்லவோனியா (Crotia - Slavonia) என்னும் மாகாணத்திற்கு மாத்திரம் சுய ஆட்சி வழங்கப்பட்டிருக்கிறது. இம்மாகாணத்தின் பிரெஸிடெண்டுக்கு பான் (Ban) என்று பெயர். இவர் ஹங்கேரி நாட்டின் முதன் மந்திரிக்கு உத்தரவாதி.

* * *

ஆஸ்ட்ரியா, ஹங்கேரி ஆகிய இரண்டு தேசங்களுக்கும் அரசன் ஒருவனே. இரண்டு தேசங்களுக்கும் சேனைகள் ஒன்றே; கப்பற் படையும் ஒன்றே. தபால் வசதிகளும் ஒன்றே. ஆனால், இரண்டு தேசத்திற்கும் சட்டசபைகள் வெவ்வேறாக உள்ளன. ஹங்கேரியர் என்றும் ஆஸ்ட்ரியர்கள் என்றும் ஜனங்கள் வேறுபட்டே இருக்கிறார்கள். அவர்களுக்குள் இன்னும் ஒற்றுமை ஏற்படவில்லை. பிரான்ஸ் தேசத்திலும் பலவித ஜாதியார்கள் வசிக்கிறார்கள். பிரான்ஸ் தேசத்திலும் சில பகுதிகளில் ஜனங்கள் பிரெஞ்சு பாஷை அல்லாத வேறு பாஷை பேசுகிறார்கள். அப்படியிருந்தும் அவர்களுக்குள் ஒற்றுமையுண்டு. தேசீய விஷயத்தில் அவர்கள் ஒற்றுமையோடு தேசத்தின் பொது நன்மைக்காக உழைக்க உயிரையும் கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள். ஆனால் ஆஸ்ட்ரியா, ஹங்கேரி தேசத்தார், பிரெஞ்சுக்காரர்களைப் போல இன்னும் ஒற்றுமைப்படவில்லை. இந்தியராகிய நாமும் அப்படித்தான் இருக்கிறோம்.

*ஆரம்பாசிரியன்,* மலர் **5**, இதழ் **9, 1929**

# சிறுமணித்திரள்

கொக்கோ (coco), சாகொலெட் (chocolate) என்னும் பானகத்தையும் தின்பண்டங்களையும் நாம் உபயோகித்து வருகிறோம். இப்பொருள்கள் ஐரோப்பியரால் நமது நாட்டில் பரவச் செய்யப்பட்டவை. ஆனால் கொக்கோ ஐரோப்பாவில் விளையும் பொருள் அல்ல. இது அமெரிக்காவில் பயிராகிற ஒருவித மரத்தின் விதைகளாகும். கொலம்பஸ் என்பவன் அமெரிக்கா கண்டத்தைக் கண்டுபிடித்தபோது அவ்வூரில் இந்த மரங்கள் ஏராளமாக இருப்பதையும் அம்மரத்தின் விதைகளை அமெரிக்க ஜனங்கள் உணவாகச் சாப்பிடுவதையும் கண்டான். பிறகு அவன் ஸ்பெயின் தேசத்திற்குத் திரும்பிச் சென்றபோது கொக்கோ காய்களை எடுத்துக் கொண்டு போனான். அதாவது 1657ஆம் வருஷம் ஜூன் மாதம் 16ஆம் தேதி கொலம்பஸ் கொக்கோ காய்களை ஸ்பெயின் தேசத் திற்குக் கொண்டுவந்தான். அது முதல் ஸ்பெயின் தேசத்தார் கொக்கோ பானத்தை உபயோகிக்க ஆரம்பித்தார்கள். பிறகு அத்தேசத்திலிருந்து ஐரோப்பா முழுவதும் கொக்கோ அருந்தும் வழக்கம் பரவிற்று.

* * *

கொக்கோ மரங்கள் வளப்பமும் ஈரமும் உள்ள உஷ்ணப் பிரதேசங்களில் செழிப்பாய் வளருகிறது. இம்மரம் வருஷ முழுவதும் காய்த்துக் கொண்டிருக்கும். கொக்கோ காய்கள், அடிமரத்திலும் கிளைகளிலும் காய்த்துத் தொங்கும். அவற்றை நறுக்கினால் அதனுள் விதைகள் நிறைந்திருக்கும். இந்த விதைகளைச் சேர்த்து அகலமான தட்டுகளில் பரப்பி வெயிலில் காயவைப்பார்கள். இந்த விதைகளைப் பக்குவம் செய்யாமல் சாப்பிட முடியாது. ஏனென்றால், பக்குவம் செய்யப்படாத விதைகளில் எண்ணெய்ச் சத்து இருக்கிறபடியால் அது கசப்பாகவிருக்கும். ஆகையால் ஒருவரும் விதைகளை மரத்தி லிருந்து அறுத்தவுடன் தின்பதில்லை. விதைகளைக் காய வைத்து நன்றாய்க் காய்ந்த பிறகு அவற்றை தீயின் மேல் வைத்து வறுப்பார்கள். விதைகளை வறுப்பதால் அவற்றிலுள்ள எண்ணெய்ச்சத்து நீங்கிவிடும். பிறகு விதைகளை மாவாக அரைத்து விற்பனைக்கு அனுப்புகிறார்கள். சாக்கொலெட் என்பது கொக்கோ விதைகளை மாவாக அரைத்து அதனுடன் சர்க்கரை சேர்த்துச் செய்யப்படுகிறது.

*ஆரம்பாசிரியன்*, மலர் 5, இதழ் 11, 1929

# வெளிநாட்டிலிருக்கும் இந்தியச் சகோதரும் நமது கடமையும்

[இம்மாத ஆரம்பாசிரியனில் மற்றோரிடத்தில உள்ள 'வெளிநாடுகளிலிருக்கும் இந்தியச் சகோதரர்கள்'* என்னும் தலைப்பெயருடைய வியாசத்தை வாசகர்கள் ஊன்றி வாசிக்கும் படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். அது விஷயமாகச் சில விஷயங்களை இங்கு எழுதுகின்றோம்].

நமது தமிழ் நாட்டிலிருந்து பிஜி, தென் ஆப்பிரிகா, மலாய்நாடு, இலங்கை (ஸிலோன்) முதலிய தூர தேசங்களுக்கு நமது சகோதரர்கள் தொழில் நிமித்தமாகச் சென்றிருக்கும் விஷயம் எல்லோரும் அறிந்ததொன்றே. அவர்கள் நமது அருமைத்தாய் நாட்டினை விட்டுச்சென்று எத்தனையோ ஆண்டுகளாக வெளிநாடுகளிலேயே வசிக்க வேண்டியிருக் கிறது. இன்னும் சிலர் (ஒரு சிலர்) அயல் தேசங்களிலேயே நிலையாகத் தங்கிவிடுகிறார்கள். என்றாலும் அவர்கள் நமது தாய் நாட்டையும் தாய்மொழியையும் ஒருபோதும் மறந்த வரல்லர்; மறக்கவும் முடியாது. அவர்கள் எப்போதும் தாய் நாட்டில் நடக்கும் விஷயங்களையும் நிகழ்ச்சிகளையும் அவ்வப்போது அறிந்து கொள்ள மிகவும் அவாவுடன் விழைகின்றார்கள். அவர்கள் எவ்வளவு ஆர்வத்தோடு தமது தெய்வத் தாய்நாட்டை நேசிக்கிறார்கள் என்பதையும் தாய் நாட்டில் நிகழும் செய்திகளையறிய எவ்வளவு அவாவுகிறார்கள் என்பதையும் தாய்நாட்டிலேயேயிருக்கும் சகோதரர்கள் அறிய வேண்டுமானால், அவர்களும் ஒன்றிரண்டு வருஷமாவது அயல் நாடுகளுக்குச் சென்று வசித்தாலொழிய அதனையறிய முடியாது. அயல்நாட்டில் குடியேறியிருக்கும் நமது சகோதரர் களுக்குத் தாய் நாட்டின் மீதும் தாய் மொழி மீதும் உள்ள ஆர்வத்தை, நெடுநாள் தாயைப் பிரிந்து அவளையே நினைத்து நினைத்து அவாவுறும் குழந்தையின் ஆர்வத்திற்கு ஒப்பிடலாம்.

இவ்விதம் ஆர்வங்கொண்டுள்ள நமது சகோதரர்கள் மாட்டு முக்கியமாகத் தாய் நாட்டவரும் அதிலும் சிறப்பாக உபாத்திமார்களும் செய்ய வேண்டிய கடமையுண்டு. ஆனால் தாய்நாட்டில் வசிக்கும் பொது ஜனங்களும் உபாத்திமார்களும்

- ஏன், தலைவர்கள்கூட, இக்கடமையைச் செய்யாமலே இருந்து வருகின்றனர். இவர்கள், தாம் வேறு; அயல்நாட்டில் சென்றிருக்கும் சகோதரர்கள் வேறு என்று நினைத்திருக்கின்றனர் போலும்! அல்லது நமது கடமைதான் இன்னதென்பதை அறிந்திலர் போலும்! நமது தாய்நாட்டில் பிறந்தவர் உலகத்தில் எந்தப் பாகத்திலிருந்தாலும் எந்த நாட்டில் குடியேறியிருந்தாலும் அவர்கள் நமது சகோதரர்கள் என்பதையும் அவர்களது சுகதுக்கங்கள் நம்முடைய சுக துக்கங்கள் என்பதையும் நம்முடைய சுகதுக்கங்கள் அவர்களுடைய சுகதுக்கங்கள் என்பதையும் நாம் நன்குணர வேண்டும். நம் நாட்டு விஷயங்களையும் நிகழ்ச்சிகளையும் அவர்களுக்கு அடிக்கடி அறிவிக்க வேண்டும். அவர்கள் அனுபவிக்கும் சுகதுக்கங்களையும் அங்கு நிகழும் நிகழ்ச்சிகளையும் நமக்கு அவர்கள் தெரிவிக்க வேண்டும். அதாவது இருசாராரும் ஒருவருக்கொருவர் தொடர்பு கொண்டிருக்க வேண்டும்.

இந்த இருபதாம் நூற்றாண்டில் கடிதப் போக்குவரத்துச் சாதனங்கள் மிக மலிவாகவும் விரைவாகவும் நடைபெறும் முறையில் அமைக்கப்பட்டுள்ளன. அப்படியிருந்தும் நம்மவர், இத்தகைய சாதனங்கள் கிடைக்கப் பெறாதவர் போல இருந்து வருவது யாது காரணமோ? இனியேனும் தாய்நாட்டில் வசிக்கும் சகோதரர்கள் தூரதேசத்திலுள்ள அயல்நாடுகளுக்குச் சென்றிருக்கும் சகோதரர்களுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டு தமது அன்பையும் நல்லெண்ணத்தையும் அடிக்கடி அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ள வேண்டும் என்று விழைகிறோம். முக்கியமாய் இவ்விஷயத்தை உபாத்திமார்கள் செய்வது மிகவும் பொருத்தமானது. இவ்விதமாக எழுதும் கடிதங்கள் எல்லாம் தமிழ் மொழியிலேயே - அதாவது தாய் மொழியிலேயே எழுத வேண்டும். இப்படிச் செய்வது அங்குள்ளவர் தாய்மொழியை மறக்காமலிருப்பதற்கு ஒரு வழியாகும். அன்றியும் பாஷாபிமானத்தையும் வலியுறுத்துவதாகும்.

இவ்விஷயத்தில் ஜாதி வித்தியாசங்களைப் பாராட்டக் கூடாது. வெளிநாடுகளுக்குச் சென்றிருப்பவர் எந்த ஜாதியினராயிருந்தாலும் எந்த மதத்தினராயிருந்தாலும் இந்தியர் - தமிழர் என்னும் ஒரு சிறந்த உயர்ந்த காரணத்தைக் கொண்டு நமது சகோதரத்துவத்தைப் பாராட்ட வேண்டும். வெளிநாட்டிலிருக்கும் சகோதரர்கள் கடிதம் எழுதினால் தாய்நாட்டில் உள்ளவர்கள் பதில் எழுதாமல் இருந்து விடுவதாக வெளிநாட்டிலிருக்கும் நமது சகோதரர்கள் சொல்வதைக் கேட்க மிகவும் வருத்தமாகவிருக்கிறது. சில பத்திராசிரியர்கள்

கூட பதிலெழுதாமலிருக்கிறார்களாம். இனி, இவ்விதம் நேராத படி பார்த்துக் கொள்ள வேண்டியது உண்மைத் தேசாபிமான முள்ள தமிழர் கடமையாகும்.

உபாத்திமார்கள் அயல் நாட்டினில் குடியேறியுள்ள நமது சகோதரர்களுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்வ தனால் அனேக நன்மைகள் உண்டு. முதலாவது, அப்படிச் செய்வது தேசாபிமானம் உள்ளவர்களின் கடமையென்று மேலே சொன்னோம்.

இரண்டாவதாக உபாத்திமார்கள் அயல் நாட்டு பூகோள சம்பந்தமான விஷயங்களையும் சரித்திரங்களையும் அங்கு வசிப்பவர்களின் வழக்கவொழுக்கங்களையும் அங்கு உள்ள செடி, கொடி, மரம், பழங்கள் முதலிய தாவர சாஸ்திர சம்பந்தமான விஷயங்களையும் வியாபாரம், விவசாயம் முதலியவற்றையும் நன்குணரலாம். அன்றியும் அங்கு பேசப் படும் பாஷைகளும் பள்ளிக்கூடத்தைப் பற்றிய விஷயங்களும் அறியக்கூடும்.

எல்லாம் சரிதான். வெளிநாடுகளிலிருக்கும் நமது சகோதரர்களின் விலாசங்கள் வேண்டுமே அதை எப்படியறிவது என்று வாசகர்கள் கேட்கலாம். அதற்கும் நமது பத்திரிகை மூலமாக ஒரு சாதகம் செய்து கொடுக்க முன்வந்திருக்கிறோம். எப்படியென்றால், அயல் நாட்டில் இருக்கும் நமது சகோதரர் களின் விலாசங்களை நமக்குத் தெரிந்தவரையில் அடுத்த மாத *ஆரம்பாசிரிய*னில் வெளிப்படுத்துவோம் விலாசம் தெரிந்தவர் கள் நமக்குத் தெரிவித்தால் பத்திரிகையில் வெளிப்படுத்த சித்தமாயிருக்கிறோம். வெளிநாடுகளிலுள்ள சகோதரர்களும் தங்கள் விலாசங்களைத் தயைசெய்து தெரிவிப்பார்களாக.

*ஆரம்பாசிரியன்,* மலர் 5, இதழ் 12, 1929

# பாடசாலைகளில் பேசும் படக்காட்சி

பேசும் படக்காட்சி மூலமாகப் பாடசாலைகளில் பாடங்களைப் போதிப்பதற்கு இங்கிலாந்தில் முயற்சி செய்யப் படுகிறது. நேஷனல் யூனியன் ஆப் டீசர்ஸ் கமிட்டி (National Union Of Teachars), மிடில்ஸெக்ஸ் கல்வி அதிகாரிகள் ஆகிய இவர்களின் கூட்டுறவால் இப்போது சோதனைக்காக இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பிரிட்டீஷ் தீவுகளிலுள்ள பதினைந்து பாடசாலைகளில் இப் பேசும் படக்காட்சிகளைக் காட்டி பிள்ளைகளுக்குப் போதித்து அதனால் நேரிடும் சாதக பாதகங்களை அறிய ஏற்பாடு செய்கிறார்கள். கைத்தொழில், இயற்கை சாஸ்திரம், செய்யுள் முதலிய பலவிதமான பாடங்களுக்கு மேற்படி சினிமா படங்களை அமைத்து அதனோடு பேசும் இயந்திரத்தையும் அமைத்து இருப்பதனால் பிள்ளைகள் அப்பாடங்களைத் தெளிவாகவும் நன்றாகவும் அறிந்து கொள்ளக்கூடும். ஏனென்றால், பிள்ளை கள் தாங்கள் கற்கும் விஷயங்களைப் படத்தில் பார்ப்பதனால் கண் வழியாகவும், படக்காட்சியோடு அதைப் பற்றிய விஷயங் களைக் காதால் கேட்பதனால் காது வழியாகவும் பாடங்களைக் கிரகிக்க வழியேற்படுகிறது. இது சோதனையில் வெற்றி பெற்று விட்டால் பாடசாலைகளில் எல்லாம் இப்பேசும் படக்காட்சி மூலமாகப் பாடங்களைப் போதிக்க ஏற்பாடு செய்வார்கள்.

இவ்விதம் மேல்நாடுகளில் கல்வி அபிவிருத்திக்காக நூதன முறைகள் கண்டுபிடிக்கப்பட்டு கையாளப்படுகின்றன. ஆனால் நமது தேசத்தின் கதியை நினைத்தால் வயிறு எரிகிறது. பேசும் படக்காட்சி பாடசாலைகளில் உபயோகிக்கும் காலம் நமது நாட்டில் ஏற்படப் பல நூற்றாண்டுகள் செல்லும் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. நமது நாட்டில் கல்விக்காகச் செலவு செய்யப்படும் பணமும் தண்ட செலவும் அனாவசிய செலவுமாகப் போய்விடுகிறது! ஆனால் உபாத்திமார்களுக்குப் போதுமான சம்பளம் கொடுக்க அதிகாரிகளும், தலைவர் களும், அரசாங்கமும் கவலை எடுத்துக் கொள்கிறதில்லை. பணமில்லையென்று சொல்லுகிறார்கள். ஆனால் வீண் செலவுக்கும் அனாவசிய செலவுக்கும் மாத்திரம் எங்கிருந்தோ பணம் இவர்களுக்குக் கிடைத்துவிடுகிறது. கல்வியை பரவச்

செய்ய வேண்டும் என்று பிரமாதமாகப் பேசுகிறார்களே தவிர என்ன செய்தால் கல்வி பரவும் என்பதைப் பற்றி ஒருவரும் கவலை கொள்வதில்லை. உபாத்திமார்கள் வயிற்றுக்குப் போதாமல் அலைய கல்வி அதிகாரிகளுக்கு (உபாத்திமார் சம்பளத்தைவிட) இருபது பங்கு முப்பது பங்கு அதிகமாகச் சம்பளம் கொடுத்தால் தேசத்தில் கல்வி பரவுமா? ஒரு தேசத்தில் கல்வி நிலையையும் நாகரீக நிலையையும் அத்தேசத்து உபாத்திமார்களின் நிலைமையைக் கொண்டு தெரிந்து கொள்ளலாம் என்று ஒரு அறிவாளி சொல்லியிருக்கிறார். இதை யாராவது கவனிக்கிறார்களா?

நூற்றுக்குப் பத்துபேர்கூடப் படிக்கத் தெரியாமலிருப்பது தேசபக்தர்களுக்கும் தேசத்தலைவர்களுக்கும் தேசத்தையாள் வோருக்கும் அவமானமில்லையா என்று கேட்கிறோம். பிள்ளைகளுக்கு மூளையில்லாதபடியால் படிக்கவில்லை என்று யாராவது சொல்ல முடியுமா? என் அனுபவத்தில் பிள்ளைகள் எல்லோரும் புத்தியுள்ளவர்கள் என்று தைரிய மாகத் திடமாய்ச் சொல்லுவேன். முட்டாள் பிள்ளைகள், அறிவற்ற பிள்ளைகள் ஆயிரத்தில் ஒன்று இருக்கலாம். ஆனால் இயற்கையாகவே பிள்ளைகள் எல்லோரும் கல்வியைக் கற்றுக் கொள்ளும் சுபாவம் உள்ளவர்கள். அப்படியிருக்க பிள்ளை களுக்குப் படிப்பு வரவில்லையென்று யாராவது சொன்னால் அதை ஒப்புக்கொள்ள முடியாது. பிள்ளைகள் படிப்பதற்குக் காரணம் போதிப்பதில் தவறு இருக்க வேண்டும் அல்லது பெற்றோரின் கவனக் குறைவாக இருக்க வேண்டும். உபாத்தியாயர்கள் உபாத்திமைப் பயிற்சி பெற்றிருப்பதனால் பாடம் சொல்லுவதில் தவறு இருக்காது. மற்றபடி பிள்ளைகள் படிக்கவில்லை என்றால் அவர்கள் இயற்கையாகவே கற்றுக் கொள்ளும் சுபாவமுடையவர்கள். ஆகையால் அவர்களை முட்டாள்கள், மூடர்கள் என்று சொல்லுவது தவறு. பிறகு, கல்வி பயிலாததற்குக் காரணம் என்னவாக விருக்கும் என்றால் அவர்கள் ஆகாரத்தில் ஏதோ தவறு இருக்க வேண்டும். நான் கண்டவரையில் பிள்ளைகள் கல்வியில் கவனம் செலுத்தாததன் காரணம் அவர்களுக்குத் தகுந்த சாப்பாடு இல்லாமையே யாகும்.

இதைக் கவனிக்காமல் பாடசாலைகளில் போதுமான அபிவிருத்தியில்லை என்று சொல்லி உபாத்திமார்கள்மேல் அனாவசியமாக வீண்பழி சுமத்துவதில் பலனில்லை.

நமது நாட்டில் கல்வியைப் பரப்பாமல் இருப்பதும் அதற்குப் பணமில்லை என்று சொல்வதும் வெட்கக்கேடான காரியம். இதைவிட வெட்கக்கேடு என்னவிருக்கிறது. ஜப்பான்

தேசமும் மேல்நாடுகளும் கல்வியைப் பரவச் செய்திருக்கின்றன. நமது நாட்டில் மாத்திரம் கல்வி பரவவில்லை; பணம் இல்லை என்றால் யார்தான் நம்புவார்கள்? நமது நாட்டில் பணம் பகற்கொள்ளையாகப் போகிறது. கவர்னர்கள், நிர்வாகசபை மெம்பர்கள், கலெக்டர்கள் இன்னும் ஏராளமான உத்தி யோகஸ்தர்கள் இவர்களுக்கெல்லாம் தேவைக்கு அதிகமாக 1000, 2000, 3000, 4000, 5000, 10000, 20000 என்று மாதாமாதம் சம்பளம் கொடுக்கப்படுகிறது. எந்த நாகரீக தேசத்திலாவது இவ்விதப் பெரும் சம்பளம் உண்டா? இதற்குக் கேள்வி இல்லையா? இவர்களுக்குக் கொடுக்கும் பணத்தைக் குறைத்து விட்டால் (100க்கு 50 பங்கு குறைக்க வேண்டும்) அதனால் எவ்வளவோ பணம் மிகுதியாகும். அப்பணத்தைக் கொண்டு கல்வியைப் பரவச் செய்யலாமன்றோ? இக்காலத்தில் நமது நாட்டில் படிப்பு என்றால் ஒரு வியாபாரமாக இருக்கிறது. பிள்ளைகளுக்குச் சம்பளம் அதிகப் படுத்திவிட்டார்கள். இதனால் ஏழைப் பிள்ளைகள் படிக்க வழியில்லை. பணக் காரப் பிள்ளைகள் மாத்திரம் படிக்க வழியுண்டு. பணக்காரப் பிள்ளைகள் படித்து பெரியபெரிய உத்தியோகம் பெற்று ஆயிரமாயிரமாகச் சம்பாதிக்கிறார்கள். ஏழைப் பிள்ளைகள் படிக்க வழியில்லாமல் திண்டாடி வயிற்றுப் பிழைப்புக்கே கஷ்டப்படுகிறார்கள். பணக்காரப் பிள்ளைகளுக்கு அதிகச் சம்பளமும் ஏழைப்பிள்ளைகளுக்கு குறைந்த சம்பளமும் ஏன் வசூலிக்கக் கூடாது? இன்றைய படிப்புமுறை நமது நாட்டில் பணக்காரர்களுக்கு ஏற்பட்டதாகத் தெரிகிறதே தவிர பாமரர்களுக்கு ஏற்பட்டதாகத் தெரியவில்லை. இன்னும் பலவிதமான குறைபாடுகள் உள்ளன. இவற்றையெல்லாம் கவனித்து தக்க வழி செய்யாமல் சாக்குப் போக்குச் சொல்வதில் என்ன பிரயோசனம்? கல்வி அபிவிருத்தி விஷயத்தில் நமது தேசத்தை ஏனைய மேல் நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் மனம் துடிக்கிறது. வயிறு எரிகிறது. என்றைக்குத்தான் விமோசனம் கிடைக்கும்?

*ஆரம்பாசிரியன்,* மலர் 7, இதழ் 3, 1931

# குழந்தைகளும் அவைகளைப் பேணும் முறையும்

குழந்தைகளைப் பற்றிப் பேசும்போது முதலில் குழந்தைகளின் பெற்றோர்களைப்பற்றிப் பேச வேண்டியிருக்கிறது. ஏனென்றால் குழந்தைகளின் தேக சுகமும் புத்தி நுட்பமும் அவர்களின் பெற்றோருடைய தேகசுகத்தையும் அறிவையும் பொறுத்து நிற்கிறது.

இதுபற்றியன்றோ,

செந்நெல் லாயசெழு முளைமற்று மச்
செந்நெல்லே யாகி முளைதலால் - அந்நெல்
வயலெங்குங் காய்க்கும் வளவயலூர
தந்தையறிவு மகனறிவு

என்றும்,

நூலைப் போல் சேலை தாயைப் போல் சேய்

என்றும் பண்டைப் பெரியோர் கூறிப்போந்தனர்.

பரம்பரைக் குணமும் வழிமுறையாகப் பிள்ளைகளுக்கு வரக்கூடும். எனினும், அது அவ்வளவாகப் பாதிக்கிறதில்லை. நுண்ணறிவு, வீரம் அல்லது நோய் முதலியவை பரம்பரையாகத் தொடரும் என்று சொல்வதற்கில்லை. வெற்றிவீரனாய் விளங்கிய நெப்போலியன் தன்னைப் போன்ற வெற்றி வீரனை உண்டாக்கவில்லை. சிறந்த ஆசிரியராகிய டிக்கன்ஸ் (Dikens) தன்னைப் போன்ற இன்னொரு டிக்கனை உண்டாக்கவில்லை. சீத்தலைச் சாத்தனர் இன்னொரு சாத்தனாரை உண்டாக்கவில்லை. ராஜராஜ சோழன் இன்னொரு ராஜராஜனை உண்டாக்கவில்லை. ஆனால் துன்மார்க்கன் பிள்ளை துன்மார்க்கனாய் இருப்பதைக் காண்கிறோம். இதன் காரணம் அப்பிள்ளையின் வளர்ப்பு முறையும் அப்பிள்ளை வளரும் சுற்றுப்புறக் கூட்டுறவுமேயாகும்.

பரம்பரைக் குணம் எப்படியிருந்த போதிலும் தாயின் தேகநிலை அவள் பிள்ளைக்கும் அமைகிறது என்பது மட்டும் உறுதி. நல்ல ஒழுக்கமும் சுகாதார முறைப்படி நடந்து கொள்வதும் மாசற்ற குணமும் தாய்மாருக்கிருந்தால் அவர்கள் பெறும் சிறுவர்களும் அவ்விதமேயிருப்பார்கள்.

கருவுற்றுக் கர்ப்பமாயிருக்கும் ஸ்திரீகள், அக்காலத்தில் தங்கள் தேகசுகத்தைக் கவனித்து வரவேண்டும். பிறக்கப் போகும் பிள்ளை தேக திடமும் மனோதிடமும் பொருந்தி யிருக்க வேண்டுமானால் கர்ப்பவதியாயிருக்கும் ஸ்திரீ கீழ்க் கண்ட முறைகளைக் கவனிக்க வேண்டும்.

கர்ப்பவதியாயிருக்கும் ஸ்திரீ தன் தேகத்தையும் மனதையும் அதிகமாகக் கஷ்டப்படுத்திக் கொள்ளக் கூடாது. பெண்கள் கர்ப்பமாயிருக்கும்போது சிடுசிடுப்பாயிருப்பார்கள். அச்சம யத்தில் அனேகமாக சண்டை சச்சரவு செய்யும் சுபாவம் அவர் களுக்கு ஏற்படுகிறது. ஆனால், அக்காலத்தில் சண்டை சச்சரவுகள் ஏற்படுவதால் இனிப் பிறக்கப்போகும் பிள்ளையின் தேகசுகத்தைப் பாதிக்கும். அதாவது பிறக்கப்போகும் குழந்தையின் நரம்புகளைப் பாதிக்கும்.

கஷ்டமான வேலைகளைச் செய்யக்கூடாது. சந்தோஷமும் உற்சாகமுமாய் இருக்க வேண்டும். வருத்தம், கவலை முதலியன இருக்கக் கூடாது. கர்ப்பமாயிருக்கும் ஸ்திரீகள் உணவு விஷயத்தில் அதிக ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும். அதாவது, அதிக போஜனம் கொள்வதும் தவறான ஆகாரம் உண்பதும் ஒருபோதும் கூடாது. அதிகமான ஆகாரத்தைச் சாப்பிட்டுத் தீனிப்பை, ஈரல் முதலிய உறுப்புகளுக்கு அதிக வேலை கொடுக்கக்கூடாது. சாதாரண மனிதர் அதிகமாய்ச் சாப்பிட்டால் அஜீரணம் முதலிய நோய்கள் உண்டாகின்றன. அப்படியிருக்க கர்ப்பவதியாயிருக்கும் ஸ்திரீ அதிக உணவை உண்பதால் உண்டாகும் தீமைகளைச் சொல்லாமலே உணர லாம். அன்றியும் கர்ப்பவதியான ஸ்திரீ அடிக்கடி ஆகாரத்தைப் புசிக்கக் கூடாது. குறிப்பிட்ட வேளையில் நல்ல ஆகாரத்தை அளவாக உண்ண வேண்டும். அதிகமாக ஆகாரத்தைச் சாப்பிட்டால் அதிக பலம் உண்டாகும் என்று சிலர் தவறாக நினைக்கிறார்கள். அமித உணவு பலஹீனத்துக்குக் காரணம் என்பதை உணரவேண்டும்.

கர்ப்பவதியான ஸ்திரீகள் இலைக்கறிகளை (கீரைகளை)த் தாராளமாக உண்ண வேண்டும். இதில் கவனிக்க வேண்டியது என்னவென்றால், இலைக்கறிகளைச் சமைக்கும்போது அவற்றிலிருக்கும் தண்ணீரைக் கீழே கொட்டிவிடக்கூடாது. ஏனென்றால் இலைக்கறிகளில் தேகசுகத்துக்கு இன்றியமை யாத பலவித உப்புக்கள் இருக்கின்றன. இந்த உப்புக்கள் தண்ணீரில் கரைந்துவிடும் இயல்புள்ளவையாகையால் கீரை களை வேகவைக்கும்போது அவற்றிலுள்ள உப்புக்கள் தண்ணீ ருடன் கலந்து விடுகின்றன. ஆகவே அந்தத் தண்ணீரைக் கீழே கொட்டிவிடாமல் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்.

கர்ப்பவதியான ஸ்திரீகள் தாராளமாகப் பழங்களைப் புசிக்க வேண்டும். ஆப்பிள், ஆரெஞ்சு முதலிய பழவகைகளைச் சாப்பிடுவதனால் உண்டாகும் தேகசுகத்தை, உண்டு அனுபவித் தவர்களே நன்கறிவார்கள். முகம்மதியர், பார்ஸிஜாதியார், ஐரோப்பியர் முதலியோர் பழங்களைத் தாராளமாக உண்கிறார்கள். நமது நாட்டில் பழங்களைப் புசிக்கும் வழக்கம் மிகக்குறைவு என்றே சொல்ல வேண்டும். தமிழர்கள் முகமதியர்களைப் போல பழங்களை அதிகமாக உண்ணும் வழக்கத்தை மேற்கொள்ள வேண்டும். அதிலும் கர்ப்பவதியான ஸ்திரீகள் அவசியமாகப் பழங்களை உண்ணவேண்டும்.

பிள்ளை பிறந்த பிறகுங்கூட தாய்மார் சாப்பாட்டு விஷயத்தில் அதிக ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். தாய்மார் குழந்தைகளுக்கு முலைப்பால் கொடுத்து வளர்க்க வேண்டும். நவீன நாகரீகப் பெண்கள் புட்டிப்பால் முதலியவைகளைக் கொடுத்துவருகிறார்கள் இப்படிச் செய்வது குழந்தைகளுக்கு அதிக துன்பங்களையும் நோய்களையும் உண்டாக்குகிறதோடு அவர்கள் உயிருக்கே ஆபத்தாக முடிகிறது. பசும் பாலைவிட தாய்ப்பாலே குழந்தைகளுக்கு ஏற்றது. சிலர் கட்டிப்பாலை (Condensed milk) குழந்தைகளுக்குக் கொடுக்கிறார்கள். இது பிசகு. தகர டப்பிகளிலும் புட்டிகளிலும் சீமையிலிருந்து கொண்டுவரப்படும் கட்டிப்பாலில் vitamin என்னும் ஜீவசத்துப் பொருள் இல்லை என்றும் அதனால் குழந்தைகள் பலஹீனமடைகின்றன என்றும் சொல்லுகிறார்கள். தாய்ப் பாலில் குழந்தைகளுக்கு வேண்டிய ஜீவசத்துப் பொருள்கள் (Vitamins) இருக்கின்றன. ஆகவே, தாய்ப்பாலே குழந்தைகளுக்கு ஏற்றது. தாய்ப்பாலை உண்ணும் குழந்தைகள் புஷ்டியும் பலமும் உடையவர்களாயிருக்கிறார்கள். இதையறிந்துதான் நமது முன்னோர் 'பீரம் பேணில் பாரம் தாங்கும்' என்று சொல்லியிருக்கிறார்கள்.

குழந்தைகள் மரணத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்த டாக்டர்கள், தாய்ப்பால் உண்ணும் குழந்தைகள் அதிகமாகச் சாகிறது இல்லை என்றும் புட்டிப்பால், டப்பிப்பால் முதலிய கட்டிப்பாலைக் கடைகளில் வாங்கி வளர்க்கப்பட்ட குழந்தைகள் அதிகமாகச் சாகின்றனவென்றும் அறிந்து தாய்ப் பாலைத்தான் குழந்தைகளுக்குக் கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். அன்றியும் தாய்ப்பாலைக் குழந்தைகள் குடிப்பதிலிருந்து தாய்மாருக்கும் தேகசுகம் அதிகப்படுகிற தாகவும் சொல்லுகிறார்கள்.

நமது நாட்டில் குழந்தைகளுக்குத் தாய்ப்பாலூட்டும் வழக்கம் ஆதிகால முதல் இருந்து வருகிறது. இது மிகவும் நல்ல வழக்கந்தான். ஆனால் மேல்நாட்டு நாகரீகத்தை மேற் கொள்ளும் ஸ்திரீகள் தாங்கள் பெற்ற குழந்தைகளுக்குத்

தங்கள் பாலைக் கொடுக்காமல் பசும்பால் முதலிய பால்களைக் கொடுத்து வருவது விசனிக்கத்தக்கது.

குழந்தைகளுக்குப் பால்கொடுக்கும் தாய்மார் ஆகார விஷயத்தில் அதிக ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். கண்ட ஆகாரத்தை அளவுக்கு அதிகமாகப் புசிப்பதால் அவர்கள் தேகசுகம் கெடும். அவர்கள் தேகசுகம் கெட்டால் பாலும் கெடும். அப்பாலைக் குழந்தைகள் உண்டால் அக்குழந்தைகளுக்கும் தேகசுகம் கெடும். தாய் உண்ட ஆகாரத்தின் சத்து பாலிலும் கலந்து விடுகிறது. மதுபானம் உட்கொள்ளும் ஒரு ஸ்திரீயின் முலைப்பாலில் மதுசாரம் இருப்பதை டாக்டர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஆகவே தன் குழந்தைகளுக்கு முலைப்பாலூட்டி வளர்க்கும் தாய் அக்குழந்தை தேக சுகத்தோடிருக்க விரும்பினால், தானும் தேகசுகமுடையவளாயிருக்க வேண்டும். இதற்கு நல்ல ஆகாரத்தை மிதமாகப் புசித்து வரவேண்டும்.

தாய்மார் குழந்தைகள் அழும்போதெல்லாம் பால் கொடுப்பது வழக்கம். இது தவறாகும். குழந்தை தாகத்தினாலும் அழுவது உண்டு. அப்பொழுது தண்ணீரைக் கொடுக்க வேண்டும். வளர்ந்த பெரியவர்களுக்கு எப்படி பசியும் தாகமும் உண்டோ அப்படித்தான் குழந்தைகளுக்கும் பசியும் தாகமும் உண்டு. குழந்தைகளுக்குப் பசியெடுத்தால் அதன் ஆகாரமாகிய பாலைக் கொடுக்க வேண்டும். இதை உணராமல் தாய்மார் குழந்தை அழும்போதெல்லாம் பாலைக் கொடுப்பது தவறு. அவர்களின் பசியையும் தாகத்தையும் அறிந்து அதற்கேற்ப பாலையோ அல்லது தண்ணீரையோ கொடுக்க வேண்டும்.

குழந்தைகளுக்குத் தண்ணீர் அல்லது பால் கொடுக்கும் போது அதனுடன் சர்க்கரையைக் கலப்பது தாய்மார்களின் வழக்கம். இதுவும் தாய்மார் செய்யும் தவறுகளில் ஒன்றாகும். சர்க்கரையைத் தின்பதினால் மனிதருக்குத் தேகசுகம் கெடுகிறது என்றும் முக்கியமாக வெள்ளைச் சர்க்கரை தேகத்திற்கு அதிகத் தீமை உண்டாக்குகிறது என்றும் ஆராய்ச்சி செய்த டாக்டர்கள் சொல்லுகிறார்கள். கரும்பு ரசத்தை (கருப்பஞ் சாற்றை)க் காய்ச்சாமல் அப்படியே சாப்பிட்டால் உடம்புக்குத் தீமை உண்டாகிறதில்லை என்றும் அதைக் காய்ச்சி சர்க்கரையாகச் செய்துவிட்டால் அச்சர்க்கரை தேகத்திற்குத் தீமை பயக்கிறது என்றும் சொல்லுகிறார்கள். தேகத்துக்குப் பொருத்தமான இயற்கையான சர்க்கரை, பழவகைகளில் இருப்பதாகவும் ஆகவே சர்க்கரையைச் சாப்பிடுவதைவிடப் பழங்களைச் சாப்பிடுவது மேலானது என்றும் கூறுகிறார்கள்.

ஆகவே, சிறுகுழந்தைகளுக்குப் பாலுடன் சர்க்கரையை அதிலும் வெள்ளைச் சர்க்கரையைக் கலந்து உண்பிப்பது நன்றன்று. சாத்துக்குடி, ஆரஞ்சி முதலிய பழரஸங்களைப் பாலுடன் கலந்து கொடுப்பது குழந்தைகளின் தேகசுகத்துக்கு நன்மை பயக்கும்.

குழந்தைகள் விஷயமாய்க் கவனிக்கப்படவேண்டிய இன்னொரு முக்கிய விஷயம் சுத்தம் ஆகும். குழந்தைகள் உண்ணும் ஆகாரம், அவர்களின் ஆடை, பாத்திரங்கள் முதலிய யாவும் சுத்தமாக இருக்க வேண்டும்.

குழந்தைகளுக்கு அடிக்கடி நோய் உண்டாகிறது சாதாரணமானது. ஆனால், அது இயற்கையல்ல. காலம் வேளையறியாமல் அது அழும்போதெல்லாம் ஆகாரத்தை அமிதமாகக் கொடுப்பதால் குழந்தைகளுக்கு வாந்தி, அஜீரணம் முதலிய நோய்கள் உண்டாகின்றன. பெரும்பான்மையோர் குழந்தைகள் நோயில் விழுவதை இயற்கையானதென்று நினைக்கிறார்கள். அது தவறு. குழந்தைகள் அடிக்கடி நோயடைய வேண்டும் என்பது இயற்கை தேவியின் கருத்தன்று. அது மக்களின் மூடத்தனத்தால் சாப்பாடு முதலியவற்றின் மூலமாய் ஏற்படுகிற குற்றமாகும்.

குழந்தைகளுக்கு நினைத்தபோதெல்லாம் ஆகாரத்தைக் கொடுத்து அதன் மெல்லிய தீனிப்பையைக் கெடுத்து நோயை உண்டாக்கக்கூடாது. கீழ்க்கண்டபடி குழந்தைகளுக்கு ஆகாரம் அளிப்பது நல்லது.

பிறந்தது முதல் 2 மாதம் வரையில் 2 மணி நேரத்துக்கொரு தடவையும் மூன்றாம் மாதம் முதல் 9ஆம் மாதம் வரையில் மூன்று மணி நேரத்துக்கொரு தடவையும் 9ஆம் மாதம் முதல் 12ஆம் மாதம் வரையில் நான்கு மணி நேரத்துக்கொரு தடவையும் ஆகாரம் கொடுக்க வேண்டும்.

அனேக குழந்தைகள், அமிதமான ஆகாரம் கொடுக்கப் படுவதால், மரணமடைகின்றன. ஒரு வருஷத்துக்குப் பிறகு ஒரு நாளில் மூன்று வேளை ஆகாரம்தான் கொடுக்க வேண்டும். ஒரு வருஷம் கடந்த பிறகு குழந்தைகளுக்கு சாதம் போன்ற கட்டியான ஆகாரத்தைக் கொடுக்கலாம். குழந்தைகளுக்குத் தினந்தோறும் பழவகைகளைக் கொடுக்க வேண்டும். இதனால் தேகசுகம் விருத்தியாகும்.

பிள்ளைகள் தாகமாயிருக்கும்போது போதுமானளவு தண்ணீரைக் குடிக்கப் பழக்க வேண்டும். அதிகமாகத் தண்ணீரைக் குடிப்பதால் உள் உறுப்புக்கள் சுத்தமடையும். சிறுவர்கள் பழரசம் சாப்பிடுவதில் இயற்கையாகவே விருப்ப முள்ளவர்கள். பழரசம் உடம்புக்கு நல்லதாகையால் அதைத் தாராளமாய்ப் பிள்ளைகளுக்குக் கொடுக்கலாம். இயற்கை

யாகவே பிள்ளைகளுக்குக் காபி, டீ சாப்பிடுவதில் விருப்ப மிருக்காது. இத்தகைய பானங்களைப் பிள்ளைகளுக்குக் கொடுத்துப் பழக்கக் கூடாது. இவை நரம்புகளைப் பலவீனப் படுத்திவிடுகின்றன. காபி, ஈரல் வியாதியையுண்டாக்கும். சிறு பிள்ளைகளுக்கு ஒருபோதும் மதுபானங்களை உண்ணக் கொடுக்கக்கூடாது.

தேக சுகமுள்ள ஒரு குழந்தை ஆறு மாதம் வயதடைந்தவுடன் பல் முளைக்க ஆரம்பிக்கும். முதலில் கீழ்வாயின் மத்தியில் நான்கு பற்களும் முளைக்கும்.

ஒரு வருஷத்துக் குழந்தைக்கு ஆறு பற்களும் 18 மாதக் குழந்தைக்குப் பன்னிரண்டு பற்களும் இரண்டு வயதுக் குழந் தைக்குப் பதினாறு பற்களும் அமைந்திருக்கும். குழந்தைகளுக்கு மென்று தின்னும்படியான ஆகாரத்தைக் கொடுத்து வந்தால் அவர்களின் பற்கள் உறுதியடைந்து நன்றாய் வளரும். சில தாய்மார் ரொட்டியைப் பாலில் தோய்த்து மெல்லுவதற்கு இடமில்லாதபடி மெதுவாகச் செய்து அதைப் பிள்ளை களுக்குக் கொடுக்கிறார்கள். இவ்விதமான ஆகாரத்தைப் பிள்ளைகளுக்குக் கொடுப்பதால் அப்பிள்ளைகளின் பற்கள் உறுதியடைந்து நன்றாய் வளரமாட்டா. கடித்து மென்று தின்னக்கூடிய பதார்த்தங்களைப் பிள்ளைகளுக்குக் கொடுக்க வேண்டும். இத்தகைய கடின ஆகாரங்களை மெல்லுவதால் குழந்தைகளின் தாடை, ஈறு முதலிய பாகங்கள் உறுதியடை கின்றன. அன்றியும் மென்று தின்னும் பழக்கமும் இளமையி லேயே உண்டாகிறது. உணவை மென்று தின்பதினால் ஜீரணசக்தி பலப்பட்டு தேகசுகம் அதிகப்படுகிறது. ஆனால் பெரும்பான்மையோர் ஆகாரத்தைப் போதிய அளவு மென்று தின்கிறதில்லை. குழந்தைகளுக்கு மென்று தின்னும் பழக்கத்தை இளமையிலேயே உண்டாக்க வேண்டியது பெற்றோர் கடமையாகும். சில பெற்றோர் குழந்தைகளைச் சீக்கிரமாகச் சாப்பிடப் பழக்குகிறார்கள். சீக்கிரமாகச் சாப்பிடப் பழக்குவதால் பிள்ளைகள் ஆகாரத்தைப் போது மான அளவு மெல்லுவதற்கு இடமில்லாமற் போகிறது.

பிள்ளைகளுக்கு அதிகமாகச் சர்க்கரை கொடுக்கக் கூடாது. அதிகமாகச் சர்க்கரையை உண்டால் பற்களுக்குக் கெடுதியுண்டாகும்.

பிள்ளைகளின் ஆறாவது வயதில் பற்கள் விழுந்து புதுப் பற்கள் முளைக்கும். இப்புதுப் பற்கள் நெடுங்காலம் கெடாமல் உறுதியாக இருக்கவேண்டுமானால் ஆகாரத்தை நன்றாய் மென்று, பற்களுக்கு வேலை கொடுத்து வரவேண்டும்.

காட்லீவர் ஆய்ல் (Cod Lever Oil) என்னும் மீன் எண்ணெயைப் பிள்ளைகளுக்குக் கொடுத்தால் தேகத்திலுள்ள எலும்புகளும் பற்களும் உறுதியடையும்.

குழந்தைகளைத் தினந்தோறும் குளிப்பாட்டிச் சுத்தஞ் செய்ய வேண்டும். குழந்தைகள் வளர்ந்து சிறுவர்களானவுடன் தினந்தோறும் குளிக்கும் பழக்கத்தை உண்டாக்க வேண்டும். அன்றியும் குழந்தைகளை வெற்றுடம்பாய்ச் சிறிது நேரம் காற்றில் விட்டுவைக்க வேண்டும். அதாவது உடம்பு முழுவதும் நல்ல காற்றுப் படும்படியாய் விட வேண்டும். தரையில் பாயை விரித்து, குழந்தையை அதன்மேல் வெற்றுடம்பாய் விட்டு வைக்க வேண்டும். ஆனால் குளிர்ந்த காற்றுப் படும்படி விடக்கூடாது. நமது நாட்டில் குழந்தைகளை சதா காலமும் வெற்றுடம்பாக விட்டுவைக்கிறார்கள். அது தவறு. சிறிது நேரம் தவிர மற்றக் காலங்களில் குழந்தைகளை உடுத்தி வைக்க வேண்டும்.

குழந்தைகளுக்கு இயற்கையிலேயே விளையாட்டில் விருப்பம் உண்டு. குழந்தைகளை அவர்கள் இஷ்டம்போல் விளையாட விடவேண்டும். ஓடுதல், குதித்தல், பந்தாடல், பலிங்குடுகுடு, ஹாகி முதலிய விளையாட்டுகள் சிறுவர்களின் வளர்ச்சிக்கும் தேக சுகத்துக்கும் மனவளர்ச்சிக்கும் இன்றியமை யாதது.

குழந்தைகளுக்குத் தூக்கமும் இன்றியமையாதது. சிறு குழந்தை அனேகமாக எப்பொழுதும் தூங்கிக் கொண்டே யிருக்கும். பிறந்து நான்கு ஐந்து வாரக் குழந்தைகள் சாப்பிடும் நேரம் தவிர மற்ற நேரங்களில் தூங்கிக் கொண்டிருக்கும். பெரிய குழந்தைகளும் பகல் வேளையில் தூங்கவேண்டும். குழந்தைகளுக்குத் தூக்கம் இன்றியமையாதது. குழந்தைகள் உறங்குவதால் மனதுக்கும் தேகத்துக்கும் சுகம் தரும். இரண்டு முதல் மூன்று வயதுக் குழந்தைகள் பகலில் இரண்டு மணி நேரமாவது உறங்க வேண்டும். சில குழந்தைகள் விளையாட்டு விருப்பத்தினால் பகலில் தூங்க விரும்புவதில்லை. அப்படிப் பட்ட குழந்தைகளை படுக்க வைத்துத் தூங்கச் செய்ய வேண்டும். இருட்டறையில் 5 அல்லது 10 நிமிஷம் படுக்க வைத்தால் பிறகு தாங்களாகவே தூங்கிவிடுவார்கள். பள்ளிக் கூடம் போகும் வயதுள்ள சிறுவர்கள் பகலில் உறங்க வேண்டியதில்லை. ஆனால் அவர்கள் இரவில் சீக்கிரமாகப் படுத்து உறங்கவேண்டும். சிறு பிள்ளைகளை முன் இரவிலேயே படுத்துத் தூங்கப் பழக்கவேண்டும். பிள்ளைகள் படுக்கப் போகும்போது பசியுடன் இருக்கக்கூடாது. இரண்டு காரியமும் பிள்ளைகளுக்கு நித்திரை பங்கம் உண்டாக்கும் தூங்கும் இடம் சுத்தமான காற்றோட்டமுள்ளதாய் இருக்க வேண்டும்.

*ஆரம்பாசிரியன்,* மலர் 7, இதழ் 4, 1931

# ஆரம்பாசிரியர் பிள்ளைகளுக்கு இலவசக் கல்வி

ஏனைய தொழில்களையெல்லாம்விட ஆசிரியத் தொழில் மிக மேலானதும், கௌரவமானதும், புண்ணிய முள்ளதுமான தொழில் என்று சொல்லப்படுகிறது. இது உண்மைதான். பிள்ளைகளின் அறிவை வளரச்செய்வதனாலும் பிள்ளைகளுக்கு ஒழுக்கத்தையும் நன்னடத்தையையும் கற்பிப்பதாலும் பிற்கால மனித சமூகமாகிய இளஞ்சிறார்களை நல்ல குடிமக்களாகச் செய்வதாலும் சுருங்கச் சொல்லுமிடத்து எல்லாவிதத்திலும் பிள்ளைகளின் பிற்கால வாழ்க்கையை உருப்படுத்துவதாலும் உபாத்திமைத் தொழில் மேலானதும், கௌரவமானதும், புண்ணியகரமுள்ளதுமான தொழில்தான். ஆனால் உபாத்திமாரின் வாழ்க்கை நிலையைப் பார்க்கும் போது, அந்தோ! அவர்கள் நிலைமை மிகவும் பரிதபிக்கத் தக்கதாக இருக்கிறது.

உபாத்திமைத் தொழில், குமாஸ்தா தொழிலையும்விடத் தாழ்மையானதாகக் கருதப்படுகிறது. எங்ஙனமென்றால், ஒரு குமாஸ்தாவுக்குக் கொடுக்கப்படும் சம்பளத்தைவிட குறைவான தரித்திரமான சம்பளம் கொடுக்கப்படுகிறது. உபாத்திமார்கள் தங்கள் வாழ்நாளை நித்திய தரித்திரத்தில் கழிக்கிறார்கள். ஆரம்ப ஆசிரியர்களின் நிலைமை உலகத்திலே - இந்திய உலகத்திலே, மிகவும் பரிதாபகரமானதாக இருக்கிறது. நமது நாட்டுக் குழந்தைகளை, பிற்கால தேசமக்களைச் செம்மைப் படுத்தி அவர்கள் அறிவையும் ஒழுக்கத்தையும் பண்படுத்தும் உபாத்திமார்களுக்கு அளிக்கப்படும் பிரதிபலன் தரித்திரம் தானா என்று கேட்கிறோம்? வாழ்க்கைக்குப் போதுமான சம்பளம் உபாத்திமார்களுக்குக் கொடுக்க வேண்டியது நியாய மல்லவா? இதைப்பற்றி ஆரம்ப ஆசிரியர்கள் எத்தனையோ மகாநாடு கூட்டி கணக்கற்ற தீர்மானங்களை நிறைவேற்றி யிருக்கிறார்கள். அது யாவும் செவிடன் காதில் ஊதிய சங்கு போலாயிற்று. இதனால் அதிகாரிகள் உபாத்திமார் விஷயத்தில் எவ்வளவு அனுதாபம் உள்ளவர்களாயிருக்கிறார்கள் என்பதும் உபாத்திமார் விஷயத்தில் பாராமுகமாயிருப்பதால் கல்வியைப்

பரப்பும் விஷயத்தில் அவர்கள் உண்மையான அந்தரங்க நோக்கம் எதுவாயிருக்கும் என்பதும் ஊன்றி யோசித்தால் நன்கு விளங்கும்.

ஆரம்ப ஆசிரியர்களின் சந்ததியைப் பற்றிக் கவனித்தால் அது இன்னும் பரிதாபகரமாயிருக்கிறது. தம் வாழ்க்கையைக் கஷ்டத்தோடு காலந்தள்ளும் ஏழை ஆசிரியர்கள் தம் சிறுவர் சிறுமிகளைப் படிக்கவைத்து அவர்களுக்குக் கல்வியைக் கொடுக்கவும் முடியாத ஏழ்மை நிலையில் இருக்கிறார்கள். உபாத்திமார்களின் வறுமைநிலை அவர்கள் பிள்ளைகளை 'வாத்தியார் மகன் முட்டாள்' என்னும் பழமொழியை மெய்ப் பிக்கச் செய்கிறது. உபாத்திமார்கள் தங்கள் பிள்ளைகளுக்கு உயர்தரக் கல்வியும் கலாசாலைக் கல்வியும் கொடுக்க முடியாதபடி அவ்வளவு ஈனதசையில் இருக்கிறார்கள். தற் காலம் உயர்தரக் கல்வியைப் பெறுவது பணக்காரர்களுக்கும் செல்வந்தர்களுக்கும்தான் முடியுமே தவிர ஏழைகளால் முடியாத காரியமாயிருக்கிறது. அதாவது பணக்காரர்களுக்குச் செல்வபலமும் அதோடு அறிவு பலமும் பெறக்கூடியதாகவும் ஏழைகளுக்கு தரித்திரமாகிய பலயீனமும் அதனுடன் அறியா மையாகிய பலயீனமும் சித்திக்கக் கூடியதாகத் தற்காலத்துக் கல்வி முறை அமைந்திருக்கிறது. இந்த நிலையில் ஏழைகளாக விருக்கும் உபாத்திமார்கள் எங்ஙனம் தங்கள் பிள்ளைகளுக்கு உயர்தரக் கல்வியையும் கலாசாலைக் கல்வியையும் கொடுக்க முடியும்?

ஆரம்பாசிரியரின் பிள்ளைகளுக்கு உயர்தரக் கல்வி யையும் இலவசமாக அளிக்கும்படி அரசாங்கத்தார் ஏற்பாடு செய்வார்களானால் மிகவும் புகழத்தக்கதாக விருக்கும். உயர்தரப் படிப்பைத் தங்கள் பிள்ளைகளுக்கு இலவசமாக அளிக்க வேண்டுமென்று ஆரம்பாசிரியர்கள் எத்தனையோ மகாநாடுகள் கூட்டி அரசாங்கத்தாரைப் பல தடவை கேட்டிருக்கிறார்கள். 11-4-1931இல் நடந்த மலபார் டீச்சர் மானேஜர் மகாநாட்டிலும் 19-4-31இல் கோபிசெட்டி பாளையத்தில் நடந்த ஆரம்பாசிரியர் மகாநாட்டிலும் 24-4-31 இல் பாலக்காட்டில் நடைபெற்ற ஆரம்பாசிரியர் மகா நாட்டிலும்கூட இதைப்பற்றி தீர்மானங்கள் நிறைவேற்றி யிருக்கிறார்கள். ஆரம்பாசிரியர்கள் கேட்கும் இந்த உதவி மிகவும் நியாயமானதாகும். ஆரம்பாசிரியர்கள் நெடுநாளாகக் கேட்டுவரும் இந்த உதவியை நிறைவேற்றிவைக்க வேண்டியது உபாத்திமாரின் நன்மையைக் கோரும் அரசாங்கத்தாரின் முக்கிய கடமையாகும். அரசாங்கத்தார் ஆரம்பாசிரியர்களின் குறைந்த சம்பளத்தை உயர்த்தாமலிருப்பது ஒரு குறையிருக்க

அவர்களின் பிள்ளைகளுக்கு இலவச உயர்தரக் கல்வியைக் கொடுக்காமல் இருப்பது இன்னொரு பெரும் குறையாக விருக்கிறது. இக்குறைகள் ஆரம்பாசிரியர்களின் இதயத்தில் நெடுநாளாகப் பதிந்திருக்கின்றன. இவைகளைப் பற்றி அரசாங்கத்தார் உடனே கவனிப்பார்களா?

இது விஷயமாக ஆரம்பாசிரியர்களுக்கு ஒன்று சொல்ல விரும்புகிறோம். உபாத்திமார்கள், மேற்படி குறைகளை நிவர்த்திக்க வேண்டுமானால் ஒன்று சேர்ந்து கிளர்ச்சி செய்ய வேண்டும். சில உபாத்திமைச் சங்கங்கள் டிப்டி இன்ஸ்பெக்டர் களையும் - இன்ஸ்பெக்டர்களையும் அவைத்தலைவராக ஏற்படுத்தி அவர்கள் தலைமையில் மேற்படி தீர்மானங்களை நிறைவேற்றி அனுப்புகிறார்கள். இப்படிச் செய்வதனால் ஒரு பயனும் உண்டாகாது. டிப்டி இன்ஸ்பெக்டர், ஜில்லா கல்வி அதிகாரி இவர்களைப் போன்ற உத்தியோகஸ்தர்களுக்கு சம்பளத்தை உயர்த்தவோ, உபாத்திமார் பிள்ளைகளுக்குச் சம்பளமில்லாமல் கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்யவோ அதிகாரம் கிடையாது. இப்படிப்பட்டவர்களை வைத்துக் கொண்டு தீர்மானம் போடுவதனால் அவர்கள் இத்தீர்மானங் களுக்குச் சாதகமாய் அரசாங்கத்தாருக்கு விண்ணப்பம் செய்ய மாட்டார்கள். சில சமயங்களில் தீர்மானங்களை அரசாங்கத் தாருக்கு அனுப்பாமலும் இருந்து விடுவார்கள்.

ஆசிரியர்கள் தீர்மானம் செய்து அதை அதிகாரிகளுக்கு அனுப்பிவிடுவதால் மட்டும் பயனில்லை. கல்வி மந்திரி, சட்டசபை அங்கத்தினர்கள் இவர்களிடம் டெபுடேஷன் சென்று தங்கள் குறைகளை வற்புறுத்தித் தெரிவிக்க வேண்டும். திரு. ஷெட்டி போன்ற, கல்வி விஷயத்தில் அக்கறையுள்ள சட்டசபை மெம்பர்களைக் கொண்டு சட்டசபையில் பிரரே பிக்கும்படி செய்ய வேண்டும். உபாத்திமார்களாகிய நாம் நமது பிள்ளைகளுக்கு இலவச உயர்தரக் கல்வியைக் கொடுக்க வேண்டும் என்று கேட்பது நியாயமானதும் அவசியமானது மாகும். நியாய புத்தியுடைய எவரும் இந்த வேண்டுகோளை மறுக்க முடியாது. நமது அரசாங்கத்தாரும் கேட்டால் கொடுப்பார்கள். ஆனால் கேட்பது மட்டும் ஒரே கூச்சலாக நேராக அரசாங்கத்தாரின் காதில் ஏறக்கூடியதாக இருக்க வேண்டும். நாம் செய்யும் முயற்சியைச் சரியான வழியில் செய்தால் வெற்றிபெறுவது சுலபம்.

தெய்வத்தா லாகா தெனினும் முயற்சி
மெய்வருத்தக் கூலி தரும்.

*ஆரம்பாசிரியன்,* மலர் 7, இதழ் 4, 1931

# வட்டமேஜை மகாநாட்டின் எதிரொலி

லண்டன் மாநகரத்தில் கூடிய ரௌன்ட் டேபில் கான் பிரன்ஸ் என்னும் அகில கட்சி மகாநாட்டில் இந்தியப் பிரதிநிதிகள் செய்த சொற்பொழிவில் இந்தியாவைப் பற்றிய பல விஷயங்கள் காணப்படுகின்றன. அச்சொற்பொழிவுகளின் சிற்சில பகுதி களை மட்டும் கீழே தருகிறோம்.

இந்தியாவில் இங்கிலீஷ்காரனுடைய அக்கறையெல்லாம் வியாபாரத்தின் நிமித்தம்தான் என்று நான் சொல்லுகிறேன். இங்கிலாந்தில் 500 அல்லது 1000 குடும்பங்கள் தங்கள் பிள்ளைகளை, உத்தியோகத்தின் மூலம் பணம் சம்பாதிக்கும் படி இந்தியாவுக்கு அனுப்புகிறார்கள். ஆனால் சாதாரணமாக இங்கிலீஷ்காரனின் கருத்தெல்லாம் வியாபாரத்தைப் பொறுத் ததே. உங்களுடைய (இங்கிலீஷ்காரனுடைய) வியாபார சரக்கு களை இந்தியாவிலுள்ள 33 கோடி மக்களும் வாங்குவதால் நீங்கள் லாபம் அடைகிறீர்கள். இந்தியா இங்கிலீஷ்காரனுக்கு வியாபார ஸ்தலம்தான். ஆனால், திருப்தியற்ற ஜனங்களைவிட திருப்தியுள்ள ஜனங்கள்தான் உங்கள் சரக்குகளை வாங்கத் தகுந்த நல்ல வாடிக்கைக்காரர்களாய் இருப்பார்கள் என்று நான் சொல்லுகிறேன். உங்களுடைய கருத்தெல்லாம் வியா பாரத்தைப் பொறுத்ததாயிருப்பதால், உங்கள் சரக்குகளை வாங்கும் வாடிக்கைக்காரர் திருப்தி உள்ளவர்களாகவும் உங்கள் வியாபார சரக்குகளைத் தாராளமாய்ப் பணம் கொடுத்து வாங்குகிறவர்களாகவும் இருக்க வேண்டும். உங்கள் வாடிக்கைக்காரர் ஏழையாயிருந்தால் உங்கள் வியாபாரம் சரியாக நடைபெறாது. ஆகையால் உங்கள் (இங்கிலீஷ்காரர்) வியாபார அபிவிருத்தியை முன்னிட்டாவது இந்தியாவுக்குச் சுய ஆட்சி கொடுங்கள் - மிஸ்டர் M.R. ஜெயகர்.

பிரிட்டிஷ் அரசாட்சி இந்தியாவில் ஏற்பட்டுச் சுமார் 150 வருஷங்கள் ஆகியும் பிரிட்டிஷ் இந்தியாவில் ஜனங்கள் 100க்கு 9 பேர்தான் படித்திருக்கிறார்கள். ஆனால் மைசூர், பரோடா, திருவாங்கூர் போன்ற சுதேச சமஸ்தானங்களில் உள்ள ஜனங்கள் 100க்கு 90 பேர் படித்தவர்களாயிருக்கிறார்கள்.

இப்பொழுது நீங்கள் (இங்கிலீஷ்காரர்) இந்தியா கேட்கும் உரிமையைக் கொடுக்காவிட்டால் போராட்டத்தில் நீங்கள்

தலையிட்டுக் கொண்டவராவீர்கள். இந்தப் போராட்டம் நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே போகும். இந்த கலகங்களை நீங்கள் அடக்கிவிடலாம்; நீங்கள் அடக்கி விடுவீர்கள். ஆனால் அக்கலகங்கள் மறுபடியும்மறுபடியும் கிளம்பிக்கொண்டே யிருக்கும். 32 கோடி ஜனங்களை பலாத்காரத்தாலும் இராணுவப் படையினாலும் அரசாட்சி செய்ய முடியாது. ஆகையால் நீங்கள் புத்திசாலித்தனமான வழியைப் பின்பற்று வீர்கள் என்று நம்புகிறேன் – ஸர் சிமான்லால் ஸெடால்வாட்.

இப்போதைய பிரிட்டிஷ் ஆட்சியிலும் இதற்கு முற்பட்ட ஹிந்து ஆட்சியிலும் எங்கள் (ஆதித்திராவிடர்) நிலைமை எப்படியிருக்கிறது என்பதை யோசித்தால் நாங்கள் ஒரே நிலையில்தான் இருக்கிறோம் என்று தெரிகிறது. பிரிட்டிஷ் ஆட்சிக்குமுன் நாங்கள் தீண்டப்படாதவர் என்னும் இழிநிலை மையில் இருந்தோம். தீண்டாமையை ஒழிக்க பிரிட்டிஷ் அரசாங்கம் ஏதாவது செய்திருக்கிறதா? பிரிட்டிஷ் அரசாட்சிக்கு முன்னே கிராமக் கிணற்றில் ஆதித்திராவிடர் தண்ணீர் எடுக்கக் கூடாது என்று இந்துக்கள் தடுத்தார்கள். பிரிட்டிஷ் அரசாங்கம் இந்துக்களின் கிணற்றில் தண்ணீர் எடுக்க எங்களுக்கு உரிமை கொடுத்திருக்கிறதா? இந்துக்கள் ஆட்சியில் ஆதித்திராவிடர் கோயிலுக்குள் விடப்படவில்லை. இப்போதைய பிரிட்டிஷ் அரசாட்சி எங்களுக்கு அந்த உரிமையைக் கொடுத்திருக்கிறதா? இந்துக்கள் ஆதிதிராவிடர்களை இராணுவத்தில் சேர்த்துக் கொள்வதில்லை; பிரிட்டிஷார் இப்போது எங்களை ராணுவத்தில் சேர்த்துக் கொள்கிறார்களா? எங்கள் நிலைமை இந்துக்கள் ஆட்சியில் எப்படியிருந்ததோ அதேமாதிரிதான் பிரிட்டிஷ் ஆட்சியிலும் இருக்கிறது. இது இப்படி இருக்கிற தென்றால், சைனா தேசத்தில் ஒரு தையற்காரன் இருந்தானாம். அவனிடம் ஒரு பிரபு புதிய சொக்காய் ஒன்று தைக்க உத்தரவு செய்தார். அப்பிரபு புது சொக்காயின் அளவுக்காக கிழிந்து போன பழைய சொக்காயைத் தையற்காரனிடம் கொடுத்தார். அந்த புத்திசாலியான தையற்காரன், மாதிரிக்காகக் கொடுத்த சொக்காயில் எத்தனை ஒட்டுகளும் கிழிசல்களும் இருந்ததோ அத்தனை ஒட்டுகளையும் கிழிசல்களையும் புதிய சொக்காயில் வைத்துத் தைத்துக் கொடுத்தானாம். இக்கதையைப் போலத் தான் இருக்கிறது, பிரிட்டிஷ் ஆட்சியில் ஆதித்திராவிடர் நிலைமை. பிரிட்டிஷ் ஆட்சியின் பயனாய் ஆதித்திராவிடர் களுக்குச் சிற்சில சௌகரியங்கள் ஏற்பட்டிருப்பது உண்மையே. ஆனால் தீண்டாமை, பொதுக் கிணற்றில் தண்ணீர் எடுத்தல் முதலிய முக்கியமான விஷயங்களில் எங்களுக்கு எவ்வித உரிமையும் அப்போதைப் போலவே இப்போதும் இல்லை – டாக்டர் அம்பட்கார், ஆதித்திராவிடப் பிரதிநிதி.

கானாட்டுக் கோமான் (Duke of Connaught) இந்தியாவுக்கு வந்தபோது அவர் மெய்க்காவலுக்காக பூனாவிலிருந்து இந்திய சிப்பாய்கள் அமர்த்தப்பட்டார்கள். அந்தச் சிப்பாய்களின் தலைவர் ஒரு ஆங்கிலேயர். அந்தத் தலைவர் ஒரு நாள் சிப்பாய்களை அழைத்து காந்தி சுயராஜ்யம் கேட்கிறாரே, உங்களுக்குச் சுயராஜ்யம் வேண்டுமா என்று கேட்டார். வேண்டாம் என்று சொல்லுவார்கள் என்று அந்த ஆங்கிலேயர் நினைத்தார். ஆனால் அவர் எண்ணத்துக்கு மாறாக சிப்பாய்கள் சுயராஜ்யம் வேண்டும் என்று சொன்னார்கள். ஆங்கிலேயர், உங்களுக்கு ஏன் சுயராஜ்யம் வேண்டும் என்று கேட்டார். அதற்கு சிப்பாய்கள் இவ்விதம் பதில் சொன்னார்கள்: சென்ற ஜெர்மன் யுத்தத்தின்போது இந்தியச் சிப்பாய்களாகிய எங்களையும் யுத்தத்திற்கு அனுப்பியிருந்தார்கள். பெல்ஜியன் சிப்பாய்கள் தோல்வியடைந்து திரும்பிவிட்டார்கள். அவர் களைப் பார்த்து நீங்கள் யார் என்று கேட்டபோது அவர்கள், “நாங்கள் பெல்ஜியர்கள்” என்று பதில் சொன்னார்கள். அதன் பிறகு இன்னொரு பட்டாளம் திரும்பிவந்தது. அவர்களை நீங்கள் யார் என்று கேட்டபோது, “நாங்கள் பிரஞ்சுக் காரர்கள்” என்று பதில் சொன்னார்கள். இவ்விதமே ஒவ்வொரு தேசத்துச் சிப்பாய்களும் தங்களை இன்னார்இன்னார் என்று சொன்னார்கள். ஆனால் இந்தியச் சிப்பாய்களாகிய நாங்கள் முன்னணியில் நின்று ஆபத்தான நிலைமையில் கைகொடுத்து உதவி செய்தும்கூட நாங்கள் எங்களை இந்தியச் சிப்பாய்கள் என்று சொல்லிக் கொள்ளும் உரிமை இல்லை. கேட்கிறவர் களுக்கெல்லாம் நாங்கள் “பிரிட்டிஷ் குடிமக்கள்” (We are British Subject) என்று பதில் சொல்ல வேண்டியதாயிருந்தது – மௌலானா முகம்மது அலி.

இந்தியாவில் சமாதானமும் அமைதியும் நிலைத்திருப் பதற்காக என்று சொல்லி 60000 பிரிட்டிஷ் சிப்பாய்களை இந்தியாவில் ஏன் வைத்திருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியவில்லை. ஒரு பிரிட்டிஷ் சிப்பாய்க்கு ஒரு இந்திய சிப்பாயைவிட ஐந்து பங்கு அதிகமாகச் செலவு ஏற்படுகிறது. இவ்விதம் ஒன்றுக்கு ஐந்தாக வீண் செலவு செய்வது விரும்பத்தக்கதல்ல. இந்தியச் சிப்பாய்களும் இந்திய போலீசும் நாட்டில் அமைதியையுண்டாக்கப் போதுமானவை. இந்தியச் சேனையில் பிரிட்டிஷ்காரர்களைச் சேர்த்து அவர்களுக்குப் பெருந்தொகையான சம்பளங்களைக் கொடுத்து வீணாகப் பொருளை நஷ்டப்படுத்துவதைவிட இந்தியர்களையே உயர்ந்த உத்தியோகத்தில் அமர்த்தி செலவை மட்டுப்படுத்திவிடக் கூடும் – சர்தார் உஜ்ஜால்சிங்.

இந்தியாவில் ஜனங்கள் கூட்டம் போடுகிறார்கள். கூட்டத்தில் பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள், மிலிட்டெரி, போலீஸ் படைகளுடன் வந்து கூட்டத்தில் சுடுகிறார்கள். ஜனங்கள் பயந்து ஓடிவிடுகிறார்கள். போலீசார் போய்விட்ட பிறகு மறுபடியும் ஜனங்கள் வந்து கூட்டம் போடுகிறார்கள். அவர்களை, போலீசார் சுடும்போது அவர்கள் ஓடக்கூடாது என்று நான் நினைக்கிறேன். ஆனால், அவர்கள் ஓடாமல் என்ன செய்வார்கள்? 80 வருஷ காலமாக இந்தியரின் ஆயுதங்களை பிரிட்டிஷார் பிடுங்கி வைத்துவிட்டார்கள். முகம்மதியர் இந்தியாவுக்கு வந்து எங்களை வென்று முகலாய அரசாட்சியை ஏற்படுத்தினார்கள். ஆனால், ஜனங்கள் கத்தி, துப்பாக்கி முதலிய ஆயுதங்களை வைத்திருக்கக்கூடாது என்று முகம்மதியர் சட்டம் செய்யவில்லை. நீயும் உன் எதிரியும் இரண்டுபேரும் துப்பாக்கி வைத்து சண்டை செய்யும்போது உன் எதிரி ஓடிப்போய்விட்டால் அவனை 'பெட்டைப் பயல்' என்று சொல்லலாம். ஆனால் ஆயுதம் உள்ளவர் சுடும்போது ஆயுதம் இல்லாதவர் ஓடிப்போனால் அவர்களைப் பெட்டைப் பயல் என்று சொல்லக்கூடாது. இந்தியர் மூன்று தலைமுறை யாக ஆயுதங்களைப் பறிமுதல் செய்திருக்கிறார்கள் – டாக்டர் B.S. மூஞ்சே.

எங்களுக்கு (ஆங்கிலோ இந்தியர்) இந்தியா தாய் நாடாயிருப்பது போல இங்கிலாந்து தந்தை நாடாயிருக்கிறது. சென்ற, ஜெர்மனி சண்டையின்போது எங்கள் வகுப்பில் 100க்கு 80 பேர் சண்டைக்குப் போனார்கள். நாங்கள் சைமன் கமிஷனுக்குச் செய்துகொண்ட விண்ணப்பத்தில் 25 அல்லது 30 வருஷங்களுக்குப் பொருளாதார விஷயத்தில் எங்களுக்குப் பாதுகாப்பளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

இந்தக் காலத்திற்குள் இப்போது எங்களுக்குள்ள ஸ்தானங்களை (உத்தியோக பதவிகளை) குறைக்கக் கூடாது என்று கேட்டுக்கொள்ளப்பட்டது. அதாவது கல்விக்காகக் கொடுக்கப்படும் கிராண்டு பணம் குறைக்கப்படாமல் அதிக மாகக் கொடுக்கப்பட வேண்டும். ஸ்காலர்ஷிப் அதிகமாகக் கொடுக்கப்பட வேண்டும். – Liuet. col. Gidney).

பிரிட்டிஷ் தீவுகளில் உள்ள பிரிட்டிஷ் ஆள் ஒவ்வொருவனும் சராசரி வருஷம் ஒன்றுக்கு 100 பவுன் சம்பாதிக்கிறான். இந்தியாவில் உள்ள ஒரு இந்தியன் சராசரி வருஷம் ஒன்றுக்கு 100 ரூபாய் சம்பாதிப்பதாக சைமன் கமிஷன் சொல்லுகிறது. ஆனால் சைமன் கமிஷன் சொல்லுவது தவறு. வருஷம் ஒன்றுக்கு ஒரு இந்தியனுடைய சராசரி வரும்படி 80 ரூபாய்தான் ஆகிறது. ஒரு இங்கிலீஷ்காரன்

சம்பாதிக்கும் சராசரி 100 பவுனையும் ஒரு இந்தியன் சம்பாதிக்கும் சராசரி 6 அல்லது 8 பவுனையும் ஒப்பிட்டு நோக்குவோமானால் உஷ்ணதேசத்தில் வசிக்கிற இந்தியனுடைய வரும்படி போதுமானதா என்று கேட்கிறேன். வருஷத்தில் 6 பவுன் அல்லது 8 பவுனில் எந்த மனிதன்தான் உயிர் வாழக்கூடும் என்பதை நீங்களே யோசித்துப் பாருங்கள்.

பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள 24.7 கோடி ஜனங்களில் 22.6 கோடிபேர் கிராமவாசிகளாகவே இருக்கிறார்கள். ஆகவே, சுய ஆட்சியில் கிராமவாசிகளுக்குப் போதுமான பிரதிநிதித்துவம் அளிக்கப்படாவிட்டால் அந்த சுய ஆட்சியினால் பலன் இல்லை. கிராம ஜனங்களின் கல்வியைப் பரவச் செய்வதற் காகவும் அவர்களின் பொருளாதார நிலையை உயர்த்துவதற் காகவும் அவர்களுக்கு சுயராஜ்யத்தில் போதுமான பிரதி நிதித்துவம் அளிக்க வேண்டும் – சர். P. C. மித்தர்.

இந்தியாவில் ஊழியம் செய்யும் இங்கிலீஷ் சிவில் உத்தியோகஸ்தர்களுக்கு வேறு எந்த தேசமும் கொடுக்காத அவ்வளவு அதிகமான சம்பளத்தை இந்தியா தேசம் கொடுத்து வருகிறது. அது மட்டுமா? சிவில், மிலிட்டெரி உத்தி யோகஸ்தரின் பென்ஷனுக்காக என்று வருஷத்தில் 4000000 பவுன் இந்தியா இங்கிலாந்துக்குக் கொடுத்து வருகிறது – ஸர் பெரோஸி ஸேத்னா.

வியாபாரமும் வர்த்தகமும் ஒரு தேசத்தின் உயிர்நாடி யாகும். பொருளாதாரத்தையும் கைத்தொழிலையும் அபி விருத்தி செய்யக்கூடிய பொருளாதார சுதந்தரம் கொடுக்கப் படாமல் அரசியல் சுதந்தரத்தை மாத்திரம் கொடுத்தால் அதனால் யாதொரு பயனும் கிடையாது.

இந்தியா தேசத்திற்கு அரசியல் சுதந்தரம் கிடைத்தா லொழிய இந்தியா சுகமடையாது. அன்றியும் கைத்தொழிலில் விருத்தியடையவும் முடியாது. கைத்தொழில் முன்னேற்றந்தான் தேசத்தின் முதுகெலும்பு போன்று முக்கியமானது. அரசியல் கட்சிகளுக்கும் இதுவே (கைத்தொழில் முன்னேற்றமே) காரண மாயிருக்கிறது. ஜனத்தொகையில் 100க்கு 70பேர் உரமற்ற நிலத்தைப் பயிரிடும் விவசாயிகளாக இருக்கிறார்கள். இவர்களின் நிலம் உரமற்றுக்கிடப்பதன்றி காலாகாலத்தில் சரியான மழையும் கிடையாது. இப்படிப்பட்ட இந்தியாதேசம் கைத்தொழிலில் விருத்தியடையாமல் விவசாயத்தையே எதிர் பார்த்திருக்குமானால், என்னதான் அரசியல் சுதந்தரம் கொடுத் தாலும் இந்தியாதேசம் உயர்நிலையடைய முடியாது. – மிஸ்டர் எச். பி. மோடி.

ஒரு தேசத்தின் சமுதாய சீர்திருத்தம் அத்தேசத்துப் பெண்மணிகளைப் பொறுத்திருக்கிறது. ஒரு அன்னிய அரசாங்கத்தார் எவ்வளவு நல்ல நோக்கத்துடன் சமுதாய சீர்த்திருத்தம் செய்தாலும் அவர்கள் அன்னியர் என்கிற முறையில் அவர்களால் கொண்டுவரப்பட்ட சீர்திருத்தங்கள் சந்தேகத்துக்கு இடமாயிருக்கும். எங்களுக்கு சட்டம் செய்து கொள்ளும் உரிமை அளிக்கப்படுமானால் ஜப்பான், துருக்கி, பெர்ஷியா, மைசூர், பரோடா, போபால், திருவாங்கூர் முதலிய அரசாங்கங்கள் செய்தது போல நாங்களும் எங்களுக்கு வேண்டிய முக்கியமான சீர்திருத்தங்களைச் செய்து கொள்வோம்.

பெண் மக்கள், சமூக விஷயத்தில் வழிகாட்டி நிற்பார்களானால் மனிதர்கள் சமூக சீர்திருத்தங்களை வெற்றிபெற நடத்தக்கூடும்.

16 கோடி ஜனங்களாகிய எங்களை (ஸ்திரீகளை) ஒதுக்கி விட்டு உங்களுக்குத் தனியாக யாதொன்றும் அரசியல் சீர்திருத்தத்தில் பங்கு கொடுக்கப்படாது என்று சொல்வதனால் அது யோசியாமல் சொல்லும் வார்த்தையாக முடியும். மற்றவர்கள் இவ்விஷயத்தில் தவறியிருந்தாலும் இந்த மகாநாடாவது தேச ஆட்சியில் ஸ்திரீகளுக்கும் பங்கு அளிக்கும் என்று நம்புகிறேன் – பீகம் ஷா நவாஸ்.

*ஆரம்பாசிரியன்,* மலர் 7, இதழ் 7, 1931

# சம்பளக் குறைவு

பாடசாலையில் வாசிக்கும் பிள்ளைகளுக்குச் சம்பள விகிதம் அதிகமாயிருக்கிறதென்றும் பாடசாலை சம்பளத்தைக் குறைக்க வேண்டும் என்றும் நாம் முன் ஒருமுறை எழுதியிருந்தோம். கட்ட வேண்டிய சம்பளம் அதிகமாயிருப்பதால், சக்தியற்ற ஏழைப் பிள்ளைகள் படிப்பை நிறுத்திவிட வேண்டியிருக்கிறது என்றும் பணக்காரப் பிள்ளைகள்தான் படிக்க முடிகிறதென்றும் இவ்விதமாக படிப்பு பணக்காரர்களுக்கே போய்விடுவதோடு ஏழைகளுக்குக் கல்வியறிவு பெற சாதகமில்லாமல் போய்விடுகிறதென்றும் குறிப்பிட்டிருந்தோம். நமது அரசாங்கத்தார் இதுவரை இதைப்பற்றிக் கவனிக்கவே இல்லை. ஆனால், மத்திய மாகாண அரசாங்க கல்வி மந்திரி, பாடசாலை சம்பளத்தைச் சிறிதளவு குறைத்திருக்கிறார்.

ஹைஸ்கூலில் வாசிக்கும் பிள்ளைகளுக்கு 8இல் ஒரு பங்கும் கலாசாலை (காலேஜ்) மாணவர்களுக்கு 3இல் ஒரு பங்கும் குறைத்திருக்கிறார். இதற்குக் காரணம் சொல்லும் போது "ஏழைக் குடியானவர்களுடையவும், தொழிலாளிகளுடையவும் பிள்ளைகள் படிப்பதற்கு இப்போதைய சம்பளம் மிக அதிகமாயிருப்பதால் அதைக் குறைத்து அவர்களுக்குச் சௌகரியம் செய்யவேண்டும் என்பதற்காகவே குறைக்கப்படுகின்றது" என்று சொல்லியிருக்கிறார். இதை அந்த அரசாங்கத்தாரும் ஒப்புக்கொண்டுவிட்டார்கள். அது இந்த ஆகஸ்டு மாதம் 1ந் தேதி முதல் அமுலுக்கு வரும்.

"அந்தப்படி இங்கும் நமது கல்வி மந்திரி பிள்ளைகள் சம்பளத்தை ஏன் குறைக்கப்படாது என்பதற்குக் காரணம் நமக்குத் தெரியவில்லை" என்று குடிஅரசு பத்திரிகை கேட்கிறது. நாமும் அதைத்தான் கேட்கிறோம்.

நம்மைப் பொறுத்தவரையில் உயர்தரக் கல்வியை (ஹைஸ்கூல் படிப்பு முழுதும்) பிள்ளைகளுக்கு இலவசமாகக் கற்பிக்க வேண்டியது அரசாங்கத்தாரின் கடமையாகும். கல்வியில் இந்தியாவைப் போன்ற பிற்போக்கான தேசம் வேறொன்றுமே கிடையாது பிரிட்டிஷ் இந்தியாவில் 100க்கு 9 பேர்தான் படித்திருக்கிறார்கள். இதனால் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் கல்வி அபிவிருத்தி விஷயத்தில் போதுமான கவனம் செலுத்தவில்லை என்று தெரிகிறது.

பணக்காரப் பிள்ளைகளிடமிருந்து சம்பளம் வசூல் செய்வதைப் பற்றி நாம் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் ஏழைப் பிள்ளைகள் எங்கிருந்து சம்பளம் கட்டுவார்கள்? அவர்களுக்கு அரசாங்கம் ஏன் இலவசமாக உயர்தரக் கல்வியை அளிக்கக் கூடாது?

நமது அரசாங்கத்தார் பணமில்லை என்னும் பாட்டையே பாடுகிறார்கள், நமது இந்திய அரசாங்கத்துக்கா பணமில்லை? வேண்டிய பணம் இருக்கிறது. ஆனால் அந்தப் பணங்களையெல்லாம் வீண் செலவு, அநியாய செலவு செய்துவிடுகிறார்கள். அநியாய செலவு செய்தால் பணம் இல்லாமல்தான் போகும். நமது நாட்டில் அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்குக் கொழுத்த சம்பளம் கொடுக்கப்படுகிறது. இந்த அநியாயத்திற்கு கேள்வி முறையே கிடையாது. இந்தியாவைத் தவிர வேறு எந்த தேசமாவது ஜனங்கள் பணத்தை இப்படி வாரி இறைக்கிறதா? அமெரிக்காவில் இதைப்போல கொழுத்த சம்பளம் உண்டா? இங்கிலாந்திலும், பிரான்ஸ், ஸ்பெய்ன், இத்தாலி, ஜெர்மனி போன்ற தேசங்களில் உயர்தர உத்தியோகஸ்தருக்கு இவ்வளவு அதிக சம்பளம் கொடுக்கிறார்களா? ஜப்பான் தேசத்தில் இதைப்போன்ற அநியாயம் உண்டா? வேறு எந்த தேசத்திலும் ஜனங்கள் பணம் இவ்வாறு துர்வினியோகம் செய்யப்படுவது கிடையாது. நமது இந்தியாவில்தான் இந்தக் கொள்ளை. இந்த அநியாயம் இதற்குக் கேள்விமுறை இல்லை.

இப்பொழுது அரசாங்கத்தார் செலவைக் குறைக்க வேண்டும் என்று சொல்லி அதற்கென ஒரு கமிட்டியை நியமித்திருக்கிறார்கள். இந்தக் கமிட்டியார் ரூபாய் 20, 40, 50 சம்பளம் உள்ள கீழ்த்தர சிப்பந்திகளின் சோற்றில் மண்ணைப்போட்டு அவர்களை வீட்டுக்கு அனுப்பிவிட்டு செலவைக் குறைக்கிறார்களே தவிர 250, 500, 1000, 4000, 5000, 10000, 20000 என்று சம்பளம் கொள்ளையடிக்கிறவர்களைப்பற்றி ஒன்றுமே செய்யவில்லை. ஏதோ பெயரளவில் மேற்படி உத்தியோகஸ்தர்களுக்குச் சிறிதளவு சம்பளம் குறைத்திருக்கிறார்கள். நமது அரசாங்கத்தில் சில இலாகாக்கள் அனாவசியமாய் ஏற்பட்டிருக்கின்றன. சில உத்தியோகஸ்தர் பதவியும் அனாவசியமாகவே உண்டாக்கப்பட்டிருக்கின்றன. இவற்றையெல்லாம் அடியோடு ஒழித்துவிட்டு 1000, 5000, 10000, 20000 உள்ள சம்பளங்களைச் சரிபகுதியாவது குறைத்துவிட்டு இன்னும் சிற்சில திருத்தங்களைச் செய்துவிட்டால் கோடிக்கணக்கான பணம் மீதப்படும். அப்பணத்தைக் கொண்டு ஹைஸ்கூல் படிப்பு வரையில் பிள்ளைகளுக்கு இலவசமாகவே கற்பிக்கலாம். ஜனங்களுக்கு இன்றியமையாத அனேக சௌகரியங்களையும் உதவிகளையும் செய்யலாம். ஜனங்கள் எவ்வளவோ க்ஷேமப்படுவார்கள். ஆனால் பிரிட்டிஷ் அரசாங்கம் இப்படிச் செய்யுமா?

*ஆரம்பாசிரியன்,* மலர் 7, இதழ் 8, 1931

# தேசமுன்னேற்றத்தின் அடிப்படை பாடசாலைகளே

குடும்பத்தின் பிற்கால மேன்மையிலும் சிறப்பிலும் கருத்துள்ள பெற்றோர்கள் அக்குடும்பத்திலுள்ள குழந்தைகளின் வளர்ச்சி, கல்வி, ஒழுக்கம் முதலிய விஷயங்களைக் கருத்துடன் கருதுவது வழக்கம். அன்றியும் காலக் கொடுமையினாலோ, அன்றி வேறெக் காரணத்தினாலோ ஏழ்மை நிலையடைந்த ஒரு குடும்பத்தின் தலைவன், தன் குடும்பம் மேன்மையும் சிறப்பும் அடைவதற்கேற்ற சாதனம் அக்குடும்பத்தின் சிறுவர்கள் என்பதை நன்குணர்ந்து, அச்சிறுவர்களுக்குக் கல்வி அறிவு புகட்டுவதில் கண்ணுங் கருத்துமாயிருப்பதும் இயற்கையே. குடும்பத்தைப் போலத்தான் தேசமும் இருக்கிறது. குடும்பத்தின் உயர்வுக்கு அக்குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எவ்வாறு அறிவு, கல்வி, ஒழுக்கம் முதலியவைகளில் சிறந்திருக்க வேண்டியது அவசியமோ அவ்வாறே ஒரு தேச முன்னேற்றத்திற்கும் மேன்மைக்கும் அத்தேசத்தின் மக்கள் அறிவும், வீரமும், செல்வமும் வாய்ந்தவர்களாயிருக்க வேண்டியது அவசியம். எவ்விதம் தாய், தந்தை, சகோதரன், சகோதரி, புதல்வன், புதல்வி முதலியவர்களை உடையதாய் இருக்கிறதோ அதைப்போலவே ஒரு தேசமும் பல குடும்பங்களை உடையதாய் இருக்கிறது. குடும்பத்தின் உயர்வும் தாழ்வும் அக்குடும்பத்தினரால் உண்டாவது போல, தேசத்தின் உயர்வும் தாழ்வும் அத்தேசத்தின் மக்களால் ஏற்படுகிறது. குடும்பத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் அறிவாற்றலுடையவர்களாய் இருந்தால் அக்குடும்பம் சிறப்படையும்; தேசத்து மக்களும் சிறந்த அறிவாளிகளாய் இருந்தால் அவர்களால் அத்தேசம் செழிப்புறும். இது எக்காலத்தும் எத்தேசத்திலும் இயற்கையே. ஆனால், தேசத்து மக்களை அறிவும், ஆற்றலும் உடையவர்களாகச் செய்வது கல்வியே. அதாவது பாடசாலையே தேச முன்னேற்றத்தின் அடிப்படையாக இருக்கிறது. தேசத்துச் சிறுவர்களுக்குக் கல்வியறிவைப் புகட்டி அவர்களை அறிவாளிகளாகச் செய்வதன் மூலம் தேச முன்னேற்றத்தை அளிக்கவல்ல சிறந்த செய்கையுடையது பற்றியன்றோ, உபாத்திமைத்

தொழிலை மிக மேன்மையான சிறந்த தொழிலென்று உலகம் கொண்டாடுகிறது.

ஒரு தேசம் அதிக ஜனத்தொகை கொண்டிருப்பதனாலேயே அத்தேசம் மேன்மையும் செழிப்பும் அடைய முடியாது. ஒரு தேசத்தின் மேன்மை அத்தேசத்து மக்களின் அறிவாற்றலைப் பொறுத்ததேயன்றி ஜனத்தொகையின் விசேஷத்தைப் பொறுத்ததல்ல. ஒரு தேசம் மிகக் குறைந்த ஜனத்தொகையுடையதாய் இருந்தாலும் அத்தேசத்து மக்கள் அறிவுடைய மேன்மக்களாயிருந்தால் அத்தேசம் உலகத்தில் மிக உன்னத நிலை எய்தும் என்பது முக்காலும் உண்மை. இதனாலன்றோ உன்னத நிலையடைய விரும்பும் ஒவ்வொரு தேசமும், தத்தம் நாட்டுச் சிறுவர் சிறுமிகளின் கல்வி வளர்ச்சியில் கண்ணுங் கருத்துமாய் இருக்கின்றன! கல்வியினால் அறிவு முதிர்கிறது. அறிவு முதிர்ச்சியினால் ஆராய்ச்சி பிறக்கிறது. ஆராய்ச்சியினால் மேன்மையுண்டாகிறது. கல்வி இல்லாமல் முன்னேற்றமடைந்த தேசம் ஏதேனும் உண்டா? மிகக் கஷ்ட நிலையில் இருக்கும்போதுகூட ஒவ்வொரு தேசமும் தேசக் கல்வியில் மட்டும் கண்ணும் கருத்துமாய் இருக்கின்றன. சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன் பிரஷ்யா தேசம், பிரான்ஸ் தேசத்தினால் அடக்கப்பட்டு தாழ்மையடைந்த காலத்தில் அந்தப் பிரஷ்யா தேசம் அந்தக் கஷ்ட காலத்திலும் என்ன செய்தது? பாடசாலைகளில் கவனம் செலுத்தி பிற்காலச் சந்ததிகளாகிய சிறுவர்களின் கல்வியைச் சீர்திருத்திற்று. 1860ஆம் வருஷம் ஜெர்மனி தேசத்தால் நசுக்கப்பட்டு தாழ்மையடைந்த பிரான்ஸ் தேசம் அக்காலத்தில் என்ன செய்தது? அந்தக் கஷ்ட காலத்திலும் பிரான்ஸ் தேசம் தேசச் சிறுவர்களின் படிப்பைச் சீர்திருத்தி பாடசாலைகளில் கவனம் செலுத்தியது. இப்போது மேன்மையடைந்து கொண்டிருக்கும் ருஷியா தேசம் என்ன செய்கிறது? தன் முழு கவனத்தையும் கல்வியைப் பரப்புவதில் கவனம் செலுத்துகிறது. பத்து வருஷத்துக்குள் ருஷியா செய்திருக்கும் கல்வி அபிவிருத்தியைக் கண்டு மற்ற தேசங்கள் எல்லாம் ஆச்சரியப் படுகின்றன! முன்னேற்றமென்பதில்லாமல் 'நோயாளி' என்ற பெயர் பெற்ற துருக்கி தேசத்தைப் பாருங்கள். இப்போது துருக்கி, நோய் நீங்கப்பெற்று திடகாத்திரத்தோடு நாகரீக தேசங்களோடு போட்டிபோடத் தோள்தட்டி நிற்கிறது. அதன் காரணம் என்ன? அத்தேசத்துக் கல்வியைச் சீர்திருத்தி எல்லோருக்கும் கல்வியைப் பரப்புகிறதினால்தான் துருக்கி முன்னேற்றமடைந்து கொண்டிருக்கிறது. ஜப்பான் தேசம் இப்போது வல்லரசுகளில் ஒன்றாக மிளிர்கிறது. அதன்

ரகசியமென்ன? கல்வியைச் சீர்திருத்தி அதை தேச மக்களி டத்தில் பரப்புகிறதனால்தான். இப்படியே இப்போது மேன்மையடைந்திருக்கும் தேசங்களெல்லாம் உயர்நிலை யடைந்ததற்குக் காரணம் அத்தேசத்துப் பாடசாலைகளே. ஆகையால் தேச முன்னேற்றத்திற்கு அடிப்படையாயிருப்பது பாடசாலைகளே.

அந்நியர் ஆட்சியிலிருக்கும் நமது நாடு மேன்மை யடையாமல் இருப்பதன் காரணம் என்னவென்றால் நமது பாடசாலைகளில் கற்பிக்கப்படும் கல்வி தேச முன்னேற்றத் துக்குத் தக்கதாக அமைக்கப்படாததுதான். நமது நாட்டில் இப்போது போதிக்கப்படும் கல்வியினால் அரசாங்கத்துக்கும் ஆங்கிலேய வியாபாரிகளுக்கும் அவசியமான குமாஸ்தாக் களும், லிகிதர்களும் ஏற்படுகிறார்களே தவிர மற்றபடி ஒன்றையும் காணக்கூடவில்லை.

கல்வி என்றால் எழுதுவது, படிப்பது, கணக்குப் போடுவது மட்டுந்தானோ? பூகோள சாஸ்திரம், தேச சரித்திரம் போன்ற பாடங்கள் பிள்ளைகளுக்கும் பாடத்திற்கும் சம்பந்தம் இல்லாதபடி கற்பிக்கப்படுகிறது. ஆங்கிலப் பிள்ளைகளை, இங்கிலாந்து என்றால் என்ன என்று கேட்டால் இங்கிலாந்து எங்கள் தேசம் என்று பதில் சொல்வார்கள். பிரஞ்சு நாட்டுச் சிறுவர்களை, பிரான்ஸ் தேசம் என்றால் என்ன என்று கேட்டால் பிரான்ஸ் எங்கள் தேசம் என்று சொல்லுவார்கள். நமது நாட்டுச் சிறுவர்களை, இந்தியா தேசம் என்றால் என்ன என்று கேட்டால், இந்தியா ஒரு தீபகற்பம் என்பார்கள் அல்லது இந்தியா ஒரு தேசம் என்பார்கள். இந்தியா என்னுடைய தேசம் என்று சொல்லும்படி பாடசாலைகளில் போதிக்கப்படுகிறதில்லை. பாடசாலைகளில் தேச சரித்தி ரத்தின் மூலமாகவும் பூகோள சாஸ்திரத்தின் மூலமாகவும் பிள்ளைகளுக்கு தேசாபிமானத்தை, தன் நாட்டின் மேல் அன்பையுண்டாக்க வேண்டும். இத்தாலி தேசத்தின் ஒரு பாகத்தை அயல்நாட்டார் பிடித்துக் கொண்டார்கள். தாங்கள் இழந்துவிட்ட அந்தப் பாகத்தைப் பற்றி (பூகோள பாடம் போதிக்கும்போது) இத்தாலிய தேசத்து உபாத்திமார்கள் 'மீட்கப்பட வேண்டிய பாகம்' என்று போதிப்பார்கள். அதாவது அந்தப் பாகம் தங்களுக்குச் சொந்தமாயிருந்ததை அன்னியர் கைப்பற்றிக் கொண்டார்கள். அன்னியர் கையில் சிக்கிய அந்த பாகத்தை நாம் கைப்பற்ற வேண்டும் என்னும் உணர்ச்சியைப் பிள்ளைகளுக்குப் போதிப்பார்கள். இதுமட்டு மல்ல. முன்னேற விரும்பும் ஒவ்வொரு தேசத்தாரும் தத்தம் தேசத்துப் பிள்ளைகளுக்கு ஒழுக்கம், சுகாதாரம், சமுதாய

நடைமுறை முதலியவைகளைப்பற்றிக் கற்பித்து, தத்தம் தேசத்துச் சிறுவர்களை அறிவாளிகளாகச் செய்ய எவ்வளவோ பிரயத்தனம் செய்து வருகிறார்கள். இங்கிலாந்தில் மென்செஸ்டர் (Manchester) என்னும் ஊரிலுள்ள ஆரம்ப பாடசாலைகளில், அவ்வூர் போலீஸ்காரர்கள் சென்று, ஜன நெருக்க முள்ளதும் வண்டிப் போக்குவரத்து அதிகமாயுள்ளதுமான வீதிகளில் பிள்ளைகள் எவ்விதமாக ஆபத்தில்லாமல் நடந்து போக வேண்டும் என்பதைப்பற்றி போதித்தார்களாம். அதன் காரணமாக அவ்வூரில், சிறுவர்கள் வண்டிகளில் அகப்படுவது முதலிய ஆபத்துகள் குறைந்திருக்கின்றனவாம். பொலிவியா என்னும் தேசத்தில் சிறுவர்கள் வாசிக்கும் பாடசாலைகளில் தங்கள் வீடுகளையும் தங்கள் நாட்டிலுள்ள வீதிகளையும் எவ்விதம் சுத்தமாக வைத்திருக்க வேண்டும் என்பதைப் போதிப்பதற்கென்றே பாட நேரங்களை ஏற்படுத்தியிருக்கிறார்களாம். இதனால், அத்தேசத்தில் உள்ள வீதிகளில் குப்பை கூளங்கள், எச்சில் உமிழ்தல் முதலிய அசங்கியங்கள் இல்லாமல் எப்பொழுதும் சுத்தமாகவே இருக்கிறதாகப் பார்த்து வந்தவர்கள் சொல்லுகிறார்கள். சினிமா படம் என்னும் அசையும் படக்காட்சிகளினால் பிள்ளைகளின் வாழ்க்கைக்கு இன்றியமையாத பாடங்கள் மேல்நாட்டுப் பாடசாலைகளில் போதிக்கிறார்கள். மேல் நாட்டில் மிகப் பிரசித்திபெற்ற ஒரு இஞ்சினியர் தமது மூன்று வயதுடைய பேரப் பிள்ளை விளையாடுவதற்கு கண்ணாடியினால் ஒரு ரெயில் எஞ்சின் செய்து கொடுத்தார். அது செய்ய மூன்று வருஷம் பிடித்ததாம். இதனால், மேல்நாட்டார்கள் தங்கள் தேச முன்னேற்றத்திற்காக வேண்டித் தங்கள் சிறுவர்களின் கல்வியில் எவ்வளவு கவலையும் ஊக்கமும் செலுத்துகிறார்கள் என்பது விளங்கும். நமது நாட்டுக் கல்வியை மேல்நாட்டுக் கல்வியோடு ஒப்பிட்டுப் பார்த்தால் எவ்வளவோ ஏற்றத்தாழ்வு தெரிகிறது. ஆனால் இது உபாத்திமார்களின் கவனக்குறைவென்று சொல்வதற்கில்லை. பொது ஜனங்களின் கவலையின்மையும் அரசாங்கத்தாரின் கவனக்குறைவுமே காரணம் என்பதை மட்டும் சொல்லி இதனை இம்மட்டுமே நிறுத்துகிறோம்.

*ஆரம்பாசிரியன்,* மலர் 7, இதழ் 10, 1931

# உலகத்திலுள்ள குடி அரசு நாடுகள்

மக்களுக்கு அறிவு வளர்ந்து சுதந்தர உணர்ச்சி தோன்றியதன் காரணமாய், முடியரசுகள் மறையுண்டுபோய்க் குடியரசுகள் நாளுக்குநாள் வளர்ந்து கொண்டு வருகின்றன. தற்போது உலகத்திலுள்ள குடியரசு நாடுகளைப்பற்றி எடுத்துக் கொள்வோம்.

பிரான்ஸ் தேசம்: 1870ஆம் வருஷம் முதல் இந்தத் தேசம் குடியரசு நாடாக விளங்குகிறது. இந்தக் குடியரசின் பிரிஸிடெண்ட் 7 வருஷத்துக்கொருமுறை தேர்ந்தெடுக்கப்படு கிறார். பிரான்ஸ் தேசத்துக்குச் சொந்தமான புதுச்சேரி, காரைக்கால், யானாம், சந்திரநாகூர், மாகி இவைகளும் ஹிந்து சைனா, மடகாஸ்கர், பிரெஞ்ச் மேல் ஆபிரிகா முதலிய தேசங்களும் குடியரசு நாடுகளே.

போர்ச்சுகல் தேசம்: இதுவும் குடியரசு நாடு. இதற்குச் சொந்தமான ஆபிரிக்கா கண்டத்திலுள்ள அங்கோலா, மொசாம்பிக் தேசங்களும், இந்தியாவிலுள்ள கோவா முதலிய இடங்களும் குடியரசு தேசங்கள்.

ஸ்பெய்ன் தேசம்: ஐரோப்பாவிலுள்ள இத்தேசம் இந்த வருஷம்தான் முடியரசை ஓட்டிக் குடியரசாக மாறிற்று. இக் குடியரசு ஸ்திரமாய்விடுமானால் இந்த ஸ்பெய்ன் தேசத்திற்கு சொந்தமாய் ஆபிரிக்கா கண்டத்திலுள்ள அபிஸினியா, ரையோடி ஆரோ முதலிய தேசங்களும் குடியரசாக மாறிவிடும் இப்போதிருக்கும் நிலையில் இத்தேசத்தில் அதிகமாக கல்வி பரவவில்லை. ஆனால் இந்தியாவைவிட மிக அதிகமாகக் கல்வி பரவியிருக்கிறது. அதாவது 100க்கு 41 பேர் படித்திருக்கிறார்கள்.

சிவிட்ஸர்லாந்து: இது 25 நாடுகள் சேர்ந்து ஐக்கிய குடியரசு தேசம் (Federal Republic). இது ஐரோப்பா கண்டத்தில் கல்வி நிரம்பிய தேசங்களில் முதன்மையானது. இந்தத் தேசத்தில் படிக்காத ஜனங்கள் மிகக் குறைவு; படித்த ஜனங்களே அதிகமாக இருக்கிறார்கள். இந்தத் தேசத்தார் பிரைமரி சகிண்டரி பாடசாலைகளை ஏராளமாக அமைத்து அவைகளின் மூலமாய்க் கல்வியைப் பரவச் செய்வது மிகவும் போற்றத்தக்கது. இந்தச் சிறிய தேசத்தில் 7 பல்கலைக் கழகங்கள் இருக்கின்றன.

ஜெர்மனி தேசம்: உலகப் பெரும் போருக்கு முன்பு முடியரசாகவிருந்த இத்தேசம் இப்போது குடியரசாக விருக்கிறது. இத்தேசத்தில் கல்வி கட்டாய படிப்பாக ஏற்பட்டிருக்கிறது. இங்கு ஆண், பெண் இருபாலருக்கும் ஓட்டுரிமை உண்டு.

போலந்து: இது 1918ஆம் வருஷ முதல் குடியரசாக விளங்குகிறது. 21 வயதுக்கு மேல்பட்ட ஆண் பெண்கள் எல்லோருக்கும் ஓட்டுரிமையுண்டு.

ஆஸ்ட்ரியா: இத்தேசம் 1918ஆம் வருஷ முதல் குடியரசு நாடாக விளங்குகிறது.

பின்லாந்து (Finland): ஐரோப்பாவின் வடபாகத்திலுள்ள குடியரசு நாடு.

இஸ்தோனியா (Estonia): ஐரோப்பாவின் வடபாகத்திலுள்ள இத்தேசம் குடி அரசு நாடு.

லாதிவியா (Latvia): இதுவும் ஐரோப்பா கண்டத்திலுள்ள சிறியதோர் குடியரசு நாடு.

லிதுவானியா (Lithuvania): இதுவும் ஐரோப்பாவிலுள்ள சிறிய குடியரசு நாடு.

ஸீகோஸ்லாவாகியா(Czechoslovakia): 1918ஆம் வருஷ முதல் குடிஅரசாக விளங்குகிறது. இதில் பொஹிமியா, ஹங்கேரி தேசத்தின் சில பாகங்கள், மொரேலியா முதலிய தேசங்கள் அடங்கியிருக்கின்றன.

அல்பானியா (Albania): இத்தேசம் 1925ஆம் வருஷ முதல் குடியரசாக விளங்குகிறது.

கிறீஸ் (Greece): இத்தேசம் 1924ஆம் வருஷ முதல் குடியரசாக விளங்குகிறது. இத்தேசத்தில் கல்வி (பெயரளவில்) கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது.

ருஷியா (Russia): இந்தப் பெரிய தேசம் ஒருவகைக் குடியரசு நாடு. அதாவது பொது உடைமைக் குடியரசு (Soviet Republic). இத்தேசத்தில், ஜனங்களை கல்வியுடையவர்களாகச் செய்வதற்கு மெச்சத் தகுந்த முயற்சிகள் செய்யப்படுகின்றன.

இனி, ஆசியா கண்டத்திலுள்ள குடியரசு நாடுகளைக் கவனிப்போம்.

துருக்கி (Turkey): இது 1923ஆம் வருஷ முதல் குடியரசு நாடாக மிளிர்கிறது. இங்கு கீழ்நாட்டு மூடப்பழக்க வழக்கங்கள் ஒழிக்கப்பட்டு வருகிறதோடு கல்வியைப் பரவச் செய்வதற்கும் முயற்சி செய்யப்பட்டு வருகிறது. துருக்கி பாஷையின் சொந்த எழுத்துக்களை மாற்றி அதற்குப் பதிலாக அப்பாஷைக்கு (லத்தீன்) இங்கிலீஷ் எழுத்துக்களை சுவீகாரம் செய்துகொண்ட தேசம் இதுவே. (சைனா, ஜப்பான்

தேசங்களிலும்கூட அத்தேசத்துப் பாஷைகளின் எழுத்துக் களை மாற்றி இங்கிலீஷ் எழுத்துக்களை ஸ்வீகாரம் செய்து கொள்ள இப்போது முயற்சி செய்யப்பட்டு வருகிறது. இதற்குக் காரணம் அத்தேசத்துப் பாஷைகளின் எழுத்துக்கள், தினசரி வாழ்க்கைக்கு சௌகரியமாகப் பயன்படுத்தக்கூடாதபடி சுலபமாய் இராததுதான்).

சைனா (China): இப்பெரிய தேசம் 1912ஆம் வருஷ முதல் குடியரசாக இருக்கிறது. இச்சீன குடியரசு தேசத்தில் சைனா, மஞ்சூரியா, மங்கோலியா, சின்சியாங், திபெத்து ஆகிய நாடுகள் அடங்கியிருக்கின்றன.

ஆசியா கண்டத்தில் இப்போது சீனாவும் துருக்கியுமே குடியரசு நாடுகள். ஆசியா கண்டத்திலுள்ள ருஷியா குடியரசு நாடுதான். அது ஐரோப்பாவிலுள்ள ருஷியா சோவியத் குடியரசை சேர்ந்தபடியால் அதைப் பற்றி இங்குத் தனியே எழுதவில்லை.

ஆபிரிக்கா கண்டத்திலுள்ள குடியரசுகளைப் பற்றி ஒன்றும் சொல்வதற்கில்லை. ஐரோப்பியர், தங்கள் சாமார்த் தியத்தினாலோ அல்லது ஆசியாவாசிகளின் மூடத்தனத்தி னாலோ ஆசியா கண்டத்தின் சில பாகங்களைத் தங்கள் கைவசம் பிடித்து வைத்திருப்பது போலவே, ஆபிரிக்கா கண்டத்தின் பெரும்பாகத்தையும் ஐரோப்பியர் பங்கு போட்டுக் கொண்டார்கள். இந்த ஆபிரிக்கா கண்டத்தில் பிரஞ்சுக்காரர்களுக்கும் போர்ச்சுகேசியருக்கும் சொந்தமான தேசங்கள் மட்டும் குடியரசாகவிருக்கின்றன.

வட அமெரிக்கா கண்டத்திலுள்ள குடியரசு நாடு களாவன:

ஐக்கிய மாகாணம் (United States): இது புது மாகாணங்கள் சேர்ந்து உண்டாகிய ஐக்கிய குடியரசு நாடு. இத்தேசத்தில் 100க்கு 6 பேர்தான் கல்வி கற்காதவர்கள். இக்குடியரசு தேசத்தில் 1500 க்கு மேற்பட்ட பல்கலைக்கழகங்கள் இருக்கின்றன.

மெக்ஸிகோ (Mexico): 28 மாகாணங்கள் சேர்ந்த ஐக்கிய குடிஅரசு தேசம். இத்தேசத்தில் 9000 பாடசாலைகளுக்கு மேல் இருக்கின்றன.

மத்திய அமெரிக்காவில் உள்ள தேசங்களில் பனாமா (Panama) தேசம் 1930ஆம் வருஷ முதல் குடியரசு நாடாக விளங்குகிறது.

தென் அமெரிக்கா கண்டத்தில் ஏறக்குறைய எல்லாத் தேசங்களும் குடியரசு நாடுகளாயிருக்கின்றன. அவை வருமாறு:

அர்ஜின்டீனா (Argintina): இது தென் அமெரிக்கா கண்டத்திலுள்ள குடியரசு நாடு. இத்தேசத்தில் கல்வி இலவச மாகவும் கட்டாயமாகவும் கற்பிக்கப்படுகிறது.

பொலீவியா: இதுவும் குடியரசு தேசம். குடியரசுக்காகப் போராடிய பொலீவார் என்னும் வீரனுடைய பெயரே இத்தேசத்திற்கு இடப்பட்டிருக்கிறது. இத்தேசத்தில் கல்வி மிகக் குறைவு.

பிரேஸில் (Brazil): ஐக்கிய குடியரசு தேசம். இலவசக் கட்டாயக் கல்வி இருந்தும் இத்தேசத்தில் படிக்கத் தெரியாத ஜனங்கள் பெரும்பான்மையோர் இருக்கிறார்கள்.

சில்லி (Chilie): இதுவும் குடியரசு நாடு. கல்வி, அதிகமாகப் பரவவில்லையானாலும் பொதுவாகக் கல்வி பரவிய தேசம்.

கொலம்பியா (Colombia): இதுவும் ஒரு குடியரசு தேசம்.

ஈக்வேடார் (Equador): இதுவும் ஒரு குடியரசு தேசம்.

பராகே (Paraguey): இதுவும் குடியரசு தேசம்.

பெரூஉ (Peru): குடியரசு நாடு. கட்டாய இலவசக் கல்வி போதிக்கப்படுகிறது.

உருகே (Uruguay): இக்குடியரசு நாட்டில் கட்டாயக் கல்வி மட்டும் போதிக்கப்படுகிறது.

வெனிஸூலா (Venezuela): ஐக்கிய குடியரசு தேசம். இலவசக் கட்டாயக் கல்வி போதிக்கப்படுகிறது.

கூபா (Cuba): மேற்கிந்தியத் தீவுகளில் ஒன்று. 1902ஆம் வருஷம் முதல் குடியரசாக விளங்குகிறது.

ஹெய்டி (Haitie): இதுவும் மேற்கிந்தியத் தீவுகளில் ஒன்று. இத்தீவின் மேற்குப்பாகம் நீக்ரோவர்களின் குடியரசு நாடு. கிழக்குப் பாகம் சாண்டோடொமிங்கோ என்னும் பெயருடையது. இந்தப் பாகமும் குடியரசுதான். இப்பாகத்திற்கு டொமிங்கோ குடியரசு என்று சொல்லப்படுகிறது.

ஆஸ்த்ரேலியா கண்டத்தில் குடியரசு தேசம் ஒன்றும் கிடையாது.

*ஆரம்பாசிரியன்,* **மலர் 7, இதழ் 11, 1931**

# கிரேக்ககவி ஹோமரும், கவிச்சக்கரவர்த்தி கம்பரும்

கவிச்சக்கரவர்த்தி எனப்படும் கம்பர் *இராமாயணத்தைத்* தமிழில் பாடியவர். ஹோமர் என்பவர் கிரேக்கப் பாஷையில் *இலீயம்* (*Iliad*) என்னும் காவியத்தை இயற்றியவர். இந்த *இலீய* காவியம் மேல் நாடுகளில் ஆதிகாவியம் என்று கொண்டாடப் படுகிறது. இந்த *இலீய* காவியத்தைப் பார்த்துத்தான் *இராமாயணத்தைப்* பாடியிருக்கவேண்டும் என்று அறிவாளிகள் நினைக்கிறார்கள். ஏனென்றால் *இலீய* காவியத்தின் கதைப் போக்கும் *இராமாயணத்தின்* கதைப்போக்கும் முக்கிய அம்சங்களில் பொருந்தியிருக்கின்றன. அதாவது *இலீய* காவியத்தில் ஹெலனா என்பவளை பரீசன் என்னும் அரசன் கவர்ந்து கொண்டு இலீய நாட்டில் கொண்டுபோய் விடுகிறான். கிரேக்க நாட்டரசர்கள் தங்கள் நாட்டிற்கு நேர்ந்த அவமானத்தைத் தீர்த்துக்கொள்ள அகமன்னன் என்பவனைத் தலைவனாகக் கொண்டு இலீய நாட்டில் படை எடுத்துச் சென்று 10 வருஷம் போராடிக் கடைசியில் அந்த நாட்டைத் தீயிட்டுக் கொளுத்தி ஹெலனாவை மீட்டுக்கொண்டு பேர்கிறார்கள். இதைப் போலவே *இராமாயணமும்*, சீதையை இராவணன் கவர்ந்து கொண்டுபோக, இராமன் இலங்கைக்குச் சென்று தீ மூட்டி எரித்து சீதையை மீட்டு வருகிறான் என்று சொல்லுகிறது. ஆனால், இரண்டுக்குமுள்ள வித்தியாசம் என்னவென்றால், *இலீய* காவியத்தில் பகைவர் கட்சியை இழிவு படுத்திக் கூறாமல் தகுந்த மரியாதை கொடுத்து எழுதப் பட்டிருக்கிறது. *இராமயணத்திலோ* பகைவர் கட்சியை மிக இழிவாகவும், கேவலமாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. அன்றியும், இலீய காவியக் கதையையும், *இராமாயணக்* கதையையும் வாசித்தால் *இலீய* காவியத்தின் உயர்வும் *இராமாயணத்தின்* இழிவும் நன்கு விளங்கும். *இராமாயணத்தைவிட* *இலீய* காவியம் ஆயிரம் மடங்கு சிறப்புடையது என்று தைரியமாகச் சொல்லலாம். காவியங்களையும், கதைகளையும் இயற்றுவதற்கு கிரேக்கர்கள் மிகவும் சமர்த்தர்கள் என்பது உலகமறிந்த விஷயம்.

நிற்க. நாம் இங்கு எழுதப் புகுந்த விஷயத்தைச் சொல்லு வோம். அதாவது கதாநாயகியை கம்பர் எவ்விதமாகப் புகழ் கிறார், ஹோமர் எவ்விதமாகப் புகழ்கிறார் என்பதே இங்கு கவனிக்கத்தக்கது.

கம்பர் கதாநாயகியாகிய சீதையைப் புகழும்போதெல் லாம் பாதாதி கேசம் அல்லது கேசாதி பாதம் வரையில் வர்ணிக்கிறார். அதாவது உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில் ஒன்றையும் விடாமல் பாராட்டிப் புகழ்கிறார். அப்படிப் புகழும்போது சீதையம்மாளின் மறைத்து வைக்க வேண்டிய உறுப்புகளையும் வெளிப்படையாக அனேக உபமானங்களுடன் எடுத்துரைக்கிறார். கதாநாயகியாகிய சீதை இப்போது உயிருடன் வந்து தன்னைப்பற்றி கம்பர் வர்ணித் திருப்பதைப் படித்துப் பார்ப்பாளானால் அவள் வெட்கித் தலை குனிவாள் என்பது திண்ணம். அன்றியும், கம்பர்மேல் மான நஷ்டத்திற்கும் கோர்ட்டில் வழக்குத் தொடர்வாள் என்பதும் திண்ணம். கம்பர் மேல் மட்டும் அல்லாமல் *இராமாயணத்தை* அச்சிட்டு வெளிப்படுத்துகிறவர்கள் மேலும் *இராமாயணப்* பிரசாரம் செய்கிறவர்கள் மேலும் மானநஷ்ட வழக்கு கொண்டுவரப்படும் என்பது உண்மை. சீதை தன் மர்ம ஸ்தானங்களையும் கம்பர் பாடியிருப்பதையறிந்தால் இராவண னால் நேர்ந்த அவமானத்தைவிட கம்பரால் நேர்ந்த அவ மானத்தையே பெரிதென்று எண்ணித் தற்கொலை செய்து கொண்டாலும் செய்து கொள்வாள். ஆனால் *இராமயணக்* கதாநாயகியாகிய சீதை மறுபடியும் வரப்போகிறதில்லை யாகையால் மானநஷ்ட வழக்குக்கும் தற்கொலைக்கும் இடமில்லை. வால்மீகி மகாரிஷியோ கம்பரைவிட ஒருபடி அதிகமாகவே சீதையைப் புகழ்ந்திருக்கிறதாகச் சொல்லு கிறார்கள்.

இனி ஹோமர் தன் கதாநாயகியைப்பற்றி என்ன சொல்லு கிறார் என்பதைக் கவனிப்போம். கதாநாயகியாகிய ஹெலனா என்பவளின் உறுப்புகள் ஒன்றையாவது இவர் வர்ணிக்க வில்லை. ஆனால், கதாநாயகி மிகுந்த கட்டழகு வாய்ந்தவள் என்பதை ஒரு வாக்கியத்தில் வெகு சாதுர்யமாகவும் நாகரீக மாகவும் சொல்லியிருக்கிறார். அது எப்படி என்றால் சொல்லு வோம்.

இலீய நாட்டில் போர் நடக்கிறது. கிரேக்க சேனைகளும் இலீய நாட்டுச் சேனைகளும் போர்க்களத்தில் போர் புரியத் தயாராய் நிற்கிறார்கள். இந்தச் சண்டையைப் பார்ப்பதற்காக இலீய நாட்டுக் கோட்டைச் சுவற்றின் மேல் பெண் மக்களும் சிறு குழந்தைகளும் உட்கார்ந்திருக்கிறார்கள். இன்னும் மிகுந்த

வயோதிகர்களான கிழவர்களும் கோட்டை மதிலின் மேல் உட்கார்ந்து, "ஒரு பெண்ணுக்காக இரண்டு தேசங்கள் போர் செய்வது அறிவீனமாகும். ஒரு பெண்ணுக்காக எத்தனையோ பேர் சாகப் போகிறார்களே" என்று வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்தச் சமயத்தில் கதாநாயகியாகிய ஹெலனா கோட்டை சுவற்றின்மேல் (போர் நிகழ்வதைப் பார்க்க) வருகிறாள். அவளைக் கண்ட அந்த வயோதிகக் கிழவர்கள் அவள் அழகைக் கண்டு பிரமித்து "இவ்வளவு அழகான பெண்ணுக்காக இரண்டு தேசத்தார் போர் புரிவது ஆச்சரியமல்ல" என்று சொல்லியதாக ஹோமர் மகாகவி பாடுகிறார். மிகுந்த வயோதிகர்களான கிழவர்களே கதா நாயகியின் அழகைக் கண்டு மெச்சினார்கள் என்று சொல்லிய படியால் கதாநாயகி நிகரற்ற அழகுள்ளவள் என்பது வெளிப்படையாயிற்று. இவ்விதம் கதாநாயகியின் அங்கங் களை வர்ணிக்காமலே அழகாகவும் நாகரீகமாகவும் கௌரவ மாகவும் இக்கவிவாணர் புகழ்ந்து இருப்பது அவருடைய மனப்பான்மையை நன்கு விளக்குகிறது. மேல் நாட்டார் பெண்களை கௌரவமாகவும் மரியாதையாகவும் நடத்துகிற படியால் அதற்கிணங்க இவர் கதாநாயகியை மரியாதையாகப் புகழ்ந்திருக்கிறார் போலும்!

இக்கதாநாயகியாகிய ஹெலனா கம்பர் கையில் அகப் பட்டிருப்பாளானால் அவள் கதி என்னவாயிருக்கும்? சீதைக்கு நேர்ந்த அவமானம் ஹெலனாவுக்கும் நேரிட்டிருக்கும் என்று சொல்லவும் வேண்டுமோ? துரதிஷ்டமுள்ள சீதை ஹோமர் கவியிடம் அகப்படாமல் கம்பரிடம் அகப்பட்டு உலகம் உள்ளளவும் அவமானமடைந்துவிட்டாள். நல்லதிர்ஷ்டமுள்ள ஹெலனா கம்பரிடம் அகப்படாமல் ஹொமரிடம் அகப்பட்டு மரியாதையும் புகழும் அடைந்தாள்.

இச்சிறு வியாசத்தை இங்கு எழுத நேரிட்டதன் காரணம் என்னவென்றால் நமது நாட்டுப் புலவர்களில் பெரும்பான்மை யோர் எல்லாத் துறைகளிலும் குறுகிய நோக்கமுடையவர்களா யிருப்பதால் அயல் நாட்டு நூல்களைப் படித்தறிந்து விசால புத்தியடைந்து தாய்நாட்டுக்குத் தொண்டு புரியவேண்டும் என்பதே.

அறிவு என்பது ஒரு நாட்டுக்கு ஒரு தேசத்துக்குச் சொந்தமானதல்ல வெவ்வேறு பாஷைகளிலும் வெவ்வேறு அருமையான நூல்களும் புத்தகங்களும் இருக்கின்றன. அவைகளை யெல்லாம் கற்று அவற்றை நமது பாஷையில் மொழிபெயர்த்துக் கொடுத்தால் நமது நாட்டு ஜனங்கள் அவைகளைப் படித்து அறிவு விளங்கப் பெற்று முன்னேற்ற

மடைவார்கள். இதை விட்டு தற்காலத் தமிழ்ப் புலவர்களில் சிலர் 'சுயமரியாதைக்காரர்களை வைவதும்' பழம்பாட்டிக் கதைகளைப் பேசுவதுமாயிருந்தால் அதனால் யாருக்கு என்ன பலன் கிடைக்கும்? பண்டிதன், வித்துவான் என்று பெயர் படைத்து விடுவதனால் பயனில்லை. பண்டிதர்களே! வித்து வான்களே! உங்கள் பண்டிதத் தன்மையினால் உலகத்துக்கு, மனித சமூக முன்னேற்றத்திற்கு, தேசத்தின் முற்போக்குக்கு ஏதேனும் பயன் உண்டா என்பதை யோசித்துப் பாருங்கள். லத்தீன், கிரீக், பிரெஞ்சு, இங்கிலீஸ், ஜெர்மன் முதலிய அயல் நாட்டு பாஷைகளையும் கற்று அந்தந்த பாஷைகளிலுள்ள சிறந்த சாஸ்திரங்களையும் நூல்களையும் தமிழில் மொழிபெயர்த்துக் கொடுப்பீர்களானால் அதுவே நீங்கள் தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் தொண்டு செய்தவர்களாவீர்கள். நமது தமிழ் பாஷையைவிட ஏனைய பாஷைகளிலும் அருமையான விஷயங்கள் இருக்கின்றன என்பதை எடுத்துக்காட்டவே கம்பரையும் ஹோமரையும் இங்கு எடுத்துக் காட்டப்பட்டது.

*குடி அரசு,* மே-10, 1931

# ஆண் பெண் சமத்துவம்

*Things Seen in Northern India* என்னும் நூலாசிரியர் ஒரு ஆங்கிலேயர். இவர், இந்தியாவைப்பற்றி மேல் நாட்டார் அறிந்து கொள்ளும் பொருட்டு இப்புத்தகத்தை எழுதியிருக்கிறார். இப்புத்தகத்தில், இந்தியர்களின் நடை உடை பாவனை முதலியவைகளைப் பற்றிய விஷயங்கள் எழுதப் பட்டிருக்கின்றன. அவற்றில் கீழ்க்கண்ட விஷயமும் ஒன்றாகும். அதாவது, "இந்தியாவில் பார்ஸி ஜாதியார் மேல் நாட்டாரைப் போல தமது மனைவி அல்லது சகோதரிகளுடன் வீதிகளில் ஒன்றாக நடந்து செல்வதைப் பார்க்கலாம். ஆனால், பார்ஸி ஜாதியாரைத் தவிர்த்து, மற்ற எல்லா இந்துக்களும் தமது மனைவி அல்லது சகோதரிகளுடன் வீதிகளில் சமத்துவமாக கலந்து நடப்பதில்லை. ஒரு இந்து தனது மனைவி அல்லது சகோதரியுடன் தெருவில் நடப்பானானால் அவன் சற்று முன்னால் நடந்து செல்லுவான்; அவனுக்கு சற்றுப் பின்னால் ஸ்திரீ நடந்து செல்லுவாள் அவள் நடக்கும்போது ஒருவரையும் பாராமல் தலை குனிந்து நடப்பாள்" என்று அவர் அப்புத்தகத்தில் எழுதியிருக்கிறார்.

இந்த மாதிரி பெண்களும் ஆண்களும் சமமாகச் செல்லாமல் முன்னும் பின்னுமாக நடக்கிறது வட இந்தியாவில் மட்டுமல்ல, தென் இந்தியாவிலும் சர்வ சாதாரண மாயிருக்கிறது. இவ்விதம் முன்னும் பின்னுமாக நடப்பது இந்தியராகிய நாம் நமது சகோதரிகளை அடிமைப்படுத்தி வைத்திருக்கிறோம் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது.

இந்துக்கள் பெண் மக்களை அடிமைப்படுத்தி வைத்திருப்பதுபோல வேறெந்தத் தேசத்திலும் கிடையாது. இந்தியாவைத் தவிர வேறெந்த தேசத்திலும் ஆணும் பெண்ணும் முன்னும் பின்னுமாக நடப்பதில்லை.

இதுமட்டுமா? இந்துக்களில், புருஷன் பெயரைப் பெண் சாதி சொல்லக்கூடாதென் றிருப்பது புருஷனுக்குப் பெண்டாட்டி அடிமை என்பதைக் காட்டவில்லையா? இந்தியாவுக்கு வெளியேயுள்ள நாடுகளில் பெண்சாதி புருஷனை பெயரிட்டு அழைக்கிறாள். ஏனென்றால், அத்தேசங் களில் பெண்சாதி புருஷனுக்குச் சமம் என்று நினைக்கிறாள்.

புருஷனும் தன் பெண்சாதி தனக்குச் சமம் என்று நினைக்கிறானே தவிர தனக்கு அடிமை என்று நினைப்பதில்லை.

இன்னும் வெட்கக்கேடான காரியம் ஒன்று உண்டு. அது என்னவென்றால், இந்துக்களில் கணவன் சாப்பிட்ட எச்சிலையில் மனைவி உட்கார்ந்து சாப்பிடுகிற அநாகரிக வழக்கம். இந்த அநாகரிகம் வேறெங்கேனும் உண்டா? இப்படிச் சாப்பிடுவது அன்பைக் காட்டுவதாகச் சிலர் சொல்லலாம். இது அன்பைக் காட்டுவதல்ல, அடிமைத்தனத்தைக் குறிப்பதாகும். அன்பைக் காட்டுவதாயிருந்தால், மனைவி சாப்பிட்ட இலையில் புருஷனும் ஏன் சாப்பிடுகிறதில்லை?

இவ்வித பழக்க வழக்கங்கள் நம்மவருக்குச் சாதாரண விஷயங்களாகத் தோன்றினாலும், மேல் நாட்டார் நம்மை அநாகரீகர் என்று கருதி இழிவுபடுத்தக் காரணமாயிருக்கின்றன.

சுயமரியாதையை விரும்புகிற நாம் நமது சகோதரிகளுக்குச் சமத்துவம் அளிக்கவேண்டியது கடமையாகும். பெண் மக்களை அடிமைப்படுத்தி வைக்கும் தேசம் முன்னுக்கு வருமா?

*குடிஅரசு,* மே – 10, 1931

# ஆசியாக் கண்டத்தாரின் அறிவு

சென்ற வருஷம் (1930) ஒரு அமெரிக்கர் ஜப்பான் தேசத்தைப் பற்றி ஒரு புஸ்தகம் எழுதி வெளிப்படுத்தி யிருக்கிறார். அதில் ஓரிடத்தில் அவர் பொதுவாக ஆசியாக் கண்டத்து ஜனங்களின் அறிவைப் பற்றி எழுதியிருக்கிறார். அதில் அவர் சொல்லுகிறதாவது:

"ஆசியாக் கண்டத்து ஜனங்களுக்குச் சொந்தமாகக் கண்டறியும் புத்தி கிடையாது. அவர்கள் சொல்லிக் கொடுத் ததைத் திறமையாகச் செய்வார்கள். ஆனால் தங்கள் சுயபுத்தியைக் கொண்டு புதிதாக எதையும் செய்யமாட்டார்கள். ஒரு பாட சாலையில் ஒரு ஐரோப்பியச் சிறுவனும், ஒரு ஆசியாக் கண்டத்துச் சிறுவனும் படிப்பதாக வைத்துக்கொள்வோம். பாடசாலையில் ஆசியாக் கண்டத்துச் சிறுவன் ஐரோப்பியச் சிறுவனைவிட புத்தி கூர்மையுடன் பாடங்களை வாசிப்பான். பரீட்சையில் முதலில் பாஸ் செய்து விடுவான். ஆனால் ஐரோப்பியச் சிறுவனோ பாடசாலையில் புத்திசாலியாகக் காணப்படமாட்டான். இருபது வருஷங்களுக்குப் பிறகு பார்த்தால் புத்திசாலியாய்க் காணப்பட்ட ஆசியாக் கண்டத்துச் சிறுவன் ஐரோப்பியச் சிறுவனுக்குக் கீழ் ஒரு குமாஸ்தாவாக இருப்பதையும் பாடசாலையில் மந்தமாயிருந்த ஐரோப்பியச் சிறுவன் புத்திசாலிச் சிறுவனுக்கு எஜமானாக இருப்பதைக் காணலாம். ஐரோப்பியச் சிறுவனுக்கு எஜமான் பதவி கிடைத்தது நிற வித்தியாசத்தினால் அல்ல. ஆனால் அவனுக்குச் சுயமாக யோசித்துச் செய்யும் பகுத்தறிவிருப்ப தனால்தான். இப்படிச் சொல்லுவதனால் ஆசியாவாசிகளில் ஒருவரும் சுய அறிவுடையவர்கள் அல்லர் என்று சொல்லு வதாக நினைக்கக்கூடாது. அவர்களிலும் சுயமாக யோசித்துக் கண்டுபிடிக்கக் கூடிய அறிவாளிகள் இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் மிகச்சிலர். ஆனால் ஆசியாவாசிகளில் பெரும்பான்மையோர் சொந்தமாக எதையும் கண்டுபிடிக்கச் சக்தியற்றவர்கள். அவர்கள் சொல்லியபடி செய்வதற்கு ஏற்றவர்கள்" என்று எழுதியிருக்கிறார்.

மேற்காட்டியபடி அவர் எழுதியிருப்பது உண்மைதான். அதை நாம் அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டிய

தாயிருக்கிறது. நமது நாட்டில் படித்த வகுப்பாரை எடுத்துக் கொள்வோம். அவர்களை மூன்று பிரிவாகப் பிரிப்போம். முதலாவது வக்கீல்கள், இரண்டாவது பண்டிதர்கள், மூன்றாவது டாக்டர்கள்.

முதலாவது வக்கீல்களைப் பற்றிக் கவனிப்போம். இந்த லா புத்தகத்தில் இத்தனையாவது செக்ஷனில் இத்தனையாவது பேராவில் இந்தச் சட்டம் சொல்லப்பட்டிருக்கிறது, இந்தக் கேசில் இந்த ஜட்ஜு இந்த விதமாகத் தீர்ப்பு செய்திருக்கிறார் என்று லா புத்தகத்தை உறுப்போட்டு வாய்ப்பாடம் செய்வதில் நமது படித்த வக்கீல்கள் மற்ற தேசத்து வக்கீல்களைவிடக் கெட்டிக்காரரர்கள்தான். ஆனால், எந்த வக்கீலாவது தமது சொந்த புத்தியைச் செலுத்தி ஜனங்களுக்குப் பயன்படக்கூடிய எதையாவது ஒன்றை நூதனமாகக் கண்டுபிடித்திருக்கிறாரா என்று யாரேனும் சொல்லக்கூடுமா?

இரண்டாவது பண்டிதர் கூட்டத்தை எடுத்துக் கொள் வோம். இவர்கள் பண்டைக் காலத்து வழக்கத்தையொட்டிப் புராணம் பாடுவதும், கதையெழுதுவதும், அந்தாதி, உலா, கலம்பகம், பிள்ளைத்தமிழ் பாடுவதுமாக இருக்கிறார்களே தவிர யாராவது ஒருவர் தமது சொந்தப் புத்தியைக் கொண்டு யோசித்து உலகத்துப் பயன்படக்கூடிய ஏதேனும் நூதனமாக சாஸ்திரம் செய்திருக்கிறார் என்று யாரேனும் சொல்லக் கூடுமா?

மூன்றாவது டாக்டர்களை எடுத்துக்கொள்வோம். இவர்கள் டாக்டர் பரீட்சை பாஸ் செய்து வெள்ளைக்காரரிடமிருந்து கற்றுக்கொண்டதைவிட வேறு எதையாவது புதிதாகக் கண்டு பிடித்து மக்களுக்கு உதவி செய்திருக்கிறார்கள் என்று யாராவது சொல்லக்கூடுமா?

இவ்விதம் படித்தக் கூட்டத்தார்கள் தாங்கள் கற்றுக் கொண்டது வரையில் இருக்கிறார்களேதவிர நூதனமாக எதையேனும் சாதித்திருக்கிறார்களா? ஒன்றும் இல்லையே. ஆதலால், ஆசியாவாசிகளுக்கு மனப்பாடம் செய்யவும், கற்றுக்கொடுத்ததைச் செய்யவும்தான் அறிவு இருக்கிறதே யொழியப் பகுத்தறிவு கொண்டு நூதனமாகக் காரியஞ் செய்யத் தெரியாது என்று மேல் நாட்டார் சொல்வதில் பிழை யுண்டோ? பகுத்தறிவைக் கொண்டு யோசித்துப் பாருங்கள் என்று சுயமரியாதைக்காரர் சொன்னால் அதை மறுத்துப் பழைய வழக்கத்தை விடக்கூடாதென்று படித்தவர்களும், பாமரர்களும் கூச்சலிடுவது கீழ் நாட்டாருக்குச் சொந்த அறிவு கிடையாதென்று சொல்வதை உறுதிப்படுத்துகிறது.

*குடிஅரசு,* மே – 31, 1931

# தேசீய பாடல்கள்

ஒவ்வொரு தேசத்திற்கும் ஒவ்வொரு தேசீயக்கொடி இருப்பது போலவே ஒவ்வொரு தேசத்திற்கும் ஒவ்வொரு தேசீய பாடல் உண்டு. ஒவ்வொரு தேசத்தாரும் தத்தம் தேசீயக் கொடியை வணங்கி மரியாதை செய்வதுபோலவே தத்தம் தேசீய பாட்டையும் மனமகிழ்ந்து பாடுவர். தேசீய பாடல்கள் மக்கள் உள்ளத்தில் தேசபக்தியைத் தட்டி எழுப்பக்கூடிய சக்தி வாய்ந்தனவாயிருக்க வேண்டும்.

God save the King என்னும் ஆங்கிலப் பாட்டு இங்கிலீஷ்காரரின் தேசீய பாடல் என்று சொல்லப்படுகிறது. ஆனால் இந்தப் பாட்டில் தேசீய உணர்ச்சியை, தேச பக்தியை உண்டாக்கக்கூடிய வாசகங்கள் ஒன்றேனும் இல்லை. ஆகவே மேற்படி ஆங்கிலப் பாட்டை தேசீய பாடல் என்று சொல்லக் கூடாது. அதில் ராஜபக்தியும் ராஜவாழ்த்தும் மட்டும் கூறப் பட்டிருத்தலால் அதனை அரச வாழ்த்து என்றுதான் சொல்லவேண்டும்.

ஆஸ்ட்ரியா (Austria), ரொமெனியா (Roumania), ஜப்பான் ஆகிய இத்தேசங்களின் தேசீயப் பாட்டு God save the king என்னும் ஆங்கிலப் பாட்டைப் போன்று அரச வாழ்த்து மட்டும் கூறுகின்றன.

டச்சுக்காரர்களின் தேசமாகிய ஹாலந்து (Holland) தேசத்தின் தேசீயப் பாட்டு ராஜபக்தியுடன் தேசாபிமானத்தையும் தரக்கூடியது. அதனை இயற்றியவர் அத்தேசத்துக் கவியாகிய ஹெண்ட்ரிக் வான் டோலன்ஸ் (Hendrik Van-Tollens) என்பவர். அவர் அப்பாட்டை 1816ம் வருஷம் இயற்றினார்; 1820ம் வருஷம் ஸ்மிட்ஸ் (Smids) என்பவர் அப்பாட்டுக்குப் பண் வரையறுத்தார். அது முதல் அப்பாட்டு தேசீய பாடலாக அத்தேசத்தில் பாடப்படுகிறது.

டென்மார்க்கு (Denmark) தேசத்தில் பாடும் தேசீய பாட்டு தேசாபிமானத்தை உண்டாக்கக் கூடியது. அப்பாடல்களில் அத்தேசத்து வீரர்களைப் பற்றிப் புகழ்ந்து சொல்லப் பட்டிருக்கிறது. அப்பாட்டைப் பாடினவர் இன்னாரென்று தெரியவில்லை. அது பண்டை நாள் முதல் வழங்கப்பட்டு வருவதாகத் தெரிகிறது. ஆனால், 1775ம் வருஷத்தில்தான் அது

தேசீயப் பாட்டாக அங்கீகரிக்கப்பட்டு அத்தேசத்தாரால் பாடப்பட்டது.

இத்தலி (Italy) தேசத்திற்கு Marcha Rayale என்றும் Garibaldi's war hymn என்றும் இரண்டு தேசீய பாடல்கள் உண்டு. காரிபால்டி (Garibaldi) என்பவர் இத்தலி தேசத்தை ஆண்டுவந்த, அன்னிய அரசாங்கத்தைத் துரத்தியடித்து அத் தேசத்தைச் சுதந்தர நாடாகச் செய்த தேசீய வீரன்; காரி பால்டியின் போர்க்களப் பாட்டில் தேசாபிமானமும் வீரச் சுவையும் மிளிர்கின்றன. இப்பாடல் 1859ம் வருஷம் மெர் கண்டினி (Mercantini) என்பவரால் இயற்றப்பட்டது. இப் பாட்டின் முடிவில், "நாம் ஜெயிக்கவேண்டும். இதுதான் இத்தலி தேசத்தின் ஆணை. ஆகையால் கத்தி எடுத்துச் சண்டை செய்யுங்கள், கத்தி எடுத்துச் சண்டை செய்யுங்கள்" என்னும் பொருள்பட எழுதப்பட்டிருப்பது தேசாபிமானத்தில் ஒருவித ஆவேசத்தை உண்டாக்கக் கூடியதாயிருக்கிறது.

நார்வே (Norway) தேசத்தின் தேசீயப் பாட்டு ஐம்பது ஆண்டுகளுக்கு முன் H.A. Bjerregaard என்பவரால் இயற்றப் பட்டது. இப்பாடலில் தேசாபிமானமும் சுதந்தர உணர்ச்சியும் ததும்புகிறது. இப்பாட்டின் பிற்பகுதி தாய்நாட்டைப் பார்த்துச் சொல்லுவோம்.

"தாய்நாடே இப்பொழுதும் எப்போதும் உன்னுடைய மக்களாகிய நாங்கள் உன்னை அன்புடன் நேசிக்கிறோம்; நீ விரும்பினால் உனக்காக உயிரையையுங் கொடுப்போம். தாயினும் அன்புமிக்க தாயே! சுதந்திரத்தின் பொருட்டு பகை வரிடமிருந்து உன்னைக் காக்க நாங்கள் உறுதி கொண்டு சகோதரர்கள் போல ஒற்றுமையாயிருக்கிறோம்" என்னும் கருத்துப்பட அமைக்கப்பட்டிருக்கிறது.

பெல்ஜிய (Belgium) தேசத்தின் தேசீயப் பாட்டு 1830ம் வருஷம் ஜென்னிவல் (Jeneval) என்பவரால் இயற்றப்பட்டது. அக்காலத்தில் பெல்ஜியம், டச்சுக்காரரால் (ஹாலந்து தேசத் தாரால்) ஆளப்பட்டது. ஆனால், பெல்ஜியர், டச்சுக்காரர் ஆட்சிகளிலிருந்து விலகி சுதந்திரம் பெற ஆவல்கொண்டு டச்சுக்காரரோடு யுத்தம் செய்தார்கள். அவர்கள் தேசீயப் போர் செய்த காலத்தில்தான் இப்பாடல் இயற்றப்பட்டு மக்களால் பாடப்பட்டது. இது நான்கு பாட்டுக்களுடையது. முதல் பாட்டில், பெல்ஜியர், டச்சுக்காரருக்கு உட்பட்டிருக்கும் வெட்கயான நிலைமையையும் ஆனால் சுதந்திரச் சூரியன் உதயமாயிருப்பதையும் குறிப்பிட்டிருக்கிறது. கடைசி பாட்டு, "ஓ! பெல்ஜியம்! எங்கள் தாயே! எங்கள் உள்ளத்தையும் தேக பலத்தையும் (உடலையும் உயிரையும்) எப்போதும் உனக்கே

அர்ப்பணம் செய்வோமாக! பிற்காலத்துச் சந்ததியர்களாகிய எமது மக்களும் உன்னை என்றும் மறவாதிருக்கும்படி கடவுள் கருணை புரிவாராக! நீ எக்காலத்தும் உயர்வும் சிறப்பும் பெற்று என்றும் மாறா ஒற்றுமையோடு நிலைபெற்று வாழ்வாயாக! உன்னுடைய குறிச்சொல் (Watchword) அரசன் சட்டம், சுதந்தரம் என்பவைகளாயிருப்பதாக" என்று பொருள் தரும்படி எழுதப்பட்டிருக்கிறது.

ருஷ்யா (Russia) தேசத்தில் புரட்சி இயக்கம் (Revolution) ஏற்பட்ட காலத்தில், கான்ஸ்டன்டைன் பால்மாண்ட் (Constantine Bolmond என்பவரால் (1919ம் வருஷம் மார்ச்சு மாதம்) அத்தேசத்தின் தேசீய பாடல் இயற்றப்பட்டது. இப்பாட்டிலும் சுதந்திர உணர்ச்சி ததும்புகிறது.

போர்ச்சுகல் (Portugal) தேசம் 1910ம் வருஷம் குடி அரசாக மாறிற்று. அக்காலத்தில்தான் அதன் தேசீய பாட்டு Henrique lopes De Mendonca என்பவரால் இயற்றப்பட்டது. இத்தேசீய பாடல் மூன்று பாட்டுகளுடையது. ஒவ்வொரு பாட்டின் கடைசியும், "தரைமீதிருந்தாலும் கடல் மீதிருந்தாலும் சண்டைக்கு ஆயத்தமாக ஆயுதங்களோடு இருங்கள்; ஆயுதங்களோடிருங்கள். நமது நாடு சுதந்திரமடைவதற்காக ஆயுதமெடுங்கள்; ஆயுதமெடுங்கள். பீரங்கிக்கு எதிராக நடவுங்கள் நடவுங்கள்" என்று முடிகிறது.

போலந்து (Poland) தேசம் 1831ம் வருஷம் வரையில் ருஷியாவுக்கு அடிமைப்பட்டிருந்தது. 1680ம் வருஷத்தில் போலந்து ஜனங்களுக்கு சுதந்திர உணர்ச்சி உண்டாகி ருஷியாவுடன் சுதந்திரப் போர் செய்தார்கள். அக்கால முதல் போலந்து தேசத்தின் சுதந்திரப் பாடல் அத்தேசத்தில் பாடப் படுகிறது இப்பாடலில், "போலந்து தேசத்து ஜனங்கள் உயிரோடு இருக்கும் வரையில் போலந்து அன்னியற்கு அடிமையல்ல. அது இழந்தவற்றையெல்லாம் நமது முயற்சி மீட்டுக்கொடுக்கும். நடவுங்கள்; நடவுங்கள், சுதந்திரத்திற்குச் செல்லுவோம். நம்முடைய சங்கிலிகள் உடையுண்டன. போலந்து சுதந்திரத்தோடிருக்கட்டும்" என்னும் பொருள் தொனிக்கின்றது.

*குடிஅரசு,* **ஜூன் 28, 1931**

# இந்தியாவின் பொது பாஷை இங்கிலீஷா? ஹிந்தியா?

இந்திய தேசத்திற்கு ஒரு பொது பாஷை ஏற்படுத்த வேண்டும் என்னும் நோக்கத்துடன் காங்கிரஸ் மகாசபையார் ஹிந்தி பிரசார சபைகளை யேற்படுத்தி அவைகளின் மூலம் ஹிந்தி பாஷையை தேசமெங்கும் பரப்ப முயற்சி செய்து வருகிறார்கள். இது பொது ஜனங்களைப்பற்றிய விஷயமாகை யால் இதைப்பற்றி ஒவ்வொருவரும் தீரயோசித்து ஆராய்ந்து முடிவு செய்யவேண்டியது அவசியம்.

நமது இந்திய தேசத்தில் பற்பல பாஷைகள் பேசப்படுவது ஜனங்களை ஒற்றுமையில்லாதபடி செய்து விடுகிறதென்றும், இனி வரப்போகும் சுயராஜ்யத்தில் அரசியல் விவகாரங்கள் நடைபெறுவதற்கு ஒரு இடைஞ்சலாயிருக்கும் என்றும், இக்குறைகளை நீக்குவதற்காக ஹிந்தி பாஷையை தேசத்தின் பொது பாஷையாகச் செய்ய முயற்சி செய்வதாகவும் காங்கிரஸ்காரர் சொல்லுகிறார்கள்.

இது முழுப் புரட்டாகும். ஹிந்தி பாஷை இந்தியாவின் பொது பாஷையாக இருந்தால் இந்தியாவின் முன்னேற்றத்திற்கு அது பெருந்தடையாயிருக்கும் என்பதையும் இங்கிலீஷ் பாஷை இந்தியாவின் பொதுப் பாஷையாயிருந்தால் இந்தியா முன்னேற்றமும் மேன்மையும் அடைய முடியும் என்பதையும் கீழே காரணங்களுடன் விளக்குவோம்.

1. ஒரே பாஷையை இந்தியர் பேசினால் ஒற்றுமையுண் டாகுமென்றும், ஆகையால் ஹிந்தி பாஷையை எல்லோரும் பொதுப்பாஷையாக வழங்கவேண்டும் என்பது பற்றி முதலில் யோசிப்போம்.

இந்தியாவில் பல பாஷைகள் பேசுவதால் ஒற்றுமை யில்லை என்று சொல்லுவதற்கில்லை. இந்தியாவில் ஒற்றுமை யில்லாததற்குக் காரணம் பல சமயங்களும் பலவித ஜாதிப் பிரிவுகளும் இருப்பதுதான். இந்தியாவில் ஒரேவிதமான சமயமும் ஜாதிப் பிரிவில்லாமலும் இருந்தால் இந்தியாவில் ஒற்றுமையும் சகோதரத்துவமும் ஏற்பட்டுவிடும். இந்தியாவில் சைவம், வைணவம், ஸ்மார்த்தம், மத்வம், பௌத்தம், ஜெயினம், முகமதியம், கிறிஸ்துவம் முதலிய பல மதங்கள்

இருக்கின்றபடியால் நமது நாட்டில் ஒற்றுமை உண்டாக வில்லை. அதைப் போலவே இந்தியர்களில் பலபல ஜாதிப் பிரிவுகளும் தீண்டப்படாதவன், தொடப்படாதவன், பார்க்கப்படாதவன், உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்கிற கட்டுப்பாடுகளும் இருப்பதால்தான் ஒற்றுமையும் சகோதர உணர்ச்சியும் உண்டாகவில்லை. இந்த மத வித்தியாசங்களையும் ஜாதி வித்தியாசங்களையும் ஒழித்துவிட்டால் இந்தியாவைப் போல ஒற்றுமையுள்ள தேசத்தைக் காணமுடியாது. இதைச் செய்யாமல் ஹிந்தி பாஷையைப் படித்தால் ஒற்றுமை உண்டாகும், ஆகையால் ஹிந்தி படியுங்கள் என்று சொல்லுவது பாமர மக்களை ஏமாற்றும் சூழ்ச்சியல்லவா என்று கேட்கின்றோம்.

2. இந்தியா சுயராஜ்யம் பெற்றால் ஒரே மாதிரியாக அரசாட்சி நடைபெறுவதற்காக (அதாவது அரசியல் விஷயத்தை முன்னிட்டு) ஹிந்தி பொதுப் பாஷையாக யிருக்கவேண்டும் என்றும் ஆகையால் எல்லோரும் ஹிந்தி பாஷை படியுங்கள் என்றும் சொல்வதும் முழுத்தவறாகும். எப்படியென்றால் சொல்லுவோம். இப்போது அரசாங்க பாஷையாயிருக்கிறது இங்கிலீஷ் பாஷை. ஆனால் இங்கிலீஷ் பொது பாஷையல்ல. தேச ஜனங்களில் 100க்கு 90 பேர் படிக்கத் தெரியாதவர்கள். அதாவது இங்கிலீஷ் பாஷையே தெரியாதவர்கள். அப்படியிருந்தும் அரசாங்க காரியங்கள் முறையாகத்தான் நடைபெற்று வருகிறது. கிராமவாசிகள் எல்லோரும் இங்கிலீஷ் கற்றுக் கொண்டுதானா கோர்ட்டுகளில் வழக்காடுகிறார்கள்? இங்கிலீஷ் கற்றுக் கொண்டுதானா நிலம் காணி விற்பதும் வாங்குவதும் செய் கிறார்கள்? இல்லையே. அது போல இந்தியாவுக்குச் சுயராஜ்யம் கிடைத்து காங்கிரஸ் அரசாட்சி செய்வதாயிருந்து ஹிந்தி பாஷையே அரசாங்க பாஷையாயிருந்தாலும்கூட, ஹிந்தி பாஷையை எல்லோரும் படிக்க வேண்டும் என்பதும் அது இந்தியாவின் பொது பாஷையாயிருக்கவேண்டும் என்பதும் யோசனையற்ற காரியமாகும். இந்திய சுயராஜ்யத்தில் ஹிந்தி பாஷையில் விவகாரங்கள் நடப்பதாயிருந்தால் குமாஸ் தாக்களும் லிகிதர்களும் வேண்டும். குமாஸ்தாக்களும் லிகிதர் களும் ஹிந்தி படிக்கட்டும். அதாவது இப்போது இங்கிலீஷ் படித்தவர்களுக்குத்தான் கவர்ன்மெண்டு உத்தியோகம் கொடுப்பது போல ஹிந்தி படித்தவர்களுக்குத்தான் சுயராஜ்யத்தில் உத்தியோகம் கொடுக்கப்படும். அதற்காக ஊரிலிருக்கிறவர்களை எல்லாம் ஹிந்தி படியுங்கள் என்று சொல்வது அறிவுடைமையாகாது. தேசத்தில் ஜனங்கள்

எல்லோருமா சுயராஜ்யத்தில் கவர்ன்மெண்டு உத்தியோகம் செய்யப் போகிறார்கள்? ஆகையால் அரசாங்கத்திற்கு ஹிந்தி படிப்பு வேண்டும் என்பது பெரும் புரட்டாகும்.

3. ஹிந்தி பாஷை படிப்பதால் இந்தியருக்குப் பரந்த நோக்கமும் விசாலமான புத்தியும் உண்டாகாது. அதற்கு மாறாக குறுகிய நோக்கமும் மூடக்கொள்கைகளுந்தான் உண்டாகும். ஹிந்தி என்பது மட்டும் அல்ல, இந்தியாவில் வழங்கப்படும் பாஷைகள் எல்லாம் இப்படியே. இந்தியாவில் வழங்கும் இந்திய பாஷைகள் எல்லாம், தற்போதிருக்கும் நிலைமையில், பரந்த நோக்கமும் விரிந்த அறிவும் உண்டாக்கும் சக்தியுடையனவல்ல. ஆங்கிலம் போன்ற மேல்நாட்டு பாஷை களைப் படித்தால் பகுத்தறிவும் பரந்த நோக்கமும் விரிந்த அறிவும் ஏற்படுகிறது. ஆங்கிலம் படிக்காத வெறும் சுதேசி பண்டிதர்களைப் பாருங்கள். அதாவது, சாஸ்திரிகள், குருக்கள், பண்டிதர்கள், வித்துவான்கள் குறுகிய நோக்கமுடையவர்களா, பரந்த நோக்கமுடையவர்களா என்பதை வாசகர்களே யோசித்துப் பார்த்தால் விளங்கும். அவ்விதமே ஆங்கிலம் படித்தவர்கள் எப்படிப்பட்ட மனப்பான்மையுள்ளவர்கள் என்பதை யோசித்துப் பார்த்தாலும் இவ்விஷயம் விளங்கும். ஹிந்தி முதலிய இந்தியாவில் வழங்கும் பாஷைகள் எல்லாம் (தற்காலம் இருக்கும் நிலைமையில்) முற்போக்கான அறிவைத் தரக்கூடியன அல்ல.

இப்போது சுயராஜ்ய உணர்ச்சி ஏற்பட்டிருப்பதும் சுயராஜ்யம் கேட்பதும் சுதந்திர புத்தி பெற்றதும் ஹிந்திப் படிப்பால் ஏற்பட்டதா, இங்கிலீஷ் படிப்பால் ஏற்பட்டதா என்பதை யோசித்துப் பார்த்தால் விளங்கும். ஹிந்தி படித்திருந்தால் அரசன் விஷ்ணு அம்சமாய்க் கருதப்படுவான். இங்கிலீஷ் படித்ததால் சுயராஜ்யம் கேட்கமுடிந்தது. அன்றியும் லண்டனில் நடைபெற்ற வட்டமேஜை மகாநாட்டில் மேன்மை தங்கிய நவநகர் மகாராஜா, அவர்கள்

> She (Britain) has given India a unifying medium through the English language, the noble literature of which has helped to introduce a new spirit of liberty and self-respect.
>
> ("ஆங்கில பாஷையின் மூலம் பிரிட்டன் இந்தியாவுக்கு ஒற்றுமையையுண்டாக்கும் ஓர் சாதனத்தைக் கொடுத்தி ருக்கிறது. அப்பாஷா ஞானம் நமக்குள் சுதந்திரம், சுய மரியாதை முதலிய உணர்ச்சிகளை உண்டாக்க உதவி செய்யக் கூடியதாயிருக்கின்றது")

என்று பேசியிருப்பதைக் கவனித்தால் இங்கிலீஷ் பாஷையின் பிரயோசனம் நன்கு விளங்கும்.

4. ஹிந்தி பாஷையைவிட இங்கிலீஷ் பாஷையை சுலப மாகக் கற்றுக்கொள்ளக்கூடும். இங்கிலீஷ் 26 எழுத்துக்களைக் கொண்டது ஹிந்தியோ 300க்கு மேற்பட்ட எழுத்துக் களையுடையது. அன்றியும் தமிழர், தெலுங்கர், மலையாளி, கன்னடர், மராட்டியர், குஜராத்தியர், வங்காளி, ஒரியர், நேப்பாளி, ஹிந்தி பேசுவோர் ஆகிய எல்லா இந்தியர்களிலும் இங்கிலீஷ் படித்தவர் கொஞ்சம் பேராவது இருக்கிறார்கள். ஆகையால் இங்கிலீஷையே சுலபமாகக் கற்றுக்கொள்ள முடியும். ஹிந்தி பாஷையைப் புதிதாகக் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறதோடு அதனால் தகுந்த பலனும் கிடைக்காது.

5. ஆங்கில பாஷைதான் இந்தியரின் அபிவிருத்திக்கும் முன்னேற்றத்திற்கும் உதவியாகயிருக்கக்கூடியது. ஹிந்தி பாஷையைப் படித்தால் அதிகப் பிரயோஜனம் ஒன்றும் உண்டாகாது. அதற்கு மாறாக தீமைகள்தான் விளையும். இன்னும் ஒரு விஷயம். அதாவது, ஹிந்தி பாஷையைப் படித்தால் அது இந்தியாவில் மட்டும்தான் செல்லுபடியாகும். அதாவது ஹிந்தி பாஷையைப் படித்தவன் இந்தியாவில் மட்டுந்தான் சுற்றுப் பிரயாணம் செய்ய முடியும். இங்கிலீஷ் பாஷையோ உலக முழுவதும் செல்லுபடியாகும். இங்கிலீஷ் வழங்காத இடம் உலகத்திலேயேயில்லை. ஆகையால் இங்கிலீஷ் கற்றுக்கொண்டவன் உலக முழுவதும் பிரயாணம் செய்ய அனுகூலமாயிருக்கிறது. இந்த முறையில் பார்த்தாலுங் கூட ஹிந்தி பாஷையைப் படிப்பதைவிட இங்கிலீஷ் பாஷை படிப்பதுதான் லாபகரமானதும் உபயோகமுள்ளதும் ஆகும் என்பது விளங்குகிறது.

6. ஹிந்தி பாஷையைப் படித்தால் இந்தியருக்கு இயற்கை யாயுள்ள குறுகிய எண்ணங்களும் மூடபழக்க வழக்கங்களும் ஜாதி மத வித்தியாசங்களும் ஒருபோதும் ஒழியவே ஒழியாது. அதற்கு மாறாக அத்தீய குணங்கள் ஆழமாக வேரூன்றிவிடும். ஹிந்தி பாஷை மட்டும் அல்ல, இந்தியாவில் வழங்கும் இந்திய பாஷைகளுக்கு எல்லாம் இத்தகைய குணங்களுண்டு. ஆனால் இந்தியர்கள் இங்கிலீஷ் பாஷையைக் கற்றுக்கொண்டால் பரந்த நோக்கமும் விசாலமான அறிவும் பகுத்தறியும் சக்தியும் அடைய முடியும். ஹிந்தி பாஷையில் சயன்ஸ் என்னும் சாஸ்திரங்கள் கிடையாது. எப்படி தமிழ், தெலுங்கு, கன்னடம், மராட்டி முதலிய பாஷைகளில் *பாரதம், ராமாயணம்* புராணங்களும் குப்பைக் கூளங்களும் நிறைந்திருக்கின்றனவோ அவ்விதமாகத்தான் ஹிந்தி பாஷையிலும் *பாரதம், ராமாயணம்* புராணங்களும் குப்பைக் கூளங்களும் நிறைந்திருக்கின்றன. ஆகவே ஹிந்தி பாஷையைப் படித்துக்கொண்டால் *பாரத*

இராமாயண புராணக் கதைகளைத்தான் படிக்க முடியு மேயல்லாமல் சயன்ஸ் என்னும் சாஸ்திரங்களைப் படிக்க முடியாது. ஆகையால் ஹிந்தி படிப்பதைவிட ஆங்கிலம் படிப்பதுதான் பன்மடங்கு சிறந்தது.

7. மேல் நாட்டு சயன்ஸ் என்னும் சாஸ்திரங்களை ஹிந்தி பாஷையில் மொழிபெயர்த்துக் கொள்ளலாம் என்று சிலர் சமாதானம் சொல்லுவார்கள். மேல் நாட்டு சாஸ்திரங்களை ஹிந்தியில் மொழிபெயர்த்துக் கொண்டு ஹிந்தி பாஷையில் படிப்பதைவிட ஆங்கில பாஷையிலேயே படித்துக் கொள்வது மிகவும் நலமாகும். சாமிக்கும் மனிதனுக்கும் இடையில் பூசாரிகள் தரகர்களாயிருப்பது போல, மேல் நாட்டு சாஸ்திரங் களுக்கும் இந்தியர்களுக்கும் இடையில் ஹிந்தி பாஷை ஏன் இருக்கவேண்டும்? ஆகவே ஹிந்தி பாஷை என்பது அனாவசிய மானதும் அவசியமில்லாததும் அர்த்தமற்றதுமாகும்.

8. இந்திய சுயராஜியத்தில் ஹிந்தி பாஷை, அரசாங்க பாஷையாயிருந்தாலுங்கூட (அப்படி இருக்கமுடியாது, இருக்கவும் போவதில்லை) ஆங்கிலேயரின் தொடர்பு நம்மைவிட்டுப் போய்விடாது. இந்திய சுயராஜியத்தில் இப் போதைப் போலவே ஆங்கிலேயர் இந்தியாவில் இருந்தே தீர்வார்கள். இங்கிலாந்துக்கும், இந்தியாவுக்கும் எப்பொழுதும் தொடர்பு இருந்து கொண்டேயிருக்கும். இந்திய சுய ஆட்சியில் ஆங்கிலேயர் மூட்டை முடிச்சுகளுடன் இங்கிலாந்துக்குப் போய்விடுவார்கள் என்பது வெறுங்கனவு. ஆகையால் இந்தியருக்கு இப்பொழுதைப் போலவே அப்பொழுதும் இங்கிலீஷ் தெரிந்திருக்கவேண்டியது அவசியமாகிறது. அப்பொழுது காங்கிரஸ் கருத்துப்படி மூன்று பாஷை கற்க வேண்டியிருக்கிறது. அதாவது, தாய்பாஷை ஒன்று, அரசாங்க பாஷை என்று சொல்லப்படுகிற ஹிந்தி பாஷை ஒன்று, இங்கிலீஷ் பாஷை ஒன்று ஆக மூன்று பாஷை படிக்க வேண்டியிருக்கும். இப்பொழுது தாய் பாஷை, இங்கிலீஷ் பாஷை இரண்டையும் படிப்பதற்கே மாணவர்களுடைய வாழ்நாளில் பல வருஷங்கள் செலவாகிறதோடு மூளையை உழைப்பதன் மூலம் தேகபலத்தையும் இழந்துவிடுகிறார்கள். இதற்கே இப்படியிருக்க மூன்று பாஷைகளைப் படிக்க நேரிட்டால் என்ன ஆகும் என்பதை யோசித்துப்பாருங்கள். ஆகையால், இவ்விதக் கஷ்டங்கள் நேராதபடி இங்கிலீஷ் பாஷையையே இந்தியாவின் பொதுப் பாஷையாக வைத்து விடுவது பலவிதத்திலும் நன்மை பயக்கும்.

9. 'இங்கிலீஷ் அன்னிய தேசத்துப் பாஷை. ஆகையால் அது இந்தியாவின் பொதுப் பாஷையாயிருக்கக்கூடாது' என்று சிலர்

ஆக்ஷேபிக்கிறார்கள். இந்த ஆக்ஷேபனையும், ஆலோசனை யற்றதாகும். இங்கிலீஷ் பாஷை அன்னிய பாஷையா யிருந்தாலும் உலகத்தில் பல தேசங்கள் அப்பாஷையைப் பேசிவருகின்றன. கனடா தேசம், யுனைடெட் ஸ்டேட்ஸ், இங்கிலாந்து, ஆஸ்ட்ரேலியா கண்டம் இன்னும் சிற்சில இடங்களிலும் இங்கிலீஷ் பேசப்படுகிறது. இது அல்லாமல் உலகத்தின் வடகோடி முதல் தென்கோடி வரையிலும், மேல்கோடி முதல் கீழ்கோடி வரையிலும் இங்கிலீஷ் பாஷை தெரிந்தவர்கள் இருக்கிறார்கள். அன்றியும் துருக்கி தேசம் இப்போது தனது தாய் எழுத்தை உதறிவிட்டு இங்கிலீஷ் எழுத்துக்கள் இருபத்தாறையும் அப்படியே கடன் வாங்கிக் கொண்டிருக்கிறது. சைனாவிலும், ஜப்பானிலும் இங்கிலீஷ் எழுத்துக்களையே உபயோகிக்க வேண்டும் என்று சில அறிவாளிகள் முயற்சி செய்து வருவதோடு அந்தக் கட்சி பலமடைந்தும் வருகிறது. இவ்விதம் உலகமே மாறுதலடைந்து இங்கிலீஷ் மயமாகவும், இங்கிலீஷ் சார்பாகவும் இருக்க, இந்தியாவின் பொதுப் பாஷையாக இங்கிலீஷ் பாஷையை அமைக்காமல் பலவித பிரதிகூலங்களையுடையதும் ஒன்றுக்கும் உதவாததுமான ஹிந்தி பாஷையை இந்தியாவின் பொதுப் பாஷையாகச் செய்வது இந்தியாவின் அழிவுக்கு அஸ்திவாரம் போட்டதாகும். இதனால், இந்தியாவின் முன்னேற்றத்திற்கும் அபிவிருத்திக்கும் இங்கிலீஷ் பொதுப் பாஷையாயிருக்க வேண்டுமா அல்லது ஹிந்தி பொதுப் பாஷையாயிருக்க வேண்டுமா என்பதை வாசகர்களே யோசிக்க வேண்டும்.

10. இந்த விஷயத்திலும் சிலர் குதர்க்கம் பேசுகிறார்கள். அதாவது, மேல்நாட்டு பாஷைகளாகிய பிரெஞ்சு, ஜெர்மனி, இத்தாலி முதலிய பாஷைகளிலும் சயன்ஸ் என்னும் நவீன சாஸ்திரங்கள் இருக்கின்றன. அப்படியிருக்க அப்பாஷைகளில் ஒன்றை இந்தியாவின் பொது பாஷையாக வைக்கலாமே, இங்கிலீஷ் பாஷைதான் பொது பாஷையாக ஏன் வைக்க வேண்டும் என்று குதர்க்கம் பேசுகிறார்கள். இதற்கும் காரணம் சொல்ல வேண்டியது அவசியம்தான். மேல் நாட்டு பாஷைகள் எல்லாம் சயன்ஸ் என்னும் நவீன சாஸ்திரங் களையுடையதுதான். ஆனால், இங்கிலீஷ்காரர்கள், மற்ற மேல்நாட்டாரைவிட அதிகமாக இங்கிலீஷ் பாஷையை அபிவிருத்தி செய்திருக்கிறார்கள். அன்றியும் மேற்காட்டியபடி உலகத்தில் இங்கிலீஷ் பாஷை செல்வாக்கடைந்திருப் பதுபோல வேறு பாஷைகள் செல்வாக்கடையவில்லை. இன்னும் இங்கிலீஷ்காரரின் தொடர்பு நமக்கு சுமார் 150 வருஷமாக இருந்து வருகிறது. மேல் நாட்டு பாஷைகளைப்

படித்த இந்தியர்களில் இங்கிலீஷ் பாஷையைப் படித்தவர்கள் தான் அதிகமாயிருக்கிறார்கள். இக்காரணங்களாலும் இன்னும் சில காரணங்களைக் கொண்டும் இந்தியாவின் பொதுப் பாஷை இங்கிலீஷ் பாஷையாக இருந்தால் இந்தியா நன்மைபெறக் கூடும். ஹிந்தி பாஷை தேச பாஷையாக இருந்தால் அதனால் தொல்லைகளும் அசௌகரியங்களும் தீமைகளும் உண்டாகும் என்பது உறுதி.

11. ஹிந்தி அரசியல் பாஷையாயிருந்தால் அரசியல் விஷயங்கள் சரிவர நடைபெற முடியாது. ஏனென்றால், ஹிந்தியில் டைப்ரைட்டர் மிஷின், சுருக்கெழுத்து முறை முதலியன கிடையாது. அவைகளையெல்லாம் இனிமேல்தாம் புதிதாக உண்டாக்கவேண்டும். அதற்கும் வெள்ளைக்காரன் தயவு வேண்டியிருக்கிறது. இன்னும், அரசியல் விவகாரத்துக்கு வேண்டிய வார்த்தைகள் கிடையாது. அந்த வார்த்தைகளையும் இனிமேல்தான் கண்டுபிடிக்க வேண்டும். இங்கிலீஷிலோ டைப்ரைட்டர் மிஷின்களும், ஷார்ட்ஹேண்ட் (சுருக் கெழுத்து) எழுத்தும், அரசியல் விவகாரங்களை நன்கு விளக்குவதற்குத் தகுந்த வார்த்தைகளும் அமைந்திருக்கின்றன. இத்தகைய காரணங்களாலும் மேலே காட்டிய காரணங் களைக் கொண்டும் ஹிந்தி பாஷை இந்தியாவின் பொதுப் பாஷையாயிருக்க வேண்டுமா அல்லது இங்கிலீஷ் பொதுப் பாஷையாயிருக்க வேண்டுமா என்பதைத் தாங்களாகவே யோசித்து முடிவு சொல்லும்படி வாசகர்களைக் கேட்டுக் கொள்கிறேன். கடைசியாக ஹிந்தி பாஷை என்பது காங்கிரஸ் செய்யும் அனேக புரட்டுகளில் ஒன்று என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*குடிஅரசு*, ஆகஸ்ட் 30, 1931

# இந்துக்கள் பசுவைத் தெய்வமாகக் கொண்டாடுவது ஏன்?

இந்துக்கள் பசுவைத் தெய்வமாகக் கொண்டாடு கிறார்கள், பஞ்சகவ்வியம் என்பதில் பசுவின் மலமாகிய சாணத்தையும், மூத்திரமாகிய கோமயத் (கோமூத்திரம்) தையும் கலந்து சாப்பிடுகிறார்கள், பசுமூத்திரத்தை கையில் பிடித்து தலைமேல் தெளித்துக் கொள்ளுகிறார்கள், பசுவைக் குளிப் பாட்டி மஞ்சள் குங்குமம் பூசி காலில் விழுந்து கும்பிடு கிறார்கள். மாமிசம் சாப்பிடுகிற இந்துக்கள்கூட, பசு அல்லது மாட்டு மாமிசத்தைச் சாப்பிடக்கூடாதென்றும் அது மகா பாவம் என்றும் சொல்லுகிறார்கள். பசுவுக்கு, இந்துக்கள் இவ்வளவு மகத்துவம் கொடுக்க வேண்டியதன் காரணம் என்ன? இந்தியாவைப் பற்றி சிலேட்டர் (Slater) என்பவர் ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். அதில் இவ்விஷயத்தை எழுதியிருக் கிறார். அது வருமாறு:

மிகப் பழைய காலத்தில் இந்தியாவில் மாடு (பசு, எருது) கிடையாது. அவை, இந்தியாவுக்கு வெளியேயுள்ள அயல்நாடு களில் இருந்து இந்தியாவுக்குக் கொண்டு வரப்பட்டன. அப்படி இந்தியாவுக்குக் கொண்டு வரப்பட்ட மாடுகள் அப்பொழுது மிகச் சிறு தொகையாயிருந்தபடியால், மாடுகளின் தொகையை மிகுதிப்படுத்துவதற்காக மாட்டைக் கொல்லக்கூடாது என்று சட்டம் செய்தார்கள். அந்தச் சட்டத்தை தெய்வ சம்பந்தமாகவும் சமயம் சம்பந்தமாகவும் செய்து விட்டால் ஒருவரும் மாட்டைக் கொல்ல மாட்டார்கள் என்று கருதி மாடு, தெய்வ சம்பந்தமானதென்றும் அதைக் கொல்லுவது மகா பாவம் என்றும் எழுதி வைத்தார்கள் என்று இவ்வித கருத்துப் படும்படி அவர் அப்புத்தகத்தில் எழுதியிருக்கிறார்.

ஆராய்ச்சிக்கு இது பொருத்தமாகத்தான் தோன்றுகிறது. எல்லா ஊர்களிலும், முற்காலத்தில் எல்லாவித மிருகம், பறவை, செடிகள் இருந்ததாகத் தெரியவில்லை. ஆதிகாலத்தில் அதாவது ஐரோப்பியர் போவதற்கு முன், அமெரிக்கா கண்டத்தில் குதிரைகளே கிடையாது. ஆதிகாலத்தில் இந்தியா விலுங்கூடக் குதிரைகள் கிடையாது. குதிரை இந்தியாவுக்குச்

சொந்தமான மிருகம் அல்ல. அவ்விதமே பசுவும் ஆடும் ஆஸ்ட்ரேலியா கண்டத்தில் ஆதிகாலத்தில் கிடையாது. இந்தியாவை எடுத்துக் கொண்டால், குதிரை, ஒட்டகை, வான்கோழி, ஜின்கோழி முதலிய பிராணிகள், இந்தியாவில் பண்டைக்காலத்தில் கிடையாது. இப்பொழுது விறகுக்காக உபயோகப்படும் சவுக்குமரம், குட்டிப்பலாமரம், டிவிடிவி மரம், கொய்யாமரம், சீத்தாப்பழம் (சீதப்பழம்) மரம், அன்னாசி, பப்பளி, ஆரஞ்சி, நிலக்கடலை, இங்கிலீஷ் காய்கறிகள், மாவள்ளிக் கிழங்கு முதலியவைகளெல்லாம், அந்நிய தேசத்திலிருந்து நூதனமாக நமது நாட்டில் கொண்டு வரப்பட்டவை. இப்பொழுது நாம் தினந்தோரும் சாப்பாட்டில் உபயோகித்து வருகிற மிளகாயும் உருளைக் கிழங்கும் அன்னிய நாட்டுப் பொருள்களே தவிர இந்தியாவின் சொந்தப் பொருள் அல்ல. சில நூற்றாண்டுகளுக்கு முன் இருந்த நமது மூதாதை களுக்கு இந்தப் பொருள்களைப்பற்றி ஒன்றும் தெரியாது. சரித்திரத்தையொட்டி ஆராய்ச்சி செய்வோருக்கு இப்பொருள்கள் எல்லாம் அயல் நாட்டுப் பொருள்கள் என்றும் பின்னர்தான் நமது நாட்டில் அவைகள் கொண்டு வரப்பட்டன என்றும் தெள்ளிதில் விளங்கும்.

இந்தப் பொருள்களைப் போலவே மாடு (பசுவும் எருதும்) அயல் நாட்டிற்குச் சொந்தமான மிருகமாயிருந்திருக்கலாம். பிறகு இந்தியாவில் கொண்டு வரப்பட்டிருக்கலாம். பாலும், அதன் மூலமாய் தயிர் நெய் மோர்கள் கிடைப்பதால் பசு அதிக உபயோகமுள்ள மிருகம் என்று கண்ட அக்காலத்து ஜனங்கள் பசுவைக் கொல்லக்கூடாது என்பதற்காக பசுவின் உடம்பில் தெய்வங்கள் வாழ்கின்றன என்றும் பசுவைக் கும்பிடவேண்டு மென்றும், பசுவைக் கொல்வது பாவம் என்றும், பசு மாமிசம் சாப்பிடுவது மகாபாவம் என்றும் எழுதிவைத்தனர்.

ஆனால், எருமை இந்தியாவின் சொந்த மிருகம் என்று நினைக்க இடமுண்டு. எப்படி என்றால், காளி கோயில்களில் எருமைகளைப் பலி கொடுத்து வந்தார்கள்; வருகிறார்கள். ஆனால், பசுவைப் பலி கொடுப்பதில்லை. இதிலிருந்து என்ன தெரிகிறதென்றால், எருமைகள் இந்தியாவின் சொந்த மிருகமாய் ஏராளமாயிருந்தபடியால் அதைக் கொல்வதைத் தடுக்க சட்டம் செய்யவில்லை என்றும், பசு இந்தியாவில் நூதனமாகக் கொண்டு வரப்பட்ட அயல் நாட்டு மிருகம் ஆகையால், அதை விருத்தி செய்வதை நோக்கமாகக் கொண்டு பசுவைக் கொல்லக்கூடாது என்று பண்டைக் காலத்தில் சட்டம் செய்திருக்க வேண்டும் என்றும் தோன்றுகிறது.

இந்தச் சட்டம் ஏற்படுத்தியதனால்தான், மாட்டு மாமிசம் சாப்பிட ஆசைப்பட்ட பார்ப்பனர், யாகம் என்று சொல்லி சாமிகளின் பேரால் மாட்டு மாமிசம் புசிக்கும் வழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டார்கள் போலும்.

மாட்டின் அபிவிருத்தியை யுத்தேசித்து செய்யப்பட்ட சட்டம் நாளடைவில் எருதை சிவன் வாகனமாகவும் பசுவைக் காமதேனாகவும், தெய்வப் பிறப்பாகவும் ஜனங்களை நம்பும் படிச் செய்து விட்டதோடு, எருதின் சானத்தைச் சுட்டு நெற்றியில் பூசிக்கொள்ளவும் பசுவின் சாணத்தையும் மூத்திரத்தையும் நெய் பாலுடன் கலந்து நக்கிக் குடிக்கவும் ஏற்பட்டு விட்டது. அன்றியும், பசுவைத் தெய்வமாகக் கொண்டாடும் இந்த மூட நம்பிக்கைதான் இந்து முஸ்லீம் சச்சரவை பல இடங்களில் உண்டாக்குகிறது.

இப்போது, ஆரிய சமாஜத்தைச் சேர்ந்த ஒருவர், பசுவைக் கொல்வது ஆட்டைக் கொல்வதுபோல் பாவிக்க வேண்டும் என்றும் பசுவைக் கொல்வது மத சம்பந்தமானதாகக் கருதக்கூடாதென்றும் சொல்லுகிறார். அவருக்கு இப்போதாவது பகுத்தறிவு உதயமாயிருப்பதற்காக மகிழ்கிறோம்.

*குடிஅரசு,* ஏப்ரல் – 24, 1932

# மேல்நாட்டின் முன்னேற்றமும் கீழ் நாட்டின் பின்னேற்றமும்

### தலைவிதி, மறுபிறப்பு என்பவைகளால் நேரிடும் தீமைகள்

மேல்நாடுகளின் மேன்மையும், கீழ்நாடுகளின் தாழ்மையும் உலகமறிந்த விஷயந்தான். ஆனால், மேல்நாடுகள் முன்னேற்ற மடைவதின் காரணமும் என்ன? இதன் ரகசியந்தான் யாது?

மேல்நாட்டின் நாகரீக வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும், கீழ்நாட்டின் பிற்போக்குக்கும் காரணம் அவ்வத்தேசங்களில் உள்ள மக்களின் எண்ணமும், நம்பிக்கையுந்தான். அதாவது, மேல்நாட்டு மக்களுக்கு முன்னேற்றமடைய வேண்டும், மேன் மேலும் உயர்நிலையடைய வேண்டும் என்னும் எண்ணம் குடி கொண்டிருக்கிறது. கீழ்நாட்டு மக்களுக்கோ, மனிதவாழ்வில் உயர்நிலையடைய வேண்டும் என்னும் எண்ணம் கிடையாது.

இன்னும் வெளிப்படையாகச் சொல்லுவதென்றால், மேல் நாட்டு ஜனங்களின் மதக் கொள்கையானது அவர்களை மேன் மேலும் உயர்நிலையடையவும், முன்னேற்றத்திற்கான முயற்சி களைச் செய்யவும் காரணமாக இருக்கிறது; கீழ்நாட்டு ஜனங்களின் மதக்கொள்கைகள், மக்களை மேன்மேலும் உயர் நிலையடையவும் முன்னேற முயற்சி செய்யவும் விடாமல் அவர்களைச் சோம்பேறிகளாக்கிவிடுகின்றன.

அந்த மதக் கொள்கைதான் என்னவென்றால், அதுதான் மறுபிறப்பு, மறுபிறப்பு என்னும் பூச்சாண்டியாகும். மேல்நாட்டு மதங்களாகிய கிறிஸ்து மதமும், முகமதிய மதமும் மறுபிறப்பு என்பதைச் சொல்லவே இல்லை. புண்ணியம், பாவம் இரண்டு மாத்திரம் உண்டு. புண்ணியம் செய்தவன் மோக்ஷம் போவான், பாவம் செய்தவன் நரகம் அடைவான் என்று மாத்திரம் அந்த மதங்கள் சொல்கின்றன. ஆனால் மனிதன் செத்த பிறகு மறுபடியும் பிறக்கிறான் என்பதை அந்த மதங்கள் அந்த நாட்டு மக்களுக்குச் சொல்லவில்லை. ஆகையால், மேல்நாட்டு ஜனங்களுக்கு இப்போது உள்ள ஒரே பிறப்பில் தான் நம்பிக்கை உண்டு. செத்த பிறகு மறுபடியும் பிறக்கப் போகிறோம் என்கிற நம்பிக்கை அவர்களுக்குக் கிடையாது.

இந்த நம்பிக்கையின் பயனாக, அத்தேசத்து ஜனங்கள் இந்தப் பிறப்பிலேயே, இந்த உலகத்திலேயே மேன்மையும் உயர்வும் அடைய விரும்புகிறார்கள். அதற்காக அவர்கள் முயற்சியுடன் உழைக்கிறார்கள். அதன் பயனாக அவர்கள் மேன்மையும் உயர்வும் அடைகிறார்கள்.

ஆனால், கீழ்நாட்டு மதங்கள் கீழ்நாட்டு ஜனங்களுக்கு என்ன போதிக்கின்றன? புண்ணிய பாவங்களைப் போதிக்கிற தோடு, மறுபிறப்பையும், தலைவிதியையும் ஜனங்களுக்குப் போதிக்கின்றன. இந்த தலைவிதியும் மறுபிறப்பு நம்பிக்கையும் நமது நாட்டு ஜனங்கள் உடம்பில் ஊறிவிட்டன. இந்த நம்பிக்கை இன்று நேற்று உண்டானதல்ல. ஆயிரக்கணக்கான வருஷங்களாக இந்த நம்பிக்கை இந்த தேசத்தில் உண்டு. இந்த நாட்டில், கர்ப்பத்தில் இருக்கும் சிசுவும்கூட தலைவிதியையும் மறுபிறப்பையும் அறிந்திருக்கிறது. இந்த தலைவிதி, மறுபிறப்பு என்னும் கொள்கைகள்தான் நமது மக்களை முன்னேற்ற மடைய ஒட்டாமலும், உயர்வடைய முயற்சி செய்ய ஒட்டாமலும் அழுத்திக் கொண்டிருக்கிறது.

நமது நாட்டில் ஏழையாகவும் தொழிலாளியாகவும், தாழ்த்தப்பட்டவர்களாகவும் உள்ள எல்லா ஜனங்களும் என்ன நினைக்கின்றார்கள்? தாங்கள் முன் ஜென்மத்தில் செய்த பாவத்தினால் இந்த ஜென்மத்தில் இவ்வித ஏழை ஜென்மம் எடுத்திருப்போம், அடுத்த ஜென்மத்தில் சுகம் அடையலாம் என்றும் நினைத்து, தான் கஷ்டப்பட்டு சம்பாதித்த சொற்ப பணத்தையும் பார்பானுக்குத் தானம் செய்வதிலும், கோயில் குளங்களுக்குப் போய் புண்ணியம் சம்பாதிப்பதிலும் செலவிட்டு நித்திய தரித்திரராகத் திரிகிறார்கள் உண்ண உணவும் உடுக்க உடையும் இருக்க இடமும் இல்லாத நித்திய தரித்திரர்களாக இருந்தாலும், தலைவிதியிலும் இனிப் பிறக்கப் போகிற ஜென்மத்திலும் முழு நம்பிக்கை உடையவராயிருக்கிற படியால், இந்தப் பிறப்பில் கௌரவமாகவும் சௌக்கிய மாகவும் சுயமரியாதையுடனும் வாழ்வதற்கு முயற்சி செய்யாமல் அடுத்த பிறப்புக்குப் புண்ணியம் தேடிக்கொள் வதில் காலத்தையும் பொருளையும் வீண் விரயம் செய்யும் பேதை ஜனங்கள் எப்பொழுதுதான் உருப்படப் போகி றார்கள்? சுயநலக்காரர்களாகிய ஒருசிறு கூட்டத்தார் தங்கள் சொந்த நன்மைக்காகத் தலைவிதியையும் மறுபிறப்பையும் ஏற்படுத்தி மதக் கொள்கையாகச் செய்துவிட்ட தந்திரம் இது என்பதை உணர்ந்தால் இவர்கள் அடுத்த ஜென்மத்துக்காக இந்த ஜென்மத்தைப் பாழாக்குவார்களா என்று கேட்கிறேன்.

இவ்விதம் கீழ்நாட்டு மதங்கள் தலைவிதியையும் மறு பிறப்பையும் மக்களுக்குப் போதிக்கிறபடியால் கீழ்நாட்டு மக்கள் இந்தப் பிறப்பில் முயற்சி செய்து மேன்மையடைய மாட்டாமல் வாழ்நாளை வீணாகக் கடத்துகிறார்கள், மேல் நாட்டு மதங்கள், மறுஜென்மம் இல்லை என்றும் இந்த ஒரு பிறப்பு மட்டுந்தான் உண்டு என்றும் போதிக்கிறபடியால், மேல்நாட்டு ஜனங்கள் இந்த ஜென்மத்திலேயே உயர்வும் மேன்மையும் அடைய முயற்சி செய்து அதன் பயனாக செல்வச் சிறப்புடன் வாழ்கிறார்கள். ஆகையால் மேல்நாடு முன்னேற்ற மடைந்து விளங்குகிறது. கீழ்நாட்டு ஜனங்கள் எப்பொழுதும் அடுத்த ஜென்மத்திலே தான் மேன்மையாக வாழ விரும்பு கிறபடியால் கீழ்நாடு ஆதிகாலம் முதல் தாழ்ந்த நிலையிலேயே இருந்து வருகிறது. அடுத்த பிறப்பு, மறுஜென்மம் என்னும் எண்ணம் இருக்கிற வரையில் ஒருபோதும் முன்னேற்ற மடையவும் முடியாது.

நமது தேசம் உயர்நிலையடைந்து முன்னேற வேண்டு மானால், தலைவிதி என்பது மறுஜென்மம் என்பதுமான மூடநம்பிக்கைகள் ஒழிய வேண்டும். தலைவிதி நம்பிக்கையும் மறுஜென்ம நம்பிக்கையும் ஒழிய வேண்டுமானால் அவை களைப் போதிக்கும் இந்து மதம் அழிய வேண்டும்.

இந்திய மக்களை அடிமைப்படுத்தி வைத்திருப்பது மூட நம்பிக்கையும் மூட கொள்கைகளுமே. இந்த மூடநம்பிக்கைகள் ஒழிந்து விடுமானால் நமது தேசம் விடுதலையடையும்; முன்னேற்றமடையும்; சந்தோஷமாக வாழும்.

*குடி அரசு*, ஜனவரி – 1, 1933

# ஸ்ரீமதிகள் ருக்மணி தேவி, பால சரஸ்வதி

ஸ்ரீமதி பால சரஸ்வதி அம்மாளும், ஸ்ரீமதி ருக்மணி தேவியும் பரத நாட்டியத்தைப் பொது ஜனங்களுக்கு முன்பாக நடித்துக் காட்டுகிறார்கள். இக்கலை சம்பந்தமாக இவ்விருவரி டத்திலும் நான் கண்ட குணதோஷங்களை எனக்குத் தெரிந்த வரையில் வெளியிட விரும்புகிறேன். காய்தல் உவத்தல் இன்றி நடு நிலைமையுடனும் நல்லெண்ணத்தோடும் எழுதுகிறே னாதலின் ஒருவரைப் புகழவோ மற்றவரை யிகழவோ நான் துணியவில்லை.

ஸ்ரீமதி ருக்மணி தேவி அம்மாள் மேல்நாட்டு நடனங் களில் தேர்ந்த நிபுணரென்பது உலகறிந்த உண்மை. அந்த அம்மையாரிடம் உடல் அமைப்பும் ஸ்தூல சரீரமாயிராமல் ஒற்றை நாடியாய் இருப்பது அவருடைய நாட்டிய அபிநயத்துக்குப் பொருத்தமாயிருக்கிறது. ஆனால், பரத நாட்டியம் சம்பந்தப்பட்டவரையில் உடுப்பு முதலிய அலங்காரங்கள் மிகப் பொருத்தமாகவும், அமைப்பாகவும் இருக்கிறதோடு நடனமேடையில் தோன்றும் போது கடைசி வரையில் ஒரே உடுப்பை அணியாமல் இடையிடையே வேறு உடுப்புகளை மாற்றிக் கொள்வது ஒருவித உணர்ச்சியையும் கவர்ச்சியையும் கொடுக்கிறது. இந்த முறையை ஏனைய நடிகர்களும் அனுசரிப்பது நலமாயிருக்கும். இரண்டாவதாக ருக்மணி தேவி நடிக்கும் மேடையின் அமைப்பு மேல்நாட்டு மேடைகளின் அமைப்பைப் பின்பற்றியதாயிருக்கிறதும் நாட்டியக் கலையை நடிக்கும்போது ஒருவிதக் கவர்ச்சியை உண்டாக்குகிறது. மூன்றாவதாக நாட்டிய மேடைமீது, நாட்டியத்திற்குத் தகுந்தபடி அவ்வப்போது விளக்குகளை அமைப்பது இன்னும் அதிகமான கவர்ச்சியை உண்டாக்கு கிறது. இந்த முறையை ஏனைய பரத நாட்டிய நடிகர்களும் அனுசரித்தால் மிக்க சீர்திருத்தமுள்ளதாயிருக்கும். கடைசி யாக, ருக்மணி தேவியின் நடனத்தில், அவர் மேடைமீது என்னென்ன நடிக்கப் போகிறாரோ அந்தப் பாட்டுகளை நிகழ்ச்சிக் குறிப்பாக அச்சிட்டுக் கொடுப்பது போற்றத்தக்கது.

இந்த முறையையும் ஏனைய பரத நாட்டிய நடிகர்கள் அனுசரிக்கும்படி விரும்புகிறேன். ஆனால், ஸ்ரீமதி ருக்மணி தேவியின் பரத நாட்டியத்தில் நான் கண்ட ஒரு பெருங் குறையைச் சொல்லாமலிருக்க முடியவில்லை. அதென்ன வென்றால், முதலில் இருந்து கடைசி வரையில் அவருடைய முகபாவம் புன்முறுவல் பூத்த நகை முகமாகவே விளங்குகிறது. இது பரத நாட்டியத்திற்குப் பெருங் குறைவாகும். இரக்கச் சுவை, கோபச்சுவை, அவலச்சுவை, மகிழ்ச்சிச்சுவை முதலிய எண்வகை உணர்ச்சிகளையும் நடிப்புக்கு ஏற்ப முகத்தில் அமைத்துக் காட்டுவது பரத நாட்டியத்திற்கு இன்றியமை யாதது. இச்சுவைகளை ஸ்ரீமதி ருக்மணி தேவியின் முக பாவத்தில் நான் காணவில்லை என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன். இந்த ஒரு குறைபாடு மட்டும் இல்லாவிட்டால் அந்த அம்மாளின் பரத நாட்டியம் உலகத்தி லேயே சிறப்புற்றதாக விளங்கும்.

இனி ஸ்ரீமதி பாலசரஸ்வதி அம்மாளின் பரத நாட்டி யத்தைப் பற்றி நான் அறிந்த வரையில் எழுதுகிறேன். இந்த அம்மாள் நடன மேடையின் அமைப்பையும் மேடைமீதுள்ள விளக்குகளின் அமைப்பையும் மேல் நாட்டு முறைப்படி திருத்திக்கொள்ள வேண்டும். இரண்டாவதாக, தான் நடிக்கப் போகிற நாட்டியத்தின் கருத்தை நிகழ்ச்சிக்குறிப்பு மூலம் அச்சிட்டு முன்னதாகவே காட்சியாளருக்குக் கொடுக்க வேண்டும். நாட்டியத்தின் மத்தியில் இரண்டொரு முறை உடை களை மாற்றிக் கொள்வதும் சிறப்புத்தரும். இந்தச் சொற்பக் குறைபாடுகளைத் தவிர இந்த அம்மாளிடம் வேறு குறை பாடுகளை நான் காணவில்லை. ஆனால், இந்த அம்மாளிடம் நான் கண்ட சிறப்பைச் சொல்லாமலிருக்க முடியவில்லை. அதென்னவென்றால், நாட்டியம் நடிக்கும்போது தாம் நடிக்கிற குறிப்புக் கேற்பவே முகபாவமும் அடிக்கடி மாறுவதுதான். இது பரத நாட்டியத்திற்குச் சிறந்த அமைப்பு ஆகும். சந்தோஷம், துக்கம், ஆச்சரியம், வெறுப்பு முதலிய பாவங் களை நடிப்புக்கேற்ப முகத்தில் பொருத்திக் காட்டுவதில் இந்த அம்மாள் மிகத் தேர்ந்தவராயிருக்கிறார்.

ஸ்ரீமதி ருக்மணி தேவியும் ஸ்ரீமதி பால சரஸ்வதியும் மேற்சொல்லிய குறைபாடுகளை அவரவர்கள் நீக்கிக் கொண்டு நடிப்பார்களானால் பரத நாட்டியக் கலையில் இவ்விருவரும் தமிழ் நாட்டின் - ஏன்? இந்தியாவின் இரு கண்மணிகளாக விளங்குவார்கள் என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம்.

*ஊழியன்,* **24-4-1936**

# இதுதானா ஜனநாயக ஆட்சி?

ஜனநாயகம், ஜனநாயகம் என்னும் பேச்சு எங்கும் பேசப்படுகிறது பத்திரிகைகளிலும் மேடைகளிலும் எழுதியும் பேசியும் வருகிறார்கள். ஆனால் செயலில் ஜனநாயகத்தைக் காணோம். வெற்றுப் பேச்சும் வெறும் எழுத்துமாகத்தான் இருக்கிறது. நமது நாட்டு ஜனநாயகத்தின் இலட்சணம் இது.

இந்தியா வொழிந்த மற்றச் சுதந்தர நாடுகளில், ஜனநாயகம் மேடைப் பேச்சிலும் ஏட்டுச் சுவடியிலும் மட்டும் அல்ல. செயலிலேயும் நடைமுறையிலேயும் இருந்து வருகிறது.

ஜனநாயக ஆட்சி என்றால் என்ன? மக்கள் எல்லோருக்கும் அரசாட்சியில் பங்கு இருக்கவேண்டும். அதுதான் ஜனநாயக ஆட்சி என்பது. எல்லா மக்களுக்கும் அரசாட்சியில் பங்கு இருக்கவேண்டும் என்றால் என்ன? எல்லோருக்கும் வாக்கு (ஓட்டு) சுதந்தரம் இருக்கவேண்டும் என்பதுதான். நாகரீகம் பெற்று சுய ஆட்சியுடன் இருக்கும் நாடுகளில் ஜனநாயக ஆட்சி உண்டு; அதாவது அங்குள்ள எல்லோருக்கும் வாக்குரிமை உண்டு வயதுவந்த ஆண் பெண் எல்லோருக்கும் வாக்கு உரிமை எங்கெல்லாம் உண்டோ அங்கெல்லாம் ஜனநாயக ஆட்சி உண்டு.

நமது நாட்டை ஆங்கிலேயன் ஆண்டு வருகிறான். அவனுடைய இங்கிலாந்து தேசத்திலே ஜனநாயக ஆட்சி உண்டு. அதாவது இங்கிலாந்தில் எல்லாருக்கும் வாக்குரிமை உண்டு. ஆனால், அவன் ஆளுகிற இந்தியாவில் ஜனநாயகம் இல்லை. பணக்காரர்களுக்கும், படித்தவர்களுக்கும்தான் வாக்கு உரிமை உண்டு. நமது நாட்டில் பணக்காரர்கள் மிகமிகக் குறைவாயுள்ளனர். ஏழைகளோ கோடிக்கணக்கிலுள்ளனர். படித்தவர்களோ மிகச் சுருக்கம். நூற்றுக்குப் பத்துப் பேர்தான் படித்திருக்கிறார்கள். படிக்காத தற்குறிகளோ மிக ஏராளம். 100க்கு 90 பேர் படிக்காதவர்கள். சொற்ப எண்ணிக்கையுள்ள படித்தவர்களும் பணக்காரர்களும் ஆகிய இவர்களுக்கு மாத்திரம்தான் நமது நாட்டில் வாக்கு உரிமை உண்டு. பெருந்தொகையினரான மக்களுக்கு வாக்குரிமை இல்லை.

நமது நாட்டில் வாக்கு உரிமை உள்ளவர்கள் தொகை நூற்றுக்குப் பதினைந்து பேர். ஓட்டு இல்லாதவர் தொகை

நூற்றுக்கு எண்பத்தைந்து பேர். அதாவது நமது நாட்டில் 15 பேருக்குத்தான் ஜனநாயக உரிமை உண்டு. மற்ற 85 பேருக்கு ஜனநாயக உரிமை இல்லை! வேறுவிதமாகச் சொல்லுவது என்றால் 15 பேர் 85 பேரை ஆட்சி செய்கிறார்கள் என்று சொல்ல வேண்டும். இதைக் கண்டுதான் ருஷிய பத்திரிகை ஒன்று சமீபத்தில் இந்தியாவில் உள்ள ஆங்கில ஆட்சியைக் கேலிசெய்து எழுதியது. நூற்றுக்குப் பதினைந்து பேர் மட்டும் ஓட்டுரிமை பெற்ற இந்தியாவில் ஜனநாயக ஆட்சி நடக்கிறது என்றால் அதை எப்படி நம்பமுடியும் என்று அப்பத்திரிகை கேட்கிறது.

நமது நாட்டை ஆட்சி செய்கிறவர்கள் ஆங்கிலேயர். இந்த ஆட்சியில், ஜனங்கள் தங்கள் கருத்தை அரசாங்கத்துக்கு எடுத்துக்கூற அதிகாரம் இல்லை. நூற்றுக்கு 15 பேர் ஆக உள்ள பணக்காரர்களுக்கும் படித்தவர்களுக்கும் மட்டும்தான் இந்த அதிகாரம் உண்டு. 100க்கு 85 பேராக உள்ள பெரும்பான்மை யான மக்கள் ஓட்டுரிமை இல்லாமல் ஆடுமாடுகளைப் போல இருக்கிறார்கள். இது ஜனநாயக ஆட்சியா? யதேச்சாதிகார ஆட்சியா?

இந்த நிலையை பெரியார் ஈ.வெ.ரா. அவர்கள் பல கூட்டங்களில் அடிக்கடி சொல்லி வருகிறார். ஆனால், மக்கள் இது விஷயத்தில் இன்னும் கிளர்ச்சி செய்யாமல் இருக் கிறார்கள். வயதுவந்த ஆண் பெண் எல்லோருக்கும் வாக்கு உரிமை கொடுக்கவேண்டும் என்னும் கிளர்ச்சியைப் பொது ஜனங்கள் செய்வார்களானால் கட்டாயம் அந்த உரிமை கிடைக்கும். வெள்ளைக்காரன் மூட்டை கட்டிக்கொண்டு கப்பலேறுகிற இந்தச் சமயத்தில், 'பாரத தேவி'யின் புதல்வர்கள் ஆட்சி செய்யும் இந்த நாளில் கிளர்ச்சிக்கு ஆதரவு இருக்குமே தவிர எதிர்ப்பு இருக்காது. வயது வந்தவர்களுக்கெல்லாம் (Adult Franchise) வாக்குரிமை வேண்டாம் என்று எந்தத் தேசபக்தனாவது சொல்ல முடியுமா?

வெள்ளைக்காரன் இந்தியாவுக்குச் சுதந்தரம் கொடுத்து விட்டானாம். இந்தியாவின் புதிய அரசியல் அமைப்பைப்பற்றி ஆலோசிக்கப் போகிறார்களாம். இந்த நல்ல வேளையில், எல்லோருக்கும் ஓட்டுரிமை கிடைக்குமா? இந்தியாவில் உண்மையான ஜனநாயகம் ஏற்படுமா? பொதுஜனங்கள் விரும்பினால் இது முடியும். இதில் கட்சி வித்தியாசம் பாராட்ட வேண்டியது இல்லை. முஸ்லிம் லீகின ரானாலும் காங்கிரஸ்காரர்களானாலும் திராவிடர் இயக்கத்தின ரானாலும் எல்லோரும் இதை ஆதரிப்பார்கள். வாக்குரிமை வேண்டாத முஸ்லிம் உண்டா? வாக்குரிமை வேண்டாத

தேசியத் தோழர்கள் உண்டா? ஓட்டுரிமை வேண்டாத ஆதி திராவிடர் உண்டா? ஓட்டுரிமை வேண்டாத தொழிலாளிகள் உண்டா? ஓட்டுரிமை வேண்டாத திராவிடர்கள் உண்டா? ஆகவே எல்லோரும் சேர்ந்து முயற்சி செய்தால் இதனைக் கட்டாயம் பெறலாம். பதினைந்து பேர் சேர்ந்து கொண்டு எண்பத்தைந்து பேரை ஆளுவதா ஜனநாயகம்?

*குடி அரசு,* ஆகஸ்ட் 24, 1946

# சீனா தேசத்தின் இன்றைய போராட்டம்

சீனா தேசம் இப்போது உள்நாட்டுப் போரில் ஈடுபட்டிருக்கிறது. இந்தப் போர் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக நடந்து வருகிறது. அந்த நாட்டிலே இரண்டுவிதக் கருத்துக்கள் இருக்கின்றன. இவ்விரண்டுவிதக் கொள்கைக்காரரும் போராடி வருகின்றனர். இவர்களில் ஒரு சாரார் சுயநலம் படைத்த பிற்போக்காளர். இவர்கள் சிறு தொகையினர். ஆனால், அதிகாரமும் பலமும் உடையவர். இவர்கள் நிலபுலங்களையுடைய முதலாளிகளும் பணக்காரர்களும், உத்தியோகஸ்தர்களில் சிலரும் ஆவர். இந்தப் பிற்போக்காளர்கள் தங்களுக்குச் சாதகமாக, உளுத்துப்போன பழைய கன்பூசியஸ் கொள்கையை ஆதாரம் காட்டுகின்றனர். இந்தப் பிற்போக்கினர்களுக்குத் தலைவராக இருப்பவர் சியாங்-கெ-ஷேக் என்பவர். இவர் கையில்தான் அரசாங்கமும் அதிகாரமும் இப்போது இருக்கிறது.

இந்தக் கட்சிக்கு எதிர்க்கட்சியாக இருப்பது ஜனநாயகக் கட்சி. இக்கட்சி முற்போக்குக் கொள்கையுடையது. பெருவாரியான பாமரப் பொதுமக்களுக்காகவும் தேசத்தின் உயர்வுக்காகவும் இந்த முற்போக்குக் கட்சி பாடுபடுகிறது. இதில், மாணவர்களும், சிறு வியாபாரிகளும், இராணுவத்தில் ஊழியம் செய்கிற இளைஞர்களும், பள்ளியாசிரியர்களும் சேர்ந்துள்ளனர். 'குவோமிங்டாங்' என்னும் அரசியல் சபையைச் சேர்ந்தவர்களில் சிலர் முற்போக்குக் கட்சியைச் சேர்ந்தவர். முற்போக்காளரான ஜனநாயகக் கட்சியினர் கூறுவது என்னவென்றால், காலங்கண்ட உளுத்துப்போன கன்பூசியஸ் கொள்கை உதவாது. அது சிறு கூட்டத்தினரான பணக்காரர்களுக்குச் சௌகரியம் உள்ளதாய்ப் பெருவாரியான ஜன சமூகத்தைத் தாழ்த்தி, இழிவுபடுத்தி அடக்கி வைக்க உதவுகிறது. நாட்டை ஏழ்மைக்குள்ளாக்கி, முன்னேற்றத்திற்குத் தடையாயிருக்கிறது. ஆகவே அந்த முறையை ஒழித்து நல்ல ஜனநாயக முறையை ஏற்படுத்த வேண்டும் என்கின்றனர்.

பழமை விரும்பிகளாகிய பிற்போக்காளர் கையில் அதிகாரமும் அரசாட்சியும் இருப்பதினாலே, இவர்கள் முற்போக்கினரான ஜனநாயகக் கட்சியினரை அடக்கி ஒடுக்கியும்,

சிறையில் அடைத்தும், நாடு கடத்தியும், சிலரைக் கொலை செய்தும் வருகிறார்கள். இவ்வாறு கொடுமையாக அடக்கி னாலும் ஜனநாயகக் கட்சி மேன்மேலும் வளர்ந்து கொண்டே வருகிறது.

இப்போது, பொதுமக்களின் முற்போக்குக் கட்சியை அடக்க அரசாங்கத்தார் புது முறையைக் கையாண்டு வருகிறார்கள். *சீனாவின் தலைவிதி* என்று பெயர் உள்ள ஒரு நூலை சியாங்கெ ஷேக் அவர்கள் சீன பாஷையில் எழுதியிருக் கின்றார். இதை இலட்சக்கணக்காக அச்சிட்டுச் சீன நாட்டுப் பாடசாலைகளில் மாணவர்களுக்குக் கட்டாயப் பாடமாகப் போதித்து வருகிறார். இந்த நூல் இப்போது ஆங்கிலத்திலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது (*China's destiny* **by Chiangkai - Shek**). இந்த நூலில் உளுத்துப்போன பழைய கன்பூசியஸ் கொள்கையை வற்புறுத்தியிருக்கிறார்.

கன்பூசியஸ் கொள்கை என்பது தற்காலத்துக்கு ஏற்றது அல்ல. இந்தக் கொள்கைப்படி கோடானுகோடி ஏழை மக்கள், ஒரு சில பணக்காரர்கள், அதிகாரிகள் ஆகியவர்களின் காலின் கீழ் நசுக்குண்டு, புழுபூச்சிகளைப் போல இருக்கவேண்டும். செத்துப்போனவர்களையும் மூதாதைகளையும் வணங்க வேண்டும். நாட்டின் உயர்வுக்கும் வளர்ச்சிக்கும் முட்டுக் கட்டையாக இருப்பது இக்கொள்கை. பாமர மக்களுக்கு மரியாதை செய்யக்கூடாது என்றும், எஜமானர்கள் குற்றம் செய்தாலும் தண்டனை கூடாது என்றும் இது கூறுகிறது. கன்பூசியஸ் கொள்கையைப் பிற்காலத்தில் மென்ஸியஸ் என்பவர் பிரசாரம் செய்தார். “பாமர மக்களை ஆட்சி செய் வதற்குப் பிரபுக்களைத் தவிர ஒருவரும் இலர்; பிரபுக்களுக்குச் சாப்பாடு கொடுக்கப் பாமர மக்களைத் தவிர ஒருவரும் இலர்” என்பது கன்பூசியஸ், மென்ஸியஸ் கொள்கையாகும். இந்த அழுகிப்போன சட்டம் தமக்குச் சாதகமாக இருப்பதினாலே பிற்போக்கான பணக்காரக் கூட்டம், இதனையே சீன நாட்டின் சட்டம் என்று கூறி இதை நிலைநாட்ட முயற்சி செய்கிறது. இந்தப் பிற்போக்குக் கட்சி, நாட்டின் கைத்தொழில், விவசாயம், தொழிற்சாலை, வியாபாரம் முதலியவற்றைப் பெருக்குவதற்கு வழி செய்வதில்லை. தங்கள் சுயநலத்துக்கு எது எது தேவையோ அவற்றையே தேசத்தின் தேவை என்று கூறுகிறார்கள். பாடசாலைகளிலும் கல்லூரிகளிலும் இந்த அழுகிப்போன கொள்கையையே போதித்து வருகிறார்கள். இந்தக் கொள் கைக்கு மாறுபட்ட கருத்துள்ளவர்களை 'குவோமிங்டாங்' அரசியல் சபையின் இரகசியப் போலீஸ் படை வேவு பார்த்து வருகிறது. கல்வி மந்திரியின் இந்த உத்தரவிற்குக்

கீழ்ப்படியாதவர்களும், மாறுபட்ட கருத்துள்ளவர்களும் இரகசியப் போலீசாரால் வேவு பார்க்கப்பட்டுக் கடுமையாகத் தண்டிக்கப்படுகிறார்கள். மாறுபட்ட கருத்துள்ளவர்கள் கதி அதோகதிதான். உயிருக்கே ஆபத்துதான்.

முற்போக்காளரான ஜனநாயகக் கட்சியார், பழைய கொள்கைகள் எல்லாவற்றையும் ஒழிக்க வேண்டும் என்று கூறவில்லை. நல்லனவாகவுள்ள பழைய கொள்கைகளை வைத்துக்கொண்டு ஜனங்களுக்குத் தீமை பயக்கும் கொள்கை களை மாற்ற வேண்டும் என்கிறார்கள். பொதுஜனங்களுக்கு அரசியலில் உண்மையான பங்கு இருக்கவேண்டும் என்கின்றனர். பொருளாதாரம், விவசாயம், தொழிற்சாலைகள், வியாபாரம் இவைகளைப் பெருகச்செய்து மக்களுக்குப் பயன்படுத்தவேண்டும் என்று கூறுகின்றனர். இவைகளுக் கெல்லாம் கன்பூசியஸ் கொள்கை முட்டுக்கட்டையாக இருப்பதினால் அதை எதிர்க்கின்றனர்.

சீன நாட்டின் புரட்சிவீரராகிய சன்யாட்சன் மனைவி யாரும், சியாங்கெஷேக்கின் மைத்துனியுமாகிய சன்யாட்சன் அம்மையார், பழைய கன்பூசியஸ் முறையைப் பற்றி இவ்வாறு கூறுகிறார். "இப்போதைய நமது ஜனசமூகம் முற்போக் கடைந்து கொண்டிருக்கிறது. பழைய கன்பூசியஸ் வழக்கம் இப்போதைய முன்னேற்றத்திற்கு உதவி செய்யாது. கன்பூசியஸ் முறை, தொடக்கத்திலிருந்து முடிவு வரையில் பாட்டாளி மக்களை வேறாகவும், பணக்காரக் கூட்டத்தை வேறாகவும் பிரித்து வைக்கிறது. நம்முடைய வாழ்க்கையிலிருந்தும், எண்ணத்திலிருந்தும், கருத்திலிருந்தும் கன்பூசியஸ் கொள் கையை வேரோடு பிடுங்கி எறியவேண்டும்."

ஆனால் பிற்போக்காளரின் தலைவராகிய சியாங்கெஷேக், தமது பிற்போக்குக் கொள்கைப்படி கன்பூசியஸ் வழக்கம்தான் சீன நாட்டுக்கு நல்லது என்று கூறுகிறார். "சீன நாட்டுக்குச் சொந்தமான வாழ்க்கைத் தத்துவமானது, கன்பூசியஸால் வளர்க்கப்பட்டு மென்ஸியஸ் என்பவரால் பிரசாரம் செய்யப் பட்டு, ஹான் பண்டிதர்களால் வியாக்யானம் செய்யப் பட்டுள்ளது. இது உலகத்தில் உள்ள தத்துவங்களுக்கெல்லாம் மேலானது. பழைய சீனாவின் அறிவு மேல்நாட்டு அறிவு களுக்கெல்லாம் மேலானது" என்று புகழ்கிறார் சுயநலக் கட்சியின் தலைவர் சியாங்கெஷேக்.

நமது நாட்டிலே, அழுகி நாறிப்போன உதவாக்கரைப் புராண சாஸ்திரங்களைப் பிற்போக்காளர் தமது சுயநலத்தின் பொருட்டுப் புகழ்ந்து பிரசாரம் செய்து வருவது போல, சீன தேசத்திலும் அழுகி உளுத்துப்போன கன்பூசியஸ் தத்துவத்தை

ஆதாரமாகக் கொண்டு சுயநலக் கூட்டம் சீன மக்களை அடக்கியாளப் பார்க்கிறது. நமது சென்னை மாகாணத்தில் பகுத்தறிவும், விசாலமான முற்போக்கு எண்ணங்களும், மாணாக்கருக்கும், ஆசிரியருக்கும் ஏற்படாதபடி தடுத்து கல்வி இலாகா அடக்குமுறை ஆட்சி செய்வதுபோல, சீனாவிலும் சியாங்கெஷேக் அரசாங்கம் மாணவருக்கும் ஆசிரியருக்கும் முற்போக்கு எண்ணம் பரவாதபடி தடுத்துப் பிற்போக்குடைய கன்பூசியஸ் கொள்கையைப் பரப்பி வருகிறது.

சுருக்கமாகக் கூறினால் நமது நாட்டு நிலைமையும் சீன நாட்டின் நிலைமையும் ஒன்றே. ஏதேனும் வித்தியாசம் இருந்தால், அது சீன நாட்டில் உள்நாட்டுப் போர் மும்முரமாக நடந்து வருகிறது; நமது நாட்டில் உள்நாட்டுச் சண்டை இப்போதுதான் தொடங்கியிருக்கிறது என்று கூறவேண்டும்.

ஜெர்மனியிலும் இத்தாலியிலும் தலைவிரித்துப் போராட்டம் ஆடி, அழிந்து ஒழிந்துபோன பாசிஸ்ட்டு ஆட்சி இப்போது சீன தேசத்திலும் இந்தியா தேசத்திலும் புகுந்து பேயாட்டம் ஆடிவருகிறது.

*குடி அரசு,* டிசம்பர் – 20, 1947

# நான்குவித அடிமைத்தனம்

ஒரு இனத்தாரையோ அல்லது ஒரு தேசத்தாரையோ அடிமைப்படுத்துவது எப்படி? நான்கு விதமாக அடிமைப் படுத்தலாம். அவை: 1. அரசியல் அடிமைத்தனம், 2. பொருளாதார அடிமைத்தனம், 3. பாஷை அடிமைத்தனம், 4. சமயத்தில் (மதத்தில்) அடிமைத்தனம் என்பன. இவற்றைச் சுருக்கமாக விளக்குவோம்.

**1. அரசியல் அடிமைத்தனம்:** ஒரு இனத்தாரை அல்லது ஒரு தேசத்தாரை மற்றொரு இனத்தார் அல்லது தேசத்தார் ஆட்சி செய்வது. அதாவது ஒரு இனம் அரசியல் சுதந்தரத்தை இழந்து மற்றவருடைய ஆட்சிக்கு அடிமைப்பட்டிருப்பது. உதாரணம். ஆங்கிலேயர் இந்தியரை ஆட்சி செய்து வந்தது. ஆங்கிலேயன் வேறு தேசத்தில் இருந்து வந்தவனான படியாலும் அவனுடைய பாஷை, கலை, ஆசாரம் முதலியவை வேறுபட்டிருந்தபடியாலும் இந்த அரசியல் அடிமைத் தனத்தை மக்கள் நன்கு தெரிந்துகொண்டனர். ஆனால் இப்போது சுதந்தரம் கிடைத்துவிட்டதாகப் பேசப்படுகிறது; எழுதப்படுகிறது. உண்மையில் நமக்குச் சுதந்தரம் இருக்கிறதா, நாம் அரசியல் அடிமைத்தனத்தில் இருந்து விடுபட்டோமா? நமக்குச் சுயாட்சி கிடைத்துவிட்டதா?

இல்லை. வெள்ளையன் ஆட்சி மாறிவிட்டது. அந்த இடத்தில் வேறு அன்னியன் அமர்ந்து ஆட்சி செய்கிறான். அவன் நமது தேசத்திலேயே இருந்து கொண்டு இந்து மதத்தவன் என்று சொல்லிக் கொள்கிறபடியால், இவனை 'நம்மவன்' என்று மயங்கிக் கிடக்கிறார்கள் மக்கள். இவன் வடநாட்டான். தேசீயம் என்னும் போர்வையில் புகுந்து கொண்டு தேசீய வலையை வீசி மயக்கிவிட்டபடியால் நமது மக்கள் சுதந்தரம் பெற்றுவிட்டதாக நினைத்துக்கொண்டு மயங்கிக் கிடக்கிறார்கள். உண்மையில் நமது நாட்டுக்குச் சுதந்தரம் இருக்கிறதா? நமது மந்திரிகள் சிறுசிறு காரியத்துக்கும்கூட வடநாடு சென்று வரங்கேட்டு வருகிறார்களே. அவர்கள் உத்தரவை எதிர்பார்க்கிறார்களே. வெள்ளைக்காரன் ஆட்சியில் இருந்த சுதந்தரம்கூட நமது மந்திரிகளுக்கு இல்லையே. போலீஸ் இலாகா என்னுடையது

என்று தலைமை மந்திரி கூறினால் இல்லை, கூடாது அதைச் சுப்பராயனிடம் கொடு என்று வடநாட்டான் உத்தரவு போடுகிறான். நமது தலைமை மந்திரி தலை வணங்கி உத்தரவுப்படி நடக்கிறார். இதுபோல பல உதாரணங்களைக் காட்டலாம். இது சுயராஜ்யமா? அடிமைத்தனமா? நமது மாகாண விஷயத்தில், மிகச் சிறிய விஷயத்தில் இப்படி இருக்கிறது என்றால், மற்ற விஷயங்களில் எப்படியிருக்கும்? இது சுயராஜ்யம் என்றால், வடநாட்டானுக்குச் சுயராஜ்யமே தவிர மற்றவர்களுக்கு அடிமைத்தனம்தான். நமது வாசகர்கள் இந்த அரசியல் அடிமைத்தனத்தை நாள்தோறும் பார்த்தும் கேட்டும் படித்தும் வருகிறபடியால் இந்த அடிமைத்தனத்தைப் பற்றி அதிகமாகச் சொல்ல வேண்டியதில்லை. மக்கள் இப்போது இதை உணர்ந்து வருகிறார்கள்.

**2.** பொருளாதார அடிமைத்தனம்: இந்த அடிமைத் தனத்தைச் சாதாரண மக்கள் தெரிந்துகொள்வது சிறிது கஷ்டமானது. ஆழ்ந்த அறிவும் கூர்மையான புத்தியும் உள்ளவர்களுக்குத்தான் இந்த அடிமைத்தனம் இன்னதென்று புலப்படும். பாங்கிகள் அமைத்தல், மூலதனத்தைப்போட்டு தொழிற்சாலை, வியாபாரம் முதலியவைகளை நடத்துதல் முதலியவைகளின் மூலம் ஒரு நாட்டாருடைய பொருளை இன்னொரு நாட்டார் கொள்ளை கொண்டு போவார்கள். இவ்வாறு கொள்ளை கொடுத்துக் கொண்டிருக்கும் நிலைமை தான் பொருளாதார அடிமைத்தனம் என்பது. அரசியல் அடிமையாக உள்ளவர்களிடத்தில்தான் பொருளாதார அடிமைத்தனமும் இருக்க முடியும். உதாரணமாக வெள்ளையன் நம்மை அரசியலில் அடிமைப்படுத்தியிருந்தான். அரசியல் அதிகாரம் பெற்றிருந்தபடியால் அவன், பெரிய பெரிய வியாபாரம், ஆலைத் தொழில், பாங்கிகள் முதலியவை களை இங்கு ஏற்படுத்தி நமது நாட்டுப் பணத்தைக் கொள்ளை கொண்டு போனான். நமது திராவிட நாட்டைப் பொறுத்த வரையில் நமது பொருளாதார அடிமைத்தனம் இப்போது இருமடங்காகிவிட்டது. அதாவது முன் இருந்ததைவிட திராவிட நாடு இரு மடங்கு பொருளாதார அடிமைத்தனத்தில் சிக்குண்டு கிடக்கிறது. வெள்ளையன் பாங்கிகளும், வடநாட்டான் பாங்கிகளும் நமது நாட்டில் பெருகிவிட்டன. இந்தப் பாங்கிகளில் நமது நாட்டுப் பணம் குவிகிறது. இந்தப் பணத்தை முதலாக வைத்து வடநாட்டான் வியாபாரம், தொழிற்சாலை முதலியவைகளை உண்டாக்கிக் கொள்கிறான். திராவிட நாட்டில் வடநாட்டு வியாபாரம் பெருகிவிட்டது; இன்னும் பெருகிக்கொண்டே போகிறது. தொழிற்சாலைகளும்

வடநாட்டிலேயே அதிகப்படுகின்றன. வடநாட்டு மார்வாடி களும், குஜராத்திகளும், பனியாக்களும் நமது நாட்டில் வந்து பெரியபெரிய வியாபாரங்களையும் தொழிற்சாலைகளையும் பாங்கிகளையும் ஏற்படுத்திக்கொண்டு கொள்ளை லாபம் அடிக்கிறார்கள். சென்னையில் பெரியபெரிய ஹோட்டல் களையும் அவர்களே நடத்தி வருகிறார்கள். ஆகவே, வடநாட் டான் திராவிட நாட்டை வியாபாரச் சந்தையாக வைத்துக் கொண்டான்.

இதைத் தடுக்க நமது 'சுயராஜ்யம் பெற்ற' தேசீய மந்திரிகளால் முடியவில்லை. ஏனென்றால் இவர்களைத் தடுக்க 'பூர்ண சுயராஜ்யம்' பெற்ற காங்கிரஸ் மந்திரிகளுக்கு அதிகாரம் இல்லை. அதிகாரம் வடநாட்டு மத்திய அரசாங்கத்தினிடம் இருக்கிறது! இதிலிருந்து நமது மந்திரிகள் அமர்ந்து ஆட்சி செய்யும் பீடம் சுதந்தர பீடம் அல்ல; அடிமைத்தனம் என்பது விளங்குகிறதல்லவா? அரசியல் அதிகாரம் இல்லாத மந்திரி களுக்கு வடநாட்டு முதலாளிகள் திராவிட நாட்டைச் சுரண்டுவதைத் தடுக்கவும் அதிகாரமில்லை. நம்மவர்கள் வடநாட்டு வியாபாரிகளுடன் போட்டி போட்டு வியாபாரம் செய்ய முடிவதில்லை. ஏனென்றால், அரசாங்கத்தாரின் உதவி யிருந்தால்தான் மற்ற நாட்டாரோடு போட்டியிட வியாபாரி களுக்கும் முதலாளிகளுக்கும் முடியும். அரசாட்சி அதிகாரம் வடநாட்டானிடம் இருப்பதால் அவன் வடநாட்டு முதலாளி களுக்கும் வியாபாரிகளுக்கும் சலுகை காட்டுகிறான். தென்னாட்டாரை அவன் மதிப்பதில்லை. திராவிட நாட்டைத் தான் அவன் தன்னுடைய மார்க்கட்டாக (சந்தைக் கடையாக) வைத்திருக்கிறானே! ஆகவே, திராவிடராகிய நாம் அரசியலில் மட்டும் அடிமையல்ல; பொருளாதாரத்திலும் அடிமைப் பட்டிருக்கிறோம். இதை, தேசீய திராவிடத் தோழர்கள் இப்போதுதான் உணரத் தொடங்கியிருக்கிறார்கள்.

**3. பாஷை அடிமை:** பாஷையின் மூலமாகவும் ஒரு இனத்தாரை இன்னொரு இனத்தார் அடிமைப்படுத்தலாம். ஒரு தேசத்தாரை அடிமைப்படுத்த வேண்டுமானால் 'முதலில் அவர்களுடைய பாஷையை அழித்துவிடு' என்று ஒரு ஆங்கிலேயன் எழுதியிருக்கிறான். பாஷைக்கும் அதைப் பேசும் மக்களுக்கும் மிக நெருங்கிய தொடர்புண்டு. பாஷை அழியு மானால் அதை மக்களே அழித்துவிடுவார்கள். இதற்குச் சரித்திரத்தில் இருந்து சான்றுகள் காட்டக்கூடும். விரிவஞ்சி விடுகிறோம். மக்கள் அல்லது அதற்குக் கொடுக்கவேண்டிய முக்கியத்துவத்தைக் கொடுக்காமல் புறக்கணித்துவிட்டு, வேறு பாஷையை அந்த இடத்தில் வைத்துவிட்டால், அந்த மக்கள்

தங்களை அறியாமலே அன்னியருக்கு அடிமையாகிவிடுகிறார்கள். பாஷை சுதந்தரத்தை இழந்துவிட்டவர்கள் மேன்மையடைய முடியாது. பாஷை அடிமைத்தனத்தினால் உண்டாகும் தீமையைச் சாதாரண மக்கள் உணர்ந்து கொள்ள முடியாது. மிக நுட்ப புத்தியும் சரித்திர அனுபவமும் உள்ளவர்களே இதனை அறிவார்கள்.

இங்கிலாந்து தேசத்திலே, இங்கிலீஷ், அரசாங்க பாஷையாக இல்லாதபடி புறக்கணிக்கப்பட்டு, பிரெஞ்சு பாஷையும் லத்தீன் பாஷையும் அரசாங்க பாஷையாக இருந்த காலத்தில், ஆங்கிலேயர் உயர்நிலை அடைய முடியவில்லை. ஏனென்றால் அன்னிய பாஷை அரசாங்க பாஷையாக இருந்தது. கி.பி. 14ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்கிலீஷ் பாஷை அரசாங்க பாஷையாக்கப்பட்டு பார்லிமெண்டு சபையில் பேசப்பட்ட பிறகுதான் ஆங்கிலேயர் முன்னேற்றமடைந்தார்கள். இது சரித்திரம் படித்தவர்கள் அறிந்த விஷயமே.

நமது நாட்டில் (வட நாட்டவருக்கு அடிமைப்பட்டவர்களால்), இந்தி பாஷை கட்டாய பாடமாக்கப்பட்டபோது, நம்மவர் தீவிரமாகவும் பலமாகவும் எதிர்த்து நின்று ஆண் பெண் குழந்தைகள் உட்பட 1500 பேர் சிறையும் சென்றார்கள். தாளமுத்து, நடராசன் என்னும் இருவர் உயிரையும் கொடுத்தார்கள். கடைசியில் கட்டாய பாடம் என்பது ஒழிந்துவிட்டது. இது உலக சரித்திரத்திலேயே எங்கும் நிகழாத அரிய நிகழ்ச்சி. இது நமது நாட்டுச் சரித்திரத்தில் பொன் எழுத்துக்களால் எழுதப்படும்.

ஆனால், அதே இந்தி பாஷையை நமது நாட்டிலே புகுத்த இப்போது பலவித முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. தேசீய மாய்கையில் இருக்கிற நமது அரசாங்கம், சுதந்தரம் இல்லாத அடிமை அரசாங்கம். ஆதலால், நமது மந்திரிகளுக்கு அரசியல் சுதந்தரமும் பொருளாதார சுதந்தரமும் இல்லாமல் வடநாட்டாருக்கு அடிமைப்பட்டிருப்பதால், இவர்களே இந்தியை நமது நாட்டில் புகுத்த முயற்சி செய்கிறார்கள். கட்டாய பாடம் அல்ல, இஷ்ட பாடம் என்று கூறுகிறார்கள். ஆனால் மறைமுகமாகக் கட்டாயமாகப் படிக்கும்படி வற்புறுத்துகிறார்கள். அதுவும் ஹைஸ்கூல்களிலே பாடமாக வைத்திருக்கிறார்கள். காலேஜ் வகுப்புகளில் இஷ்டமாக வைப்பதை நாம் தடுக்கவில்லை. ஹைஸ்கூல்களில் பாடமாக வைப்பது கண்டிக்கத்தக்கது.

வடநாட்டானுடைய ஆதிக்கம் அரசியலில் மட்டுமன்று, பொருளாதாரத்திலும் பலப்பட்டிருக்கிறது. போதாக்குறைக்கு தேசப் பொதுப் பாஷை என்னும் பெயரால் இந்தி பாஷை

யையும் புகுத்திக் கொண்டிருக்கிறான். இந்தத் துரோகச் செயலைக் கண்டிக்காமல் நமது மந்திரிகள் இதற்கு உடந்தையாக இருக்கிறார்கள். மொழிவளம் இல்லாத இந்தி பாஷை நமக்கு எதற்கு? இஷ்டமுள்ளவர்கள் தனிப்பட்ட முறையில் படித்துக் கொள்ளட்டுமே. அன்னிய பாஷை ஆதிக்கத்தினால் நாட்டு மக்களுக்கு ஏற்படும் தீங்குகளை நம்மவர் இன்னும் அறியவில்லை. அறிந்துகொள்வதும் கடினமானது. சாதாரண மக்களால் தெரிந்துகொள்ள முடியாது. முதிர்ந்து ஆழ்ந்த அறிவுடையவர்க்கே இதன் தீங்கு நன்கு புலப்படும். தேசீயத் தோழர்கள் இத்னை எப்போது உணர்வார்களோ!

**4.** மத அடிமை: எல்லா அடிமைத்தனத்தையும்விட இது மிகமிகக் கீழ்த்தரமானது. மீள முடியாதது. இதன் தீமையை உணரவும் முடியாது. ஒரு கூட்டம் கடவுள் பெயரால் மக்களைப் பிரித்து வைத்து இருப்பது மட்டும் அல்லாமல் அடிமைத்தனத்திலும் ஆழ்த்தி வைத்திருக்கிறது. மதம் என்னும் மயக்கத்தில், போதையில் சிக்கினவர்கள் பெரிய பட்டதாரி களாயிருந்தாலும் படிப்பாளிகளாயிருந்தாலும் பாமரர்களா யிருந்தாலும் அதன் தீங்குகளை உணர்வது மிகமிகக் கடினம். அரசியல் அடிமை, பொருளாதார அடிமை, பாஷை அடிமை இவைகளில் இருந்து மீளவும் கூடும். ஆனால், மத அடிமைத்தனத்தில் இருந்து மீள்வது மிகமிக துர்லபம். மதத்தின் பேரால் அடிமைப்பட்டுக் கிடக்கும் மக்கள் நமது நாட்டில் கோடானு கோடிபேர். கோயிலில் சுவாமிக்குக் கிட்டே இருக்கும் கூட்டம் சிறிது; எட்ட நிற்பவர் கூட்டம் அதைவிடப் பெரிது; இன்னும் தூரத்தில் நிற்கும் கூட்டம் அதைவிடப்பெரிது; கோவிலுக்கு வெளியே நிற்கும் கூட்டம் இன்னும் பெரிது. இவ்வாறு ஒரு சிறு கூட்டம் பெருங் கூட்டத்தினரை மதத்தின் பெயரால் அடிமைப்படுத்தி இருப்பது நமது நாட்டிலேதான். ஜாதியின் பெயரால், வழக்கத்தின் பெயரால், ஆசாரத்தின் பெயரால் மக்கள் அடிமைப்படுத்தப்பட்டுள்ளனர். இவை யாவும் மதம் (சமயம்) என்னும் சொல்லில் அடங்கி விடுகின்றன. இந்த உலகத்திலே, சமத்துவம் என்னும் சுதந்தரத்தைக் கொடுக்காத மதமும் சுவாமிகளும், செத்த பிறகு எங்கேயோ மோட்சம் கொடுக்கும் என்பதை எப்படி நம்புவது?

சைவ வைணவம் என்னும் நமது இந்து மதத்தில், மத அடிமைத்தனம் மட்டுமல்ல, இன்னொரு அடிமைத்தனமும் இருக்கிறது. அது என்னவென்றால் மொழி (பாஷை) அடிமைத் தனம். கோயில்களில் சமஸ்கிருதத்தில்தான் பூஜைகள் நடை

பெறுகின்றன. இது நமக்குப் புரியாத பாஷை. கோயிலிலே எல்லோரும் ஒரே இடத்தில் இருந்து வணங்கச் சமத்துவம் இல்லை என்றால், அதாவது சமத்துவ சுதந்தரம் இல்லை என்றால், அங்கேயே பாஷை சுதந்தரமும் இல்லை. சமய அடிமைத்தனமும் பாஷை அடிமைத்தனமும் இரண்டும் கோயிலில் இருக்கின்றன. வடநாட்டான் தேசீயத்தின் பெயரால் இந்தியை நுழைத்து வருகிறான். பார்ப்பான் சமயத்தின் பெயரால் அன்னிய பாஷையாகிய சமஸ்கிருதத்தை நுழைத்து விட்டான். ஆகவே திராவிடர்களுக்கு இரண்டு பாஷை அடிமைத்தனம் ஏற்பட்டிருக்கிறது.

வாசகர்கள் தயவு செய்து சிந்தித்துப் பார்த்து முடிவு செய்ய வேண்டும். தென்னாட்டுத் திராவிடராகிய நமக்கு உண்மையிலேயே அரசியல் சுதந்தரம் இருக்கிறதா? பொருளா தாரத்தில் சுதந்தரமுண்டா? பாஷை சுதந்தரம் இருக்கிறதா? கோயில்களில் கடவுள் வழிபாட்டில் சமத்துவ சுதந்தரம் இருக்கிறதா? மனிதனுக்கு வேண்டியவை இவை நாலும்தானே. இவை இல்லாத 'சுய ஆட்சி' நமக்கு ஏன்? இதற்காகவா தேசீயத் தோழர்கள் சிறை சென்றார்கள்? அடிபட்டார்கள், தியாகம் செய்தார்கள்? சிந்தித்துப் பாருங்கள். தீமை என்று மனதில் பட்டால் இவற்றை ஒழித்து உண்மைச் சுதந்தரம் பெறச் செயலில் இறங்குங்கள்.

*குடிஅரசு,* ஜனவரி 24, 1948

# சீன தேசத்தின் சுதந்தரப் போர்

1911ஆம் ஆண்டின் கடைசியில் சீனா தேசம் குடி அரசு நாடாக மாறிவிட்டது. இதற்கு முன்பு சீனா தேசத்தை மன்சு வம்சத்து அரசர்கள் அரசாண்டு வந்தார்கள். அவர்கள் ஆட்சியில் மக்களுக்கு நன்மை உண்டாகவில்லை. அரசாங்கமும் பலமுடையதாக இல்லை. பலவீனமான அரசாங்கம் சீன நாட்டைச் சீர்குலைத்து விட்டது. இந்தப் போக்கு வெகு விரைவில் தேசத்தையே பாழாக்கிவிடும்போல இருந்தது. இதை அறிந்த சன்-யாட்-சன் என்னும் அறிஞர், சீன நாட்டை அழிந்துவிடாதபடி பாதுகாத்து அதை உயர்நிலைக்குக் கொண்டுவர முயற்சி செய்தார். அக்காலத்தில் அவர் அமெரிக்கா தேசத்துக்கு அருகில் உள்ள மேற்கு இந்தியத் தீவுகள் ஒன்றில் வசித்து வந்தார். அங்கே ஹானலூலு என்னும் பட்டணத்தில் ஸிங் சங்-ஹூய் என்னும் சங்கத்தை ஏற்படுத்தினார். சீன தேச முன்னேற்றச் சங்கம் என்பது இதன் பொருளாகும். சன்-யாட்-சன் நாற்பது ஆண்டுகளாகச் சீன தேசத்தின் முன்னேற்றத்திற்காக அல்லும் பகலும் உழைத்தார். ஆகவே, இவர் சீன நாட்டின் தந்தை என்று அழைக்கப் படுகிறார்.

* * *

அக்காலத்தில் சீன தேசத்துக்குச் சொந்தமான ஹாங்காங், பர்மோசா, இந்து சீனா, கொரியா முதலிய இடங்களை அய்ரோப்பியரும், ஜப்பானியரும் கைப்பற்றியிருந்தார்கள். இது சீன மக்களை விழிப்படையச் செய்தது. மேல் நாட்டாரின் துப்பாக்கி, பீரங்கி, புகைக்கப்பல் முதலியவைகளைவிட தமது சீன நாட்டு ஆயுதங்கள் பலம் குறைந்தவை என்பதையும், அரசாங்கமும் பலவீனமடைந்திருக்கிறது என்பதையும் மக்கள் நன்கு தெரிந்து கொண்டார்கள். ஆகவே, மன்சு ராஜ குடும்பத்தை ஒழித்து முடி ஆட்சியை அகற்றிக் குடியாட்சியை நிறுவி சீன நாட்டைப் பலப்படுத்தி முன்னேற்றமடையச் செய்ய வேண்டுமென்று சீன மக்கள் பலர் கருதினார்கள். இப்படிப் பட்ட காலத்தில்தான், சன்யாட்சன் மேற்சொன்னபடி சங்கத்தை ஏற்படுத்தினார். இவர் ஏற்படுத்திய சங்கத்தின் நோக்கம் என்னவென்றால், தார்த்தார் (மன்சு) அரசாட்சியை அப்புறப் படுத்தி, சீன தேசத்தை மீட்டுக்கொண்டு ஜனநாயக ஆட்சியை

அமைத்து நில்புலங்களை ஜனங்களுக்கு உரிமைப்படுத்துதல் என்பதாகும்.

* * *

அக்காலத்தில் ஜப்பான் தேசத்தில் தங்கிக் கல்வி கற்றுவந்த சீன தேசத்து மாணவர்கள் ஒன்று சேர்ந்து ஹுவா-ஸின்-ஹுய் என்னும் சங்கத்தை ஏற்படுத்தினார்கள். இதன் அர்த்தம் என்னவென்றால், ஜப்பான் தேசத்தில் இருக்கிற சீன மாணவர் சங்கம் என்பது. இந்தச் சங்கத்தின் நோக்கமும் சன்யாட்சன் நிறுவிய சங்கத்தின் கொள்கையையுடையது. அன்றியும், பேர்போன சீனப் புலவரான சான்-டாய்-யன் என்பவர் தலைமையில் குவான்-பூ-ஹுய் என்னும் படித்தவர் கழகமும் ஏற்பட்டிருந்தது. இக்கழகத்தின் நோக்கமும் சீன தேசத்தை முன்னேற்ற வேண்டும் என்பதே. பிற்காலத்திலே, 1905ஆம் ஆண்டில், இந்த மூன்று சங்கங்களும் ஒன்றாக இணைக்கப்பட்டு துங்-மெங்-ஹுய் (புரட்சியாளர் அய்க்கிய சங்கம்) என்னும் சங்கமாக நிறுவப்பட்டது. இந்தப் புரட்சியாளர் அய்க்கிய சங்கம்தான் பிற்காலத்தில், குவோ-மின்-டாங் என்னும் பெயருடைய சங்கமாக மாறி, இப்போது சீன நாட்டின் தலைவராக இருக்கும் சியாங்-கெ-ஷேக்கின் கையிலும், பணக்காரர் ஆதிக்கத்திலும் இருந்து வருகிறது.

* * *

மேற்சொன்ன சங்கக் கொள்கைகள் பொது ஜனங்களிடம் செல்வாக்கு அடைந்தன. இந்த இயக்கம் பொது மக்கள் இயக்கமாக மாறி நாட்டில் நல்ல செல்வாக்குப் பெற்றிருந்தது. 'தார்த்தாரி (மஞ்சு) அரசு ஒழிக, சீன தேசம் வாழ்க' என்னும் ஒலி எங்கும் கேட்டது. இந்த இயக்கத்தைக் கண்டு அரசாங்கம் அஞ்சிற்று. 1901ல் சீன அரசாங்கமும் அப்போது அரசியா யிருந்த இராணியும் இந்த இயக்கத்தை வேறு பக்கமாகத் திருப்பிவிட்டு தப்பித்துக் கொண்டனர். அரசாங்கம், 'அன்னியர் (வெள்ளையர்) ஒழிக, ராஜ குடும்பம் வாழ்க' என்று கூவும்படி ஜனங்களைத் தூண்டிவிட்டது. இதன் பலனாக வெள்ளையர் தாக்கப்பட்டனர். ஆனால் இந்த இயக்கத்தை வெள்ளையர் விரைவில் அடக்கி விட்டனர். (சீன அரசாங்கம் மக்களின் ஆவேசத்தைத் தங்கள்மேல் பாயாதபடி வேறு இடத்தில் திருப்பியது போல, இப்போது, பொதுவுடைமைக் கட்சியை இந்தியாவில் தேசீயப் பணக்கார அரசாங்கம் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளுகிறதை வாசகர்கள் நினைவுபடுத்திக்கொள்க)

* * *

1905ஆம் ஆண்டில் ஜப்பான் தேசம் ருஷியா தேசத்துடன் சண்டை செய்தது. அக்காலத்தில் ருஷியாவை ஸார் என்னும் அரச குடும்பம் ஆட்சி செய்து கொண்டிருந்தது. ருஷிய-ஜப்பான் போரில், ஜப்பான் வெற்றி பெற்றது. ஸார் அரசன் தோல்வியடைந்தான். இது உலக மக்களை விழிப்படையச் செய்தது. ஏனென்றால், அய்ரோப்பிய நாடுகளுடன் ஆசிய நாடுகள் போர் செய்து ஜெயிக்க முடியாது என்கிற மூடநம்பிக்கை அக்காலத்தில் எல்லோரிடத்திலும் இருந்தது. ஆசிய நாடாகிய ஜப்பான், அய்ரோப்பிய நாடாகிய ருஷியா வைத் தோற்கடித்து வெற்றிக்கொடி நாட்டியதைக் கண்டு உலக மக்கள் விழிப்படைந்தனர். முக்கியமாக, ருஷியாவுக்கும் ஜப்பானுக்கும் அருகில் இருக்கிற சீன மக்களுக்குப் பெரிய விழிப்பை உண்டாக்கிற்று. முக்கியமாக உளுத்துப்போய் பலவீனப்பட்டிருந்த சீன அரசாங்கத்தின் கண்களைத் திறக்கச் செய்தது. சீன அரசன் பழைய போக்குகளை மாற்றிச் சில சீர்திருத்தங்களை உண்டாக்கினார். பாடசாலைகளைப் புதிய முறையில் அமைத்தார். புதிய முறையில் சேனைகளைப் பழக்கி னார். ஆயுதசாலைகளையும் கப்பல் கட்டும் சாலைகளையும் ஏற்படுத்தினார். அரசியலை வகுக்கப் பார்லிமெண்டு சபை யையும் நிறுவினார். இவைகளை எல்லாம் அரசர், தம்முடைய ஆதிக்கத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்குச் செய்தாரேயன்றி மக்களின் நன்மைக்காக அல்ல. இதைப் பொது ஜனங்கள் நன்கறிந்திருந்தார்கள்.

* * *

சன்-யாட்-சன் கருத்து நாடெங்கும் பரவிற்று. கல்லூரி களிலும் பாடசாலைகளிலும் புரட்சிக் கருத்துகள் பரவ லாயின. நாடெங்கும் சங்கங்கள் இரகசியமாக நிறுவப்பட்டன. வெளிநாடுகளில் இருந்த சீனர்கள் இந்த இயக்கத்திற்குப் பொருள். உதவி செய்தார்கள். வாலண்டியர் சேனை அமைக்கப் பட்டது. துங்-மெங்-ஹுய் சங்கத்தின் உறுப்பினர்கள் பலர் நாட்டின் நலத்திற்காக இரத்தத்தைச் சிதறினர். பலர் உயிரைக் கொடுத்தனர். சீன அரசாங்கத்தின் அடக்குமுறை பலமாக இருந்தது. சன்-யாட்-சன்னுடைய தலையைக் கொண்டுவரு பவருக்கு ஆயிரக்கணக்கான ரூபாய் பரிசளிப்பதாக விளம்பரம் செய்யப்பட்டது. பலத்த போராட்டம் நடைபெற்ற பின்னர், உலகத்தில் எங்கும் நிகழ்கிறபடியே 1911ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 10ம் தேதி சீன நாட்டின் முடி அரசு ஒழிந்தது. சீனா குடி அரசாக மாறியது.

* * *

முடி அரசு ஒழிந்து குடிஅரசு ஏற்படுத்தப்பட்டது. குடி அரசின் தலைவராக யுவான்-ஷிக்-ஆய் என்பவர் நியமிக்கப்

பட்டார். இவர் தானே சக்கரவர்த்தியாக வரவேண்டுமென்று முயற்சி செய்தார். அன்றியும் நாட்டில் பேராசை, லஞ்சம், யதேச்சாதிகாரம் முதலிய தீமைகள் இருந்தன. குடி அரசு இந்தப் புதிய தொல்லைகளையெல்லாம் அடக்கிச் சமாளிக்க வேண்டியிருந்தது. பணக்கார முதலாளிகளின் யதேச்சாதிகாரத் தொல்லை அதிகமாயிருந்தது. இத்தகைய உள்நாட்டுக் குழப்பங்கள் ஏற்பட்டன. இவ்வாறு ஏற்படுவது, எந்நாட்டிலும் எக்காலத்திலும் உண்டாகிற இயற்கை என்பது சரித்திரம் உணர்த்துகிறது.

* * *

சீன நாட்டுச் சுதந்தரப் போராட்டத்தில், சீனப் பொது வுடைமைக் கட்சியாரும் சேர்ந்து தீவிரமாக உழைத்தனர். சன்-யாட்-சன் காலஞ்சென்ற பிறகு, குவோமின்டாங் என்னும் சபையில் முதலாளிமார்களும் பணக்காரர்களும் அதிகமாகச் சேர்ந்து அதைத் தம் வசப்படுத்திக் கொண்டனர். சீனப் பொதுவுடைமைக் கட்சிக்கு அதில் இடமில்லாதபடி செய்துவிட்டனர். 1927ல் இருந்து இப்போது சீன நாட்டின் தலைவராக இருக்கும் சியாங்கேஷேக் பொதுவுடைமைக் கட்சியை ஒழிக்கக் கங்கணங் கட்டிக் கொண்டார். கம்யூனிஸ்ட் கட்சியினர் பலரைக் கொலை செய்தார். சீனப் பொது வுடைமைக் கட்சிக்கும் சியாங்கேஷேக் சேனைக்கும் பல பெரிய போர்கள் நிகழ்ந்தன. சீன நாட்டு முதலாளிகளும், பணக் காரர்களும், அமெரிக்கா தேசமும், பிரிட்டனும் சியாங் கேஷேக்குக்குப் பணவுதவியும், ஆயுத உதவியும் செய்தார்கள். இவ்வாறு சீன தேசம் குடி அரசு நாடாகியும் உள்நாட்டுக் குழப்பத்தில் ஈடுபட்டு இருக்கிறது. இந்த உள்நாட்டுப் போரினாலும் குழப்பத்தினாலும் சீன தேசம் சீர்குலைந்து விட்டது.

* * *

குவோமின்டாங் சபையும், சியாங்கேஷேக்கும் ஆக்க வேலையைச் செய்து நாட்டை முன்னேற்றம் செய்ய முற் படாமல் சீன நாட்டில் பொதுவுடைமைக் கட்சியை அழிக்க வேண்டும் என்னும் ஒரே கொள்கையை மட்டும் மனத்தில் கொண்டிருக்கிறார்கள். சியாங்கேஷேக்கும், குவோமின்டாங் சபையும் சீனப் பொதுவுடைமைக் கட்சிக்குக் கூறுவது என்னவென்றால், சீனப் பொதுவுடைமைக் கட்சிக்காரர் தமது சேனைகளையும், பட்டாளங்களையும் கலைத்துவிட வேண்டும் என்பதுதான். இதற்குச் சீன நாட்டுப் பொது வுடைமைக் கட்சி சொல்லுகிற பதில் என்னவென்றால், குவோ

மின்டாங் சபையும் பொதுவுடைமைக் கட்சியைப் போல ஒரு கட்சியாகும். உங்கள் கட்சிக்குப் பட்டாளமும் சேனையும் இருக்கும்போது எங்கள் கட்சிக்கும் சேனையும் பட்டாளமும் ஏன் இருக்கக்கூடாது? உங்கள் சேனையைக் கலைத்து விட்டால் நாங்களும் எங்கள் சேனையைக் கலைத்துவிடு கிறோம். சீன தேசத்துக்கு, எல்லாக் கட்சிகளையும் சேர்ந்த ஒரு அரசாங்கத்தை ஏற்படுத்திக்கொள்ளலாம் என்கிறார்கள். சியாங்கேஷேக் இதை ஒப்புக்கொள்ள மாட்டேன் என்கிறார். ஆகவே போர் நடந்து கொண்டேயிருக்கிறது. நாடு ஆக்க வேலையின்றிப் பாழாகிக் கொண்டிருக்கிறது. இந்தச் சண்டைக்கு அமெரிக்காவிலிருந்து பணம் குவோமின்டாங் சபைக்கு அனுப்பப்பட்டு வருகிறது. இந்தப் பணம் நாட்டின் நன்மைக்காக உபயோகப்படுத்தப்படவில்லை. சுயநல அரசியல் சமயசஞ்சீவிகள் கையில் மாயமாய் மறைந்து விடுகிறது. சீனா, அமெரிக்காவுக்குக் கடன்காரனானதுதான் மிச்சம்.

* * *

இப்போது சீனாவில் முக்கியமாக இரண்டே கட்சிகள் உள்ளன. ஒன்று சீன நாட்டுப் பொது உடைமைக் கட்சி. இது வடபாகத்தில் செல்வாக்குப் பெற்றிருக்கிறது. மற்றொன்று குவோமின்டாங் கட்சி. இது இப்போது முதலாளிகள், பணக்காரர்கள் கையில் சிக்குண்டு இருக்கிறது. சீன நாட்டுப் பொது மக்களோ பரம ஏழைகள். 100க்கு 85 பங்கு குடியானவர்கள்; தொழிலாளிகள். வட்டிக் கடைக்காரர்களும் நில முதலாளிகளும் இவர்களைக் கசக்கிப் பிழிந்து இரத்தத்தை உறிஞ்சிவிடுகிறார்கள். இவர்களுக்காகப் போராடுகிறது சீன நாட்டுப் பொது உடைமைக் கட்சி. முதலாளிகள், பணக்காரர்கள் சார்பில் குவோமின்டாங் சபை சார்ந்து நிற்கிறது. குவோ மின்டாங் சபையைச் சேர்ந்தவர்களில் சிலர் நல்லெண்ணம் உடையவர்கள். பொது ஜனங்களின் நன்மையில் கருத்துள்ள வர்கள். ஆனால், இவர்களுக்கு இங்கு செல்வாக்கு இல்லை. சீன தேசம் குடி ஆட்சியாக மாறிவிட்டது. ஆனால், சீனக் குடியாட்சியில் முதலாளிகளுக்கு அதிகாரமா, பொது ஜனங் களுக்கு அதிகாரமா என்பதை நிர்ணயிப்பதற்காக இப்போது உள்நாட்டுப் போர் நடைபெறுகிறது. முடிவு எப்படியோ?

*குடிஅரசு,* பிப்ரவரி 7, 1948

# மேற்கு அய்ரோப்பிய நாடுகளின் அய்க்கிய சங்கம்

### முதலாளியரசுகளின் சுரண்டல் சங்கம்

மேற்கு அய்ரோப்பாவில் உள்ள தேசங்களை ஒன்று சேர்த்து ஒரு அய்க்கிய சங்கத்தை ஏற்படுத்த வேண்டுமென்று இப்போது இங்கிலாந்தில் முயற்சி செய்யப்படுகிறது. பிரிட்டிஷ் அயல் நாட்டு இலாக்கா காரியதரிசி எர்னஸ்ட் பெவின் என்பவர் இந்தச் சங்கத்தை ஏற்படுத்த முனைந்திருக்கிறார். அய்ரோப்பா கண்டத்தை மேற்கு அய்ரோப்பா என்றும் கிழக்கு அய்ரோப்பா என்றும் பிரிப்பானேன்? மேற்கு அய்ரோப்பிய நாடுகளை மட்டும் ஒன்று சேர்த்து ஒரு சங்கம் அமைக்க வேண்டுவது ஏன்? கிழக்கு அய்ரோப்பிய நாடுகளை இச்சங்கத்தில் சேர்க்காதது ஏன்? என்னும் விஷயங்களைக் கூர்ந்து ஆராய்ந்து பார்த்தால் இந்தச் சங்கத்தின் அந்தரங்க நோக்கத்தைத் தெரிந்து கொள்ளலாம். இந்த மேற்கு அய்ரோப்பா நாடுகளின் யூனியன் ஏற்படுத்துகிற அந்தரங்க நோக்கம் என்னவென்றால், 1. மேற்கு அய்ரோப்பா நாடுகள் ஒன்று சேர்ந்து அவைகளுக்குச் சொந்தமாக உள்ள ஆசியா ஆப்பிரிக்கா கண்டங்களில் இருக்கிற சுதேச நாடுகளை அடக்கி ஆட்சி செய்து, அக்கண்டங்களின் பொருளாதாரங் களைச் சுரண்டிச் சாப்பிடுவதற்காக ஏற்படுத்தப்படுகிற சங்கம். 2. அன்றியும் ருஷியா தேசத்தை எதிர்த்துப் போராடுவதற்கு ஏற்படுத்தப்படுகிற ஒரு கூட்டுச் சங்கம் என்று நிச்சயமாகக் கூறலாம். மேற்கு அய்ரோப்பிய நாடுகளின் அய்க்கிய சங்கம். என்று இதற்குப் பெயர் என்றாலும் இதில், வெளிப்படை யாகவோ மறைமுகமாகவோ அமெரிக்கா தேசம் முக்கியப் பங்கெடுத்துக் கொள்ளும் என்பதில் சிறிதும் அய்யம் இல்லை. இதை விளக்கமாக ஆராய்வோம்.

அய்ரோப்பா கண்டம் மேற்கு அய்ரோப்பா என்றும் கிழக்கு அய்ரோப்பா என்றும் இரண்டாகப் பிரிக்கப்படுகிறது. மேற்கு அய்ரோப்பா நாடுகள் முதலாளித் தன்மையுள்ள நாடுகள். கிழக்கு அய்ரோப்பா நாடுகள் விவசாயிகளையும் தொழிலாளிகளையும் உடைய ஏழை நாடுகள். மேற்கு

அய்ரோப்பா நாடுகளுக்குச் சொந்தமாக ஆசியா, ஆப்பிரிக்கா கண்டங்களிலும் கிழக்கிந்தியத் தீவுகளிலும் மேற்கிந்தியத் தீவுகளிலும் தென் அமெரிக்காவிலும் ஏராளமான பூமிகளும், ஊர்களும் நாடுகளும் உள்ளன. கிழக்கு அய்ரோப்பிய நாடுகளுக்குச் சொந்தமாக வேறுநாடுகள் கிடையா. அன்றியும் கடந்த இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பிறகு, கிழக்கு அய்ரோப்பிய நாடுகள் ருஷியா தேசத்தின் செல்வாக் குடையனவாய்ப் பொதுவுடைமை நாடுகளாகவோ அல்லது சமதர்ம நாடுகளாகவோ மாறிவிட்டன. மேற்கு அய்ரோப்பிய நாடுகள் பழைய முதலாளித் தன்மையுள்ள நாடுகளாகவும் தமக்குக் கீழ்ப்பட்ட வேறு நாடுகளைச் சுரண்டி உறிஞ்சிப் பிழைக்கும் நாடுகளாகவும் இருந்து வருகின்றன. ஆகவே மேற்கு அய்ரோப்பிய நாடுகளில் பொதுவுடைமைக் கொள்கையோ சமதர்மக் கொள்கையோ பரவாதபடி பார்த்துக் கொள்ளவும், மூன்றாவது உலக யுத்தம் ஏற்பட்டால் முதலாளி நாடுகள் ஒன்று சேர்ந்து ருஷியா தேசத்தை எதிர்த்து நசுக்குவதற்காகவும், இந்த மேற்கு அய்ரோப்பிய யூனியன் ஏற்படுத்தப்படுகிறது. அன்றியும் மற்ற தேசங்களின் பொருளாதாரங்களை உறிஞ்சிக் குடிக்க ஏற்ற வழிகளை ஆராயும் யூனியனாகவும் ஏற்படுத்தப் படுகிறது.

இனி மேற்கு அய்ரோப்பிய நாடுகள் எவை என்பதைப் பார்ப்போம். 1. இங்கிலாந்து (கிரேட் பிரிட்டன்), 2. பிரான்சு தேசம், 3. போர்ச்சுகல் தேசம், 4. டச்சு தேசம் (ஒல்லாந்து தேசம்), 5. பெல்ஜியம், 6. ஸ்பெயின், 7. இத்தாலி, 8. ஜர்மனி என்பன. இவைகளில், இத்தாலியும் ஜர்மனியும் இரண்டாவது மகாயுத்தத்தின் பலனாக, ஆப்பிரிக்கா கண்டத்தில் தமக்கிருந்த தேசங்களை இழந்துவிட்டன. ஆகவே, இப்போது மேற்கு அய்ரோப்பா நாடுகள் என்பவை, அதாவது முதலாளித் தன்மையுள்ள நாடுகள் மேலே கூறிய ஆறு தேசங்களாகும். இந்த ஆறு தேசங்களும் பெரும் பகுதியான நிலப்பரப்புகளைத் தமக்குச் சொந்தமாக ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும், கிழக்கு மேற்கு இந்தியத் தீவுகளிலும் உடையனவாயிருக்கின்றன. எந்தெந்தத் தேசங்களுக்கு எந்தெந்த நிலப்பரப்பு சொந்தம் என்பதை விளக்குவோம்.

**1. பிரிட்டன்:** இதற்கு ஆசியாக் கண்டத்தில் சொந்தமாக வுள்ள தேசங்கள் இந்தியா, பர்மா, மலேயா, ஹாங்காங், இலங்கை முதலியன. இப்போது இந்தியா, பர்மா, இலங்கை என்னும் மூன்று தேசங்களுக்கும் (சுயராஜ்ஜியம்?) டொமினியன் அந்தஸ்து கொடுக்கப்பட்டதாகச் சொல்லப்பட்ட போதிலும், வியாபாரம் முதலிய பொருளாதாரங்களைத் தன் கையில்

வைத்திருக்கிறது. போர்னியோ தீவின் வடபகுதியைத் தன்வசம் வைத்திருக்கிறது. ஆஸ்ட்ரேலியா கண்டம் முழுவதும் இதற்குச் சொந்தம். நியூஜீலாந்து, நிக்கோபார், அந்தமான், லக்ஷத் தீவுகள் முதலியவையும் இதற்குச் சொந்தம். ஆப்பிரிக்கா கண்டத்தில் இதற்குச் சொந்தமான தேசங்களாவன ஆங்கிலோ ஈஜிப்டு, சூடான், உகாந்தா, கெனியா, தாங்கநியக்கா நாடு, தென் ஆப்பிரிக்கா அய்க்கிய நாடுகள், நைஜீரியா, ஸோமாலிலாந்து, கோல்டு கோஸ்டு முதலிய பெரும் பகுதி நாடுகள்.

மேற்கு இந்தியத் தீவுகளில் ஜமெய்க்காதீவு, பாமனி தீவுகள், திரினிடாட் முதலிய தீவுகள் சொந்தமானவை.

தென் அமெரிக்காக் கண்டத்தில் கயானா தேசம்.

இவ்வாறு பூனையளவு உள்ள பிரிட்டிஷ் தீவுக்கு யானையளவு இடங்கள் உலகத்திலே சொந்தமாக உள்ளன.

**2. பிரான்சு தேசம்:** இதற்குச் சொந்தமாக ஆசியாக் கண்டத்தில் உள்ள தேசம் இந்து சீனா என்பது. இது பிரான்ஸ் தேசத்தைவிடப் பெரியது, பர்மா தேசத்தைவிட மிகப் பெரியது. காரைக்கால், புதுச்சேரி முதலிய இடங்களும் உள்ளன.

ஆப்பிரிக்காக் கண்டத்தில், அல்ஜீரியா, மொராக்கொ, துனிஷியா, பிரெஞ்சு மேற்கு ஆப்பிரிக்கா, ஸோமாலிலாந்து, மடகாஸ்கர் தீவு, பிரஞ்சு ஈக்வடோரியல் ஆப்பிரிக்கா முதலிய பெரும் பகுதிகள், தென் அமெரிக்காக் கண்டத்தில் பிரெஞ்சு கயானா பிரதேசம். பிரிட்டனைப் போலவே, பூனையளவுள்ள பிரான்சு தேசத்திற்கு யானை அளவுள்ள நிலப்பரப்புச் சொந்தமாக இருக்கிறது.

**3. பெல்ஜியம்:** இது மேற்கு அய்ரோப்பாவில் மிகச்சிறிய தேசம். நமது மாகாணத்தில் ஒரு ஜில்லா அளவுகூட இருக்காது. இந்தச் சின்ன நாட்டுக்கு மிகப்பெரிய தேசம் ஆப்பிரிக்காவில் சொந்தமாயிருக்கிறது. அதாவது காங்கோ பிரதேசம். பெல்ஜியம் 12 ஆயிரம் சதுர மைல் உள்ள பிரதேசம். இதற்கு ஆப்பிரிக்காக் கண்டத்தில் சொந்தமாயிருக்கும் காங்கோ பிரதேசம் 9 லட்சம் சதுரமைல் உள்ளது. அதாவது சுண்டக் காய்க்கும் பனங்காய்க்கும் உள்ள வித்தியாசம்.

**4. போர்ச்சுக்கல் தேசம்:** இதுவும் மேற்கு அய்ரோப் பாவில் சிறு தேசம். இதற்குச் சொந்தமாக ஆப்பிரிக்காவில் பெரும் நிலப் பகுதிகள் உள்ளன. அவை, போர்ச்சுகீஸ் மேற்கு ஆப்பிரிக்கா (அங்கோலா), போர்ச்சுகீஸ் கிழக்கு ஆப்பிரிக்கா (மொஜாம்பிக்), கினியா பிரதேசம் முதலியன. இந்தியாவில் கோவாவும் இதற்குரியது.

**5.** ஸ்பெயின் தேசம்: இதுவும் மேற்கு அய்ரோப்பாவில் உள்ள சிறிய தேசம். இதற்கும் ஆப்பிரிக்காக் கண்டத்தில் பெரும் நிலப்பரப்பு சொந்தமாகவுள்ளது. அதாவது மொராக்கொ பிரதேசம், கினியா பிரதேசம்.

**6.** டச்சு தேசம் (ஒல்லாந்து தேசம்): இதுவும் மேற்கு அய்ரோப்பாவில் சிறு தேசம். ஆனால் மிகப் பெரிய நிலப்பரப்பைத் தனக்குரியதாகப் பிடித்து வைத்திருக்கிறது. கிழக்கு இந்தியத் தீவுகள் (இந்தோனேஷியா தீவுகள்) இதற்குச் சொந்தமாகவுள்ளன. அவையாவன: சுமாத்ரா தீவு, ஜாவா தீவு, போர்னியோ தீவு, செலிபிஸ் தீவு, நியூசினி தீவின் மேற்குப் பகுதிகள். சுண்டைக்காய் அளவுள்ள இந்த டச்சு தேசத்துக்குப் பெரிய பனங்காய் அளவுள்ள தீவுகள் சொந்தமாகவுள்ளன.

இவ்வாறு ஆப்பிரிக்கா கண்டம் முழுவதையும் மேற்கு அய்ரோப்பிய நாடுகள் பங்குபோட்டுக் கொண்டதோடு, ஆசியா கண்டத்திலும், கிழக்கு இந்தியத் தீவுகளிலும் மேற்கு இந்தியத் தீவுகளிலும் பெரும்பான்மையான பகுதி இடங் களைக் கைபற்றிக் கொண்டிருக்கின்றன. இதிலிருந்து மேற்கு அய்ரோப்பிய நாடுகள் முதலாளித் தன்மையுள்ள நாடுகள் என்பதும் இவை ஆப்பிரிக்கா, ஆசியா கண்டங்களில் உள்ள தேசங்களைச் சுரண்டி வாழ வேண்டிய நாடுகள் என்பதும் வெள்ளிடைமலைபோல் விளங்குகிறதல்லவா? இந்த மேற்கு அய்ரோப்பிய நாடுகளில் சில முடி அரசு நாடுகளாகவும் சில குடி அரசு நாடுகளாகவும் உள்ளன. என்றாலும், இவை ஏகாதிபத்திய வெறியும் முதலாளித் தன்மையும் உடைய தேசங்கள். ஆகவே இவைகளை ஒன்று சேர்த்து ஒரு யூனியனை ஏற்படுத்த இங்கிலாந்து முயற்சி செய்கிறது. இதற்கு வேறு பெயர் கூற வேண்டுமானால், 'அய்ரோப்பிய முதலாளி தேசங்களின் கூட்டுறவுச் சங்கம்' என்று கூறலாம். இந்தச் சங்கத்தின் நோக்கம் முதலில் கூறியது போல, ஆப்பிரிக்கா, ஆசியா நாடுகளின் பொருளாதாரத்தை உறிஞ்சிக் கொழுப்பதும், சமயம் நேரிட்டால் ருஷியாவை ஒன்று சேர்ந்து எதிர்ப்பதும் ஆகும். மேற்கு அய்ரோப்பிய யூனியனின் இரகசியம் இதுதான்.

ருஷியா பத்திரிகையாகிய *ப்ரவ்டா* இதைப் பற்றிக் கூறியதாவது: "ஆசியா ஆப்பிரிக்காவிலுள்ள மக்களைச் சுரண்டுவதற்கான பாடத்தை மேற்கு அய்ரோப்பிய நாடு களுக்குச் சொல்லிக் கொடுப்பதுதான் தோழர் பெவின் உடைய திட்டம்."

*நியூடைம்ஸ்* பத்திரிகை எழுதியதாவது: பிரிட்டிஷ், பிரெஞ்சு, டச்சு, பெல்ஜியம், போர்ச்சுகல் நாடுகள், ஆசியா

விலும் ஆப்பிரிக்காவிலும் இவைகளுக்குரிய நாடுகளை எப்படிச் சுரண்டுவது என்னும் வழிகளை யோசிப்பதுதான் மேற்கு அய்ரோப்பிய நாடுகளின் யூனியன். அன்றியும், சோவியத் யூனியனுக்கும் இதர ஜனநாயக நாடுகளுக்கும் எதிராக மேற்கு அய்ரோப்பிய நாடுகளைத் தூண்டி விடுவதற்கு ஏற்படுத்துவது தான் மேற்கு அய்ரோப்பிய அய்க்கிய சங்கம்.

இதுகாறும் எடுத்துக் காட்டியதிலிருந்து நாம் தெரிந்து கொள்ளும் அரசியல் ஜோசியம் என்னவென்றால், இனிவரப் போகிற மூன்றாவது உலக யுத்தத்தில் இரண்டு கொள்கை களுக்கு யுத்தம் நடக்கப் போகிறது. இரண்டு கொள்கைகளில் ஒன்று ஏகாதிபத்தியத் தன்மையுள்ள முதலாளி நாடுகள். மற்றொன்று பொதுவுடைமைக் கொள்கையுள்ள ஜனநாயக நாடுகள். அதாவது முதலாளி, தொழிலாளி போராட்டத்திற்கு விதை விதைக்கப்படுகிறது என்பதுதான், மேற்கு அய்ரோப்பிய அய்க்கிய சங்கம் என்பதன் கருத்துரையாகும்.

இப்போது மேற்கு அய்ரோப்பிய அய்க்கிய சங்கத்துடன் நார்வே, சுவீடன் முதலிய தேசங்களையும் சேர்த்துக்கொள்ளப் போவதாகத் தெரிகிறது. இந்தத் தேசங்களுக்கு, உலகத்திலே வேறெங்கும் சொந்தமாக ஊர்கள் கிடையா. ஆனால் இந்தத் தேசங்களை இச்சங்கத்துடன் சேர்த்துக்கொண்டு ருஷியாவை எதிர்த்துப் போராடப் பிரிட்டன் யோசிக்கிறது போலும். உலகத்திலே பொதுவுடைமை பரவாதபடி தடுக்க ஏகாதிபத்தி யமும் முதலாளித் தன்மையும் உள்ள நாடுகளை எல்லாம் பிரிட்டன் ஒன்று சேர்த்து வருகிறது. இது, அடுத்து வரப் போகிற மூன்றாவது உலக யுத்தத்திற்கு முஸ்தீப்புச் செய்வதாகும்.

*குடிஅரசு,* மார்ச் 6, 1948

# வந்த சுயராஜ்யம் என்ன செய்யப் போகிறது?

சுயராஜ்யம் வந்தது. ஆனால், இன்னும் நிலைகொள்ள வில்லை. வந்த சுயராஜ்யம் நிலைத்து நின்று செயல்புரிய சில ஆண்டுகள் ஆகும். நிலைகொள்கிற வரையில், நாட்டில் குழப்பங்களும் கலகங்களுமாகத்தான் இருக்கும். ஏன்? சுயநலக் காரர்களும், பிற்போக்காளர்களும், ஏகபோகப் பேராசைக் காரரும், முதலாளிக் கும்பலும் வந்த சுயராஜ்யத்தை, அதிகாரத்தைத் தங்கள் பக்கம் திருப்பித் தங்கள் ஆதிக்கத்தில் வைத்துக்கொள்ளப் பாடுபடுவார்கள். அதற்கு வேண்டிய தந்திரங்களையும் சூழ்ச்சிகளையும் செய்துவருவார்கள். செய்து வருகிறார்கள். செய்து கொண்டுதான் இருக்கிறார்கள். அதிகாரம் தங்கள் கைக்கு வந்த பிறகு, பொது ஜனங்களின் நன்மையைக் கவனிக்காமல் சுயநலத்தையே கவனித்துக் கொள்வார்கள். இது எல்லா நாட்டிலும், எல்லாத் தேசங்களிலும் எல்லாக் காலங் களிலும் எப்போதும் நடந்து வருகிற இயற்கை. புதிதாகச் சுயராஜ்யம் பெற்ற எல்லா நாடுகளின் வரலாற்றையும் புரட்டிப் பார்ப்போமானால் சுயநலக்காரர்கள் அதிகாரத்தைக் கைப் பற்றப் பகீரதப் பிரயத்தனம் செய்து வந்த சதிகாரச் செய்கையைக் காணலாம். துரதிர்ஷ்டவசமாக அதிகாரமானது சுயநலச் சதிகாரர்களின் கைக்குப் போய்விடுமானால் அந்தோ! அந்நாட்டின் கதி அதோகதிதான். பொதுஜனங்களின் கையில் அதிகாரம் போகுமானால் அந்நாடு க்ஷேமமும் சுகமும் அடையும். ஆனால், சதிகாரக்கூட்டம் எப்போதும் சுய உருவத்துடன் வேலை செய்வதில்லை. பொது ஜனங்கள் ஊழியர் என்னும் போர்வையில் மறைத்துக்கொண்டு அதிகாரத்தைக் கைப்பற்ற முயற்சி செய்யும்.

நமது நாட்டிலும், இந்த நிலைமை இப்போது ஏற்பட்டிருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில்தான், அதிகார பீடத்தில் இருப்பவர், திடபுத்தியுள்ளவர்களாகவும், உறுதியும், அறிவும், சாமர்த்தியமும் உள்ளவர்களாகவும் ராஜதந்திரமும் நல்லெண்ணமும் உடையவர்களாகவும் இருந்து சுயராஜ்யத்தைப் பொதுமக்களின் நன்மைக்கான முறையில் அமைக்க வேண்டும்.

அதிகார பீடத்தில் அமர்ந்து இருப்பவர் சுயநலக்காரர் களாகவும், குறுகிய நோக்கம் உடையவர்களாகவும், முதலாளிக் கூட்டத்தின் கைப்பாவைகளாகவும் இருப்பார்களானால், நாடு சீர்குலையும்; நாட்டில் சச்சரவும், புரட்சியும், குழப்பங்களும் ஏற்படும். உள்நாட்டுக் குழப்பமும், கொந்தளிப்பும் ஏற்படும். இந்த நிலை அபாயகரமானது.

சீன தேசம் 1912ல் சுயராஜ்யம் பெற்றது. அதாவது குடி அரசாக மாறியது. ஆனால் க்ஷேமம் ஏற்படவில்லை. முப்பத் தாறு வருஷங்கள் ஆகின்றன. இன்னும் சீன தேசம் சுகப்பட வில்லை. உள்நாட்டுப் போரும், குழப்பமும், கூச்சலும், சஞ்சலமும், கவலையும் சீன தேசத்தில் இன்றும் தாண்டவம் ஆடுகின்றன. பொருளாதாரம் பெருகவில்லை. கைத்தொழில் விருத்தியாகவில்லை விவசாயம் பெருகவில்லை. பஞ்சமும், பட்டினியும் மக்களை வாட்டுகிறது. லஞ்சமும், கைக்கூலியும் உத்தியோகஸ்தர்களிடையே நிலைத்துவிட்டன. அமெரிக்கா தேசத்தினிடமிருந்து கடனாக வாங்கும் கோடிக்கணக்கான டாலர்கள் மாயமாய் மறைந்துவிடுகின்றன. சீன நாடு சுயராஜ்யம் பெற்றும், அதிகாரமானது சுயநலச் சதிகாரர் களின் கையில் சிக்கிக் கொண்டது. ஆகவே, சீன தேசம் சுகப்படாமல் சீரழிந்து கொண்டிருக்கிறது. சுயநலம் படைத்த முதலாளிக் கூட்டத்தார் சீன நாட்டு அதிகாரத்தைக் கைவசப் படுத்திக் கொண்டு கோடானு கோடிச் சீனப் பொது மக்களைச் சீரழித்து வருகிறார்கள். பஞ்சமும், பட்டினியும், வறுமையும்' ஏழ்மையும், துன்பமும் துயரமும், குழிந்த கண்களும் சுருங்கிய வயிறுகளும், சுயராஜ்யம் பெற்ற சீன நாட்டில் இந்த முப் பத்தினான்கு ஆண்டுகளாகக் காட்சியளித்துக் கொண்டிருக் கின்றன.

அதே சமயத்தில் துருக்கியையும், ருஷ்யாவையும் பாருங்கள். சீன தேசம் சுயராஜ்யம் அடைந்த சில ஆண்டுகளுக்குப் பிறகுதான் துருக்கியும், ருஷியா தேசமும் சுயராஜ்யம் பெற்றன. பெற்ற சுயராஜ்யத்தைச் சுயநலக் கூட்டத்தின் கையில் சிக்காதபடி காமல் பாக்ஷாவும், லெனினும் சுயராஜ்யத்தைப் பொதுமக்கள் ஆதிக்கத்திற்குக் கொண்டு வந்தார்கள். உறுதியும் ஊக்கமும் அறிவும் ஆற்றலும் ராஜதந்திரமுமுள்ள கமால் பாக்ஷாவும், லெனினும், பிற் போக்குள்ள சுயநலக்காரர்களின் கையில் சுயராஜ்யம் சிக்கிக் கொள்ளாதபடி தடுத்து ஜனங்களின் க்ஷேமத்துக்கான முறையில் ஆட்சி செய்தார்கள். அதன் பயனாகத் துருக்கியும் ருஷியாவும் இப்போது பல துறைகளிலும் முற்போக்கு அடைந் திருக்கின்றன. ஜனங்களும் `க்ஷேமத்துடனும் சந்தோஷத்

துடனும் வாழ்கிறார்கள். முன்னேற்றமும் அபிவிருத்தியும் வளர்ந்து வருகின்றன. ஏன்? ஹிட்லரின் பலத்த எதிர்ப்பை, ருஷியா எதிர்த்துப் போரிட்டு முறியடித்து வெற்றி பெற்றதோடு, உலகத்திலே வல்லரசாகவும் உயர்ந்துவிட்டது.

சீனா முதலில் சுயராஜ்யம் பெற்றது. ருஷியா சில ஆண்டுக்குப் பிறகு சுயராஜ்யம் பெற்றது. ஆனால் சீனா சீர் குலைந்து சின்னாபின்னப்பட்டுக் கிடக்கிறது. ருஷியா க்ஷேமமாய் வாழ்ந்து வல்லரசாகக் காட்சியளிக்கிறது. ஏன்? சீன நாட்டு ஆட்சி, சிறு கூட்டத்தினரான சுயநலக்காரரின் க்ஷேமத்துக்காக நடைபெறுகிறது. பொதுமக்களின் நன்மை கவனிக்கப்படவில்லை. ருஷிய நாட்டு ஆட்சியோ பொது ஜனங்களின் க்ஷேமத்துக்காகவே நடைபெறுகிறது. ஆகவே முன்னேற்றமடைந்திருக்கிறது.

நமது கண் முன் காணப்படும் இந்தத் தேசச் சரித்திரப் பாடங்களை நாம் நன்கு உணரவேண்டும். இந்தியா இப்போது சுயராஜ்யம் பெற்றிருக்கிறது. ஆனால், வந்த சுயராஜ்யம் இன்னும் நிலைப்பட்டு அமரவில்லை. இந்தச் சந்தர்ப்பத்தை, வழக்கம்போல, எல்லாத் தேசங்களிலும் நடக்கிறபடி, சந்தர்ப்ப வாதிகளும், முதலாளிக் கூட்டமும், சுயநலக் கும்பல்களும், மதத்தின் பேரால் உழைக்காமல் வாழும் சோம்பேறிக் கூட்டமும் அதிகாரத்தைக் கைப்பற்ற முயற்சி செய்கிறார்கள். சதிகாரக் கும்பல், இந்தியாவுக்குக் கிடைத்த சுயராஜ்யத்தை, பொதுமக்கள் கையில் இருக்கவேண்டிய அதிகாரத்தை, சுயநல ராஜ்யமாகச் செய்து கொள்ளப் பலமாகப் பிரயத்தனம் செய்கிறது. இதன் விளைவுதான் காந்தியாரின் கொலை. காந்தியாரின் கொலைக்குக் காரணமாக இருந்தவர்கள் இன்னும் தண்டிக்கப்படவில்லை. உறுதியான, பலமான ஆட்சி இப்போது அரசுபீடத்தில் இருந்து சுயராஜ்யத்தைப் பொது மக்கள் க்ஷேமத்துக்காக அமைக்கவேண்டும். சுயநலவாதிகளின், சந்தர்ப்பவாதிகளின் கையாட்களாக இருந்து கொண்டு சுயராஜ்யத்தைக் சுயநல ராஜ்யமாக்கக் கூடாது. நாட்டைப் பாழ்படுத்தக்கூடாது. ஹிட்லர்களாகவும் முசோலினிகளாகவும் இருந்து நாட்டுக்கும் மக்களுக்கும் கேடு சூழக்கூடாது.

காந்தியார் போன்ற உத்தமர்களின் உயிருக்கே உலை வைக்கும் கொடியவர்களின் இயக்கம், நாட்டில் பரவியிருக் கிறது. இக்கொடியவர்களின் கையில் அரசாட்சியும் அதிகாரமும் சிக்கிவிடுமானால் இந்திய தேசத்தின் கதி அதோகதிதான்.

சுயராஜ்யம் பெற்றால் மட்டும் போதாது. அதை நல்ல முறையில் ஆட்சி செய்யத் திறமையும், அறிவும், ஆற்றலும், நல்லெண்ணமும் வேண்டும். இது ஆபத்தான நேரம்,

சுயராஜ்யம் வந்தது வராததற்குள்ளாகவே, இப்போதைய ஆட்சி சுயநல ஆட்சி, முதலாளிகளின் ஆட்சி என்று வதந்தி உலவுகிறது. தேசத் தொண்டர்களின் தியாகங்களும் உழைப்பும் வீணாய்விட்டன என்றும், பொது ஜனங்களின் நன்மை கவனிக்கப்படவில்லை என்றும் எங்கும் பேசப்படுகிறது. லஞ்சமும் கைக்கூலியும் உத்தியோகஸ்தர்களிடம் தாண்டவம் ஆடுகின்றன என்று அரசாங்க அதிகாரிகளே பகிரங்கமாக ஒப்புக்கொள்கிறார்கள்.

இந்திய சுயராஜ்யம் சீனாவைப் போலச் சீர்கெட்டு சிறுமையடையப் போகிறதா? அல்லது, துருக்கி, ருஷியா தேசங்களைப் போல சிறப்புற்றுச் செம்மையடையப் போகிறதா? வந்த சுயராஜ்யம் எங்கே போய் யார் கையில் சிக்கிக் கொண்டு நாட்டை எந்நிலையில் விடுமோ தெரியவில்லை. தேசத் தொண்டர்கள் தியாகம் செய்ததும் சிறைச்சாலைக்குச் சென்றதும் போதும் என்று சும்மா இருக்கக்கூடாது. இனிமேல் தான் அவர்கள் விழிப்பாக இருந்து நாட்டில் நல்ல ஆட்சி, பொதுஜன க்ஷேமத்துக்கான ஆட்சி நிலைக்கும்படி வேலை செய்யவேண்டும். பொது ஜனங்கள் இவ்விஷயத்தில் கண்ணும் கருத்துமாய் இருக்கவேண்டும்.

*குடிஅரசு,* மே 1, 1948

# உயர்திரு. விபுலாநந்த அடிகள் எழுதிய கட்டுரைகள்

பேராசிரியர், உயர்திரு. விபுலாநந்த அடிகள் அவ்வப் போது பத்திரிகைகளுக்கு எழுதிய கட்டுரைகளின் பட்டியலைத் தொகுத்துக் கீழே தந்துள்ளேன். இது பூரணமான பட்டிய லன்று; விடுபட்ட கட்டுரைகள் பல உள்ளன. உதாரணமாக 'ஏனாதிமோதிரம்' என்னும் கட்டுரையை எழுதியுள்ளார்கள்; அதனைப் படித்தும் இருக்கிறேன். எந்தப் பத்திரிகையில் வெளிவந்ததென்றும் ஞாபகமில்லை. இதைப் போன்று பல கட்டுரைகள் இப்பட்டியலிற் குறிக்கப்படாமல் விடுபட்டுள்ளன. அறிந்த அன்பர்கள், விடுபட்ட கட்டுரைகளின் பட்டியலை வெளியிடுவார்களாக.

பண்டித மயில்வாகனனார் (B.Sc., London) என்னும் பெயர் தாங்கியிருந்த காலத்தில் சுவாமிகள் எழுதியவை :

**1.** பூஞ்சோலை காவலன்: வங்கநாட்டுக் கவி ரவீந்திரநாத் தாகூர் அவர்கள் இயற்றிய 'கார்டனர்' என்னும் ஆங்கிலப் பாக்களின் தமிழ் மொழிபெயர்ப்பு. *செந்தமிழ்,* தொகுதி 20, பக்கம் 301-307.

**2.** மேற்றிசைச் செல்வம்: *செந்தமிழ்,* தொகுதி 20, பக்கம் 381-390; 469-475.

**3.** விஞ்ஞான தீபம்: *செந்தமிழ்,* தொகுதி 20, பக்கம் 431-440. *செந்தமிழ்,* தொகுதி 21. பக்கம் 1-10; 61-68.

**4.** பொருணூற் சிறப்பு: *செந்தமிழ்,* தொகுதி 21, பக்கம் 123-130; 560-561.

பிரமச்சரிய ஆச்சிரமம்கொண்டு பிரபோத சைதன்யர் என்னும் பெயருடன் இருந்த காலத்தில் சுவாமிகள் எழுதியவை :

**5.** சூரிய சந்திரோற்பத்தி: (விஞ்ஞான தீபம் என்னும் கட்டுரையின் தொடர்ச்சி) *செந்தமிழ்,* தொகுதி 21, பக்கம் 245-251.)

**6.** மலைகடலுற்பத்தி: *செந்தமிழ்,* தொகுதி 21, பக்கம் 349-356.

**7.** மேற்றிசைச் செல்வம்: (*செந்தமிழ்,* தொகுதி 20, பக்கம் 475 தொடர்ச்சி) *செந்தமிழ்,* தொகுதி 21, பக்கம் 185-192.

**8. யவனபுரத்துக் கலைச் செல்வம்:** *செந்தமிழ்*, தொகுதி 21, பக்கம் 501-507.

**9. பூஞ்சோலை காவலன்:** (ரவீந்திரநாத் தாகூர் அவர்கள் இயற்றிய பாக்களின் மொழிபெயர்ப்பு. *செந்தமிழ்*, தொகுதி 20, பக்கம் 307இன் தொடர்ச்சி) *செந்தமிழ்*, தொகுதி 22, பக்கம் 69-77.

**10. மேற்றிசைச் செல்வம்:** (*செந்தமிழ்*, தொகுதி 21 தொடர்ச்சி) *செந்தமிழ்*, தொகுதி 22, பக்கம் 121-130.

துறவு பூண்டு ஸ்ரீமத் விபுலாநந்த சுவாமிகள் என்னும் பெயருடன் விளங்கிய காலத்தில் எழுதிய கட்டுரைகள் :

**11. மதங்க சூளாமணி:** *செந்தமிழ்*, தொகுதி 22, பக்கம் 321-344; 361-368; 401-422; 467-489. தொகுதி 23, பக்கம் 1-24; 73-86; 121-130; 161-172; 201-206 (இக்கட்டுரைகளைத் தொகுத்து மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பிரசுரமாக *மதங்க சூளாமணி* என்னும் பெயருடன் வெளியிடப்பட்டது. இது நாடகத் தமிழ் ஆராய்ச்சி நூல்.)

**12. மகாலக்ஷ்மி தோத்திரம்:** (செய்யுள்) *செந்தமிழ்*, தொகுதி 22, பக்கம் 241-245.

**13. விஞ்ஞான தீபம்:** (*செந்தமிழ்*, 21ம் தொகுதி தொடர்ச்சி) *செந்தமிழ்*, தொகுதி 22, பக்கம் 209-222.

**14. இமயஞ்சேர்ந்த காக்கை:** *தமிழ்ப்பொழில்*, 16ம் துணர், பக்கம் 367-375.

**15. உள்ளங்கவர் கள்வன்:** *தமிழ்ப்பொழில்*, 16ம் துணர், பக்கம் 335-341.

**16. திருக்குறள் முதலதிகாரமும் திருச்சிவபுரத்துத் திருப்பதிகமும்:** *தமிழ்ப்பொழில்* 16ம் துணர், பக்கம் 207-213.

**17. நீரரமகளிர் இன்னிசைப் பாடல்:** *தமிழ்ப்பொழில்*, 16ம் துணர், பக்கம் 291-296.

**18. பண்ணுந் திறனும்:** *தமிழ்ப்பொழில்*, 16ம் துணர், பக்கம் 391-397; 439-448.

**19. லகரவெழுத்து:** *தமிழ்ப்பொழில்*, 16ம் துணர், பக்கம் 189-195.

**20. உணவு:** *தமிழ்ப்பொழில்*, 17ம் தொகுதி, பக்கம் 9-13.

**21. குழலும் யாழும்:** *தமிழ்ப்பொழில்*, 17ம் தொகுதி, பக்கம் 26-30; 35-43.

**22. கண்ணகியார் வழக்குரை:** *தமிழ்ப்பொழில்*, 17ம் தொகுதி, பக்கம் 59-61.

**23. எண்ணும் இசையும்:** *தமிழ்ப்பொழில்*, 17ம் தொகுதி, பக்கம் 67-71; 45-107; 127-130; 158-160.

**24.** பாலைத் திரிபு: *தமிழ்ப்பொழில்*, 17ம் தொகுதி, பக்கம் 246-249; 278-281; 306-309; 338-341.

**25.** பாலைத் திரிபு: *தமிழ்ப்பொழில்*, 18ம் தொகுதி, பக்கம் 5-12.

**26.** சுருதி வீணை: *தமிழ்ப்பொழில்*, 18ம் தொகுதி, பக்கம் 41-48; 81-87.

**27.** இயலிசை நாடகம்: *தமிழ்ப்பொழில்* 18ம் தொகுதி, பக்கம் 160-170.

**28.** கங்கையில் எழுதியிட்ட ஓலை: (செய்யுள்) *தமிழ்ப் பொழில்*, 18ம் தொகுதி, பக்கம் 411-441.

**29.** சோழமண்டலத் தமிழும் ஈழமண்டலத் தமிழும்: *கலைமகள்*, பக்கம் 82-88.

**30.** தமிழில் எழுத்துக் குறை: *கலைமகள்*.

**31.** ஆங்கில வாணி: (ஆங்கில நாட்டின் கலைச் செல்வத்தை விளக்குவது.) பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களின் 60ம் ஆண்டு நிறைவு விழா வெளியீடாகிய *மணிமலரில்* வெளிவந்துள்ளது.

**32.** மானசவாவி: திரு. பண்டித ந. மு. வெங்கடசாமி நாட்டார் அவர்களின் 60வது ஆண்டு நிறைவு விழா மணிமலரில் வெளியிடுவதற்காக எழுதப்பட்டது. இந்த மணிமலரை அச்சிடும் பொறுப்பை ஏற்றிருந்த திரு.ச.க. கோவிந்தசாமிப்பிள்ளை எம்.ஏ. அவர்கள் திடீரென்று காலஞ் சென்றுவிட்டபடியால் மணிமலர் வெளியிடப்படவில்லை. ஆகவே, மானசவாவிக் கட்டுரையும் வெளியாகவில்லை.

**33.** *யாழ்நூல்*: இசைத் தமிழ் நூல். சுவாமிகள் 14 ஆண்டுகளாக ஆராய்ச்சி செய்து வெளியிட்ட அரிய நூல். இது அரங்கேற்றம் செய்யப்பட்டது. 5-6-47ல் அடுத்த மாதத்தில் அடிகள் இறைவன் அடி எய்தினார்கள்.

(அடிகள் எழுதிய ஆங்கிலக் கட்டுரைகளிற் சில :-)

**1. The book of books of Tamil Land** (திருக்குறளைப்பற்றியது). *Vedanta Kesari*, 1940.

**2. The Harps of Ancient Tamil Land and the twenty two srutis of Indian Musical Theory**, *Calcutta Review*, 1941.

**3. The Origin and Growth of Tamil Literature. The Calcutta Heritage of India**, *Sri Ramakrishna Centenary Memorial Vol. III.*

**4. Phonetics** (தமிழ் நெடுங்கணக்கின் ஒலி வடிவத்தைப் பற்றியது). *Modern Review ?*

*ஈழமணி*, மலர் 1, இதழ் 2, 1948

# பேராசிரியர், உயர்திரு. விபுலாநந்த அடிகள் வரலாற்றுக் குறிப்பு

1892 மார்ச்சு திங்கள் 29 நாள் (கர ஆண்டு பங்குனி 16ம் நாள் ஞாயிற்றுக்கிழமை உதயத்தில் பூரட்டாதி நக்ஷத்திரத்தில்) பிறப்பு.

1898 கல்விப்பயிற்சி தொடங்கப்பட்டது.

1901 தகப்பனாருடன் கதிர்காம யாத்திரை. கல்முனை என்னும் ஊரில் உள்ள ஆங்கிலப் பாடசாலையில் சேர்ந்து ஆங்கிலம் பயின்றார்.

1904 மட்டக்களப்புப் பட்டினத்தில் உள்ள மெதொடிஸ்து மிஷன் மத்தியப் பாடசாலையில் சேர்ந்து கல்வி பயின்றார்.

1906 மட்டக்களப்பில் செய்ன்ட் மிக்கேல் பாடசாலையில் கல்வி பயின்றார். இவ்வாண்டு டிசம்பரில் கேம்ப்ரிட்ஜ் ஜூனியர் பரீக்ஷையில் தேர்ச்சியடைந்தார்.

1908 கேம்ப்ரிட்ஜ் சீனியர் பரீக்ஷையில் தேர்ச்சியடைந்தார்.

1909-10 மட்டக்களப்பு செய்ன்ட் மிக்கேல் பாடசாலையில் ஆசிரியர்.

1911 தாயார், கண்ணம்மையார் காலஞ்சென்றார்கள். ஆகவே, சொந்த ஊருக்குச் சென்று, கல்முனையில் உள்ள கத்தோலிக்க மிஷன் பாடசாலையில் ஆசிரியராக அமர்ந்தார்.

1911-12 கொழும்பு நகர் ஆசிரியர் கல்லூரியில் ஆசிரியப் பயிற்சி.

1913-14 மட்டக்களப்பு செய்ன்ட் மிக்கேல் கல்லூரியில் ஆசிரியர்.

1915-16 இலங்கை அரசினர் டெக்னிகல் கல்லூரியில் விஞ்ஞானம் பயின்று தேர்ச்சியடைந்தார். மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பண்டித பரீக்ஷையில் தேர்ச்சியடைந்தார். இது முதல், பண்டித மயில்வாகனனார் என்னும் பெயர் பெற்றார்.

1917 கொழும்பு அரசினர் கல்லூரியில் வேதி நூல் உதவி ஆசிரியர்.

1920 இவ்வாண்டில் யாழ்ப்பாணத்து செய்ன்ட் பேற்றிக்ஸ் கல்லூரியில் வேதி நூல் தலைமை ஆசிரியர். B.Sc., (London) பரீக்ஷையிலே தேர்ச்சியடைந்தார்.

1920-22 மானிப்பாய் இந்துக் கல்லூரியின் தலைமை ஆசிரியர். இக்காலத்தில் ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்திற்குச் சிறந்த தொண்டு புரிந்தார்.

1922 சென்னை, மயிலாப்பூர் இராமகிருஷ்ண மடத்தில் சேர்ந்தார். பிரபோத சைதன்யர் என்னும் பிரமசரிய ஆசிரமப் பெயர் சூட்டப்பெற்றார். இராமகிருஷ்ண மடத்தில் வெளி யிடப்பெற்ற *இராமகிருஷ்ண விஜயம்* (தமிழ்), *வேதாந்தகேசரி* (ஆங்கிலம்) பத்திரிகைகளுக்கு ஆசிரியராக இருந்தார். இக்காலத்தில் சென்னையில் பல கழகங்களிலும் சங்கங் களிலும் சொற்பொழிவு நிகழ்த்தினார். *செந்தமிழ்* முதலிய பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதினார்.

1924 சித்திரை பௌர்ணமியில் துறவு பூண்டு விபுலாநந்த சுவாமி என்னும் துறவுத் திருநாமம் பெற்றார்.

1925 மார்ச்சு திங்கள் காலி, நாவலப்பிட்டி, கண்டி, மாத்தளை, தொப்பிதோட்டம், வதுளை முதலிய ஊர்களில் அழைக்கப்பட்டுச் சொற்பொழிவுகள் செய்தார்.

1925 ஏப்ரல் திங்கள் மட்டக்களப்பில் ஆங்கிலக் கலாசாலை ஏற்படுத்துவதுபற்றி யோசிக்க, கல்லடியுப்போடை என்னும் ஊரில் ஒரு மகாசபை கூட்டினார். யாழ்ப்பாணம் மாணவர் மகாநாட்டில் தலைமை வகித்தார். சைவ மாணவர் சங்கத்தில் விரிவுரை.

1925 ஜூன் திங்கள் காரைதீவு, ஆனைப்பத்தி, மண்டூர், ஆரப்பற்றை என்னும் ஊர்களிலுள்ள பாடசாலைகளைப் பராமரிக்கும் பொறுப்பைக் கையேற்றார். இப்பாடசாலைகள் மட்டக்களப்பு விவேகாநந்த சபையின் ஆதரவில் நடைபெற்றன.

1925 ஜூன் திங்கள் 8ம் நாள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் மகாமகோபாத்தியாய சுவாமிநாதையருக்கு அளித்த பொற்கிழி விழாவிற்கு (ஈழநாட்டு வித்துவான்கள் பிரதிநிதியாக) சென்றார். 9ம் நாள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் விரிவுரை நிகழ்த்தினார்.

1925 ஆகஸ்டு திங்கள் கொழும்பு, கண்டி, நாவலப்பிட்டி, அநுராதபுரம் முதலிய ஊர்களில் சமயப் பிரசாரம்.

1925 அக்டோபர் திங்கள் 28ம் நாள் காரைதீவு சாரதா வித்தியா லயத்தின் அஸ்திவாரக்கல் நாட்டினார். (இவ்வித்தி யாலயம் பெண்கள் படிப்பதற்காக, சுவாமிகளின் அம்மா னாகிய இராமநாத பிள்ளை அவர்களால் ஏற்படுத்தப்பட்டது. தமது காணிகளையெல்லாம் இராமநாத பிள்ளை அவர்கள் இவ்வித்தியாலயத்திற்கு அளித்தார்.)

1925 நவம்பர் திங்கள் 6ம் நாள் கல்லடியுப்போடை சிவாநந்த வித்தியாலயத்தின் அஸ்திவாரக்கல் நாட்டினார்.

(இந்த வித்தியாலயத்திற்கு நிதியளித்தவர்கள் கல்லடியுப் போடையில் பிரபல தனவந்தர்களான கதிர்காமத் தம்பியுடையார், சபாபதிப்பிள்ளை உடையார் என்பவர்களின் சந்ததியாராவர்.

1925 நவம்பர் திங்கள் 30ம் நாள் திருக்கோணமலை ஆங்கிலக் கலாசாலைப் புதுக்கட்டிடத்திற்கு அஸ்திவாரக்கல் நாட்டினார்.

1926 பிப்ரவரி திங்கள் 15ம் நாள் யாழ்ப்பாணத்து வண்ணார் பண்ணை வைத்தியேஸ்வரர் வித்தியாலயம், விவேகாநந்த வித்தியாலயம் என்னும் பாடசாலைகளை நடத்தும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்.

1926 மார்ச்சு திங்கள் 24ம் நாள் விவேகாநந்த சபையார் வேண்டுகோளின்படி கொழும்பு நகரில் விவேகாநந்த வித்தி யாலயத்தைத் தொடங்கி வைத்தார். இம்மாதத்தில், திருக்கோணமலை, மட்டக்களப்பு பகுதிகளில் கல்வி விஷயங் களை யோசிக்கும் சபையின் அங்கத்தினராக இலங்கை அரசாங்கத்துக் கல்வி இலாகா அதிகாரிகளால் நியமிக்கப்பட்டார்.

1926 ஏப்ரல் திங்கள் 7ம் நாள் கல்கத்தா வேலூரில் உள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண தலைமை மடத்தில் நடைபெற்ற மகாநாட்டில் இலங்கைப் பிரதிநிதியாகச் சென்றார்.

1926 ஜூன் வைத்தியேஸ்வர வித்தியாலயத்தின் சார்பாக, அனாதைச் சிறுவர்களின் பொருட்டு மாணவ இல்லம் ஏற்படுத்தினார்.

1927 ஏப்ரல் திங்கள் 19ம் நாள் மதுரை சேதுபதி அரசர் தலைமையில் கூடிய, தமிழ்ப் பல்கலைக்கழகம் நிறுவுவதுபற்றி ஆலோசனைக் கழகத்தில் தமது கருத்துகளை விளக்கிக் கூறினார்.

1927 ஆகஸ்டு திங்கள் 27ம் நாள் கண்டி சைவ மகாசபை ஆண்டு விழாவிற்குத் தலைமை வகித்தார்.

1927 நவம்பர் திங்கள் 26ம் நாள் யாழ்ப்பாணம் மாணவர் மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார். 27ம் நாள் இலங்கைக்கு விஜயம் செய்த மகாத்மா காந்தியை, மாணவர் மகாநாட்டுத் தலைவர் என்னும் முறையில் வரவேற்றார்.

1928 ஜூன் முன்பு பொறுப்பேற்ற பாடசாலைகளின் பொறுப்பைப் பிறரிடம் ஒப்படைத்து திருக்கோணமலை ஆங்கில கலாசாலையை வளர்க்கும் நோக்கத்தோடு இப்பாட சாலைக்குத் தலைமைப் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்.

1929 மே திங்கள் கல்லடியுப்போடைச் சிவாநந்த வித்தியாலயத் திறப்புவிழா. இந்த வித்தியாலயத்தின் நிலத்தையும்

கட்டிடத்தையும், கல்லடியுப்போடை தமிழ் வித்தியாலயத்தையும் கதிர்காமத் தம்பி உடையார், சபாபதிப்பிள்ளை உடையார் சந்ததியார் நன்கொடையாக அளித்தார்கள். இந்நன்கொடைகளை, இலங்கை இராமகிருஷ்ண சங்கத்துக்காக நமது சுவாமிகள் கையேற்றார்கள்.

1930 ஜூலை திங்கள் திருக்கோணமலை கலாசாலைத் தலைமை ஆசிரியர் பொறுப்பை இன்னொருவரிடம் கொடுத்துவிட்டு, சங்கத்துப் பாடசாலைகளைப் பரிபாலிக்கும் பொறுப்பைக் கையேற்றார்கள். யாழ்ப்பாணத்து ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்தார் சுவாமிகளைப் பண்டித பரீக்ஷகராக நியமித்தார்கள்.

1931 ஜனவரி திங்கள் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் வேண்டுகோளின்படியும், சங்கத்துப் பெரியோர்கள் கருத்துப்படியும் அண்ணாமலைச் சர்வகலா சாலைத் தமிழ்ப் பேராசிரியராக அமர்ந்தார்கள். சர்வகலா சாலையில் பெற்ற ஊதியத்தை, சிவாநந்த வித்தியாலயத்திற்கு அளித்தார்கள்.

1931-1933 அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர்.

1934 கரந்தைத் தமிழ்ச் சங்கத்து 22ம் ஆண்டு விழாவிற்குத் தலைமை.

1935 டிசம்பர், வேலூரில் நடைபெற்ற சைவ சித்தாந்த சமாஜத்தின் 30ம் ஆண்டு விழாவிற்குத் தலைமை பூண்டார்.

சென்னைப் பல்கலைக்கழகத்தார், தமிழ் ஆராய்ச்சிக் குழுவில் அங்கத்தினராக நியமித்தார்கள்.

1936 பிப்ரவரி திங்கள் 22ம் நாள் சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'யாழ்ப்பாணன்' என்னும் சொற்பொழிவு.

24ம் நாள் 'தமிழிசை' என்னும் சொற்பொழிவு.

25ம் நாள் 'சிலப்பதிகார அரங்கேற்றுக் காதை' சொற்பொழிவு.

27ம் நாள் '7ம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னரும் இருந்த தமிழிசை' என்னும் சொற்பொழிவு.

28ம் நாள் 'பழந்தமிழகத்தின் சிற்பாசாரிகள்' என்னும் சொற்பொழிவு.

29ம் நாள் 'பரிசனவேதி' என்னும் சொற்பொழிவு.

டிசம்பர் திங்கள் 20ம் நாள் சென்னை மாகாணத் தமிழர் சங்கத்தின் ஆதரவில் சென்னை பச்சையப்பன் கல்லூரி மண்டபத்தில் நடைபெற்ற கலைச்சொல்லாக்க மகாநாட்டிற்குத் தலைமை தாங்கினார்.

இமயமலைக்கு வடக்கேயுள்ள திருக்கயிலாய மலைக்கு யாத்திரை செய்தார்.

1939-1941 *பிரபுத்த பாரத* என்னும் ஆங்கில மாதப் பத்திரிகையின் ஆசிரியராக இருந்தார். இது ஸ்ரீ ராமகிருஷ்ண தலைமை மடத்தின் பத்திரிகை. இக்காலங்களில் இமயமலைச் சாரலில் உள்ள மாயாவதி என்னும் இடத்தில் தங்கியிருந்தார்.

1943 இலங்கைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரிய ராக அமர்த்தப்பட்டார்.

1947 மே திங்கள் 5, 6 தேதிகளில் கும்பகோணத்துக்கடுத்த திருக்கொள்ளம்பூதூரில் *யாழ் நூல்* அரங்கேற்றம்.

1947 ஜூலை திங்கள் 19ம் நாள் இரவு 1 1/4 மணிக்கு கொழும்பு மாநகரில் வீடுபேறடைந்தார்.

*ஈழமணி*, மலர் 1, இதழ் 2, 1948

# வசந்த குசுமாகர மாத்திரை

[நெடுநாளைக்கு முன் இப்பாட்டை ஓர் ஓலைச்சுவடியிற் கண்டேன். தாளில் படி எடுத்தெழுதினேன். அதில் இம்மருந்து செய்யும் முறையும், நோய்களும், அனுபானமும் காணப்படு கின்றன. மருத்துவ அன்பர்கள் கையாண்டு மக்களுக்கு நலம் செய்வார்களாக.]

**கலி வெண்பா**

*அத்திமுக வைங்கரனை அடிபணிந்து தெண்டனிட்டுப்*
*பத்தியுடன் அர்ச்சித்துப் பாங்குடனே - சித்தி*
*வசந்தகுசு மாகர மாத்திரையின் மாமுறையை*
*இசைந்த உலாவான் இயம்பினேன் - உசந்தநல்ல*
*அக்கரா காரம் அதிமதுரம் கோஷ்டமுடன்*
*தக்கவெண் காரந் தனிலவங்கம் - மிக்ககுணத்*
*திப்பிலியும் இந்தத் தினுசுக்குக் கால்பலமாய்ச்*
*செப்பமுடன் ஒன்றாகச் சேர்த்திட்டு - ஒப்பமிடும்*
*அன்பான (சாநி) லிங்கம் அரைப்பலமுந் தான்வாங்கி*
*இன்பமாங் குங்குமப்பூ இன்னங்கேள் - கொம்பனையே!*
*பச்சைக் கருப்பூரம் பாங்குளகோ ரோசனமும்*
*கச்ச விராகனெடை காணவிட்டு - இச்சையுடன்*
*சொன்னசரக் கெல்லாம் சுபமாகத் தான்சேர்த்து*
*நன்னிக் கலுவத்தில் நாடவிட்டு - மின்னலொளி*
*வஞ்சிமுலைப் பாலில் வளர்மூ ணரைச்சாமம்*
*இஞ்சிரசந் தன்னில்இரண் டீர்சாமம் - சஞ்சமுடன்*
*நன்றாக வேயரைத்து நல்லசிறு பயறளவு*
*குன்றாமல் மாத்திரையாய்க் கொண்டுருட்டி - நன்றாக*
*எண்குறிப்பும் பார்த்து இயல்பான சாத்தியமாய்*
*திண்குறிப்பைக் கண்டால் திரம்பேசும் - நன்குறிப்பாம்*
*நாட்டுத்தேன் இஞ்சிரசம் நங்கைமுலைப் பாலதனால்*
*கூட்டிக் குழப்பியுட் கொண்டக்கால் - வாட்டமிடும்*
*பித்தசுரம் வாதசுரம் பேரான சேத்துமசுரம்*
*சத்திசன்னி தோசம் தலைவலியும் - முத்தியிடும்*
*கையசதி காலசதி கடுமுறைப்பு முப்பிசமும்*
*மெய்கடுப்பும் இத்தனையும் ஏகுமே - மைகுழலே*

பத்தியத்துக் கேற்ற பதார்த்தவகை யின்னதென்று
சித்தமுடன் செப்புகிறேன் சீராய்க்கேள் - முத்தியிடாக்
கத்தரிக்காய்ப் பிஞ்சு கணுமுருங்கோ......
உத்த பொரிச்சாறும் ஒக்குமே - முத்தியிட்ட
வல்ல பிணிமாறி வாழ்ந்திருப்பார் தாரணியில்
வல்லவனாய் மெய்யில் வலுவுண்டாம் - தொல்லுலகில்
வானுலகத் தன்வந்திரி வாகடத்தின் நூன்முறையால்
மானிடர்க்குச் சொன்னேன் மகிழ்ந்து.

*செந்தமிழ்ச்செல்வி,* சிலம்பு 25, 1949

# பாமரர் பகர்ச்சி

பாமர மக்கள் தாங்கள் காண்கிற சில பொருள்களுக்குத் தங்கள் மனம் போனபடி சில கற்பனைக் கதைகளைப் பொருத்திக் கூறுவது மரபு. அந்தக் கற்பனைகள் பொருத்த மாகவும் ஏற்றுக்கொள்ளத் தக்கனவாகவும் இருக்கும். நாமும், பாமர மக்களின் கண்ணோட்டத்தில் இருந்து பார்ப்போ மானால், அவர்களுடைய கற்பனையிலுங்கூட அழகும் இனிமையும் இருப்பதைக் காணலாம்.

கடற்கரையிலே நின்று ஒன்றையொன்று துரத்திக் கொண்டு வருகிற அலைகளைக் கண்டு அவ்வலைகளின் காட்சியிலே மனத்தைப் பறிகொடுத்து அசைவற்று நிற்கிறோம். வெண்ணுரை பொருந்திய நீலத்திரைகள் பொங்கி வழிந்து சீறிக்கொண்டு வேகமாகத் தவழ்ந்து வந்து மணல் கரைமேல் மோதி அறைந்து அழிந்துபோக, மற்றொரு அலை எழுந்து முழங்கிக்கொண்டு அதைத் துரத்திய வண்ணம் ஆவேசத்தோடு பின்தொடர்ந்து வந்து, முன்பு வந்து அழிந்துபோன நீரின்மேல் விழுந்து மோதித் தானும் அழிந்துபோகிற காட்சி நமது கண்ணையும் மனத்தையும் கவர்கின்றது. இவ்வாறு ஒன்றன்பின் ஒன்றாக அலைகள் எழுந்து கரை நோக்கி வந்து தரையில் மோதி, நீரையும் நுரையையும் நமது பாதத்தின்மேல் பாய்ச்சிவிட்டுப் போவது என்றும் மறக்க முடியாத இனிய காட்சி. சின்னஞ் சிறு குழந்தை முதல் நரை திரை வந்த கிழவர் வரையில் எல்லாருடைய மனத்தையும் மகிழச்செய்கிறது கடல் அலைக்காட்சி. கடற்கரையில் அலைமோதும் இந்தக் காட்சி மஞ்சள் வெய்யில் காயும் மாலை நேரத்தில் வெகு இனிய காட்சியாக இருக்கிறது. கடலோரத்தில் நின்று இக்காட்சியைக் கண்டுகொண்டிருக்கும்போது ஓர் அம்மையார், தம்முடன் வந்தவர்களுக்குப் "பெண் அலையை ஆண் அலை பிடித்து விடுமானால், உலகம் முழுகிப் போகும்" என்று கூறுகிறார். இதைக் கேட்டவர்கள், "அப்படியா!" என்று ஆச்சரியப்பட்டுத் தவழ்ந்து வரும் அலைகளைக் கூர்ந்து பார்க்கிறார்கள்.

பெண் அலை என்பது சிறிய அலை. ஆண் அலை என்பது பெரிய அலை. பெண் அலைகளை ஆண் அலைகள் பிடிப்ப தற்காகத் துரத்திக் கொண்டு வருகின்றன. பெண் அலைகள்

ஆண் அலைகளுக்கு அகப்படாமல் ஓடிவந்து கடைசியில் மேலும் போக இடமில்லாமல் மணலின்மேல் மோதி மாய்ந்து விடுகின்றன. துரத்திவந்த ஆண் அலைகளும் அவற்றைப் பிடிக்க முடியாமல் தாங்களும் மணலின்மேல் மோதி மாய்ந்து விடுகின்றன. இந்த நிகழ்ச்சி ஆதிகாலம் முதல் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றது. இன்றளவும் பெண் அலைகளை ஆண் அலைகளால் பிடிக்க முடியவில்லை. என்றைக்காவது பிடித்துவிடுமானால் அன்று உலகம் அழிந்து விடும் என்பது பாமர மக்கள் பகர்ச்சியின் கருத்து.

இத்தகைய பாமரர் பகர்ச்சிகள் பல உள்ளன. அவற்றில் ஒன்றைக் கூறுவோம்.

கலைச்சுவை உள்ளவர், சென்னைப் பட்டினத்துக்குத் தெற்கில் உள்ள மாமல்லபுரத்திற்குப் (மகாபலிபுரத்திற்கு) போய் அங்குள்ள சிற்பக்கலைகளைப் பாராமல் இரார். மாமல்லபுரத்தைப் பார்க்காத தமிழர், கடற்கரையில் அலைகள் மோதுவதைப் பாராதவர்களைப்போல, தமது வாழ்நாளில் காண வேண்டிய காட்சியை இழந்தவர் ஆவர். மாமல்ல புரத்திலே சிற்பக் காட்சியும் கடற் காட்சியும் அமைந்திருப்ப தனால், இரண்டு காட்சிகளையும் ஒரே இடத்தில் கண்டு மகிழலாம். மாமல்லபுரத்தில் இருக்கும் சிற்பக் காட்சிகளில் ஒன்று அர்ச்சுனன் தபசு என்று பாமர மக்கள் கூறுகிற பரத சக்கரவர்த்தியின் கதையைக் கூறுகிற பகீரதன் சிற்பம் ஆகும். இந்தச் சிற்ப அமைப்பு மனத்தைக் கவர்ந்து கண்ணுக்கினிய காட்சியாய்ச் சிந்தனையைக் கிளறிவிட்டுப் பரவசப்படுத்து கின்றது. இந்தச் சிற்பத்தில் அமைந்திருக்கிற பல்வேறு உருவங்களின்மேல் பார்வையைச் செலுத்திக்கொண்டே வந்து, கடைசியாகப் பெரிய யானையின் கால்களுக்கு அருகில் சிறிய பூனை ஒன்று நின்றுகொண்டு தபசு செய்கிற சிற்பக் காட்சியைக் காண்கிறோம். இந்தப் பூனை பின்னங் கால்களினால் நிமிர்ந்து நின்று முன்னங் கால்களை (கைகளை)த் தலைக்குமேல் உயர்த்திக் கும்பிட்டுக் கொண்டு தவம் செய்கிறது. இந்த உருத்திராட்சப் பூனையை அருள் உள்ளம் படைத்த முனிவர் என்று நினைத்துக் கொண்டு இதன் அருகிலே சுண்டெலிகள் துள்ளி விளையாடுகின்றன!

இந்த உருத்திராட்சப் பூனையின் உருவத்துக்குச் சற்றுத் தூரத்திலே, ஒரு பாறைக் குன்றின்மேலே உருண்டு திரண்ட பெரிய குண்டுக்கல் ஒட்டிக்கொண்டு நிற்கிறது. இந்தக் குண்டுப் பாறை எந்த நிமிஷத்தில் புரண்டு விழுந்து விடுமோ என்று இதைப் பார்ப்பவர் அஞ்சுவர். இந்தக் குண்டுப் பாறையின் ஒரு புறம் சப்பையாக இருக்கிறது. இந்தப்

பாறையை வெண்ணெய் திரட்டிய கல் என்று கூறுவர். பாண்டவர் மனைவியாகிய திரெளபதி, தயிர்கடைந்து வெண்ணெய் எடுத்து வைத்தாராம். அப்பொழுது அங்கு வந்த திருட்டுப் பூனையொன்று வெண்ணெயில் கொஞ்சம் நக்கி விட்டு ஓடி விட்டதாம். ஆகையால்தான் இந்த வெண்ணெய் திரட்டி உருண்டைக்கல் ஒருபக்கம் சப்பையாக இருக்கிறதாம். வெண்ணெயை நக்கிவிட்டுப்போன பூனைதான் நாம் முன்பு சிற்ப உருவத்திலே பார்த்த உருத்திராட்சப் பூனையாம். எலிகளைப் பிடித்துத் தின்னாமல் இந்தப் பூனை ஏன் தபசு செய்கிறது தெரியுமா? துக்ககரமான பிறவித் துன்பத்தை நீக்கி மோட்ச சுகத்தைப் பெறுவதற்காக அல்ல. இந்தப் பூனை இருக்கிற இடத்துக்கு எதிரிலே (கால் மைல் தூரத்திலே) ஆரவாரித்து அலைமோதிக் கொண்டிருக்கிற ஆழ்கடலிலே ருசியுள்ள மீன்கள் ஏராளமாக வாழ்கின்றன. மீன் என்றால் பூனைக்கு நாக்கில் நீர் ஊறும் அல்லவா? ஆனால் பூனை தண்ணீர் என்றால் மிகமிக அஞ்சும். உடம்பில் தண்ணீர் படக்கூடாது என்பதற்காகத்தானே பூனை தன் உடம்பை நாவினால் நக்கிச் சுத்தப்படுத்துகிறது. எனவே, நீருக்குள் வாழும் மீனைப் பிடித்துத் தின்னப் பூனையினால் முடியாது. மீனைப் பிடித்து வருகிற மனிதனோ மீனைப் பூனைக்குக் கொடுக்காமல் தானே தின்று விடுகிறான். ஆகவே, பேரின்ப இன்பத்தைவிட மிகப் பெரியதாகிய மீன் சுவை இன்பத்தைப் பெற இந்தப் பூனை விரும்புகிறது. ஆகவே கடவுளை நோக்கித் தவம் செய்கிறது. 'கருணைக் கடலே! இந்த அலைகடல் நீரை வற்றச் செய்தருளும். எளிதாக மீன்களைப் பிடித்துத் தின்ன எனக்கு வரம் அருளும்' என்று கடவுளை வேண்டி இந்த உருத்திராட்சப் பூனை தவம் செய்கிறதாம். இதை நான் சொல்லவில்லை. பாமரர் பகர்ச்சியைத்தான் சற்று விரித்து விளக்கிக் கூறினேன்.

எலிகளைப் பிடித்துத் தின்று சலிப்படைந்த பூனை, வெண்ணெய் உருண்டையில் கொஞ்சம் நக்கிவிட்டு ஓடி வந்த பூனை மீன் கறி வேட்கையினால் வாயூறி நின்று, மீன்களைத் தின்பதற்காகக் கடல் நீரை வற்றச் செய்யும்படி கடவுளை வேண்டித் தவம் செய்கிறது என்று பாமரர் பகர்ச்சி கூறுவது எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது பாருங்கள். (இது கலிகாலம் ஆகையினாலே, பூனையும் வெண்ணெய் உருண்டையும் கல்லாகச் சமைந்துவிட்டனவாம்!)

பாமர மக்களின் பகர்ச்சி இது போன்று பற்பல நமது நாட்டிலே வழங்கி வருகின்றன. நாட்டிலே வழங்கி வருகிற விடுகவிகளையும், பழமொழிகளையும், நாட்டுப் பாடல் களையும் திரட்டித் தொகுத்து வருகிற ஆராய்ச்சிக்காரர்கள்

இத்தகைய பாமரர் பகர்ச்சிகளையும் ஏன் திரட்டித் தொகுக்கக் கூடாது? இவை அரிய இனிய அழகிய இலக்கியமாகத் திகழும் அன்றோ? இந்த நல்ல பணியில் ஆர்வம் உள்ளவர் ஈடுபடட்டும்.

மாமல்லபுரம் போகும் வாய்ப்புள்ளவர்கள், அங்குள்ள கலைச் செல்வங்களைக் கண்டு மகிழ்வார்களாக. அத்துடன் உருத்திராட்சப் பூனை தவம் செய்யும் காட்சியைப் (சந்தடி செய்து அதன் தவத்தைக் கலைத்து விடாமல் மௌனமாக இருந்து) பார்த்து விட்டு வெண்ணெய் திரட்டிய கல்லையும் மறக்காமல் பார்த்து விட்டு, மாலை நேரத்தில் கடற்கரை ஓரம் சென்று (பாறைக்கற்கள் இல்லாத இடத்தில்) ஆண் அலைகள் பெண் அலைகளைத் துரத்தி வருகிற இனிய இயற்கைக் காட்சியையும் தவறாமல் பார்க்கும்படி யோசனை கூறு கிறோம்.

*நண்பன்,* மலர் 7, 1959

# ஆட்சியாளருக்கு எழுத்தாளர் வேண்டுகோள்

சிறுகதைகள், நாவல்கள், நாடகங்கள், சரித்திரங்கள், கவிதைகள், இயற்கை விஞ்ஞானம், சமுதாய வாழ்க்கை முதலிய அறிவுத் துறை வளர்ச்சிக்கான நூல்களை எழுதுவோர் எழுத்தாளர். பாரத நாடாகிய நமது துணைக் கண்டத்திலே பதினான்கு மொழிகள் அரசாங்கத்தாரால் அங்கீகாரம் பெற்றுள்ளன. அவை தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், மராத்தி, குஜராத்தி, ஒரியா, உருது, ஹிந்தி, வங்காளி, அஸ்ஸாமி, பஞ்சாபி, காஷ்மீரி, சமஸ்கிருதம் என்பன. பாரத நாட்டு மாகாணங்களும் மொழிவாரியாகப் பிரிக்கப் பட்டுள்ளன. பதினான்குக்கு மேற்பட்ட வெவ்வேறு மொழி களைத் தாய்ப்பாஷையாகக் கொண்ட நாற்பது கோடி மக்கள் பாரத கண்டத்தில் இருக்கிறார்கள். பாரத நாடு உயர்வடைய வேண்டுமானால், பாரத நாட்டு மக்களின் மனக்கருத்தும், கொள்கையும் விரிவடைய வேண்டும்; மக்கள் அறிவுடை யவர்களாக விளங்க வேண்டும். இதற்காக அரசாங்கத்தார் கல்விச்சாலைகளை வைத்து மக்களுக்குக் கல்வி கொடுத்து அறிவு வளர்ச்சிக்கு ஆவன செய்து கொண்டிருக்கிறார்கள். நாட்டு மக்களும் விழிப்படைந்து கல்வி கற்பதில் ஆர்வமும் ஊக்கமும் காட்டி வருகிறார்கள். நாட்டு மக்களின் மன வளர்ச்சிக்கும், அறிவு வளர்ச்சிக்கும் எழுத்தாளர்கள் அந்தந்த மொழிகளில் நூல்கள் எழுதி வருகிறார்கள்; மக்களின் மன வளர்ச்சிக்கும் கருத்து வளர்ச்சிக்கும் ஏற்ற முறையில் எழுத் தாளர்கள் பல துறைகளில் நூல்களை எழுதி வருகிறார்கள்.

பாரத நாடு சுதந்திரம் பெற்றுச் சில ஆண்டுகள்தாம் ஆகின்றன. உலக நாடுகளுடன் பாரத நாடும் முன்னேற வேண்டும் என்னும் உறுதியுடன் அரசாங்கத்தார் பல திட்டங்கள் வகுத்து ஆவன செய்து வருகிறார்கள். மேல் நாடுகள் பல நம்மைவிட முன்னேறிச் சென்று விட்டன. கீழ்நாடுகள் சில நமக்கும் பின்னணியில் நிற்கின்றன. பாரத நாடு இடைப்பகுதியில் இருந்து முன்னேறிக் கொண்டிருக்கிறது. நாட்டு வளர்ச்சி என்றால் நாட்டு மக்களின் வளர்ச்சியாகும். மக்களின் எண்ணம், கருத்து, கொள்கைகள் வளர்ந்து உயர்ந்தால்தான் வாழ்க்கை

உயரும். மக்களின் கருத்தையும் எண்ணங்களையும் உயர்ந்த முறையில் வளர்க்கிறவர்கள் எழுத்தாளர்கள்; நாட்டு மக்களின் குறிக்கோள்களையும், நடக்கையையும் வளர்ப்பவர்களும் எழுத்தாளர்களே. நாட்டு வளர்ச்சியை உருவாக்குவதற்கு எழுத்தாளர்களின் தொண்டு கட்டாயம் தேவை. இது எல்லா நாட்டாராலும், அறிஞர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை. நமது பாரத நாட்டுக்கும் எழுத்தாளர்களின் பணி மிகமிகத் தேவை. பாரத நாட்டுப் பல்வேறு மொழிகளிலும் எழுத்தாளர்கள் நூல்கள் எழுதி மக்களுக்குத் தொண்டு செய்து வருகிறார்கள். இன்னும் சிறந்த எழுத்தாளர்கள் நம்மிடையே தோன்ற வேண்டும்.

எழுத்தாளர்களின் பணி இன்னும் அதிகமாகவும் சிறப்பாகவும் வளர வேண்டும். கல்விச்சாலைகளுக்கு நல்ல ஆசிரியர்கள் எப்படி அவசியமானவர்களோ அவ்வாறே எழுத்தாளர்களும் நாட்டுக்கு மிகமிக அவசியமானவர்கள். நூல்களை எழுதி மக்களின் மனவளர்ச்சியையும், கருத்து வளர்ச்சியையும் தூண்டி வருகிற, உருவாக்குகிற எழுத்தாளர்கள் நாட்டுக்கு ஏராளமாகத் தேவைப்படுகிறார்கள்.

நாகரிக நாடுகள் எல்லாம் எழுத்தாளரின் நல்வாழ்வுக்கு உதவி செய்து, அவர்களை நாட்டின் நலனுக்காகப் பயன் படுத்திக் கொள்கின்றன. நமது பாரத அரசாங்கமும் எழுத்தாளர்களின் வாழ்க்கையில் அக்கறை காட்டி வருகிறது; சாகித்திய அக்காடமி என்னும் நிறுவனத்தின் மூலமாக எழுத்தாளர்களை ஆதரித்து வருகிறது. தகுந்த எழுத்தாளர்களுக்கு (பதினான்கு மொழி எழுத்தாளர்களுக்கும்) பரிசு வழங்கி ஊக்கமளித்துவருகிறது. தகுந்த புத்தகங்களை அச்சிட்டு உதவுகிறது. இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை எழுத்தாளர்களை ஒன்று சேர்த்து மாநாடு நடத்திப் பல மொழி எழுத்தாளர்களும் அறிமுகமாகவும், கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளவும் வாய்ப்பு உண்டாக்கித் தருகிறது. இது வரவேற்கத் தக்கதே. ஆனால், இந்த மாநாட்டை இரண்டாண்டுக்கு ஒரு முறை நடத்தாமல் ஆண்டுதோறும் நிகழ்த்துவது விரும்பத் தக்கது. தமிழ் நாட்டு அரசாங்கமும், தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் மூலமாகத் தகுந்த நூல்களுக்குப் பரிசு வழங்கி வருகின்றது. இவையெல்லாம் எழுத்தாளர்களுக்கு ஊக்கமும் ஆக்கமும் தருவனவாகும். ஆனால், இவை போதா. இவற்றை விடச் சிறந்த வாய்ப்புகளையும் அரசாங்கம் செய்து தரவேண்டும். அவை என்ன?

மொழிவாரியாக அமைந்துள்ள ஒவ்வொரு மாகாணத்திலும் எழுத்தாளர்களுக்கென்று ஒரு தங்கும் இடம் அமைத்துத் தர

வேண்டும். வெவ்வேறு மொழி எழுத்தாளரும் வந்தால், அந்த இடத்தில் இலவசமாக அல்லது சொற்பப் பணம் செலுத்தித் தங்குவதற்கு வசதியாக அந்த நிலையம் அமையவேண்டும். ஐரோப்பிய நாடுகளிலே, எழுத்தாளர்கள் சென்று சொற்பச் செலவில் தங்கியிருந்து நூல் எழுதவும், படிக்கவும், ஆராய்ச்சி செய்யவும் நிலையங்களை அரசாங்கத்தார் செய்து கொடுத்திருக்கிறார்கள். அந்த நிலையங்கள், நகரத்துக்கு அப்பால் சந்தடி இல்லாத இடத்தில் அழகான இயற்கைச் சூழ்நிலையில் எல்லா வசதிகளுடனும் அமைக்கப்பட்டுள்ளன. அத்தகைய எழுத்தாளர் நிலையங்கள் பாரத நாட்டில் அரசாங் கத்தாரால் இன்னும் அமைக்கப்படவில்லை. இவ்விதமான எழுத்தாளர் தங்கும் நிலையங்களை - (பதினான்கு மொழி எழுத்தாளரும் தங்கும்படி) அரசாங்கத்தார் அமைத்துத் தரவேண்டும். பதினான்கு பாஷைகள் வழங்குகிற மாகாணங் களிலும் பதினான்கு நிலையங்கள் இருக்க வேண்டும். அப்படி அமைக்க இப்போது முடியாமற்போனால், பாரத நாட்டின் வடக்கு, தெற்கு, மேற்கு, கிழக்கு, மத்தி ஆகிய ஐந்து இடங்களிலாவது இத்தகைய நிலையத்தை (எழுத்தாளர் தங்கும் நிலையத்தை) அமைக்க வேண்டும்.

இரண்டாவதாக, எழுத்தாளர்களுக்குப் பிரயாணச் செலவை இலவசமாக்கித் தர வேண்டும். அல்லது நாலில் ஒரு பங்காகக் குறைக்க வேண்டும். பொதுவாக எழுத்தாளர்கள் பொருள் வசதியற்றவர்கள்; பொருளாதாரம் இல்லாதவர்கள். ஆகவே, இத்தகைய இலவச வசதிகளைச் செய்து தர வேண்டியது அரசாங்கத்தாரின் கடமையாகும். பல மொழிகளைப் பேசுகிற துணைக் கண்டமாகிய பாரத தேசத்தின் எழுத்தாளர்கள் பாரத கண்டத்தின் வெவ்வேறு நாட்டின் இயல்புகளை அறிய வேண்டியவர்கள். அறிந்திருந்தால்தான் நாட்டின் ஒருமைப் பாட்டுக்காகவும், ஒற்றுமைக்காகவும் அவர்கள் நூல்கள் எழுத இயலும். பாரத நாட்டின் பல மொழி எழுத்தாளர்களும் அடிக்கடி ஒன்று கூடிப் பேசிப் பழகி ஒருவரையொருவர் அறிந்துகொள்வது நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு வழிவகுப்ப தாகும்.

எல்லைப் போர் நடக்கிற இந்த இக்கட்டான வேளை யிலே இவற்றைச் செய்து கொடுக்க வேண்டுமென்று எழுத் தாளர் யாரும் கேட்கவில்லை. போர் முடிந்தவுடன் இவற்றைக் கவனித்து ஆவன செய்ய வேண்டும் என்றுதான் கேட்டுக் கொள்கிறோம்.

சீன - பாரத எல்லைப் போர் நாட்டு மக்களின் கண்களைத் திறந்துவிட்டது. போர் முடிந்த பிறகும், எல்லைப் பாதுகாப்புக்

காக நிரந்தரமான பாதுகாப்புச் சேனை வைத்துக்கொள்ள வேண்டும். தரைப்படை, கடற்படை, விமானப் படைகளையும் பலப்படுத்தி விரிவுபடுத்த வேண்டும். இவற்றையெல்லாம் அரசாங்கம் செய்வதற்கு நாட்டு மக்களின் முழு ஆதரவும் இருக்கிறது. படைவீரர்கள் நாட்டுக்கு எப்படி அவசியமோ அவ்வாறே எழுத்தாளரும் நாட்டுக்கு இன்றியமையாதவர்கள். ஆனால், உலகமெங்கும் இருப்பது போல நமது நாட்டிலும் எழுத்தாளர்களின் தொகை மிகமிகச் சொற்பம். அவர் களுக்குள்ள வசதிகளும் மிகமிகக் குறைவே. எனவே, மேற்கூறிய வசதிகளை எழுத்தாளர்களுக்கு அரசாங்கத்தார் செய்து தரவேண்டுமென்று. தமிழ் எழுத்தாளர் சார்பாக மட்டு மல்லாமல் பாரத நாட்டுப் பதினான்கு மொழி எழுத்தாளர் சார்பாகவும் அரசாங்கத்தினரை வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். மத்திய அரசாங்கமும், மாநில அரசாங்கங்களும் இவற்றை எழுத்தாளர்களுக்கு நல்கும் என்று பாரத நாட்டு எழுத்தாளர்கள் எதிர்பார்க்கிறார்கள்.

பாரதம் வெல்க! பாரத நாடு வாழ்க!!

*பாரதி மாநாட்டு மலர்*, தமிழ் எழுத்தாளர் சங்கம், 1962

# தமிழ் எழுத்தாளர் சங்கம் பதினோராவது மாநாட்டுத் தலைமையுரை

மதிப்புக்குரிய அமைச்சர் பெருமான் அவர்களே! வரவேற்புக் குழுத் தலைவர் அவர்களே! பாராட்டுப் பெறுகிற பேரறிஞர்களே! எழுத்தாளர் நண்பர்களே! அறிவும் ஆற்றலும் மிக்க பெரியோர்களே! தாய்மார்களே! அனைவருக்கும் அன்பு கலந்த வணக்கம்.

நூற்றுக்கு மேற்பட்ட வெவ்வேறு தாய்மொழிகள் பேசப்படுகிற நமது பாரத நாட்டிலே இலக்கிய வளமுடைய மிகப் பழமையான மொழிகள் இரண்டே இரண்டுதான் உள்ளன. அவ்விரண்டில் ஒன்று தன்னேரிலாத தமிழ்; மற்றொன்று வடமொழி எனப்படும் சமஸ்கிருதம். ஏனைய இந்திய மொழிகள் பிற்காலத்தவை; பழைய இலக்கிய வளம் உள்ளனவும் அல்ல. இந்த உண்மையை நான் புதிதாக இட்டுக் கட்டிச் சொல்லவில்லை. மொழிகளின் வரலாறுகளை ஆராய்ந்து பார்த்த உலகப் பேரறிஞர்கள் கூறும் உண்மை இது. எனவே, தமிழ் மொழி மிகப் பழமையானதும், சிறந்த இலக்கிய வளம் உடையதும், தனக்கெனத் தனிப் பண்பாடுடையதும் ஆன உயர்தனிச் செம்மொழி என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இப்படிச் சொல்வதனாலே பழம் பெருமை பேசிக் கொண்டே காலத்தைக் கழிக்க வேண்டுமென்பது என்னுடைய கருத்து அன்று. பழைய இலக்கியங்களைப் பெற்றிருப்பதனால் மட்டுமே தமிழ்ச் சமுதாயம் முன்னேறிவிட முடியாது. உலகச் சமுதாயத்தோடு தமிழர் இயைந்து வாழ வேண்டுமானால், மேன்மேலும் உயர்ந்து கொண்டே போகவேண்டுமானால், புதுப்புது இலக்கியங்களையும் காலத்துக்கேற்ற புத்தம் புதிய நூல்களையும் தமிழிலே படைத்துக்கொண்டேயிருக்க வேண்டும். பழைய இலக்கியங்களைப் போற்றிப் படிப்பதோடு அமை யாமல், புதியபுதிய இலக்கியங்களையும் படித்தால்தான் மக்கள் சமூகம் அறிவு வளம்பெற்று மேன்மேலும் உயர்வடைய முடியும்.

சிலர், பழைய இலக்கியங்களை மட்டும் பாராட்டிப் படித்துக்கொண்டு புதிய இலக்கியங்களைப் படிக்காமலே இருந்து வருகிறார்கள். வேறு சிலர் புதிய இலக்கியங்களை மட்டும் பாராட்டிப் படித்துக்கொண்டு பழைய இலக்கியங் களைக் கண்ணெடுத்தும் பாராமல் இருந்து வருகிறார்கள். இந்த இருவகை நிலையும் மாறவேண்டும். 'பழைய இலக்கியங் களில் என்ன இருக்கிறது' என்று வாய் கூசாமல் பேசுகிறவர் களும் இக்காலத்தில் சிலர் இருக்கிறார்கள். இவர்கள் பண்டைய இலக்கியங்களைப் படித்துப் புரிந்துகொள்ள முடியாதவர்கள்; பழைய இலக்கியங்களின் இனிமையைச் சுவைக்க முடியா தவர்கள். புதுமை இலக்கியங்கள், பிற்காலத்தில் பழமை இலக்கியங்களாகிவிடுகின்றன அல்லவா? மனித சமூகத்தின் எதிர்கால வாழ்க்கை அவர்களுடைய இறந்தகால வாழ்க்கை யுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. பாட்டன் பாட்டிமார்க்கும், பேரன் பேத்திமார்க்கும் ஆழ்ந்த அன்பு பற்றும் இருப்பது போலவே இலக்கிய உலகத்திலும் சென்றகால இலக்கியத்துக்கும் எதிர்கால இலக்கியத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை மறத்தல் ஆகாது. நல்ல இலக்கியங்களில் பழமை என்பதும் இல்லை, புதுமை என்பதும் இல்லை. அவை அன்றும் இன்றும் என்றும் புதுமையாகவே இருக்கின்றன. *திருக்குறள், சிந்தாமணி, சிலப்பதிகாரம், கம்பராமாயணம்* முதலான எத்தனையோ பழைய இலக்கியங்களில் புதுமைகள் இருந்துகொண்டேயிருக்கின்றன. பழைய இலக்கியங்களிலே சுவையில்லையா? அழகு இல்லையா? இன்பம் இல்லையா? சிற்பக் கலைகளையும் ஓவியக் கலைகளையும் இசைக் கலை களையும், அவை பழமையுள்ளவை என்பது காரணமாக, அறிஞர்கள் அவற்றை ஒதுக்கிவிடுகிறார்களா? இல்லையே! அதுபோலவே பழைய இலக்கியச் செல்வங்களையும் போற்ற வேண்டும். அவற்றில் உள்ள கலையின்பத்தையும் நுகர வேண்டும்.

எழுத்தாளர்களில் சிலர் - ஒருசிலர்தான் - 'பேசுவதுபோல எழுதவேண்டும்' என்று கூறுகிறார்கள். பேசுவதுபோல எழுத வேண்டும் என்பது நாடக நூல்களுக்குப் பொருந்தும். அந்தந்தப் பாத்திரங்கள் பேசுவதுபோல எழுதுவதுதான் நாடக நூல்களுக்குச் சிறப்பைத் தரும். ஆனால், நாடகநூல் அல்லாத ஏனைய நூல்களைப் பேசுவதுபோல எழுதவேண்டும் என்றால் அது எவ்வாறு இயலும்? பேச்சுக்கள் பல வகை. அக்கிரகாரத்துப் பிராமணர் பேச்சு, சேரிகளில் வாழும் ஆதித்திராவிடர் பேச்சு, குப்பங்களில் வாழும் மீனவர் பேச்சு, காட்டில் வாழும் குறவர் பேச்சு என்று இன்னும் பலவிதமான பேச்சுக்கள் உண்டு.

அல்லாமலும் நாடுகள், மாவட்டங்களிலும் பேச்சுக்கள் வேறுபடுகின்றன. மரபு அறியாமல் பேசுகிற பேச்சுக்களும் உண்டு. கனவு கண்டேன் என்பதைக் 'கனவு பார்த்தேன்' என்றும், துணி தோய், துணியைக் கசக்கு என்பதைத் 'துணியைக் கழுவு' என்றும், கதவைத் திற என்பதைக் 'கதவை அவிழ்த்துவிடு' என்றும், 'அவன்கி கொடு', 'நான்கி சொல்லு' என்றும் பேசுகிறவர்களும் உண்டு. இவையெல்லாம் பேச்சுத் தமிழ்தானே. இப்படியெல்லாம் பேசுவதுபோல எழுதினால் இலக்கியம் என்னவாகும்? பேசுவதுபோல எழுதுவது என்பது புதிதாகத் தோன்றி வளர்ந்துகொண்டிருக்கிற புத்தம்புதிய பாஷைகளுக்குப் பொருந்துமேயல்லாமல், வளர்ச்சிபெற்ற இலக்கிய வளமுடைய பாஷைகளுக்குச் சிறிதும் பொருந்தாது. இலக்கிய வளமும், இலக்கண அமைதியும், தனக்கென ஒரு மரபும் அமைந்துள்ள பாஷைகளுக்கு அது சிறிதும் பொருந்தாது. இக்காலத்தில் தமிழுக்கென்று ஒரு தனி நடை இருந்து வருகிறது. திரிசொல் இல்லாமலும், கொச்சைச் சொல் இல்லாமலும் நல்ல இயற்றமிழ் நடை இன்று உருவடைந் திருக்கிறது. இந்த நடை, பல்வேறு மரபாகப் பேசுகிற எல்லோருக்கும் தெரியும்படி பொதுவாக அமைந்திருக்கிறது. உதாரணம் வேண்டுமானால், திரு.வி.க. அவர்களின் எழுத்து நடையைப் பாருங்கள்.

தமிழில் குவிந்துகிடக்கிற பழைய இலக்கியங்களைப் போற்ற வேண்டிய கடமை ஒருபுறமிருக்க, அதே சமயத்தில் புதியபுதிய இலக்கியங்களையும் உண்டாக்கிக் கொடுக்க வேண்டிய கடமையும் எழுத்தாளர்களுக்கு உண்டு. மக்களுக்குத் தேவையான, அவசியமான புத்தம்புதிய நல்ல இலக்கியங்கள் தோன்றவேண்டும். தமிழ் எழுத்தாளர்கள் (நூலாசிரியர்கள்) இந்தப் பணியைச் செய்துகொண்டு வருகிறார்கள். உயர்ந்த எண்ணங்களையும் நல்ல சிந்தனைகளையும் மேன்மையான பண்பாடுகளையும் வளர்க்கக்கூடிய, நாட்டின் ஒற்றுமை யையும் ஒருமைப்பாட்டையும் குறிக்கோளாகக் கொண்டுள்ள நூல்களை எழுத்தாளர்கள் எழுதிக்கொண்டு வருகிறார்கள்.

பாரத நாடு சுதந்தரம் பெற்ற பிறகு பாரத நாட்டுப் பல மொழிகளிலும் குறிப்பாக வங்காளி, இந்தி, மராத்தி, குஜராத்தி மொழிகளில், பற்பல துறைகளிலும் புதியபுதிய நூல்கள் வேகமாக வெளிவந்துகொண்டிருப்பதைக் காண்கிறோம். முக்கியமாக நவீனங்களும், சிறுகதை நூல்களும், கவிதைகளும் காவியங்களும் புதுமைபுதுமையாக வெளிவந்து கொண் டுள்ளன. விஞ்ஞான நூல்களும், கலைத்துறை நூல்களும், தொழில்துறை நூல்களும் வெளிவருகின்றன. இவையெல்லாம்,

பாரத நாட்டிலே புதிய உணர்ச்சியும் வேகமும் ஏற்பட்டுள்ளன என்பதைத் தெரிவிக்கின்றன. தமிழ் நாட்டிலும் அத்தகைய ஆர்வங் காணப்பட்டாலும், ஏனைய மொழிகளில் காணப் படுகிற அத்துணை வேகமும் விறுவிறுப்பும் இங்கு இல்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.

நவீனங்களும் சிறுகதைகளும் செய்யுள்களும் தமிழ் மொழியில் கணிசமான அளவு வெளிவந்துள்ளன. சிறுவர் இலக்கியங்களும் வளர்ந்து வருகிறது. ஆனால், நாடக நூல்கள் போதுமான அளவு தமிழில் வெளிவரவில்லை. பாரத நாட்டு ஏனைய மொழிகளிலும் மேல்நாட்டு மொழிகளிலும் நடிப்ப தற்கும் படிப்பதற்கும் ஏற்ற நல்ல நாடக நூல்கள் வளர்ச்சி யடைந்திருப்பது போல, தமிழ் மொழியில் இன்னும் வளர்ச்சி யடையவில்லை. திரு. பம்மல் சம்பந்த முதலியார் அவர்களின் நாடக நூல்கள் இந்தக் குறையை ஒருவாறு நீக்குகின்றன என்றாலும், புதிய நல்ல நாடக நூல்கள் இல்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். இந்தத் துறையில் தமிழ் எழுத் தாளர்கள் கருத்தைச் செலுத்த வேண்டும்.

ஓரங்க நாடக நூல்களும் தமிழில் இப்போது தலை காட்டுகின்றன. வானொலி நிகழ்ச்சிகளில் ஓரங்க நாடகங் களுக்கு வாய்ப்புத் தரப்படுகிறபடியால் இத்துறையில் பல புதிய நூல்கள் வெளிவரும் என்று எதிர்பார்க்கலாம். சரித்திர நாவல்கள், சரித்திரக் கதைகளுங்கூடத் தமிழில் வெளி வந்துள்ளன. அவற்றின் தரம் இன்னும் உயர வேண்டும். சரித்திர நிகழ்ச்சியை நன்கறியாதவர்கள் தவறான செய்திகளையும் சரித்திரம் என்று கருதிக்கொண்டு சரித்திர நவீனங்களையும் கதைகளையும் எழுதுகிறார்கள். சரித்திர நாவல்கள் சரித்திர ஆதாரங்களைக் கொண்டு அந்தந்தக் காலத்து நடையுடை பாவனைகளை அமைத்து எழுதப்பட வேண்டும். இந்தத் துறையிலும் தரமான நூல்கள் வெளிவர வேண்டும்.

வாழ்க்கை வரலாறுகளும் தமிழில் குறைவுதான். மற்றப் பாரத மொழிகளில் 'ஆத்ம கதா' என்னும் பெயரில் வாழ்க்கை வரலாறுகள் பல வெளிவந்துகொண்டிருக்கின்றன. தமிழ் எழுத்தாளர்கள் இத்துறையிலும் நூல்கள் இயற்றவேண்டும்.

அங்கத நூல்கள் தமிழிலும் மற்ற இந்திய மொழிகளிலும் இல்லையென்றே சொல்ல வேண்டும். சமுதாயத்திலும் ஆட்சித் துறையிலும் காணப்படுகிற குறைபாடுகளையும் குற்றங் களையும் மறைமுகமாகவோ, வெளிப்படையாகவோ, மனம் புண்படாத முறையில், அங்கத நூல்களை எழுதுவது நாட்டுக்கு நல்ல தொண்டு செய்வதாகும். அரசாங்கத்தாரே, தீய பழக்கங் களை ஒழிக்க முற்பட்டிருக்கிற இந்தக் காலத்தில் இத்தகைய

நூல்களை எழுதுவது அரசாங்கத்தாருக்குத் துணைபுரிவ தாகும். அங்கதம் என்பது அபவாதங்களையும், அவமானப் படுத்துவதையும் கருத்தாகக் கொண்டது அல்ல. குற்றங் குறைபாடுகளைச் செம்மையான நல்ல முறையில் எடுத்துக் காட்டி (நாவல்களையும், சிறுகதைகளையும்) எழுதுவதாகும். அங்கதக் கவிதைகளையும் எழுதலாம். அங்கத நூல்கள் எழுதுவது நாட்டு மக்களுக்குப் புரியும் நல்ல தொண்டாகும்.

*கலைக்களஞ்சியம்* என்னும் சிறந்த நூலை (அதில் சில குறைபாடுகள் இருந்த போதிலும்) தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் மத்திய - மாநில அரசாங்கத்தாரின் உதவி பெற்று எட்டுத் தொகுதிகளாகத் தொகுத்து வெளியிட்டிருப்பது கண்டு மகிழ்ச்சியையும் நன்றியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கிறோம். *கலைக்களஞ்சிய* அலுவலகம் நிரந்தரமான அமைப்பாக இருந்து இது போன்ற பணியைப் புரிய வேண்டும் என்பது எமது விருப்பம். 'சிறுவர் கலைக்களஞ்சியம்' ஒன்றையும் அவர்களே வெளியிட வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறோம்.

இந்திய சாகித்திய அக்காடமி என்னும் நிலையம், பதினான்கு இந்திய மொழிகளில் வெளிவருகிற சிறந்த நூல்களுக்கு ஆண்டுதோறும் 5000 ரூபா பரிசு வழங்கிப் பாரத நாட்டு எழுத்தாளர்களை ஊக்கப்படுத்திவருவது பற்றி நம்முடைய மகிழ்ச்சியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கிறோம். பரிசு பெறத் தகுந்த நல்ல நூல்கள் தமிழில் வெளிவந்துங்கூட, சில சமயங்களில் அவை அக்காடமியார் பார்வையில் படாமலும் பரிசு வழங்கப்படாமலும் இருப்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறோம். இந்தக் குறையை அக்காடமியின் மீது நாம் சுமத்த விரும்பவில்லை. தமிழ் நாட்டில் உள்ள அது சம்பந்தப்பட்டவர்களின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்பு கிறோம்.

அரசாங்கத்தார் நாடெங்கும் நூல் நிலையங்களை அமைத்திருப்பது மட்டும் அல்லாமல் அந்நூல் நிலையங்களில் நல்ல உபயோகமுள்ள நூல்களை வாங்கி வைக்கப் பொருள் உதவியும் செய்து வருகிறார்கள். இந்த நல்ல காரியத்துக்காக அரசாங்கத்தாருக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இந்நூல் நிலையங்களில் பெரும்பாலான வற்றில் காணப்படுகிற குறைபாட்டையும் எடுத்துக் காட்ட விரும்புகிறோம். நல்ல முதல்தரமான நூல்கள் இந்நூல் நிலையங்களில் இடம் பெற வேண்டியிருக்க, அதற்கு மாறாக இரண்டாந்தர மூன்றாந்தர நூல்களே அதிகமாக இடம் பெற்றுள்ளன. இதனால், நூல் நிலையங்கள் எந்த நோக்கத்

தோடு நிறுவப்பட்டனவோ அந்த நல்ல நோக்கம் வீணாகிப் போகிறது. நூல் நிலையங்களுக்குப் புத்தகங்களை வாங்குவது பற்றியும் புகார்கள் கூறப்படுவது 'பகிரங்க இரகசியம்.' இந்தக் குறைபாடுகளை அரசாங்கத்தார் உடனடியாக நீக்க வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறோம்.

பாரத நாடு பல பாஷைகள் பேசப்படுகிற பெரிய நாடு. இப்பாஷைகளில் பதினான்கு மொழிகளை அரசாங்கத்தார் அங்கீகரித்திருக்கிறார்கள். மாகாணங்களும் மொழிவாரியாகப் பிரிக்கப்பட்டுள்ளன. மொழி வேறுபாட்டினாலே நாட்டின் முன்னேற்றம் வேகமாகச் செல்லாமல் தடைப்படுகிறது. பாரத நாட்டின் ஒருமைப்பாட்டைப் பற்றியும், ஒற்றுமையைப் பற்றியும் அரசாங்கத்தாரும் அடிக்கடி பேசி வருகிறார்கள். சுதந்தரம் பெற்ற பாரத நாட்டிலே ஒற்றுமையையும், ஒருமைப் பாட்டையும் வளர்ப்பதற்கு அதிக வாய்ப்புப் பெற்றவர்கள் எழுத்தாளர்கள்தான். பதினான்கு பாஷை எழுத்தாளர்களும் ஒன்று கூடி ஒருவருக்கொருவர் கலந்து பழகிப் பேசி ஒருவரை யொருவர் நன்கு தெரிந்து கொண்டு நூல் எழுதி நாட்டுக்கு நன்மை புரிய வேண்டும். மத்திய அரசாங்கத்தார், அகில இந்திய எழுத்தாளர் மாநாட்டைக் கூட்டி, பாரத நாட்டின் வெவ்வேறு மொழி எழுத்தாளர்களையும் ஒருமித்துச் சேர்ந்து பழக வாய்ப்பளித்துள்ளார்கள். இது எழுத்தாளர்களுக்கு மிகுந்த நன்மையைச் செய்து வருகிறது. இந்த அகில இந்திய எழுத்தாளர் மாநாடு இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை கூடுகிறது. இதனை ஆண்டுக்கு ஒருமுறை கூடும்படி அமைக்கவேண்டுமென்று அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்கிறோம். முதலில் எழுத்தாளர்களுக்குள்ளே ஒருமைப் பாடும், ஒற்றுமையும் ஏற்பட வேண்டும். இதற்குக் குறைந்தது ஒரு ஆண்டுக்கு ஒரு முறையாவது அகில இந்திய எழுத்தாளர் மாநாடு கூடவேண்டும்.

நாட்டில் ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் உண்டாக்கக்கூடிய நூல்களை எழுத வேண்டுமானால், பாரத நாட்டுப் பல மொழி எழுத்தாளர்களும் பாரத நாட்டைச் சுற்றிப் பார்க்க வேண்டும். கிணற்றுத் தவளைகளைப் போல எழுத்தாளர்கள் இருந்தால் நாட்டின் வளப்பம் அவர்களுக்கு எப்படித் தெரியும்? எழுத்தாளர்கள் பாரத நாட்டைச் சுற்றிப் பார்த்து நாட்டின் நிலைமையையும் இயல்பையும் அறிந்து கொள்ள அரசாங்கத்தார் அவர்களுக்குப் பிரயாணச் செலவில் சலுகை காட்ட வேண்டும். வெளிநாடுகளிலே எழுத்தாளர் களுக்கு அந்தந்த நாட்டு அரசாங்கத்தார் இந்த உதவியைச் செய்து வருகிறார்கள். நமது பாரத நாட்டு அரசாங்கத்தாரும்

பாரத நாட்டு எழுத்தாளர்களுக்குப் பிரயாணச் சலுகை உதவியைச் செய்துதர வேண்டும். பாடகர்கள், நாடகக் குழுவினர்களுக்கு இந்த வசதிகள் அரசாங்கத்தாரால் அளிக்கப் பட்டு வருகின்றன. நூல்களை எழுதும் எழுத்தாளர்களுக்கும் இந்த வசதிகளைச் செய்து கொடுக்குமாறு மத்திய - மாநில அரசாட்சியாளரைக் கேட்டுக்கொள்கிறோம். அன்றியும், பாரத நாட்டு எழுத்தாளர்கள் குறைந்த செலவில் தங்குவதற்கு ஒவ்வொரு மாநிலத்திலும் தங்கும் இடங்களை அமைத்துக் கொடுத்து, எழுத்தாளர்களுக்கு உதவி புரியுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

நம் எழுத்தாளர் சங்கம் ஏற்பட்டு இப்போது பதினோராண்டுகள் ஆகின்றன. பாரத நாட்டின் பல பாகங் களில் இருக்கும் எழுத்தாளர்கள் நமது சங்கத்தில் உறுப்பினர் களாக இருந்து வருகிறார்கள். எழுத்தாளர்களின் நலத்தைப் பாதுகாத்து எழுத்தாளர் சமூகத்தை உயரச் செய்வதே நமது சங்கத்தின் முக்கிய நோக்கமாகும். நமது சங்கம் எந்த அரசியல் கட்சிச் சார்புடையதும் அல்ல. தனிப்பட்ட முறையில்; எழுத்தாளர்கள் எந்தக் கட்சியையாவது சார்ந்திருக்கலாம். ஆனால், நமது சங்கத்தைப் பொறுத்தவரையில் அரசியல், மதம், சாதி, இனம் முதலிய எந்தச் சார்பும் இல்லை என்பதை வற்புறுத்திக் கூறுகிறோம்.

தமிழ் நாட்டில் இலக்கியத் துறையில் தொண்டாற்றிய சிறந்த தமிழறிஞர்களுக்கும், தமிழ் இலக்கியங்களைப் பிற மொழிகளில் பெயர்த்துத் தொண்டாற்றிய அறிஞர்களுக்கும் நமது சங்கம் கேடயங்களும் பதக்கங்களும் வழங்கிப் பாராட்டி வருகிறது. இது வரையில் அவ்விதப் பெரியார்கள் முப்பது பேரைப் பாராட்டியுள்ளது. அதுபோலவே இன்று நான்கு அறிஞர்களைப் பாராட்ட இங்குக் கூடியுள்ளோம்.

பொருளாதார முட்டுப்பாட்டினால் துன்புறுகிற எழுத்தாளர் அங்கத்தினர்களுக்கு நமது சங்கம் மிகச் சிறு அளவு உதவி செய்து வருகிறது. அதற்கென்று மிகச் சிறு நிதியே இருப்பதனால், இது வரையில் ரூபா 3000 வரையில் சிறுசிறு தொகையாகச் சில எழுத்தாளர் அன்பர்களுக்கு உதவியுள் ளோம். சிறு தொகையாக இருந்த போதிலும், காலத்தினாற் செய்த அது அவர்களுக்குப் பேருதவியாகவே இருந்திருக்கிறது. இந்த நிதியை அதிகமாக்கி மேன்மேலும் தகுந்த அன்பர்களுக்கு உதவிசெய்ய வேண்டும் என்பது சங்கத்தின் ஆசை. இதற்காகக் காசுள்ளவர் காசு கொடுத்தும், நிதியுள்ளவர் நிதி கொடுத்தும் உதவி புரியுமாறு நன்மனம் உள்ளவர்களை வேண்டிக் கொள் கிறோம்.

நமது சங்கத்தின் *பாரதி* வெளியீடு இந்த ஆண்டில், பொருள் முட்டுப்பாட்டுக் காரணமாக வெளிவரவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். ஆனால், *பாரதி* ஆண்டு மலர் சிறந்த முறையில் வெளிவந்துள்ளது. அடுத்த ஆண்டில் *பாரதி* வெளியீடு தொடர்ந்து நடக்கு மென்று நம்புகிறோம்.

பதினோராண்டாகியும் நமது சங்கத்துக்கு ஒரு கட்டிடம் இன்னும் அமையவில்லை. நமது சங்கத்துக்கு ஒரு கட்டிடம் அமைந்தால், அதில் சங்கமும் புத்தகசாலையும் இருக்க வசதி ஏற்படுவதோடு, வெளியூர் அங்கத்தினர்கள் வந்து தங்குவதற்கும் உதவியாக இருக்கும். இந்தத் துறையிலும் முயற்சி செய்ய வேண்டியது சங்கத்தின் கடமையாகும்.

கடைசியாக ஒரு வேண்டுகோள். எழுத்தாளர் நண்பர் களே! நூலாசிரியர்களே! நமக்கு ஆற்றலையும் பலத்தையும் தரக்கூடியது நமது சங்கம். நமது சங்கத்தின் வளர்ச்சி எழுத்தாளரின் வளர்ச்சியாகும். ஒற்றுமையும் ஒருமைப்பாடும் இருந்தால் நாம் மேன்மையடையலாம். எழுத்தாளர்கள் அனைவரையும் நமது சங்கத்தில் அங்கத்தினராகச் சேரும்படி கேட்டுக் கொள்கிறேன். கதைகள், கவிதைகள், நவீனங்கள் முதலிய எந்த வகையான நூல்களையும் எழுதியவர்கள் நமது சங்கத்தில் அங்கத்தினராகச் சேரத் தகுதியுள்ளவர்கள். ஆகவே, எழுத்தாளர்களே, நூலாசிரியர்களே! சேர வாருங்கள்!

> ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு - நம்மில்
> ஒற்றுமை நீங்கிடில் அனைவர்க்கும் தாழ்வே

என்னும் பாரதியின் திருவாக்கு வழிகாட்டுவதாக. வாழ்க எழுத்தாளர்! வாழ்க எழுத்தாளர் சங்கம்! வளர்க நல்ல இலக்கியங்கள்.

*பாரதி மாநாட்டு மலர்,* **தமிழ் எழுத்தாளர் சங்கம், 1963**

# தமிழ் எழுத்தாளர் சங்கம் பன்னிரண்டாவது மாநாட்டுத் தலைமையுரை

வரவேற்புக் குழுத் தலைவர் அவர்களே! மாநாட்டைத் துவக்கி வைக்கும் அறிஞர் அவர்களே! பாராட்டுக்குரிய பெரியோர்களே! எழுத்தாள நண்பர்களே! அன்பர்களே! தாய்மார்களே! அனைவருக்கும் உளங்கனிந்த வணக்கம்.

சுதந்தரம் பெற்ற பாரத நாட்டிலே எழுத்தாளர் (நூலாசிரியர்) பெருகிக் கொண்டே வருகிறார்கள். புதியபுதிய எழுத்தாளர்களும் கவிஞர்களும் கலைஞர்களும் தோன்றி நூல்களை எழுதிப் பொது ஜனங்களுக்குத் தொண்டு செய்து வருகிறார்கள். பாரத நாடு பல பாஷைகளையும் பலவிதப் பண்பாடுகளையும் பல மதங்களையும் பலவிதப் பழக்கவழக்கங்களையும் கொண்டிருக்கிற பெரிய உபகண்டமாகும். இத்தகைய வேறுபாடுள்ள இந்திய மக்களுக்கு ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் உண்டாக்கி அவர்களை முன்னேற்றப் பாதையில் செலுத்த வேண்டிய கடமை எழுத்தாளர்களுக்கும் உண்டு. நாட்டின் முன்னேற்றத்துக்கும் மேம்பாட்டுக்கும் நலத்துக்கும் ஏனையோரைப் போலவே எழுத்தாளர்களும் உழைக்க வேண்டியவர்கள். இந்த நன்முயற்சியிலே ஜாதி, மதம், கட்சி, பாஷை முதலிய வேறுபாடுகளைக் கருதாமல் தொண்டாற்ற வேண்டிய பொறுப்பு எழுத்தாளருக்கு உண்டு.

எழுத்தாளரின் எழுதுகோலுக்குத் தனியாற்றல் உண்டு. நாட்டு மக்களுக்கு உயர்ந்த நோக்கங்களையும் தெளிவான கருத்துக்களையும் மேம்பாட்டையும் உண்டாக்க எழுத்தாளர் தமது எழுதுகோலைப் பயன்படுத்த வேண்டும். கசப்பு, பகைமை, வேற்றுமையுணர்ச்சி முதலியவற்றை நீக்கி ஒற்றுமை, ஒருமைப்பாடு, தேசபக்தி முதலிய நற்பண்புகளை வளர்க்க வேண்டும். இப்பணியைச் செய்வதற்கு வேண்டிய சூழ்நிலை நாட்டில் ஏற்பட்டிருக்கிறது.

அரசாங்கத்தார் கல்வியைப் பரப்புவதற்காகப் பெருமுயற்சி செய்து வருகிறார்கள். ஆனாலும், இப்பெரிய உபகண்டத்தில் கல்வி பரவுவதற்கு இன்னும் சில ஆண்டுகள் செல்லும். கல்லாமை, அறியாமையாகிய இருள் மக்களிடத்தில் இன்னும்

இருந்து வருகிறது. படித்த மக்களின் அறிவை மேன்மேலும் வளர்த்து விரிவுபடுத்துவதற்கு எழுத்தாளர்கள் நல்ல நூல்களை எழுதி வெளியிட வேண்டும். நாட்டில் கல்வியறிவு பரவாத காரணத்தினாலும், படித்த மக்களுக்கிடையே நூல்களைப் படிக்கும் பழக்கம் பெருவாரியாக ஏற்படாத காரணத் தினாலும் எழுத்தாளர்களின் (நூலாசிரியர்களின்) வாழ்க்கை நிலை (வருவாய்) சுகமாக இல்லை. இன்றைய எழுத்தாளர் - முக்கியமாகத் தமிழ் எழுத்தாளர், தங்கள் எழுத்துக்களினாலேயே தங்களின் வாழ்க்கையை நடத்தும் நிலைமையை இன்னும் அடையவில்லை. ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் என்பது போல் எழுத்தாளரில் பெரும் பான்மையோர் வேறு தொழில்களைச் செய்து கொண்டே நூல் எழுதும் பணியைச் செய்துவருகிறார்கள். அயல் நாடுகளிலே எழுத்தாளர்கள் தாங்கள் எழுதுகிற நூல்களின் வருவாயைக் கொண்டே தங்கள் வாழ்க்கையைச் செம்மையாகவும் மேன்மையாகவும் நடத்திவருகிறார்கள். அத்தகைய உயர்நிலை இன்னும் நமது எழுத்தாளருக்கு வாய்க்கவில்லை. வெகுவிரையில் அந்நிலை ஏற்படவேண்டுமென்று எதிர்பார்க்கிறோம்.

அரசாங்கத்தார் நூலாசிரியர்களை ஊக்கப்படுத்தப் பல வகைகளில் உதவி செய்து வருகிறார்கள். அவற்றில் *சாகித்திய அக்காடமி* என்பதும் ஒன்று. பதினான்கு மொழிகளில் சிறந்த நூல் எழுதுகிற நூலாசிரியருக்கு ஆண்டுதோறும் *சாகித்திய அக்காடமி* பரிசு வழங்கிவருவதை எல்லோரும் அறிவர். தமிழ் நூல்களுக்கும் பரிசு வழங்கப்படுகிறது. இது மகிழ்ச்சிக்குரியதே. தகுந்த நல்ல நூல்களுக்குப் பரிசு வழங்க வேண்டும்.

சென்னை அரசாங்கத்தாரும் சிறந்த தமிழ் நூல்களுக்கு ஆண்டுதோறும் பரிசு அளித்து வந்தனர். தற்போது இது நிறுத்தப்பட்டிருக்கிறது. இவ்வாண்டிலிருந்தாவது இப்பரிசு களைத் தொடர்ந்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

மாத வார தினசரிப் பத்திரிகைகளுக்கு எழுதுகிற எழுத்தாளர்களுக்குக் கொடுக்கப்படுகிற ஊதியம் குறைவாக இருக்கிறது. இவ்வூதியத் தொகையை உயர்த்த வேண்டும். வாழ்க்கைச் செலவு உயர்ந்துள்ள இக்காலத்தில் எழுத்தாளரின் ஊதியம் உயராமலிருப்பது வருந்தத்தக்கது. இதுபற்றி மாத வார தினசரி இதழ் வெளியிடுவோர் கவனிப்பார்களாக.

வானொலியில் பேசுகிறவர்களுக்குக் கொடுக்கப்படுகிற ஊதியமும் மிகக் குறைவாக இருக்கிறது. இந்தத் தொகையை மூன்று மடங்கு அதிகப்படுத்த வேண்டும். இதுபற்றி இந்திய ஒலிபரப்புத் துறை அமைச்சர் கவனிக்க வேண்டுகிறோம்.

எழுத்தாளர் உலக ஞானம் பெற்று விரிந்த மனப்பான்மை யுள்ளவர்களாக இருத்தல் அவசியம். பாரத நாட்டில் பிரயாணம் செய்ய எழுத்தாளருக்குப் பொருள்வசதி இல்லை. இவர்களுக்கு அரசாங்கம் சலுகைதர வேண்டும். எழுத்தாளர் தங்குவதற்குரிய விடுதிகளைப் பாரத நாட்டின் ஒவ்வொரு மாகாணத்தின் தலைநகரிலும் அமைத்து அவ்விடுதிகளில் குறைந்த செலவில் தங்குவதற்கு வழி செய்து கொடுக்க வேண்டும். மேலும், எழுத்தாளரின் பிரயாணச் செலவைச் சரிபாதி அரசாங்கம் ஏற்றுக் கொள்ள வேண்டும். மாகாண அரசாங்கமும் மத்திய அரசாங்கமும் அந்த வசதிகளை எழுத்தாளர்களுக்குச் செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

எழுத்தாளரின் புத்தகங்களுக்குக் *காப்பிரைட்* (Copy Right) உரிமை பற்றிய சட்டதிட்டங்கள் தெளிவான முறையில் இல்லை. திட்டவட்டமான, தெளிவான *காப்பிரைட்* சட்டம் இன்னும் ஏற்படவில்லை. இதுபற்றிப் பலவிதமான குழப்பங்கள் உள்ளன. எழுத்தாளரின் *காப்பிரைட்* சட்டதிட்டங்களை அரசாங்கத்தார் வகுத்துக் கொடுக்க வேண்டும்.

அரசாங்கத்தார் நாடெங்கும் நூல்நிலையங்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அந்நூல்நிலையங்களில் புத்தகங் களை வாங்கி வைக்கப் பொருளுதவியும் செய்துவருகிறார்கள். நூல்நிலையங்களில் சில நல்ல முறையில் சிறப்பாக நடைபெறு கின்றன. ஆனால், பல நூல்நிலையங்கள் திருப்திகரமாக நடைபெறவில்லை. நல்ல உயர்ந்த புத்தகங்கள் பல நூல் நிலையங்களில் இடம் பெறவில்லை. இந்தக் குறைபாடு நூல்நிலையங்களில் இல்லாதபடி அரசாங்கத்தார் பார்த்துக் கொள்ள வேண்டும். அரசாங்கத்தார் தக்கவர்களைக் கொண்டு ஒரு மத்தியக் குழுவை ஏற்படுத்தி அதன் மூலமாக நூல்களைத் தேர்ந்தெடுப்பது நலம்.

நாட்டு மக்களுக்குப் பயன்படுகிற நல்ல நூல்களை எழுத்தாளர் எழுதவேண்டும். நூல்களை வெளியிடுகிறவர் களும் பொது ஜனங்களுக்கு உபயோகமான நல்ல நூல்களை அச்சிட வேண்டும். வாலிபர்களின் மனத்தைக் கவரும்படியான சித்திரங்களை மேல் அட்டையில் சித்தரித்துக்காட்டிப் புத்தகம் விற்பனை செய்கிற கீழ்த்தரமான வழக்கம் நமது தமிழ் நாட்டில் சில காலமாகப் பரவி வருகிறது. இந்தக் கீழ்த்தரமான வழக்கம் உடனடியாக ஒழிய வேண்டும்; தமிழ் நாட்டைத் தவிர ஏனைய பாரத நாட்டில் இத்தகைய கீழ்த்தரமான செயல் கிடையாது. வடநாட்டு எழுத்தாளர் சிலர் இந்தவிதமான சித்திரப்பட அட்டையுள்ள நூல்களைக் கண்டு, "இப்படி யெல்லாம் சித்திரம் போட்டால்தான் உங்கள் நாட்டில் புத்தகம்

விற்பனையாகுமோ?" என்று கேட்டபோது வெட்கித் தலைகுனிய வேண்டிய நிலை ஏற்பட்டது. இனியேனும் இத்தகைய சித்திரப்படங்களையுடைய இதழ்களையும் நூல் களையும் வெளியிடாமல், நாட்டின் கௌரவத்தைக் காப்பாற்றுவார்களாக.

அறிவு பயக்கும் நல்ல நூல்களை எழுதுவதனாலே எழுத்தாளனை மக்கள் மதித்துப் போற்றுகிறார்கள். உயர்ந்த கருத்துள்ளதும் பயனுடையதுமான நூல்களை மக்கள் எதிர்பார்க்கிறார்கள். அத்தகைய தக்க நூல்களை எழுத்தாளர் எழுதி நாட்டுக்கு நற்றொண்டு செய்வார்களாக.

*பாரதி மாநாட்டு மலர்,* தமிழ் எழுத்தாளர் சங்கம், 1964

# ஏலேனாவின் எழில்

*இலீய* காவியம் என்பது கிரேக்க மொழியில் எழுதப்பட்ட சிறந்த காவியம். இதுவே ஐரோப்பா கண்டத்தின் ஆதி மகா காவியம். ஏன்? உலக மகா காவியங்களின் ஆதி காவியம் என்றுங் கூறலாம். இந்தக் காவியத்தை இயற்றியவர் ஹோமர் என்னும் கிரேக்க மகாகவி. இக்கவிஞர் பிறவிக் குருடர் என்றுங் கூறப்படுகிறார். இலீய நாட்டிலே நடந்த போர்ச் செய்தியை இக்காவியம் கூறுகிறது. இது *இராமாயணக்* கதை போன்றது. இலீய நாட்டு அரசன் பிரிய மன்னனுடைய இளைய மகன் பரீசன் என்பவன், தன்னுடைய நண்பனும் கிரேக்க நாட்டு மன்னனுமாகிய அகமன்னனுடைய அரண்மனைக்குச் சென்றான். அப்போது அகமன்னன் அரண்மனையில் இல்லை. அவனுடைய மனைவியாகிய எழில்மிக்க ஏலேனா என்பவள் பரீசனை வரவேற்று உபசரித்தாள். இளைஞனான பரீசன் அவளுடைய அழகில் ஈடுபட்டு அவள் மீது காதல் கொண்டு அவளைத் தன்னுடைய இலீய நாட்டுத் தலைநகரமாகிய திராய் நகரத்துக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டான். இது இராமனுடைய மனைவியாகிய சீதையை இராவணன் இலங்கைக்குக் கொண்டு போய்விட்டது போன்ற நிகழ்ச்சி.

அகமன்னன் தன்னுடைய மனைவியாகிய ஏலேனாவை மீட்டுக் கொண்டு போவதற்காகக் கிரேக்க வீரர்கள் அடங்கிய சேனையை அழைத்துக்கொண்டு கடல்கடந்து சென்று திராய் நகரத்துக் கோட்டையைச் சூழ்ந்து முற்றுகையிட்டுப் போர் புரிந்தான். கிரேக்க வீரர்களுக்கு இலீய நாட்டு வீரர்கள் இளைத்தவர்கள் அல்லர். இந்தப் போர் பத்து ஆண்டுகள் தொடர்ந்து நடந்தது. அப்போர் நிகழ்ச்சிகள்தான் இக் காவியத்துக்கு முக்கியக் கட்டமாக இருக்கின்றன. இரு தரத்து வீரர்களின் போர்களைப் படிக்கும்போது வாசகர்களின் உள்ளத்தில் வீர உணர்ச்சியும் போரில் ஆர்வமும் ஏற்படு கின்றன. இவ்வுணர்ச்சிகளைப் பெறுவதற்காகவே, சமீப காலம் வரையில் இந்தக் காவியத்தை ஐரோப்பியர் ஒவ்வொருவரும் படிப்பது வழக்கம்.

*இராமாயணத்தைப்* படிக்கும்போது, படிப்பவருக்கு அரக்கர் மீது வெறுப்பும் துவேஷமும் ஏற்படுகிறதைக் காண

கிறோம். ஆனால், *இலீய* காவியத்தில் ஒரு சார்பான வீரர் மீது துவேஷமோ வெறுப்போ ஏற்படுவது இல்லை. இரு சார்பான வீரர்களையும் இக்கவிஞர் உயர்வு தாழ்வு இல்லாமல் ஒரு தன்மைத்தாகக் கூறுகிறார். இருசார்பு வீரர்களையும் போற்றியும் உயர்த்தியும் சரிசமானமாக விளக்குகிறார். இக் காவியத்தில் வருகிற வீரர்களான மேனிலாவன், அகிலேசன், தயமிதன், ஏகதன், அஜன், உலிசன், அகமன்னன் முதலியவர்கள் போர்செய்யும்போது, வாசகர்களையும் அப்போர்க்களத்துக்கு அழைத்துச்சென்று அப்போர்க் காட்சிகளைக் கண்ணெதிரே காணுமாறு செய்கிறார் இக்காவியப் புலவர். கடைசியாக கிரேக்கர் வெற்றிகொண்டு ஏலேனாவை மீட்டுக்கொண்டு கிரேக்க நாட்டுக்குச் செல்கின்றனர். இதுதான் இக்காவியத்தின் கதைச் சுருக்கம்.

*இலீய* காவியத்தின் தலைவியாகிய ஏலேனாவின் அழகை இக்காவியப் புலவர் ஒரே வாக்கியத்தில் கூறுவதுதான் வியப்புக்குரியது. எழில்மிக்க ஏலேனாவின் அழகை இக்கவிஞர் ஓரிடத்திலேனும் கூறவில்லை. அவளுடைய அழகை வர்ணிக் காமலே ஒரே வார்த்தையில் முழு அழகையும் வெளியிடுகிறார். காவியப் புலவர்கள் காவியத் தலைவியரின் அழகை வர்ணிப்பது மரபு. கேசாதி பாதமாகவும் பாதாதி கேசமாகவும் தலைவியின் ஒவ்வொரு உறுப்பையும் புகழ்வர். ஒவ்வொரு உறுப்புக்கும் ஒவ்வொரு பொருளை உவமை கூறி விளக்குவர். கூந்தலைக் காரிருளுக்கும், நெற்றியை எட்டாம் பிறைச் சந்திரனுக்கும், கண்களை நீலோற்பல மலருக்கும், புருவத்தை வில்லுக்கும், கண் பார்வையை அம்புக்கும், மூக்கை எள்ளின் மலருக்கும், பல்லை முத்துக்கும், உதடுகளைப் பவழத்துக்கும், முகத்தைப் பூரணச் சந்திரனுக்கும், இவ்வாறே ஒவ்வொரு உறுப்பையும் ஒவ்வொரு பொருளுக்கு உவமை காட்டித் தலைவியின் அழகைப் புகழ்வார்கள். ஆனால், *இலீய* மகா காவியப் புலவராகிய ஹோமர் மகா கவியோ தம்முடைய காவியத் தலைவி ஏலேனாவின் பேரெழிலை இவ்வாறெல்லாம் புகழவில்லை. ஒரே ஒரு சொல்லினால் அத்தலைவியின் பேரெழிலை நன்கு விளக்குகிறார். அதுவும் எண்பது வயது நிறைந்த ஒரு தொண்டுக் கிழவனின் வாயிலாக விளக்குகிறார். நமது நாட்டுக் கம்பன், காளிதாசன் போன்ற பெரும்புலவர் கைகளில் *இலீய* காவியத் தலைவி அகப்பட்டிருந்தால் அவளுடைய அழகு என்ன பாடுபட்டிருக்குமோ அறியோம். ஹோமர் மகாகவி, தமது காவியத் தலைவி எழிலரசி, பேரழகி என்பதை எவ்வாறு ஒரே சொல்லில் விளக்குகிறார் என்பதைப் பார்ப்போம்.

இலீய நாட்டாருக்கும் கிரேக்க நாட்டாருக்கும் நிகழ்ந்த இக்கடும் போர் பத்து ஆண்டுகள் வரையில் நீண்டு நிகழ்ந்தது. இரு தரப்பிலும் வீரக்காளைகள் மடிந்து மாண்டார்கள். வெற்றியும் தோல்வியும் இரு தரப்பாருக்கும் மாறிமாறிக் கிடைத்தன. ஆனாலும் போர் ஓயவில்லை. திராய் நகரத்துக் கோட்டைக்கு வெளியே போர் நிகழ்ந்தது. வழக்கம் போல இரு தரத்து வீரர்களும் போர்க்களத்திலே அணிவகுத்து நிற்கின்ற னர். சிறுவர்களும் பெண்களும் தொண்டுக் கிழவர்களுந் தவிர ஏனையோர் எல்லோரும் போர்க்களத்திற்குச் சென்றார்கள்.

போரின் முடிவு என்னாகுமோ என்பதை யறிவதற்கு எண்பது வயது நிறைந்த பிரிய அரசனும் தொண்டுக் கிழவர் களான அமைச்சர் முதலியவர்களும் கோட்டை மதிற் சுவரின் மேலே அமர்ந்து இருக்கின்றனர். போரினால் விளைந்த துன்பங்களை எண்ணி இவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். இந்தப் போர் மேலும் தொடர்ந்து நடக்க வேண்டுமா? இப்பெரும் போருக்குக் காரணமாக இருக்கும் பெண்மணியைக் கிரேக்கரிடம் ஒப்படைத்து ஏன் சமாதானம் செய்து கொள்ளக்கூடாது? ஒரு பெண்ணுக்காக இவ்வளவு மக்கள் மடிய வேண்டுமா? மக்கள் துன்பப்பட வேண்டுமா என்று அவர்கள் யோசித்து ஏலேனாவைக் கிரேக்கரிடம் கொடுத்துவிட்டுச் சமாதானம் செய்து கொள்ளலாம் என்று முடிவு செய்கிறார்கள்.

இந்தச் சமயத்தில், காவியத் தலைவியாகிய எழில்மிக்க ஏலேனா, போர் எப்படி நடக்கிறது என்று பார்ப்பதற்காகத் தோழிகளுடன் கோட்டை மதில்மேல் வந்தாள். தொண்டுக் கிழவர்களான பிரிய மன்னனும் அமைச்சர்களும் அவளைக் கண்டார்கள். உடனே, சற்று முன்பு அவர்கள் கொண்டிருந்த எண்ணம் மாறிவிட்டது. பிரியமன்னர் இவ்வாறு கூறுகிறான்: "இந்தப் பெண்மணிக்காகப் பல ஆண்டுகள் போர் நடத்தலாம். எத்தனை வீரர்களானாலும் போரில் உயிர்விடலாம்." இவ்வாறு தொண்டுக்கிழவனாகிய பிரிய மன்னன் வாயிலாக ஹோமர் மகாகவி காவியத் தலைவியின் எழிலை ஒரே சொல்லில் விளக்கிவிட்டார். இதைத் தவிர அவர் இக்காவியத் தலைவியின் அழகைப்பற்றி வேறு ஒன்றுமே கூறவில்லை. ஆனால், இது ஒன்றுமட்டும் போதாதா? வேறு உவமைகளும் வர்ணனைகளும் வேண்டுமோ?

இலீய காவியத்தில் இன்னொரு புதுமையுமுண்டு. நமது நாட்டுப் புலவர்கள் தாங்கள் ஏதேனும் நூலை எழுதுவதாக இருந்தால், அந்நூல் நன்கு முடிவதற்குக் கடவுளர்களையும் தெய்வங்களையும் துணைபுரியும்படி வேண்டிக்கொள்வது

வழக்கம். சங்க காலத்துப் புலவர்களைத் தவிர பிற்காலத்துத் தமிழ்ப் புலவர்களுக்கும் இந்த வழக்கம் உண்டு. விநாயகன், முருகன், திருமால், சிவபெருமான் முதலிய தெய்வங்களை அழைத்து, நான் இந்த நூலைப் பாடப் போகிறேன், நீங்கள் வந்து எனக்கு உதவி செய்யுங்கள் என்று வேண்டிக்கொண்டு தம்முடைய நூலைப் பாடத் தொடங்குவார்கள். கலை மகளையும் துணைக்கு அழைத்துத் தமக்கு உதவிசெய்யும்படி வேண்டுவார்கள். ஆனால், ஹோமர் மகாகவி *இலீய* காவியத்தைப் பாடுவதற்கு எந்தக் கடவுளையும் துணைக்கு அழைக்கவில்லை. அவர் காலத்தில் கிரேக்க நாட்டில் பல தெய்வங்கள் இருந்தும் அத்தெய்வங்களின் உதவியை அவர் கோரவில்லை. கிரேக்க நாட்டில் அக்காலத்தில் கலைகளின் தெய்வங்களாக மூன்று பெண் தெய்வங்கள் இருந்தனர். அந்த மூன்று கலை மகளிரையுங்கூட இக்கவிஞர் துணைக்கு அழைக்கவில்லை. இக்காவியத்தை நீங்களே பாடுங்கள் என்று அவர்களிடத்திலேயே விட்டு விடுகிறார். நான் பாடப்போகி றேன். நீங்கள் என் பக்கத்தில் இருந்து உதவி செய்யுங்கள் என்று வேண்டவில்லை. 'கலைமகளிர்காள்! பாடுங்கள். விறல் வீரர் பலருடைய இன்னுயிரை யமலோகத்துக்கு அனுப்பிப் போர் செய்த அகிலேசன் வீரத்தைப் பாடுங்கள்' என்று கூறி இவர் தம்முடைய காவியத்தைத் தொடங்குகிறார். இதுவும் ஒரு புதுமையல்லவா?

*த.வே. முருகேசனார் மணிவிழா மலர்,* சென்னை கல்விச் சங்கம், 1964

# மகாத்மா காந்தி தந்த சுயராச்சியம்

ஏறத்தாழ 200 ஆண்டுகளாகப் பாரத தேசம் ஆங்கிலேய ஆட்சிக்கு அடிமைப்பட்டுக் கிடந்தது. வன்மையான ஆயுத பலமும் உறுதியான ஆட்சியும் படைத்து வலிமையுடையவராக இருந்தார்கள் ஆங்கிலேயர். அவர்களுடைய ஆட்சிப் பிடியி லிருந்து, அடிமைத்தளையிலிருந்து விடுபடுவது இயலாத காரியம். கனவிலும் கருத முடியாத ஒன்று. அழுத்தமான ஆட்சியும் இராசதந்திரமும் பீரங்கியும் குண்டுகளும் துப்பாக்கியும் தூக்குமேடையும் குண்டாந்தடியும் படைத் திருந்த ஆங்கில ஆட்சியின் பிடியிலிருந்து விடுபடுவது முயற்கொம்பு, ஆகாசத் தாமரை, கானல்நீர், பகற்கனவு போன்றது என்று எல்லோரும் கருதின காலம் அது. இனி கதிமோக்ஷம் இல்லை என்று கருதி நாட்டு மக்கள் அடங்கிக் கிடந்த காலத்தில், அடிமை விலங்கு முறிபடாது என்று கருதிக் கொண்டிருந்த காலத்தில் மகாத்மா காந்தி தோன்றினார். அரையில் ஒரு வேட்டியும் தோளின்மேல் ஒரு துண்டும் அணிந்து சாதாரண ஏழைக் குடிமகன்போலக் காட்சி யளித்தார் மகாத்மா. பலமுள்ள ஆங்கில ஆட்சிக்கு எதிராகச் சுதந்தரப் போரைத் தொடுத்த இவரிடத்தில் என்ன இருக்கிறது? இந்தியாவின் அடிமைத்தனத்தை இவரால் நீக்க முடியுமா? இவரால் சுதந்தரம் பெறமுடியுமா? இவரிடத்தில் பீரங்கி யுண்டா? துப்பாக்கி உண்டா? வெடிகுண்டு உண்டா? கத்தியுங் குண்டாந்தடியும் உண்டா? வெறுங்கையாக இருக்கிற இவர், இந்த ஆயுத பலங்களையெல்லாம் படைத்த பலமான ஆங்கில ஆட்சியைக் கவிழ்க்க முடியுமா என்றெல்லாம் கருதி மக்கள் விடுதலை பெறுவோம் என்பதில் நம்பிக்கை இல்லாமல் இருந்தார்கள்.

வலிமை பொருந்திய ஆங்கிலேய ஆட்சியுடன் சுதந்தரப் போர் (போர் அன்று இயக்கம்) தொடுத்த மகாத்மா காந்திக்கு ஆயுதமாக இருந்தவை சத்தியம், அகிம்சை, ஒத்துழையாமை, நாட்டு மக்களின் ஆதரவு ஆகிய இவைகள் மட்டுமே. இந்த இயக்கத்தை அடக்கி ஒடுக்கி அழிப்பதற்கு ஆங்கிலேய ஆட்சிக்கு ஆயுதமாக இருந்தவை அடக்குமுறைச் சட்டம், சிறைச்சாலைகள், தூக்குமேடைகள், குண்டாந்தடிகள்,

துப்பாக்கிகள், குண்டுகள், போலீஸ் படைகள், இராணுவப் படைகள். மகாத்மா காந்தியின் சுதந்தரப் போராட்டத்தில் அவர் சார்பாக ஒரு சொட்டு இரத்தமும் சிந்தவில்லை. ஒரு உயிரும் சாகவில்லை. ஆனால், அவரை எதிர்த்துப் போராடிய ஆங்கில ஆட்சி மக்களின் இரத்தத்தைச் சிந்தியது; பல உயிர்களைக் குடித்தது. ஆயிரக்கணக்கானவருக்குச் சிறைத் தண்டனை கொடுத்தது. இவ்வளவு வன்முறைகளைக் கையாண்டு கடைசியில் தோல்வியடைந்தது. கத்தி எடுக்காமல் இரத்தம் சிந்தாமல் மகாத்மா வெற்றி பெற்றார்; சுதந்தரம் வாங்கித் தந்தார்.

சிந்தித்துப் பாருங்கள். மகாத்மா காந்தி கத்தியையும், துப்பாக்கியையும் ஆயுதமாகக் கொண்டு ஆங்கிலேய ஆட்சியை எதிர்த்திருந்தால் என்ன நடந்திருக்கும்? ஒரே நாளில் அவரை அடக்கிவிட்டு ஆங்கில ஆட்சி பாரத தேசத்தை என்றென்றும் அடிமையாக இருக்க வழி செய்திருக்கும். இந்தியா சுதந்தரம் பெற்றிருக்கவே முடியாது. தீர்க்கதரிசியான மகாத்மா காந்தி வன்முறைகளைக் கையாளாமல் சாத்விக முறையைக் கொண்டு வெற்றி பெற்றார். இந்தியாவின் அடிமைத் தளையை உடைத்து சுதந்தர ஆட்சியைப் பெறச் செய்தார். வன்முறைகளைக் கையாளாமல் சாத்விகப் போரைச் செய்து சுதந்தரம் பெற்ற நாடு உலகத்திலேயே இந்தியா ஒன்றுதான். சாத்விகப் போரை நடத்தி வெற்றி பெற்றவர் உலகத்திலே மகாத்மா காந்தி ஒருவர்தான். இவ்வாறு செய்த மகாத்மாவின் செயல் புதுமையாகவும் தெய்வீகமாகவும் தோன்றுகிறது. பௌராணிக பாஷையில் சொல்ல வேண்டு மானால், மகாத்மா காந்தி கடவுளின் அவதார புருஷன் என்று சொல்லலாம். அடக்குமுறைச் சட்டங்களையும் ஆயுத பலத்தையுங் கொண்ட ஆங்கில ஆட்சி தோற்றது; சாத்விக எதிர்ப்பு வெற்றி பெற்றது.

சுதந்தரம் பெற்ற இந்தியா தேசம் உலக மக்களின் பார்வையில் உயர்ந்து நிற்கிறது. ஆங்கிலேயருக்கு அடிமைப் பட்டிருந்த காலத்தில் பாரத நாட்டு மக்கள் - அவர்கள் எவ்வளவு கற்றவராக இருந்தாலும், உயர்ந்த பதவியில் இருந்தாலும், கோடீசுவரராக இருந்தாலும் உலக மக்களின் பார்வையில் தாழ்ந்தவராக, இழிந்தவராகக் கருதப்பட்டார்கள். சென்ற உலக மகாயுத்தத்தில் இந்தியச் சிப்பாய்கள் ஆங்கிலேய ஆட்சியின்கீழ் வீர தீரமாகப் போர் செய்து வெற்றிகளை யடைந்தும் அந்தச் சிப்பாய்கள் ஆங்கிலேயருக்கு அடிமைப் பட்டு இருந்த காரணத்தினால், மற்ற நாட்டாரின் பார்வையில் 'தாழ்ந்த இழிந்தவர்களாக'க் கருதப்பட்டு அவமானம்

அடைந்தனர். அந்தக் காலத்தில் சுதந்தர நாட்டு மக்கள் எல்லோரும் இந்தியரை இழிந்தவராகக் கருதிவந்தார்கள். இப்போது சுதந்தரம் பெற்ற பிறகு அந்த நிலை மாறிவிட்டது. மற்ற நாட்டினர் இந்தியரை இப்போது தங்களுக்குச் சரி சமானமானவர்கள் என்று மதிக்கிறார்கள். சுதந்தரத்துக்கு முன்பு இந்தியர் ஐரோப்பியருடன் பழகும்போது, அவர்கள் இந்தியரைத் தாழ்த்தவராகவே கருதி வந்தனர். சுதந்தரம் பெற்ற பிறகு அந்த நிலை மாறிவிட்டது. மேல் நாட்டாரும் இப்போது இந்தியரை மதித்து வருகிறார்கள். 1968இல் சென்னையில் நடைபெற்ற உலகத் தமிழ் மகாநாட்டிற்கு ஐரோப்பா கண்டத்துப் பல நாடுகளிலிருந்தும் பலர் வந்திருந்தார்கள். அவர்கள் அப்போது இந்தியருடன் பழகிய காட்சி இந்தியரை அவர்கள் இப்போது தங்களுக்குச் சரிசமானமானவர்கள் என்று கருதியதை வெளிப்படுத்தியது. இது சுதந்தரம் உற்ற தனால் அடைந்த மேன்மையாகும்.

தென்கிழக்கு ஆசிய நாடுகளிலே இந்தியா உயர்ந்த நிலையில் இருக்கிறது. உலகத்திலுள்ள மக்கள் இந்தியாவை மேன்மையாகக் கருதி வருகிறார்கள். அந்த மதிப்பை இந்திய ராகிய நாம் மேன்மேலும் வளர்க்க வேண்டும். இந்தியா உயர் நிலையடையக்கூடாது என்று கெட்ட எண்ணங் கொண்ட நாடுகள் இந்தியாவின் வளர்ச்சியைத் தடை செய்கிற விதத்தில் இடுக்கண் செய்து கொண்டிருக்கின்றன. இந்தியா வளர்ச்சி யடையக் கூடாது என்று கெட்ட எண்ணங் கொண்ட சீனா நாடு, வேறு ஏதோ சாக்கு போக்குகளைச் சொல்லிக் கொண்டு இந்தியாவுடன் போர் செய்து வருகிறது. அதுபோலவே பாகிஸ்தானும் இந்தியாவுடன் போர் செய்து கொண்டி ருக்கிறது. இந்தப் போர்களின் காரணமாக இந்தியாவின் பொருள் கோடிக்கணக்காகச் செலவாகிறது. இது துர்ப் பாக்கியமான நிலை.

சுதந்தரம் என்பது கிடைப்பதற்கு அருமையான பெரும் பேறு. அதனை மகாத்மா காந்தியின் வாயிலாக நாம் கிடைக்கப் பெற்றோம். பெரும் பேறான சுதந்தரத்தைப் பெற்ற நாம் நாட்டை நன்முறையில் நடத்தி மேன்மேலும் முன்னேற்ற மடையவும் உயர் நிலையை எய்தவும் பாடுபட்டு உழைக்க வேண்டும்.

சுதந்தர பாரத நாடு இப்போது குடியரசாக இயங்கி வருகிறது; அதாவது பாரத நாட்டை உயர்நிலையடையச் செய்யும் பொறுப்பை ஒவ்வொரு ஆணும் பெண்ணும் அடைந்திருக்கிறோம். இப்பொறுப்பை ஏற்றுக் கொண்டி ருக்கிற நாம் எல்லோரும் பல துறைகளிலும் பாடுபட்டு

உழைக்க வேண்டும். அரசாட்சி வேறு, நாம் வேறு என்று கருதி வாளா இருக்கக்கூடாது. ஒவ்வொருவரும் நம்முடைய கடமையைச் செய்ய வேண்டும். அதற்காக ஒவ்வொருவரும் தம்மைத் தகுதியாக்கிக் கொள்ள வேண்டும். அவரவர்கள் கடமைகளை அவரவர்கள் சரியாகவும் உண்மையாகவும் செய்வார்களானால் அதுவே நாட்டின் முன்னேற்றத்துக்கு உதவியாகும்.

ஆட்சிக்குரிய சட்டதிட்டங்களைச் செய்துகொண்டிருக்கிறோம். சில சட்டங்கள் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலிருந்து இன்றும் இருந்து வருகின்றன. அவற்றில் நல்லனவும் உண்டு, தீயனவும் உண்டு. இந்தியரை அடிமைத்தனத்தில் வைத்திருக்கவும் முன்னேறாதபடியும் ஆங்கிலேயர் செய்துவைத்துள்ள சட்டங்கள் உள்ளன. அந்தச் சட்டதிட்டங்கள் மாற்றப்பட்டு இக்காலத்துச் சுதந்தர மக்களுக்கு ஏற்றதாக அமைக்கப்பட வேண்டும். இதுபோல் எத்தனையோ காரியங்களைச் செய்து நாட்டின் மேன்மைக்காக உழைக்க வேண்டியவர்களாக இருக்கிறோம்.

சுதந்தரம் பெற்ற பாரத நாட்டு ஆணும் பெண்ணும் தம்தம் கடமைகளை உண்மையாகவும் சரியாகவும் நேர்மையாகவும் செய்துகொண்டிருக்கிறார்களா? அதனால் பாரத நாடு வளர்ச்சியடைகிறதா என்று மகாத்மாவின் ஆவி பார்த்துக் கொண்டே இருக்கிறது. எல்லோரும் அவரவர் கடமைகளைச் செய்வோமாக.

*காந்திஜி நூற்றாண்டு விழா சிறப்பு மலர்,* சென்னை மகாஜன சபா, 1969

# தேசிகப்பாவை

பல்லவ தேசத்து அரசனான உலகபாலன் சந்திராபம் என்னும் தன்னுடைய தலைநகரத்தில் வாழ்ந்து கொண்டிருந்தான். அப்போது, அவனுடைய நண்பனான சீவககுமரன் என்னும் அரசகுமாரன் அவனிடம் வந்து அவனுடைய அரண்மனையில் சில காலம் தங்கினான். சீவககுமரன் ஏமாங்கத நாட்டின் அரசன். ஆனால், அவனுடைய நாட்டைக் கட்டியங்காரன் கைப்பற்றிக் கொண்டபடியால், அவன் தன்னுடைய இராச்சியத்தை மீட்டுக்கொள்ள முயன்று கொண்டிருந்தான். அந்தச் சூழ்நிலையில், சீவககுமரன் பல நாடுகளுக்குஞ் சென்று நண்பர்களைச் சந்தித்துக் கொண்டிருந்தபோது பல்லவ தேசத்துக்கு வந்து உலகபாலனோடு தங்கினான். உலகபாலனுடைய அரண்மனையில் நாடகங்களும் நடனங்களும் இசைப்பாட்டுகளும் நடப்பது வழக்கம். அந்த நகரத்தின் பேர்போன நாட்டியக்காரியான தேசிகப் பாவை என்னும் கணிகைப் பெண் வழக்கம்போல் அரண்மனையில் நாட்டியம் ஆடினாள்.

தேசிகப்பாவை எழில் உள்ளவள். இசைக்கலையிலும் நாடகக் கலையிலும் நாட்டியக்கலையிலும் வல்லவள். அவளுடைய கலைப்புகழ் நாடெங்கும் பரவியிருந்தது. அவளுடைய நாட்டியத்தைக் காண அரசனும் அமைச்சரும் நகரப் பெருமக்களும் வந்திருந்தார்கள். விருந்தினனான சீவக குமாரனும் நாடக அரங்கத்துக்கு வந்திருந்தான். தேசிகப் பாவையின் நாட்டியம் எல்லோருடைய மனத்தையுங் கவர்ந்தது. இசைக்கு ஏற்றபடி யாழும் குழலும் மத்தளமும் தாளமும் இசைந்து முழங்கின. பாட்டின் கருத்துக்கு ஏற்ப தேசிகப்பாவை அபினயம் பிடித்து ஆடினாள்.

> குழலெடுத்து யாத்து மட்டார் கோதையில் பொலிந்து மின்னும்
> அழலவிர் செம்பொற் பட்டம் குண்டலம் ஆரம் தாங்கி
> நிழலவிர் அல்குற் காசு சிலம்பொடு சிலம்ப நீள்தோள்
> அழகிகூத் தாடு கின்றாள் அரங்கின்மேல் அரம்பை யன்னாள்

*தண்ணுமை முழவம் வீணை குழலொடு குயிலத்*
*தண்பூம்*
*கண்ணொடு புருவம் கைகால் கலையல்குல் நுசுப்புக்*
*கார்மர்*
*ஒண்ணுதல் கொண்ட ஆடல் தொட்டிமை யுருவம்*
*நோக்கி*
*வெண்ணெய்தீ யுற்ற வண்ணம் ஆடவர் மெலிகின் றாரே*

*பாடலொ டியைந்த ஆடல் பண்ணமை கருவி மூன்றும்*
*கூடுபு சிவணி நின்று குழைந்திழைந் தமிர்த மூற*
*ஓடரி நெடுங்கண் அம்பால் உளங்கிழிந் துருவ எய்யா*
*வீடமை பசும்பொற் சாந்தம் இலயமா ஆடுகின்றாள்.*

(*சீவக சிந்தாமணி,* பதுமையார் இலம்பகம் 89,90, 91)

தேசிகப்பாவை இவ்வாறு அரங்கத்தில் ஆடும்போது, விருந்தினனான சீவககுமரன்மேல் அவளுடைய பார்வை சென்றது. இளமையும் வனப்பும் வீரமும் உடைய அரச குமரனின் தோற்றம் அவளுடைய மனத்தைக் கவர்ந்தது. நாட்டியம் ஆடிக்கொண்டே அவள் அடிக்கடி தன்னுடைய பார்வையை அவன்மேல் செலுத்தினாள். கலைகளில் வல்ல வனான சீவககுமரனும் அவளுடைய ஆடலிலும் பாடலிலும் அழகிலும் ஈடுபட்டு அவளை நோக்கினான்.

*வாணுதல் பட்டம் மின்ன வார்குழை திருவில் வீசப்*
*பூண்முலைப் பிறழப் பொற்றோடு இடவயின் நுடங்க*
*ஒல்கி*
*மாணிழை வளைக்கை தம்பால் வட்டணை போக்கு*
*கின்றாள்*
*காண்வரு குவளைக் கண்ணாள் காளைமேல்*
*நோக்கினாளே*

(*சீவக சிந்தாமணி,* பதுமையார் இலம்பகம் 92)

தேசிகப்பாவை சீவககுமரனைக் காதலித்தாள். அவனை யல்லாமல் வேறு ஒருவரையும் விரும்புவதில்லை என்று உறுதி செய்துகொண்டாள். 'கணிகை மகளுக்குப் பொன்னைக் கொடுத்தால் அவள் தன் கற்பை விற்றுவிடுவாள் என்று கூறுவார்கள். அந்தச் சொல் என்னிடத்தில் பொய்யாகும்' என்று தனக்குள்ளே கூறிக்கொண்டாள்.

*கன்னிமை கனிந்து முற்றிக் காமுறக் கமழுங் காமத்து*
*இன்னறுங் கனியைத் துய்ப்பான் ஏந்தலே பிறர்கள்*
*இல்லை*

பொன்னினால் உடையுங் கற்பென்று உரைத்தவர்
பொய்யைச் சொன்னார்
இன்னிசை இவற்கல் லால்என் நெஞ்சிடம் இல்லை
என்றாள்

(*சீவக சிந்தாமணி*, பதுமையார் இலம்பகம் 95)

தேசிகப்பாவையும் சீவககுமரனும் ஒருவரையொருவர் விரும்பினார்கள். ஆனால் ஒருவரையொருவர் சந்திக்க வாய்ப்பு இல்லை. அவளோ கணிகைப் பெண். அவனோ அரசகுமரன். அரண்மனையில் விருந்தினனாக வந்திருக்கும் அரசகுமரன். கணிகைப்பெண்ணை நாடிப் போக இயலுமா? கணிகைப் பெண் அரசகுமரனாகிய விருந்தினனைத் தேடிவர முடியுமா? சில நாட்கள் சென்றன.

ஒரு நாள் மாலைநேரத்தில் தேசிகப்பாவை பொழுது போக்காகத் தன்னந்தனியே அரண்மனைப் பூங்காவில் ஓரிடத்தில் அமர்ந்து வீணை வாசித்துக் கொண்டிருந்தாள். அதே நேரத்தில் சீவககுமரன் அப்பூங்காவில் இன்னொரு இடத்தில் உலாவிக்கொண்டிருந்தான். அப்போது வீணையின் இன்னிசையைக் கேட்டு அவ்விசை வந்த திசையை நோக்கி வந்தான். வந்தவன் எதிர்பாராவண்ணம் தேசிகப்பாவையைக் கண்டு வியப்படைந்தான். அவளும் அவனைக் கண்டு வியப்படைந்தாள். முன்னமே நாடக அரங்கில் அவர்கள் ஒருவரையொருவர் விரும்பியவராகையால் இந்தச் சந்திப்பில் அவர்கள் மனமொத்த நண்பர்களாகவும் காதலராகவும் ஆனார்கள். பின்னர் அவர்கள் நாள்தோறும் சந்தித்தார்கள்.

சில நாட்கள் சென்ற பிறகு சீவககுமரன் தன்னுடைய நாட்டுக்குப் போய் விட்டான். சில மாதங்கள் வரையில் அவனைப் பற்றின செய்திகள் ஒன்றும் தெரியவில்லை. அவள் பொறுமையாகக் காத்திருந்தாள். பல மாதங்கள் சென்றன. கடைசியில் சீவககுமரனைப்பற்றி அரண்மனையில் பேசிக் கொண்டதை அவள் அறிந்தாள். 'சீவககுமரன், கட்டியங் காரனோடு போர்செய்து வென்று தன்னுடைய இராச்சியத்தை மீட்டுக்கொண்டான். இப்போது அவன் பட்டாபிஷேகம் செய்து கொண்டு முடிசூடி அரசாள்கிறான்' என்று அவர்கள் பேசிக்கொண்டதை அவள் அறிந்தாள் தேசிகப்பாவை மட்டற்ற மகிழ்ச்சியடைந்தாள். தன்னைக் காதலித்த அவன் தன்னை அழைத்துக் கொள்வான் என்று அவள் காத்திருந்தாள். நாட்கள் கழிந்தன. மாதங்கள் சென்றன. ஆண்டு கடந்தது. அவனிடமிருந்து அழைப்பு வரவில்லை. அழைத்துக் கொள்ளும் குறி ஒன்றும் காணப்படவில்லை. அவள் நெடுநாள் காத்துக் கொண்டிருந்தாள்.

தேசிகப்பாவை தனக்குள் எண்ணினாள். 'சீவககுமரன் ஏமாங்கத நாட்டின் மன்னனாக முடிசூடிச் சிம்மாசனத்தில் அமர்ந்து அரசாள்கிறான். பட்டம், பதவி, அரச போகங்கள் செல்வம், அதிகாரம் இவைகளில் மூழ்கியிருக்கிறான். அதனால் அவன் என்னை மறந்துவிட்டான். அன்றியும் அவன் அரச குலத்தில் பிறந்தவன். நானோ கணிகை குலத்தில் பிறந்தவள். சப்பி உமிழப்பட்ட மாங்கொட்டையைப்போல அவன் என்னை நினைத்திருப்பான்?' இவ்வாறெல்லாம் அவள் தனக்குள் எண்ணினாள். ஆனால், அவள் அவனை வெறுக்க வில்லை. அவன் மேலிருந்த அன்பும் காதலும் அவளுக்குக் குறையவில்லை. எதற்கும் நேரில் போய்க் காண்போம் என்று எண்ணினாள். தன்னை அவன் ஏற்றுக்கொள்ளவில்லை யானால் என்ன செய்வது? கடைசியில் அவள் அவனை நேரில் காணத் துணிந்தாள்.

தேசிகப்பாவை பல்லவ நாட்டை விட்டுப் பயணமானாள். பல நாட்கள் பயணஞ்செய்து கடைசியில் ஏமாங்கத நாட்டை அடைந்தாள். தலைநகரமான இராசகிரிய நகரத்துக்கு வந்து தங்கினாள். அங்குச் சில நாட்கள் தங்கியிருந்து சீவககுமரனைப் பற்றிய செய்திகளை விசாரித்து அறிந்தாள். அச்செய்திகளில் ஒன்று, அனங்கமாலை என்னும் கணிகைப் பெண் ஒருத்தி சீவக குமரனைக் காதலித்தாள்; ஆனால், அவன் அவளைக் காதலிக்க வில்லை என்பது. இந்தச் செய்தி தேசிகப்பாவைக்கு உதவியாக இருந்தது. அனங்கமாலையின் ஊழியப்பெண்போல நடித்துச் சீவககுமரனிடம் போக அவள் திட்டம் இட்டாள். அனங்க மாலை, சீவககுமரனுக்குக் கடிதம் எழுதியதுபோல ஒரு கடிதத்தை எழுதிக்கொண்டு அக்கடிதத்தைச் சீவககுமரனிடம் கொடுக்கும் ஊழியப்பெண் போல அவள் கடிதத்தை எடுத்துக்கொண்டு அரண்மனைக்குச் சென்றாள். சீவககுமரன் தனியே இருக்கும் நேரம் அறிந்து வாயிற்காவலனிடம், தான் அனங்கமாலையின் ஊழியப்பெண் என்றும் அரசனைக் காண வந்ததாகவும் கூறினாள். வாயிற்காவலன் அரசனிடஞ் சென்று கூற, அரசன் அவளை உள்ளே விடும்படி கட்டளையிட்டான். தேசிகப்பாவை உள்ளே சென்று ஊழியப்பெண் என்னும் நிலையில் அரசனுடைய காலில் விழுந்து வணங்கித் தான் கொண்டுவந்த கடிதத்தைக் கொடுத்தாள். அரசனான சீவக குமரன் அவளைக் கூர்ந்து நோக்கிப் புன்முறுவல் பூத்தான். அவளை அருகில் அழைத்துத் தழுவிக்கொண்டு அருகில் அமர்த்தி அவளைப் பார்த்துச் சிரித்தான்.

"அரசர் பெருமானே! அடியேன் ஓர் எளிய ஊழியப்பெண். அடியேனுக்கு அரசர் பெருமான் இவ்வாறு அருளலாமோ?"

என்று சொன்னாள் ஊழியப்பெண் வேடத்தில் இருந்த தேசிகப்பாவை. "ஆம், நீ யார்? என்பது எனக்குத் தெரியும். ஊழியப் பெண் வேடத்தில் வந்த தேசிகப்பாவை நீ என்பதை அறிவேன். அரச போகத்திலும் செல்வச் செருக்கிலும் முழுகி உன்னை மறந்துவிட்டேன் என்று கருதாதே. உன்னை நான் மறந்தேன் இல்லை" என்று கூறி மகிழ்ந்தான். அது கேட்டுத் தேசிகப்பாவை விம்மிதமடைந்து பேருவகை கொண்டாள்.

தேசிகப்பாவை அரண்மனையில் தங்கினாள். அரண்மனை நாடக அரங்கில் அவள் நாள்தோறும் இசை பாடியும் நடனம் ஆடியும் அரசனை மகிழ்வித்தாள். சீவககுமரனுடைய அரண்மனையில் தேசிகப்பாவையின் ஆடல்பாடல்கள் நெடுங் காலம் நடந்தன.

> நரம்புமீது இறத்தல் செல்லா நல்லிசை முழவும் யாழும்!
> இரங்குதீங் குழலும் ஏங்கக் கிண்கிணி சிலம்பொ டார்ப்பப்
> பரந்தவாள் நெடுங்கண் செவ்வாய்த் தேசிகப்பாவை கோல
> அரங்கின் மேல் ஆடல் காட்டி அரசனை மகிழ்வித் தாளே.

*(சீவக சிந்தாமணி, இலக்கணையார் இலம்பகம் 219)*

*முக்குடை*, மலர் 1, இதழ் 5, 1974

# கொடுங்காற்று

நாற்புறமும் கடல் சூழ்ந்த தீவு ஒன்றுண்டு. இத்தீவின் கரையை இடைவிடாமல் அலைகள் மோதிக் கொண்டிருக்கின்றன. நீல நிறமுள்ள கடற்பரப்பில் தூய வெண்மையான நுரைகளோடு கூடிய அலைகள் பார்ப்பதற்கினிய காட்சியாகும். மலைப்பாறைகளும் குகைகளும் காடுகளும் சிற்றாறுகளும் பறவைகளும் விலங்குகளுந்தான் இத்தீவில் காணப்படும், இயற்கைப் பொருள்களாம். இயற்கையமைப்பின் செவ்வி இத்தீவில் இனிது விளங்கிற்று. மனிதர் குடியேற்றமற்ற இவ்விடத்தில், நரைமுது கிழவன் ஒருவனும் மங்கைப் பருவமுள்ள அவனுடைய ஒரே மகளும் அன்றி மக்கள் வகுப்பைச் சேர்ந்த வேறே மனிதர் இலர். இத்தன்னந்தனித் தீவில் தந்தையும் மகளும் தனியே வசித்து வருவது அதிசயந்தான். நரைதிரையுடைய இக்கிழவன் பெயர் பராபரன் என்பது; தன் மகளை அவன் 'மிராந்தை' என்னும் பெயரால் அழைப்பது வழக்கம். மங்கைப் பருவத்தின் மாணெழில் அவளிடம் விளங்கிற்று. இப்பெண் குழந்தைப் பருவத்திலேயே தன் தாதையுடன் இத்தனித் தீவிற்கு (எதிர்பாராதபடி) வந்து விட்டபடியால், வயது சென்ற தன் தாதையையன்றி வேறே மனித உருவத்தை யவள் கண்டவளல்லள். இவர்கள் வசித்து வரும் இல்லம் மலைப்பாறையிலுள்ள ஒரு குகையாகும். கிழவன் பராபரன் அப்பெரிய குகையைப் பல அறைகளாகத் தடுத்து அவற்றில் ஒன்றைத் தனது 'கலா நிலையம்' ஆக உபயோகப்படுத்தி வந்தான். இக்கலாநிலையத்தில் தான் அவன் ஆவலோடு படித்துவந்த பல சுவடிகள் இருக்கின்றன. இச்சுவடிகள் யாவும் மந்திர நூல்களாகும். கிழவன் பராபரன் மந்திரவித்தையைக் கற்பதில் மிகுந்த விருப்பமுடையவன். அவன் கற்றிருந்த மந்திரவித்தை, மனிதர் வாசமற்ற தனித் தீவில் வாழ்ந்துவரும் அவனுக்கு மிகுந்த உதவியாகவே யிருந்தது.

சில ஆண்டுகளுக்கு முன் (மிராந்தை குழந்தையாயிருந்தபோது) எதிர்பாராதபடி இத்தீவில் வந்து சேர்ந்த பராபரன், எங்கும் ஒருவித அழுகைக் குரல் கேட்பதைக் கண்டு மிகுந்த அதிசய மடைந்தான். அங்குள்ள மரங்களில் மந்திரத்தினால் கட்டப்பட்ட பல பேய்கள் பெருங்குரலிட்டுப் பெரிதும்

வருந்தி அழுது கொண்டிருந்தன. மனிதர் கண்களுக்குப் புலப்படாத பேய்கள் மந்திரவாதியான பராபரன் கண்களுக்குப் புலப்பட்டன. பேய்கள் மரங்களில் கட்டுண்டிருப்பதைக் கண்டபோது, அவற்றைக் கட்டிச் சிறைப்படுத்திய மந்திரவாதி யாராயிருக்கக் கூடுமென்று யோசித்துப் பராபரன் அதிசயப் பட்டான். பின்னர், அவைகள் படும் துன்பத்தைக் கண்டு மனமிரங்கி தான் கற்றிருந்த மந்திரங்களின் உதவியால் அப்பேய்களையெல்லாம் கட்டிலிருந்து விடுதலை செய்தான். அது முதல், நற்குணம் வாய்ந்த இப்பேய்கள் தம்மை விடுவித்த தாதை பராபரனிடம் நன்றி பாராட்டி அவன் கட்டளை களுக்குத் தாழ்மையோடு கீழ்ப்படிந்து நடந்து வந்தன. எரியன் என்னும் பேய் மற்றப் பேய்களுக்கெல்லாம் தலைமையானதா யிருந்தது.

கிழவன் பராபரன் இத்தீவில் வருவதற்குச் சில நாட்களுக்கு முன்புதான் இத்தீவிலிருந்த 'சேகரை' என்னும் மந்திர வித்தைக்காரி இறந்து போனாள். நெஞ்சிரக்க மில்லாத இவள், இப்பேய்களை யெல்லாம் தன் மந்திர வன்மையால் வசப்படுத்திக் கொண்டு தான் கருதிய சில கொடுமையான காரியங்களைச் செய்து முடிக்கும்படி அவைகளை ஏவினாள். இந்த நல்ல பேய்கள் அவள் சொல்லிய தீச்செய்கைகளைச் செய்ய உடன்படாமல் மறுத்து விட்டன. இதனால், இவைகளின் மேல் பெருங் கோபங்கொண்ட சேகரை இப்பேய்களை யெல்லாம் மரங்களில் மந்திரத்தால் பிணித்துக் கட்டிவிட்டாள். அது முதல் இப்பேய்கள் மரங்களில் சிறைப்பட்டுப் பரிபவப்பட்டுக் கூச்சலிட்டுப் புலம்பிக் கொண்டிருந்தன. சில நாட்களுக்குள், தொண்ணூறு வயதிற்கு மேற்பட்ட சேகரை என்னும் அம்மந்திரக்காரியும் இறந்து விட்டாள். இச்சமயத்தில்தான் கிழவன் பராபரன் அத்தீவில் வந்து சேர்ந்து மேற் சொல்லியபடி அப்பேய்களை விடுதலை செய்தான்.

பேய்களில் தலைமையாயுள்ள எரியன் மிகுந்த நற்குணமும் சுறுசுறுப்பும் நன்றியறிதலும் திறமையு முடையதாயிருந்தும் அதனிடம் ஒரு தீச்செய்கை மாத்திரம் காணப்பட்டது. இறந்துபோன மந்திரக்காரியின் மகன் காலிபனைக் குறும்பு செய்து அவன் படுந்துன்பத்தைக் கண்டு மனமகிழ்வதில் எரியன் பேய் மிகுந்த விருப்பங் கொண்டிருந்தது. ஏனென்றால், மனிதக் குரங்கின் உருவத்தையொத்து மிகுந்த விகார உருவமுடைய காலிபன், பேய்களைக் கொடுமையாய் நடத்திய மாயக்காரியின் வயிற்றில் பிறந்த மகனாவான். ஆகையால்,

அவனைக் காணும்போதெல்லாம் எரியன் பேய்க்கு மன வெரிச்சல் உண்டாவது வழக்கம்; மாயக்காரியின்மீது தனக்குள்ள வஞ்சத்தையும் பகையையும் எரியன் பேய் அவள் மகனான காலிபன் மீது காட்டிற்று.

அந்தமின்றி விகார உருவமுள்ள 'காலிபன்' காடுகளில் மிருகங்களைப்போல் திரிந்து கொண்டிருந்தான். ஒரு நாள் வெளியில் உலாவச் சென்ற கிழவன் பராபரன் தற்செயலாய் அவனைக் கண்டு தன் குகை வீட்டிற்கு அழைத்து வந்தான். பின்பு, படிக்கவும் எழுதவும் பேசவும் கற்பித்து வந்தான். ஆனால், மிருகத் தன்மையுள்ள காலிபனோ கல்வி கற்றுக் கொள்ளவில்லை. சொற்களைச் சரியாய் உச்சரித்துப் பேசவுங்கூட அவனால் முடியவில்லை. ஆனபடியால், காட்டிலிருந்து விறகு வெட்டிக் கொண்டுவருவது, அருவியிலிருந்து தண்ணீர் கொண்டுவருவது போன்ற வேலைகளைக் காலிபன் செய்ய வேண்டியதாயிற்று. காலிபன் சோம்பி யிருந்தாலும் வேலை செய்யாமல் அசட்டையா யிருந்தாலும் (கிழவன் பராபரன் கண்களுக்கன்றி ஏனையோர் கண்ணுக்குப் புலப்படாத) எரியன் பேய் மெல்லச் சென்று அவனைக் கிள்ளி விடும்; அல்லது சேற்றில் தள்ளிவிடும்; அல்லது ஒரு மனிதக்குரங்கின் உருவங் கொண்டு காலிபன் எதிரில் நின்று முகத்தைச் சுளித்தும் பல்லையிளித்தும் பரிகாசம் செய்யும். மற்றும், முள்ளம் பன்றியின் உருவங்கொண்டு காலிபன் நடந்து போகும்போது அவன் காலில் வீழ்ந்து புரண்டு ஊசி போன்ற முட்களால் குத்தி அவனுக்கு வேதனை யுண்டாக்கும். இவ்விதம் கணக்கற்ற கொடிய குறும்புகளைச் செய்து இறந்துபோன மாயக்காரி மேலுள்ள தன் பகையையெல்லாம் எரியன் பேய் காலிபன் மேல் காட்டி வஞ்சந்தீர்த்துக் கொண்டது.

பேய்களை நன்றி மறவா ஊழியர்களாகக் கொண்ட கிழவன் பராபரன், அவைகளின் உதவியால் காற்றையுங் கடலையுங்கூட ஏவல் செய்விக்கக்கூடிய வல்லமையுடைய வனாயிருந்தான். அவன் கட்டளைப்படி ஒரு நாள் இப்பேய்கள் கடலில் பயங்கரமான புயல்காற்றை யுண்டாக்கிவிட்டன. கட்டுக் கடங்காத கொடுங்காற்று பயங்கர ஓசையுடன் கடலில் வீசிற்று. கடல் கொந்தளித்தது. மூர்க்கமான பெரிய அலைகள் மலைபோல் எழுந்து புரண்டன. கடல் இறைவதனாலுண்டான ஓசை அச்சத்தை யுண்டாக்கிற்று. இந்நிலையில், புயற் காற்றுடன் சேர்ந்து கொந்தளிக்கும் அலைகளினிடையே ஒரு கப்பல் அகப்பட்டு அப்புறமும் இப்புறமும் அலைப்புண்டு ஒரு வினாடியில் முழுகிப்போய்விடுந் தருவாயிலிருக்கிறது. பலமாய்

வீசும் புயல் காற்று கப்பலைக் கவிழ்த்துவிடுமுன்பே மேலெழும்பும் பெரிய அலைகள் அக்கப்பலைக் கடலில் அமிழ்த்திவிடும் போலிருக்கிறது! ஐயோ, அக்கப்பலிலுள்ள பிரயாணிகள் என்ன பாடுபடுவார்கள்! காற்றுங் கடலும் இருக்கிற நிலைமையை நோக்க நிச்சயமாய் அவர்கள் கடலில் முழுகி இறந்துபோவார்கள் என்பதில் ஐயமில்லை. ஒருவனாவது உயிருடன் தப்பிப்பிழைத்துக் கரை வந்து சேர்வதற்கு வழியில்லை. இனி அவர்கள் விதி யாதோ!

இச்சமயத்தில் தன் மகள் மிராந்தையுடன் கடற்கரைக்கு வந்த பராபரன் ஆபத்திலிருக்கும் அக்கப்பலை அச்சிறுமிக்குச் சுட்டிக்காட்டி 'அந்தப் பெரிய கப்பலில் நம்மைப் போன்ற மனிதர்கள் இருக்கிறார்கள்' என்று சொன்னான்.

தன்னைப் போன்ற மனிதர் பிரயாணம் செய்யும் கப்பல் ஒன்று கடலில் கவிழ்ந்து முழுகிவிடக்கூடிய ஆபத்திலிருப் பதைக் கண்டபோது மிராந்தைக்கு மனந்துடித்தது.

"ஐயோ! பாவம்! அவர்கள் எல்லோரும் கடலில் முழுகி இறந்து விடுவார்கள் போலிருக்கிறது! ஓ அப்பா! உம்முடைய வித்தையினால் இப்புயல் காற்றை நீர் உண்டாக்கியிருந்தால் அந்த மனிதர் மேல் இரக்கம் வையுங்கள். காற்றையடக்கும் ஆற்றல் எனக்கிருக்குமானால் இப்பொழுதே இக்கொடிய புயல்காற்றை யடக்கி மூர்க்கத்தோடு இறைகிற இக்கடலை அமைதியாயிருக்கச் செய்வேன்" என்று மிராந்தை மிகுந்த பரிதாபப்பட்டு சொன்னாள்.

"குழந்தாய், மிராந்தா! கவலைப்படாதே. நீ நினைக்கிறபடி புயற்காற்றை வீசச்செய்தவன் நான்தான்; அதுவும் உன் நன்மையைக் கருதியே, கப்பலில் உள்ளவர்களுக்கு இம்மியும் தீங்கு நேரிடக் கூடாதென்று நான் உத்தரவிட்டிருக்கிறேன். ஆகையால், கடல் பிரயாணிகளைப் பற்றிக் கவலை கொள்ளாதே. நல்லது, குழந்தாய்! நீ யாரென்றும் எங்கிருந்து இத்தீவிற்கு வந்தாயென்றும் உனக்குத் தெரியாது; நான் உன் தந்தை என்பதைத் தவிர வேறு ஒன்றும் உனக்குத் தெரியாது. நீ மூன்று வயது குழந்தையாயிருந்த காலத்தில் நடந்தவைகளைப் பற்றி நீ யொன்றும் அறியமாட்டாய் என்றே நினைக்கிறேன். குழந்தாய்! மிராந்தா! உனக்கேதேனும் நினைவிருக்கிறதா? இருந்தால் சொல், பார்க்கலாம்" என்று வினவினான் கிழவன்.

"ஆம் அப்பா! நினைவிருக்கிறது. கனவு போலத் தோன்றுகிறது."

"ஆ! என்ன? நினைவிருக்கிறதா? அதென்ன; சொல் பார்க்கலாம்!" என்று அதிசயத்தோடு வினவினான் கிழவன்.

"ஏன் அப்பா! நான் குழந்தையா யிருந்தபோது என்னை நான்கு தாதிகள் வளர்த்து வந்தார்கள் அல்லவா?" என்று வினாவும் விடையுமாகச் சொன்னாள் மிராந்தை.

"ஆமாம், அம்மா! நான்கு தாதிகள் மாத்திரம் அல்ல. அநேகந் தாதிகள் இருந்தார்கள். ஆனாலும் இது உனக்குக் கவனமிருப்பது அதிசயந்தான். இன்னும் ஏதேனும் ஞாபக மிருக்கிறதா?"

"இல்லை அப்பா! வேறொன்றும் எனக்குக் கவனமில்லை" என்றாள் மிராந்தை.

நங்கையும் நம்பியும் ஒருவரை யொருவர் தம்முள் காதல் கொண்டதைக் கிழவன் பராபரன் அறிந்து கொண்டான். ஆகையால் அவர்கள் காதலைச் சோதித்தறிய எண்ணினான். ஆகவே அவன் பரதநாதனைப் பார்த்து, அவன் (பரதநாதன்) உளவறிவதற்காக வந்த ஒற்றனென்றும் தனக்குச் சொந்தமான அத்தீவைத் தன்னிடத்திலிருந்து கவர்ந்துகொள்ள வந்த அந்நிய னென்றும் அவனைக் கோபித்துக் கடிந்து பேசிக் கடைசியாக "நீ எனக்கு விரோதியாகக் காணப்படுகிறபடியால் உன் கழுத்தையுங் காலையும் கயிற்றினால் கட்டி உன்னைச் சிறையில் வைக்கப் போகிறேன். நீ பருகும் தண்ணீர் உவர்ப்புள்ள கடல் நீராயிருக்கும். உமியும் தவிடும் உனக்கு உணவாகக் கொடுக்கப்படும். உன் சிறைச்சாலை இருள் அடர்ந்து காற்றோட்டமில்லாத பொதியறையாகும்" என்று கண்டிப் பான குரலில் கடுகடுத்துச் சொன்னான்.

"யாரும் அவ்வளவு இழிவாக என்னை நடத்தும்படி நான் இடங் கொடுக்க மாட்டேன் ஐயா! யாராயிருந்தாலும் ஒரு கை பார்த்துவிடுவேன். என்னை ஒருவரும் சிறையில் அடைக்க முடியாது" என்று சொல்லிப் பரதநாதன் தன் வாளை உறையி லிருந்து இழுத்துச் சண்டைக்கு ஆயத்தமாய் நின்றான்.

இதைக் கண்ட கிழவன் பராபரன் தன் மந்திரக் கோலினால் பரதநாதனைத் தொட்டான். தொடவும், அவன் அவ்விடத்திலேயே கற்கம்பம் போல் அசைவற்று நின்று விட்டான்; அடிபெயர்த்து வைக்கவோ அப்படி இப்படி அசையவோ அவனால் இயலவில்லை. தான் எண்ணியபடி தன்னால் அசைய முடியாதிருப்பதைக் கண்டு மிக்க அதிசயப் பட்டான் பரதநாதன்.

தன் காதலன் இவ்வித நிலைமையிலிருப்பதைக் கண்ட மிராந்தை தன் தந்தையை மிகவும் வேண்டிக் கொண்டாள். "அப்பா! அவர்மீது உங்களுக்கு ஏன் இவ்வளவு கோபம்? உலகத்திலுள்ள மனிதர்களில் இவரைத்தான் இரண்டாவதாகப் பார்க்கிறேன். இவரைப் பார்த்தால் நமக்குக் கெடுதி செய்ய

வந்தவராகத் தோன்றவில்லை. தயைசெய்து அவருக்கு யாதொரு துன்பமும் செய்ய வேண்டாம்" என்று இரந்து வேண்டினாள்.

"குழந்தாய்! நீ ஒன்றும் பேச வேண்டாம்; எனக்குக் கோபம் வரும். இந்தப் போக்கிரிப் பயலுக்காக நீ பரிந்து பேச வேண்டாம். இவனைவிட அழகான மனிதன் உலகத்தில் இல்லை என்றா நினைக்கிறாய்? குரூபியான காலிபனைவிட இவன் அழகாயிருப்பதனால், இவனைவிட அழகான மனிதர்கள் உலகத்தில் இல்லை என்று நீ நினைக்கிறாய் போலும்" என்று கடிந்து பேசினான் கிழவன் பராபரன். தன் மகளின் மன நிலையை அறிவதற்காகவே அவன் இவ்வாறு பேசினான். மிராந்தையோ "வேறே எந்த அழகான மனிதனையும் பார்க்க எனக்கு விருப்பமில்லை" என்று விடையளித்தாள். இவ்விடையைக் கொண்டு பராபரன் தன் மகளின் மன உறுதியை யறிந்து கொண்டான். ஆயினும், அவள் காதலை இன்னும் நன்கறிவதற்காகவும் பரதநாதன் தன் மகளை உண்மைக் காதலோடு நேசிக்கிறானா என்பதைச் சோதிப்பதற் காகவும் அவனுக்குச் சில சங்கடங்களை யுண்டாக்க எண்ணி னான். ஆகையினால், அசைவற்று நின்ற பரதநாதனைப் பார்த்து, "ஐயா, நீர் இனி எனக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டியவர்தான். இப்பொழுது உம்மால் அசையவும் கூடவில்லை. ஆகையால் என்னை எதிர்க்க உம்மால் ஆகாது. இப்பொழுது என்னைப் பின்தொடர்ந்து சிறைச்சாலைக்கு வாரும்" என்று சொல்லி நடந்தான்.

"ஆம் ஐயா, உம்மிடம் ஏதோ பெரிய சக்தி இருக்கிறது. உம்மை எதிர்க்க என்னால் இயலாது. ஆகையால் உமக்குக் கீழ்ப்படிந்து நடக்க ஆயத்தமாயிருக்கிறேன்" என்று சொல்லிப் பரதநாதன் பராபரனைப் பின்தொடர்ந்து நடந்தான். அவ்விதம் செல்லும்போது மிராந்தையை அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றான். கடைசியாகக் குகையண்டை வந்ததும், "என்னை இக்கிழவன் சிறையிலடைத்தாலும் எனக்குக் கவலையில்லை. இந்த அழகியை மாத்திரம் தினந்தோறும் பார்த்துக் கொண்டிருக்கும் பாக்கியம் கிடைத்தால் அதுவே எனக்கு ஆனந்தமாயிருக்கும்" என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டான்.

பரதநாதனை இருட்டறையில் அடைத்துச் சிறைவைத்த பராபரன் அவனை நெடுநேரம் அவ்விதம் வைத்திருக்கவில்லை. சில நாழிகை கழிந்த பின்னர் பராபரன், பரதநாதனை வெளியில் அழைத்து வந்து கடினமான சில வேலைகளைச் செய்யும்படி அவனுக்குக் கட்டளையிட்டுத் தான் தன் அறைக்குச் சென்று

சுவடிகளை வாசிக்கப் போவதாகத் தன் மகளிடம் தெரிவித்து அவ்விடம் விட்டகன்றான்.

கனமுள்ள மரத்துண்டுகளைச் சுமந்து கொண்டு வந்து ஓரிடத்தில் அடுக்கி வைக்கும்படி பராபரன் பரதநாதனுக்குக் கட்டளையிட்டிருந்தான். அரசன் மகனாகிய அவன் செல்வத்தில் களித்து வளர்ந்தவனாகையால் இந்த வேலை அவனுக்கு மிகுந்த கடினமாகவும் துன்பமாகவும் இருந்தது. அவன் இவ்விதம் கஷ்டப்பட்டு மரத்துண்டுகளைத் தூக்கிக் கொண்டு போவதைக் கண்ட மிராந்தை மனமுருகி அவனிடஞ் சென்று "ஐயோ! ஏன இவ்வளவு கஷ்டப்பட்டுக் களைப்புடன் வேலை செய்கிறீர்கள்? என் தந்தை சுவடிகளை வாசிக்கத் தன் அறைக்குச் சென்றிருக்கிறார். இன்னும் மூன்று மணி நேரம் வரையில் அவர் வெளியே வரமாட்டார். ஆகையால், கொஞ்ச நேரம் உட்கார்ந்து களைப்பாருங்கள்" என்று பரிதாபத்துடன் பேசினாள்.

"என் அன்புள்ள நங்காய்! என் வேலையைச் செய்து முடித்த பிறகுதான் நான் களைப்பாறுவேன். வேலையை முடிக்காமல் களைப்பாற எனக்கு மனமில்லை" என்றான் நம்பி.

"இல்லை. தாங்கள் கொஞ்ச நேரம் உட்கார்ந்து களைப்பாறுங்கள். அது வரையில் நான் கொஞ்சங் கட்டைகளைக் கொண்டுபோய் அடுக்கி வைக்கிறேன்" என்றாள் நங்கை.

தனக்காக அவள் வேலை செய்ய இசைந்ததை அவன் ஒப்புக்கொள்ளவில்லை. மிராந்தை பரதநாதனுக்கு உதவி செய்வதற்காக வந்த போதிலும் உண்மையில் அவன் வேலை செய்வதை அவள் தடைப்படுத்தி விட்டாள். எப்படி என்றால் அவர்களிருவரும் ஒரு நீண்ட சம்பாஷணையைத் தொடங்கி முடிவில்லாமல் பேசிக் கொண்டே இருந்தார்கள். ஒருவரை யொருவர் காதலிக்கும் நம்பியும் நங்கையும் ஒன்று சேர்ந்தால் காதற் பேச்சையன்றி வேறு என்ன வேலைதான் நடக்கும்?

காதலர் இருவரின் மனவுறுதியைக் கண்டறிய எண்ணங் கொண்டிருந்த கிழவன் பராபரன், தான் தன் மகளிடம் சொல்லியதுபோல் தன் அறைக்குச் சென்று சுவடிகளை வாசிக்கவில்லை. வாசிக்கச் செல்வதாகப் பாவனை காட்டி அவன் அவ்விடத்திலேயே மறைவாக நின்று அவ்விருவரும் பேசுவதை ஒன்று விடாமல் கேட்டுக் கொண்டிருந்தான்.

பரதநாதன் தன் காதலியின் பெயரை அறிய விரும்பினான். மிராந்தை தன் பெயரை அவனுக்குச் சொல்லி, தான் அவனிடம் தன் பெயரைச் சொல்லக்கூடாதென்று தன் தந்தை கட்டளை யிட்டிருப்பதாகவும் அவர் கட்டளையை மீறித் தன் பெயரை

அவனுக்கு வெளியிட்டதாகவும் அவள் அவனுக்குத் தெரிவித் தாள். மறைவில் நின்று கேட்டுக் கொண்டிருந்த பராபரன் தன் கட்டளையை மீறிப் பெயரை வெளியிட்டதற்காக அவள்மீது அருவருப்புக் கொள்ளவில்லை. அவள் காதல் வயப்பட்டு அவ்விதம் சொன்னாள் என்பதுணர்ந்து, அவன் தனக்குத்தானே நகைத்துக் கொண்டான்.

பிறகு, பரதநாதன் தன் காதலியை நோக்கித் தான் அவளை முழுமனத்துடன் தன் உயிர்போல் நேசிக்கிறதாகச் சொல்லி யதையும், தான் பார்த்த பெண்களுக்குள் அவளே (மிராந்தையே) மிகுந்த அழகானவள் என்று அவன் புகழ்ந்து சொல்லியதையும், பராபரன் மறைவிடத்திலிருந்து கேட்டுக் கொண்டிருந்தான்.

தன் காதலன் தன்னைப் புகழ்ந்ததற்கும் காதலைக் குறித்துப் பேசியதற்கும் பதிலளித்த மிராந்தை, "நான் மற்றப் பெண்களின் முகத்தை ஒருபோதும் கண்டதேயில்லை. என் தந்தையையும் தங்களையும் அன்றி வேறே மனிதரை நான் பார்த்ததுமில்லை. உலகத்தில் மனிதர் எவ்வளவு அழகாக இருந்தாலும் சரி, அவர்களைப் பற்றி எனக்கு அக்கறையில்லை. உலகத்தில் உம்மையன்றி வேறே மனிதரை நான் கண்ணெடுத்தும் பாரேன் என்பது சத்தியம். இதை நீங்கள் உறுதியாக நம்புங்கள். உலகத்தில் நான் விரும்பும் மனிதர் தாங்கள் ஒருவரே" என்று சொல்லிப் பிறகு, "ஓ! என் தந்தையிட்ட கட்டளையை மறந்து உங்களிடம் எதையும் ஒளிக்காமல் தாராளமாகப் பேசிவிட்டேனே" என்றாள்.

காதலர் இருவரும் முழு மனத்தோடு தங்கள் கருத்தை வெளியிட்டுக் கொண்டதை மறைந்து கேட்ட பராபரன் தன் தலையையசைத்து "நான் எண்ணியது போலவே எல்லாம் நடைபெறுகின்றன. இருவரும் உள்ளன்போடு ஒருவரை யொருவர் நேசிக்கிறார்கள். பரதநாதனை மணஞ் செய்து என் மகள் நேப்பிள் தேசத்தின் அரசி ஆவாள்" என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டான். பரதநாதன், தான் நேப்பிள் தேசத்து இளவரச னென்றும் அவள் (மிராந்தை) அத்தேசத்தின் இளவரசி யாவா ளென்றும் அவளிடம் சொன்னான். அதைக் கேட்டு மிராந்தை "அத்தகைய பெரும் பதவி எனக்குக் கிடைக்குமானால் சந்தோஷமேயன்றி வருத்த முண்டாகாது. ஆனால் அப்பதவியைப் பற்றி எனக்குக் கவலையில்லை. ஐயா, நீர் என்னை மணந்து கொள்ள விரும்பினால் நான் உமக்கு மனைவியாயிருக்க முழு மனதுடன் சம்மதிக்கிறேன். இதுவே எனது கருத்தாகும்" என்று தாழ்மையோடு பதிலளித்தாள். தன்னை மணஞ் செய்து கொள்ளச் சம்மதித்ததற்காகப் பரதநாதன் அவளுக்கு வந்தனஞ் சொல்ல வாயெடுத்தான்.

அதற்குள் கிழவன் பராபரன் தன் மறைவிடத்தை விட்டு வெளிவந்து அக்காதலர் முன்பாகத் தோன்றினான். அங்ஙனந் தோன்றிய அவன் தன் மகளைப் பார்த்துக் "குழந்தாய், அஞ்ச வேண்டாம். நான் மறைந்து நின்று நீங்கள் பேசியதையெல்லாங் கேட்டேன். உன் விருப்பத்திற்கு நான் தடை சொல்லவில்லை. எல்லாம் உன் கருத்துப்படியே நடக்கும்" என்று சொல்லிப் பிறகு பரதநாதனைப் பார்த்து "ஐயா! இளவரசே, உம்மை நான் கொடுமையாக நடத்தினேன் என்பது உண்மையே. உமது காதல் திறத்தைச் சோதிப்பதற்காகவே உம்மை அவ்விதம் செய்தேன். நான் உமக்குச் செய்த துன்பத்திற்கீடாக என் மகளை (அவள் உம்மைக் காதலிக்கிறபடியால்) உமக்கு மணஞ்செய்து கொடுத்து மனைவியாக்க மனமிசைந்துள்ளேன்" என்று உரைத்தான்.

பிறகு பராபரன் தனக்குக் கொஞ்சம் வேலையிருப்பதாகச் சொல்லி அவர்களை விட்டுச் சென்று, எரியன் பேயை யழைத்துத் தன் தம்பி அந்தோனியையும் நேப்பிள் தேசத் தரசனையும் பற்றி விசாரித்தான். எரியன், அவர்கள் அச்சமும் அதிசயமும் அடையும்படி தான் செய்த காரியத்தை அவனிடம் சொல்லிற்று. அந்தோனியும் நேப்பிள் மன்னனும் மந்திரி காஞ்சலனுடன் கடற்கரையில் அலைந்து திரிந்து அலுப்புற்றுப் பசியாலும் தாகத்தாலும் வாடி வருந்திய சமயத்தில் இன்சுவை உணவுகளை எரியன் பேய் அவர்களுக்கு முன்பாக வைத்தது. அவ்வுணவுகளைக் கண்ட அவர்கள் மிக்க அதிசயமடைந்தவர் களாய், கடவுள்தான் கருணைகூர்ந்து அவற்றை உதவியதாக நினைத்து, ஆவலுடன் அவ்வுணவுகளை எடுத்து உண்ண ஆரம்பித்தார்கள். அவர்கள் உண்ணத் தொடங்கியவுடனே, எரியனுடைய மாயத்தால், அந்த உணவுகள் எல்லாம் திடீரென்று மறைந்துவிட்டன. மறைந்து விடவும், அவர்கள் பின்னும் அதிசயமும் விசனமுமடைந்தவர்களாகித் திகைத்து நிற்க, எரியன் பேய் ஓர் அசுரப்பறவை வடிவத்துடன் அவர்களுக்கு முன் தோன்றிற்று. அப்பறவையின் முகமும் உடம்பும் அழகான பெண் உருவமாகவும் மற்றப் பாகங்கள் பறவையின் வடிவமாகவும் காணப்பட்டன. இந்த விசித்திர மான அசுரப்பறவை தனது பெரிய சிறகுகளை விரித்துப் பறந்து வந்து, அவர்களைப் பார்த்துக் கோபத்தோடு கடுமையான குரலில் பேசிற்று. பராபரனுடைய அரசாட்சியை அநியாய மாய்க் கவர்ந்து கொண்டதல்லாமல் அவனையும் அவன் குழந்தையையும் கடலுக்கு இரையாகும்படி அநாதையாக விட்டுவிட்டதையும் அவ்வசுரப்பறவை அவர்களுக்குக் கவனப் படுத்தி அவர்கள் செய்த அநியாயத்திற்கும் கொடுமைக்கும்

பலனாகத்தான் இப்போது அவர்கள் உண்ண உணவும் குடிக்கத் தண்ணீருமின்றிக் கடற்கரையில் அலைந்து திரிய நேரிட்டதென்பதை அவர்களுக்குத் தெரிவித்தது. அதனைக் கேட்ட அந்தோனியும் நேப்பிள் மன்னனும் பராபரனுக்குத் தாங்கள் செய்த கொடுமைகளை நினைத்து உண்மையாகவே மனம் வருந்தி விசனப்பட்டார்கள். இவ்வாறு கடற்கரையில் நடந்த செய்திகளை யெல்லாம் எரியன் பேய் கிழவன் பராபரனிடம் ஒன்று விடாமல் சொல்லி, அவர்கள் தங்கள் குற்றத்தை யுணர்ந்து வருந்துகிறபடியால் அவர்களை மன்னிக்க வேண்டுமென்று வணக்கமாக வேண்டிக் கொண்டது.

அதனைக் கேட்ட கிழவன் பராபரன், "எரியனே! பேய்ப் பிறப்புள்ள நீ அவர்கள் செய்த குற்றத்தை மன்னிக்கும் போது மனிதப் பிறப்புள்ள நான் மன்னிக்காம லிருப்பனோ? முழு மனதோடு நான் அவர்களை மன்னித்து விட்டேன். நான், அவர்களைப் பார்க்க ஆவலாயிருக்கிறேன். உடனே போய் அவர்களை என்னிடம் அழைத்து வா" என்றான்.

உடனே எரியன் அவ்விடத்தை விட்டு நீங்கி இரண்டு நாழிகைக்குப் பிறகு வினோதப் பாடல் ஒன்றைப் பாடிக் கொண்டுவர, அந்தோனியும் நேப்பிள் மன்னனும் காஞ்சலனும் அதிசயத்தோடு அப்பாடலைத் தொடர்ந்து வருவதைப் பராபரன் கண்டான். பசியும் களைப்பும் துயரமும் அவர்களின் இயற்கை உருவத்தை மாறுபடுத்தி விட்டபடியால் முதலில் பராபரன் அவர்களை யறிந்து கொள்ளவில்லை. ஆயினும் காஞ்சலனை மாத்திரம் பிறகு அறிந்து கொண்டு அவனருகில் விரைந்து சென்று அவனைத் தழுவி "உயிர்ப்பிச்சை கொடுத்த உத்தமன்" என்று புகழ்ந்தான். பின்னர் அவர்கள் எல்லோரும் ஒருவரையொருவர் அறிந்து கொண்டார்கள். அந்தோனி தன் தமயனைக் கண்டதும் கண்ணீர் வடித்து விசனப்பட்டுத் தான் செய்த குற்றங்களை மன்னிக்கும்படி மிகுந்த பரிதாபமான குரலில் கேட்டுக் கொண்டதோடு மிலான் தேசத்தை அவனுக்குத் திருப்பிக் கொடுப்பதாகவும் தெரிவித்தான். நேப்பிள் மன்னனும், தான் அந்தோனிக்கு உதவியாகவிருந்து அவனைத் துரத்தி விட்டதற்காக மனம் வருந்தித் தன்னையும் மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டான். பராபரன் அவர்களை முழுவதும் மன்னித்து விட்டதாகத் தெரிவித்து நேப்பிள் மன்னனை நோக்கி "ஐயா! உமக்கு ஒரு வெகுமதி வைத்திருக்கிறேன். தயைசெய்து என்னுடன் வந்து அதனை ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று சொல்லி அவர்களைத் தன் குகை வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போய் ஓரறைக் கதவைத் திறந்து காட்ட அங்கே, அவர்கள் தேடித்திரிந்த பரதநாதன்

மிராந்தையுடன் சதுரங்கம் ஆடிக் கொண்டிருப்பதைக் கண்டு அவர்கள் ஆச்சரியமடைந்து ஆனந்தப்பட்டார்கள்.

தந்தையும் மகனும் ஒருவரை யொருவர் கண்டபோது அவர்களுக்குண்டான ஆனந்தத்திற்கு எல்லையில்லை. ஒருவரையொருவர் இறந்துவிட்டதாக நம்பி யிருந்த அவர்கள் திடீரென்று சந்தித்தபோது அவர்களுக்கு அதிசயமும் ஆனந்தமும் உண்டாவது இயல்பன்றோ? புதிய மனிதர்களைக் கண்ட மிராந்தைக்கு எல்லோரையும்விட மிகுந்த அதிசயமும் ஆனந்தமும் உண்டாகி விட்டது. "என்ன ஆச்சரியம்! எவ்வளவு விநோதமான மனிதர்கள்! இது மிகுந்த விசித்திரமா யிருக்கிறது!" என்று வாய்விட்டுச் சொல்லி வியப்படைந்தாள்.

நேப்பிள் மன்னன் இளமையும் அழகும் ஒருங்கே யமைந்த அம்மங்கையைக் கண்டபோது "இச்சிறுமி யார்? நம்மை யெல்லாம் ஒருங்கே சந்திக்கச் செய்த தெய்வமகள் போல் காணப்படுகிறாள்?" என்று ஐயுற்று வினவினான்.

பரதநாதன் தன் தந்தையை நோக்கி, "தெய்வமகள் அல்ல! பராபருடைய மகள்; மிராந்தை யென்று பெயர். ஓ! அப்பா; என்னை மன்னிக்க வேண்டுகிறேன். தாங்கள் இறந்து விட்ட தாக நான் நினைததிருந்தபடியால் தங்கள் விருப்பத்தைக் கேட்காமலே நான் இவளை மணஞ் செய்து கொண்டேன். நாங்கள் மணஞ் செய்து கொள்ளப் பராபரர் உத்தரவு கொடுத்தார். ஆகவே, பராபரர் எனக்கு மாமனார் ஆகி விட்டார்" என்றான்.

"ஓ! மிக்க சந்தோஷம்! அப்படியானால் நான் மிராந்தைக்கு மாமனாராகிவிட்டேன். ஆயினும் மிராந்தையை நான் மன்னிப்பு கேட்க வேண்டியவனாயிருக்கிறேன்" என்றான்.

"ஐயா! கடந்த விஷயங்களைப் பற்றி இப்பொழுது ஒன்றும் பேசவேண்டாம். எல்லாம் சந்தோஷமாக முடிந்தபடியால் யாரையும் மன்னிப்பு கேட்க வேண்டியதில்லை" என்றான் பராபரன்.

பிறகு, பின்னுமொரு முறை பராபரன் தன் தம்பியைத் தழுவிக்கொண்டு கடந்த விஷயங்களை யெல்லாம் மறந்துவிட வேண்டும் என்றும் தான் தனியே தன் மகளுடன் இத்தீவில் சில காலமிருக்க வேண்டுமென்று தன் பழவினை யிருந்ததாயும் இப்போது நல்வினைப் பயனால் ஒருவரை யொருவர் சந்திக்க நேரிட்ட தென்றும் சொல்லி எல்லாம் ஊழ்வினைப்படி நடக்கிறபடியால் எதற்கும் வருத்தப்படக் கூடாதென்று ஆறுதல் சொன்னான்.

நெடுநாளாகக் காணாத தன் பழைய அரசன் பராபரனைக் கண்டு ஆனந்தங் கொண்ட காஞ்சலன் மணமக்க ளிருவரையுங்

கண்டு களிகூர்ந்து மங்கள வாழ்த்து கூறிக் கடவுளைத் துதித்து வணங்கினான்.

நேப்பிள் மன்னன் மரக்கலமும் மாலுமிகளும் என்னானார்களோ என்று கவலைப்படுவதைக் கண்டு கிழவன் பராபரன், மாலுமிகள் அனைவரும் உயிர் பிழைத்து அத்தீவிலேயே இருப்பதையும் மரக்கலம் துறைமுகத்தில் உடைபடாமல் எவ்விதச் சேதமும் இன்றி இருப்பதையும் தெரிவிக்க, இந்த நல்ல செய்தியைக் கேட்டு மற்றவர் களெல்லோரும் ஆச்சரியமும் சந்தோஷமு மடைந்தார்கள். பராபரன் தன் ஒரே வேலையாளாகிய காலிபனை அழைத்து எல்லோருக்கும் உணவு ஆயத்தஞ் செய்யச் சொன்னான். எல்லோரும் ஒருங்கிருந்து சந்தோஷமாக உணவருந்திய பின்னர், பராபரன் தன் மகளுடன் எவ்விதமாகத் தன் வாழ் நாளைக் கழித்தா னென்பதைச் சொல்ல வேண்டுமென்று எல்லோரும் கேட்டுக் கொள்ள அவ்விதமே அவர்களுக்குப் பராபரன் தன் வாழ்க்கையின் விபரத்தைச் சொன்னான் இவ்வாறு அன்றைப் பொழுது கழிந்தது. கடைசியாகப் பராபரன், "இன்று இரவு கழிந்து பொழுது விடிந்தவுடன் எல்லோரும் நமது ஊருக்குப் புறப்படலாம்" என்றான்.

"ஆம், ஆம். மிலான் தேசம் சென்றவுடனே எனது தமையனாருக்கு முடிசூட்டி விழா கொண்டாட ஏற்பாடு செய்யவேண்டும்" என்றான் அந்தோனி.

"முடிசூட்டு விழா கொண்டாடின உடன் பரத நாதனுக்கும் மிராந்தைக்கும் திருமண விழா கொண்டாட வேண்டும்" என்றான் நேப்பிள் மன்னன்.

தனியே யிருந்தபோது பராபரன் எரியனை அழைத்து "எரியனே! நாங்கள் எல்லோரும் நாளைக்கு மிலான் தேசம் போகிறோம்; ஆகையினால் உன்னையும் மற்றப் பேய்களையும் இது முதல் என் ஊழியத்திலிருந்து நீக்கிவிட்டேன். இனி நீங்கள் விரும்பிய இடங்களுக்குப் போகலாம்" என்று சொன்னான்.

விசுவாசமுள்ள எரியன் பேய் பராபரனை விட்டுப் பிரிய நேரிட்டதற்காக வருத்தப்பட்டு "ஐயனே! அங்ஙனமாயின் தாங்கள் மிலான் தேசம் போய்ச் சேரும் வரையில் உங்களுக்குக் காவலாக நான் கப்பலைத் தொடர்ந்துவர விரும்புகிறேன். அதற்கு உத்தரவளிக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டது. எரியனுடைய விசுவாசத்தைக் கண்டு வியந்த பராபரன் அதற்கு அவ்விதமே அனுமதி கொடுத்தான்.

அன்றிரவு எல்லோரும் இனிய கனவுகளைக் கண்டுகொண்டே அமைதியாக உறங்கினார்கள். அன்றிரவு கண்ணுறங்கிய எரியன் பேய், மரக்கிளைகளில் நிழலடர்ந்த

இலைக் கொத்துகளினிடையே வெயிலுக்கு ஒதுங்கியிருப்பது போலவும், பெரிய மரங்களுக்கிடையே பறவைகளோடு தானும் பறந்து செல்வது போலவும், தும்பிகள் தேனீக்களுடன் சென்று மலர்களிலுள்ள தேனையுண்டு களிப்பது போலவும், பலவித பூக்கள் நிறைந்த பசும் புற்றரையில் படுத்து உறங்குவது போலவும் மற்றும் தனக்கு விருப்பமுள்ள அனேக விளையாட்டுகளையெல்லாம் விளையாடுவது போலவும் கனவு கண்டு உறங்கிற்று.

மிராந்தையும் பரதநாதனும் நேப்பிள் தேசம் சென்று ஆடம்பரமாகத் திருமணஞ் செய்து கொண்டு இளவரசனும் இளவரசியுமாக முடிசூட்டப் பெற்று இன்பவாழ்வு வாழ்வது போலக் கனவு கண்டுகொண்டே உறங்கினார்கள். மற்றவர்கள் ஒவ்வொருவரும் தத்தம் ஊரில் சென்று உற்றார் உறவினர் களைக் கண்டு களித்து உரையாடி இன்புறுவது போலத் தமது மனோவுலகத்தில் கண்டு கண் துயின்றார்கள். இவ்விதம் அந்த நல்ல இரவு கழிந்து பொழுது விடிந்தது. மாலுமிகள் எல்லோரும் பிரயாணத்திற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்து முடித்தார்கள்.

கிழவன் பராபரன் தனது மந்திரச் சுவடிகளையும் மாத்திரைக் கோலையும் பூமியில் ஆழமாகப் பள்ளந் தோண்டிப் புதைத்துவிட்டான். எல்லோரும் எல்லாம் வல்ல இறைவனைப் போற்றித் துதித்த பின்னர் கப்பலேறித் தத்த மிடத்தில் அமர்ந்தார்கள். மாலுமிகள் பாய் விரித்து விடவும் அப்பெரிய அழகான கப்பல் துறைமுகத்தை விட்டுப் புறப்பட்டுக் கருநீல வண்ணக் கடற்பரப்பில் மிதந்து மிலான் தேசம் நோக்கிச் சென்றது.

*லக்ஷ்மி*, மலர் 3, இதழ் 1 & 3, 1925

# ஹெய்க் ஹாஸன்

இன்றைக்குச் சுமார் 200 வருஷங்களுக்கு முன்னே நமது தென்னிந்தியா மிக்க அலங்கோலமான நிலையில் இருந்தது. அக்காலத்தில் ஒரு திட்டமான அரசாங்கம் எதுவும் கிடையாது. இப்பெரிய நாட்டைச் சிறுசிறு பாகங்களாகப் பிரித்துச் சிற்றரசர்களும் பாளையக்காரர்களும் அரசாண்டு வந்தனர். இப்படிப்பட்ட நிலையில் முகமத் ஆலி சந்தாசாகிப் என்னும் இரண்டு முகம்மதியர்கள் கர்நாடக தேசத்தைக் கைப்பற்ற எண்ணி ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டிருந் தார்கள். இதே சமயத்தில் ஐரோப்பா கண்டத்திலிருந்து வந்து இங்கு வியாபாரம் செய்து கொண்டிருந்த ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் தங்கள் தங்களுக்குப் பலம் தேடிக் கொள்ளவும் கூடுமானால் தேசத்தைப் பிடித்துக் கொள்ளவும் நோக்கமுடையவர்களாய், பிரெஞ்சு வர்த்தகக்காரர் சந்தாசாகிப் பக்கமும் ஆங்கிலேயர் முகமத் ஆலி பக்கமும் சேர்ந்து உதவி புரிந்து வந்தார்கள். பிரெஞ்சுக்காரருக்கும் ஆங்கிலேயருக்கும் ஆதியிலிருந்தே பகை உண்டாயிருந்தது. ஒருவரையொருவர் தொலைத்து விட சமயம் பார்த்து நின்றனர். தஞ்சாவூரை ஆண்ட மகாராட்டிர அரசனும் பாளையக்காரர்களும் சமயத் துக்குத் தக்கவாறு இருகட்சிகளிலும் சேர்ந்து கொண்டார்கள். போதாக்குறைக்கு மகாராட்டிர தேசத்திலிருந்து முராரிராவ் என்னும் சேனைத் தலைவன் ஒரு பெருஞ்சேனையோடு தென் இந்தியாவுக்கு வந்து ஊர்களைக் கொளுத்தியும் கொள்ளை யடித்தும் நாசஞ் செய்து கொண்டிருந்தான். எங்கும் குழப்பமும் கூச்சலும் சண்டையும் சச்சரவுமாகவிருந்தது. உத்திரவாதமற்ற அரசியல் சீர்கேட்டினால் குடிகளுக்குள் சச்சரவும் சண்டை களும் நிகழ்ந்தன; பலாத்காரம் தாண்டவமாடியது. அக் காலத்தில் பலமுள்ளவனே பெரியவனாய் விளங்கினான். நமது அருமைத் தாய்நாடு 18ம் நூற்றாண்டில் அதாவது கி.பி. 1752 ஆண்டில் இவ்வித துயரத்தையடைந்து வருந்தியது. இத்தகைய கொடுமைகளும் குழப்பங்களும் தலைசிறந்திருந்த காலத்தில் தான் நாம் எழுதப் புகுந்த சரித்திர சம்பந்தமான இச்சிறுகதை நிகழ்ந்தது.

சந்தாசாகிப், ஷெய்க் ஹாஸன், இன்னும் பிரெஞ்சு படையைச் சேர்ந்த தளகர்த்தர்கள் தங்கள்தங்கள் சேனையோடு ஸ்ரீரங்கம் கோயிலில் தங்கியிருந்தார்கள். இவர்களுக்கு எதிரிகளாகிய ஆங்கிலேயர் முராரிராவ், மைசூர் துருப்புகள், முகம்மது அலிகான் முதலியவர்கள் ஒன்று சேர்ந்து தங்கள்தங்கள் சிப்பாய் கூட்டத்துடன் ஸ்ரீரங்கத்திற்குச் சுற்றுப்புறத்தில் சமயவரம், மயிலாடி முதலிய ஊர்களில் தங்கியிருந்தனர். ஸ்ரீரங்கம் கோயிலுக்குள் தங்கியிருந்த சந்தாசாகிப், ஷெய்க் ஹாஸன் முதலியவர்களுக்கு சாப்பாட்டுக்கு வேண்டிய தானியங்கள் கிடைக்கவில்லை. ஆகவே அவர்கள் கோயிலைக் கொள்ளையிட ஆரம்பித்தனர். அதைக் கண்ட கோயில் அதிகாரிகள் சமாதானம் செய்து தங்களிடமுள்ள தானியங் களைக் கொடுத்தார்கள். சில நாள் வரையில் ஸ்ரீரங்கம் கோயிலிலிருந்து கொண்டே எதிரிகளின் நிலைமையைக் கவனித்துக் கொண்டிருந்தபோது ஒரு நாள் வெள்ளிக்கிழமை அதாவது 1752 வருஷம் ஜூன் மாதம் 23ந்தேதி (ஆங்கீரஸ வருஷம் ஆனி மாதம் 13ந்தேதி) கோயிலாடி, சமயவரம் முதலிய சுற்றுப்புறக் கிராமங்களில் தங்கியிருந்த எதிரிகள் திடீரென்று ஸ்ரீரங்கம் கோவிலுக்குள் நுழைந்தார்கள். இரு கட்சிக் காரருக்கும் முதலில் கைகலந்த சண்டை நடந்தது. ஆனால் சீக்கிரம் அடங்கிவிட்டது. சந்தாசாகிப், கதாநாயகனாகிய ஷெய்க் ஹாஸன், இன்னும் பிரெஞ்சு தளகர்த்தர்கள் முதலிய அனைவரும் பகைவர் கையில் அகப்பட்டுக் கொண்டனர்; எதிரிகளினால் சிறையாளர்களாகப் பிடிப்பட்டனர். அன்றியும் சில பகுதி சிப்பாய்கள் எதிரிகளின் கட்சியில் சேர்ந்து கொண்டார்கள். இதற்குக் காரணம் சந்தாசாகிப், தன் சிப்பாய்களுக்கு மாதாமாதம் சம்பளத்தைக் கொடுக்காமல் சில மாதங்கள் வரையில் பாக்கி வைத்திருந்ததாகத் தெரிகிறது.

முகமத் ஆலி கட்சியில் சேர்ந்த ஆங்கிலேயரால் சிறை பிடிக்கப்பட்டவர்களில் முக்கியமானவர் இரண்டு பேர். அவர்கள் சந்தாசாகிபும், நமது கதாநாயகனான ஷெய்க் ஹாஸனும் ஆவர்.

ஷெய்க் ஹாஸன் என்பவன் ஹுஸேன் உட்டின்கான் என்றும் சொல்லப்படுவான். இவனை நாம் ஷேய்க் ஹாஸன் என்றே அழைப்போம். இவன் பிரெஞ்சுத் தளகர்த்தர்களில் முக்கியமானவன். இவனுடைய வீரதீரங்களைக் கண்டு பிரெஞ்சு கவர்னரான டூப்ளே (M. Duplix) இவனுக்கு ஜமேதார் உத்தியோகங் கொடுத்து இவனை 300 சிப்பாய்களுக்குத் தலைவனாகச் செய்தார். டூப்ளேக்கு இவனிடத்தில் அதிக அன்பு உண்டு. அன்றியும் இவன், ஆம்பூர் சண்டையில் எதிர்க்

கட்சியைச் சேர்ந்த பேர்பெற்ற வீரனாகிய அன்வார் உட்பீன் என்பவனைக் கொன்றவன். இதனால் இவனுடைய புகழ் பரவியதோடு ஆங்கிலேயரும் இவனிடத்தில் ஒருவித அச்சங் கொண்டிருந்தனர். இத்தகைய வீரனான ஷெய்க் ஹாஸன் ஸ்ரீரங்கத்தில் பகைவர் கையில் அகப்பட்டு சிறை பிடிக்கப் பட்டு கட்டுக் காவலுடன் செய்ன்ட் டேவிட் கோட்டைக்கு (Fort. St. David)க் கொண்டு போகப்பட்டான். கோட்டைக்குக் கொண்டு போனதும் இவனை, பலமான சுவர்களால் கட்டப்பட்ட ஒரு அறையில் சிறை வைத்தனர். தப்பி ஓடாதபடி பார்த்துக்கொள்ள நான்கு பேர் சிப்பாய்களைக் கண்டிப்பான உத்தரவோடு காவல் வைத்தனர். காட்டில் திரியும் கடும்புலி கூட்டில் அடைபட்டது போல போர்க்களத்தில் வெற்றி வீரனாய் விளங்கிய ஷேய்க் ஹாஸன் தப்பி ஓட முடியாதபடி, ஒரு பலமான சிறைச்சாலையில் தகுந்த பாதுகாவலுடன் சிறையில் வைக்கப்பட்டான்.

தன் கட்சியைச் சேர்ந்த சந்தாசாஹிபும், தன் சேனை வீரனாகிய ஷேய்க் ஹாஸனும் இன்னும் பல வீரர்களும் பகைவர் கையில் அதுவும் ஜென்ம விரோதிகளாகிய ஆங்கிலேயர் வசம் அகப்பட்டுக்கொண்ட செய்தியை புதுச் சேரியின் கவர்னரான டூப்ளே அறிந்தபோது அவருக்கு எவ்வளவோ ஆத்திரமும் துயரமும் உண்டாயிற்று.

செய்ன்ட் டேவிட் கோட்டைக்குள் சிறைவைக்கப்பட்டு இருக்கும் ஷெய்க் ஹாஸன் அறையில் உலாவிக் கொண்டு இருக்கிறான். தலையை இறங்கப் போட்டு கைகளைப் பின்புறமாகக் கட்டிக் கொண்டு இப்புறமும் அப்புறமும் ஓயாமல் அவன் நடந்து கொண்டிருப்பது அவன் ஏதோ ஆழ்ந்த சிந்தனையிலிருக்கிறான் என்பதைத் தெரிவிக்கிறது. அவ்வறைக்குள் படுத்துக்கொள்ள ஒரு சிறு கட்டிலும் ஒரு நாற்காலியும் ஒரு புறத்தில் கிடக்கின்றன. இதனால் அவன் பதவிக்குத் தக்கபடி கௌரவமாகத்தான் நடத்தப்படுகிறான் என்று தெரிய வருகிறது. அறையில் இரண்டு ஜன்னல்கள் காணப்படுகின்றன. கனமான இரும்புக் கம்பிகள் உடைக்க முடியாதபடி பலமாக அமைக்கப்பட்டிருக்கிறது. ஜன்னல் வழியாக காற்று சுகமாக வீசுகிறது. ஆனால் அறையின் கதவுகள் வெளிப்புறத்தில் பூட்டப்பட்டிருக்கின்றன, வெளித்தாழ் வாரத்தில் ஆட்கள் நடக்கும் சத்தம் கேட்பதால் வெளியில் சிப்பாய்கள் காவல் இருக்கிறார்கள் என்பதை ஷேய்க் ஹாஸன் அறிந்து கொண்டான். ஏதேதோ யோசனையோடு அறையில் நெடு நேரம் உலாவிக் கொண்டிருந்த ஷெய்க் ஹாஸன் கடைசியாக நாற்காலியில் உட்கார்ந்தான். இப்போது பகல் 12

மணியிருக்கும். நல்ல வெயில் வேளையாகையால் உஷ்ணம் கடுமையாகவே தோன்றுகிறது. இச்சமயத்தில் வெளிக்கதவு திறக்கப்பட்டது. ஒரு முகம்மதிய ஆள் ஒரு பெட்டியைத் தூக்கிக்கொண்டு உள்ளே நுழைந்தான். ஷெய்க் ஹாஸன் முன்பின் அறியாத இவன் பெட்டியில் என்ன கொண்டு வருகிறான் என்று ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டிருக்கும் போதே வெளிக்கதவு மூடப்பட்டு வெளிப்புறம் பூட்டப்பட்ட சத்தம் கேட்டது. அறைக்குள் வந்த மனிதன் தலைமேல் இருந்த பெட்டியைக் கீழே இறக்கி வைத்துவிட்டு நின்றான். ஷெய்க் ஹாஸன் 'நீ யார்? இந்தப் பெட்டி எதற்கு' என்று கேட்பவன் போல் அப்புது மனிதனை நோக்கினான். அவன் "எஜமானே! உங்களுக்குச் சாப்பாடு கொண்டு வந்திருக்கிறேன். தினந் தோறும் மத்தியானம் பன்னிரண்டு மணிக்கும் சாயங்காலம் எட்டு மணிக்கும் சாப்பாடு கொண்டு வந்து கொடுக்கும் படி எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார்கள். காலையில் 7 மணிக்கு உங்களுக்கு 'நாஷ்தா' வரும் என்றான்.

சிறையில் அகப்பட்ட ஷெய்க் ஹாஸனுக்கு இது வரையில் சாப்பாட்டுக் கவனமே இல்லை. எப்படியிருக்கும்? அவனுக்குப் பசியே தெரியவில்லை. தான் எத்தனை காலம் இவ்விதம் சிறையிலிருப்பது? தன்னைச் சிறையிலேயே வைத்திருப்பார் களா, கொன்றுவிடுவார்களா என்னும் யோசனைகள் அவன் மனதைச் சூழ்ந்து கொண்டன. ஆகவே அவனுக்குப் பசியும் இல்லை. அதைப் பற்றிய கவலையும் இல்லை. கொண்டு வரப்பட்ட சாப்பாட்டைத் திருப்பி அனுப்பிவிடலாமா என்று யோசித்தான். ஆனால் உடனே ஒரு யோசனை தோன்றியது. சாப்பாட்டைத் திருப்பி அனுப்பிவிட்டால் தான் சாப்பிடாத விஷயம் கோட்டை அதிகாரிக்குத் தெரியும். தெரிந்தால் அவன் தன் மீது அதிகமாகக் கண்ணோட்டம் வைப்பான். அவ்விதம் அதிகாரி தன்மேல் கண்ணோட்டம் வைக்கும்படி இடங் கொடுப்பது முட்டாள்தனம் என்று அவன் சிந்தித்தான். ஆகவே அவன், "சரி, சாப்பிடுகிறேன், எனக்கும் பசி அதிகமாகத் தானிருக்கிறது" என்று சொல்லிச் சாப்பிட உட்கார்ந்தான். பெட்டியைத் திறந்த போது, நல்ல அந்தஸ்தில் உள்ள ஒரு ஜமேதார் சாப்பிடக்கூடிய சாப்பாடுகள் அதில் காணப் பட்டன. அவற்றோடு ஐரோப்பிய நாட்டுச் சாராய வகைகளும் வைக்கப்பட்டிருந்தன. ஷெய்க் ஹாஸன் சாப்பிட ஆரம்பித்தான். சாப்பிட முடியவில்லை. மன நிம்மதி இருந்தால் தானே சாப்பிட முடியும்? அடிமைப்பட்டுச் சிறைச்சாலையில் கிடக்கும் வீரனுக்குச் சாப்பாட்டின் மேல் மனஞ் செல்லுமோ? கஷ்டப்பட்டுக் கொஞ்சம் சாப்பிட்டான். சாப்பிடும்போது

வேலைக்காரனை அடிக்கடி கவனித்தான். அவன் நடுவயதுள்ள முகமதியன். நடுத்தர வயதுக்குத் தகுந்த பலமுள்ளவன். கள்ளங் கபடமற்றவனாகக் காணப்பட்டான். கடைசியாக ஷெய்க் ஹாஸன் "இன்றைக்கு அதிகமாகச் சாப்பிட முடியவில்லை. அதிக இளைப்பாயிருக்கிறது. ஏனப்பா? நீ இன்னும் சாப்பிட வில்லை போல் இருக்கிறது. இதை நீ சாப்பிட்டு விடு" என்றான்.

"ஏன் எஜமானே கொஞ்சம் தானே சாப்பிட்டீர்கள்! கொண்டு வந்த சாப்பாடு அப்படியே இருக்கிறதே!" என்றான், பணியாளன் "வேண்டாம் இப்பொழுது எனக்கு இளைப்பா யிருக்கிறது. நீ உட்கார்ந்து சாப்பிட்டு விட்டு பெட்டியை எடுத்துக் கொண்டு போ!" என்றான். வேலைக்காரன் சற்றுத் திகைத்தான். "ஏன் அப்பா! சாப்பிடு. இவைகளையெல்லாம் மறுபடியும் சுமந்து கொண்டா போகப் போகிறாய்? உட்கார்ந்து சாப்பிடு," என்று வற்புறுத்தினான் ஷெய்க் ஹாஸன்.

வேலையாள் உட்கார்ந்து சாப்பிட்டான். பாத்திரங்களில் கொஞ்சமும் இல்லாது வழித்து விட்டான். "ஆ முதல் தரமான சாப்பாடு! தினந்தோறும் இப்படிக் கிடைக்குமா?" என்று அவன் தனக்குள்ளேயே நினைத்துக் கொண்டான். கடைசி யாகச் சாராய புட்டிமேல் அவன் மனம் சென்றது. அவன் சாப்பிட்டான பிறகு ஷெய்க் ஹாஸன் ஒரு கிளாஸ் டம்ளரை எடுத்து அதில் கொஞ்சமாகச் சாராயத்தை ஊற்றிக் குடித்தான். பிறகு, இன்னொரு டம்ளரில் சாராயத்தை நிறைய ஊற்றி, "இந்தா! அப்பா! இதைக் குடித்துப்பார்!" என்று சொல்லி வேளைக்காரனுக்குக் கொடுத்தான். அவன் புன்சிரிப்போடு அதை வாங்கிக் குடித்தான். அது வரையில் அவன் சீமைச் சாராயத்தைக் குடித்தவனல்ல. ஆகையால், தான் வழக்கமாகக் குடிக்கும் கள்ளைவிட இது எவ்வளவோ நன்றாயிருக்கிறது என்று தனக்குள்ளே சந்தோஷமும் உற்சாகமும் அடைந்தான். இது அவன் முகக்குறியினால் நன்கு விளங்கிற்று. இதை ஷெய்க் ஹாஸன் கவனித்தான். பிறகு பாத்திரங்களைப் பெட்டியில் வைத்துப் பூட்டிக் கொண்டான்.

"உன் பேர் என்ன?" என்றான் ஷெய்க் ஹாஸன்.

"ஜானி பாச்சா."

"இந்தக் கோட்டையில் எத்தனை நாளாய் வேலை செய்கிறாய்?"

"பத்து வருஷமாக."

"அப்படியானால் நீ ஒரு பழம் பெருச்சாளி; கோட்டை யிலிருக்கும் எல்லோரும் உனக்குத் தெரிந்தவர்களாயிருப்பார்கள்."

"ஆமாம்! தெரியாமலென்ன? முக்கியமான சிப்பாய் எல்லோரும் எனக்குத் தெரியும். இங்குள்ள சிப்பாய்களின் பேரையெல்லாம் ஒப்பிப்பேன்."

"சரிதான், எனக்கு அலுப்பாயிருக்கிறது. தூக்கம் வருகிறது. நான் படுத்துக் கொள்ளுகிறேன்". என்று சொல்லிக் கட்டிலில் படுத்துக்கொண்டான் ஷெய்க் ஹாஸன்.

இதற்குள்ளாக வெளிக்கதவு திறக்கப்பட்டது. பெட்டியைத் தூக்கிக் கொண்டு வேலைக்காரன் வெளியே போனான். மறுபடியும் கதவு சாத்தப்பட்டு வெளிப்பக்கம் பூட்டப்பட்ட சத்தம் கேட்டது. காவலிருக்கும் சிப்பாய்களின் காலடிச் சத்தமும் கேட்டது. வெளியில் காவல் புரியும் சிப்பாய்கள் அடிக்கடி ஒருவரையொருவர் கேலி செய்து 'தமாஷாக'ப் பேசிக் கொள்வதும் சிரிப்பதும் ஷெய்க் ஹாஸன் காதில் கேட்டது.

சாப்பாடு கொண்டுவந்த வேலைக்காரனைக் கவனித்ததி லிருந்தும் அவனிடம் பேசியதிலிருந்தும் ஷெய்க் ஹாஸனுக்கு ஏதோ ஒரு நம்பிக்கை உண்டாய் விட்டது. அவன் படுத்தபடியே ஏதேதோ யோசித்தான். கடைசியாக திடீரென்று குதித்தெழுந்து "பணப்பையைப் பிடுங்கிக் கொள்ளாததும் நம்முடைய அதிர்ஷ்டந்தான்" என்று சொல்லிக்கொண்டே கட்டிலில் போட்டிருந்த தலையணையைத் தூக்கி அதன் கீழிருந்த பணப்பையை எடுத்தான். ஜன்னல் பக்கத்திலிருந்தாவது கதவின் இடுக்கிலிருந்தாவது ஒருவரும் தன்னைப் பார்க்காதபடி ஒரு மூலையில் நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு ஓசைப்படாமல் பணத்தை எண்ணினான். கிட்டத் தட்ட 550 ரூபாய் கையில் இருந்தது. தன் கைவிரலைப் பார்த்தான். கல் இழைத்த மோதிரங்கள் இரண்டு ஜொலித்தன. இவை இரண்டும் நூற்றைம்பது ரூபாய் பெறும். மொத்தம் 700 ரூபாய்க்குக் குறைவில்லை. சரி ஒரு கைப்பார்ப்போம். ஈட்டி எட்டிய வரையில் பாயும்; பணம் பாதாளம் வரையில் பாயும் என்பார்கள். இனி நம் வேலையை ஆரம்பிக்க வேண்டியது தான் என்று நினைத்துக் கொண்டவனாய் விரல்களிலிருந்த மோதிரங்களைக் கழற்றிப் பணப்பைக்குள் போட்டுக் கட்டித் தலையணைக்கீழ் பையை வைத்துவிட்டான். பிறகு நாற் காலியில் உட்கார்ந்து ஆழ்ந்த சிந்தனையிலிருந்தான். பொழுது போவது அவனுக்குத் தெரியவில்லை. மெல்லமெல்ல சூரியன் மேற்கில் போய் மறைந்துவிட்டான். சாயங்காலம் ஆயிற்று. சிறைச்சாலையின் ஜன்னல் வழியாகப் பார்த்தால், மாலை வேளையின் அழகு - பல நிறங்களோடு பொலியும் செவ்வானம் - கண்ணைக் கவரும் வனப்புடன் காணப்பட்டது. ஆனால் சிறை வைக்கப்பட்டிருக்கும் ஷெய்க் ஹாஸன் செவ்வானத்தின் அழகைக் கண்டு களிப்பதற்கு இதுவா சமயம்? அவன் தன் விதியை நினைத்து ஏதேதோ யோசித்த வண்ணமாய் உட் கார்ந்திருந்தான். கடைசியாக செவ்வானம் மழுங்கி மறைந்து

விட்டது. எங்கும் இருள் பரவத் தொடங்கியது. ஷெய்க் ஹாஸன் இருந்த சிறைச்சாலையிலும் இருள் புகுந்து விட்டது. அச் சமயத்தில் வாயிற்கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டது. அடுத்த நிமிஷம் கதவைத் திறந்து கொண்டு ஒருவன் உள்ளே நுழைந்தான். வந்தவன் கையில் விளக்கு இருந்தபடியால் அவ்வறையில் இருள் நீங்கி வெளிச்சமுண்டாயிற்று. வந்த மனிதன் விளக்கை ஒரு மூளையில் வைத்துவிட்டு, தான் கொண்டுவந்திருந்த விளக்குமாற்றினால் அறையைச் சுத்தஞ் செய்துவிட்டான். மறுபடியும் கதவு திறக்கப்பட்டதும் அந்த வேலையாள் வெளியே சென்றான். உடனே கதவு சாத்தப்பட்டு வெளிப்புறம் பூட்டப்பட்டது. ஷெய்க் ஹாஸன் எழுந்து அறையில் உலாவ ஆரம்பித்தான் அவன் இன்னும் ஆழ்ந்த சிந்தனையிலேயே இருக்கிறான். நேரம் சென்று கொண்டிருக் கிறது. மணி 7 ஆய்விட்டது. மேலும் ஒரு மணிநேரம் கழிந்தது. கடைசியில் கணீர் என்று ஒரு பீரங்கிவெடி கேட்டது. "ஆ! எட்டு மணி" என்றான் ஷெய்க் ஹாஸன். ஆம் அவன் சொன்னது உண்மைதான். கோட்டையில் இரவு எட்டு மணிக்கு ஒரு பீரங்கி வெடிப்பது வழக்கம். அவ்வாறே இன்றைக்கும் வெடி தீர்க்கப்பட்டது. பீரங்கி ஓசை அடங்குவதற்குள்ளாகச் சிறைச்சாலையின் கதவு திறக்கப்பட்டது.

ஜானிபாச்சா சாப்பாட்டுப் பெட்டியுடன் உள்ளே நுழைந்தான். உடனே கதவு மூடப்பட்டு வெளிப்பக்கம் பூட்டப்பட்டது. ஷெய்க் ஹாஸன் பசியுள்ளவன் போல உடனே சாப்பிட உட்கார்ந்தான். சாப்பிட்டானதும், மிகுந்ததைச் சாப்பிடும்படி ஜானிபாச்சாவுக்குச் சைகை காட்டினான். பிறகு சாராயத்தைக் கிண்ணத்தில் வார்த்து மிதமாகக் குடித்தான். ஜானிபாச்சா சாப்பிட்டதும் போதுமான அளவு சாராயம் கிடைத்தது. அவன் மிகவும் சந்தோஷமடைந்தவனாகக் காணப் பட்டான். சுமார் ஒரு மணிநேரத்திற்குப் பிறகு மீண்டும் கதவு திறக்கப்பட்டது. ஜானிபாச்சா சாப்பாட்டுப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு வெளியே போனான். உடனே கதவு பூட்டிடப்பட்டது.

இவ்வாறே நாட்கள் கழிந்தன. ஒவ்வொரு நாளும் வேளை தவறாமல் ஜானிபாச்சா பெட்டியில் சாப்பாடு கொண்டு வருவான். மாலை ஆறு மணிக்கு இன்னொரு வேலைக்காரன் வழக்கம் போல அறையைச் சுத்தம் செய்து விளக்கு வைத்துவிட்டுப் போவான். ஷெய்க் ஹாஸன் சாப்பாடு கொண்டு வரும் ஜானிபாச்சாவிடம் சாப்பிடும் வேளையில் பேசுவது வழக்கம். ஒவ்வொரு நாளும் ஏதாவது சங்கதிகளை ஜானி பாச்சா ஷெய்க் ஹாஸனுக்குச் சொல்லுவான். வழக்கம் போல,

ஒரு நாள் ஷெய்க் ஹாஸன் சாப்பிட்டானதும் நாற்காலியில் உட்கார்ந்தான். அவன் ஊர் விஷயங்களைப் பற்றிப் பேச ஆரம்பிக்கவில்லை. அப்போது ஜானிபாச்சா தானாகவே பேச ஆரம்பித்தான்.

"செய்தி தெரியுமா உங்களுக்கு?" என்றான் ஜானிபாச்சா.

"தெரியாது என்ன?" என்றான் ஷெய்க் ஹாஸன்

"சந்தாசாகிபைக் கொலை செய்துவிட்டார்களாம்."

இதைக் கேட்ட உடனே ஷெய்க் ஹாஸன் திடுக்கிட்டெழுந்தான். அவன் முகத்தில் ஆச்சரியமும் கோபமும் அடங்கிய குறிகள் காணப்பட்டன. "என்ன? நீ சொல்லுவது உண்மையா?" என்று கேட்டான். "ஆமாம் எஜமானே! அப்படித்தான் ஜனங்கள் பேசிக்கொள்கிறார்கள்" என்றான் ஜானிபாச்சா.

"யார், எங்கே, எப்படிக் கொன்றார்கள்? என்னைப் போலவே சந்தாசாகிபும் எதிரிகளிடத்தில் அகப்பட்டுக் கொண்ட விஷயம் எனக்குத் தெரியும். ஆனால் இவ்விதமாகக் கொன்றுவிடுவார்கள் என்று நான் நினைக்கவேயில்லை. உண்மையைச் சொல்லு. அவரை யார் எப்போது எப்படிக் கொன்றார்கள்?" என்று ஆத்திரத்தோடு கேட்டான்.

ஜானி பாச்சா, சந்தாசாகிப் கொலை செய்யப்பட்ட விபரத்தைச் சொன்னான், "சந்தாசாகிப் ஸ்ரீரங்கம் கோயிலுக்குள் இருக்கும்போது அவர் தஞ்சாவூர் ராஜாவின் தளகர்த்தன் மானோஜி அப்பாவிடம் அகப்பட்டுக் கொண்டாராம். பகைவரிடம் சிக்கிக் கொண்ட சந்தாசாகிப் தன்னைத் தப்பித்துக் கொள்ளும்படி விட்டுவிட்டால் மானோஜி அப்பாவுக்குப் பெருந்தொகை லஞ்சம் கொடுப்பதாகச் சொல்லி வேண்டினாராம். மானோஜி அப்பா அதற்கு இசைந்து; பக்கிரி வேஷம் தரிக்கச் செய்து ஒருவருக்கும் தெரியாமல் போகும்படிச் சொன்னார். இதற்கு முராரிராவும் உடந்தையாயிருந்தாராம். ஆனால், பாவம்! சந்தாசாகிப்புக்கு நல்ல காலம் இல்லை. அவர் பக்கிரி வேஷத்தோடு தளவாய் மண்டபத்தண்டை வந்து கொண்டிருக்கும்போது முகமது அலிகானுடைய சிப்பாய்கள் இவரை எப்படியோ அடையாளங் கண்டுபிடித்து அவரைச் சிறைப்படுத்திக் கொண்டு போய் மானோஜி அப்பா தங்கியிருந்த கூடாரத்திலேயே காவல் பந்தோபஸ்தில் வைத்து விட்டார்களாம். சென்ற திங்கட்கிழமை காலை சந்தாசாகிப் ஜெபம் செய்து கொண்டிருந்தபோது யாரோ ஒரு முரட்டுச் சிப்பாய் உரையிலிருந்து பட்டாகத்தியை உருவிக்கொண்டு அவரிடம் வந்தானாம். அப்போது அவர் பக்கத்தில் குண்டு பண்டிதர், குருவப்பிள்ளை, இன்னும் ஒரு வேலைக்காரனும் இருந்தார்களாம். உருவிய கத்தியோடு வரும் அந்த முரட்டுச்

சிப்பாயைக் கண்டு குருவப்பிள்ளையும் வேலைக்காரனும் ஒன்றும் தோன்றாமல், பயத்தினால் நாவெழாமல் திகைத்து நின்றுவிட்டார்களாம். குண்டு பண்டிதர் மாத்திரம் அந்தச் சிப்பாயைத் தடுத்து என் தலையை வேண்டுமானால் வெட்டிவிடு என்று கூறினாராம். ஆனால் அந்த முரட்டுச் சிப்பாய் ஒன்றும் பேசாமல் அவரை இடது கையால் தள்ளி விட்டு ஜெபம் செய்து காண்டு உட்கார்ந்திருந்த சந்தாசாகிபை - ஐயோ! சொல்லவும் வாய் கூசுகிறது! - ஒரே வெட்டாக வெட்டினானாம். பிறகு, அந்தப் பாவி, கீழே விழுந்த தலையையும் தலையற்ற உடம்பையும் ஒரு கோணியில் போட்டுக் கட்டிக் கொண்டு அவன் ஏறிவந்த ஒட்டகத்தின் மேல் வைத்து எடுத்துக் கொண்டு போய்விட்டானாம். பாவம்! கர்நாடக நவாப்பாக அமரலாம் என்றிருந்த சந்தாசாகிபின் கெதி இப்படியாயிற்று. ஊரெங்கும் இதே பேச்சாக இருக்கிறது. புதுச்சேரியிலிருக்கும் அவர் பிள்ளை ராஜாசாகிப் இனி என்ன செய்யப் போகிறாரோ தெரியவில்லை" என்று ஜானிபாச்சா சந்தாசாகிப் கொலை செய்யப்பட்ட விபரத்தை ஷெய்க் ஹாஸனுக்குச் சொன்னான்.

இச்செய்தியைக் கேட்ட ஷெய்க் ஹாஸன் திடுக்கிட்டான். அவனுக்குக் கோபம், ஆத்திரம், சந்தேகம் முதலியவைகளோடு பலபல எண்ணங்கள் மனதில் தோன்றின. ஏனென்றால் சந்தாசாகிப் தனக்கு அறிமுகமானவன். அவனுக்கும் சந்தாசாகிபுக்கும் நெடுநாளாக நேசம் உண்டு. அன்றியும் தன்னைப் போலவே அவனும் முகமதியன். தன் யஜமானனாகிய டூப்ளேயினுடைய கட்சியைச் சேர்ந்தவன். அன்றியும் கர்நாடகத்துக்கு நவாப்பாக வரக்கூடிய நிலையில் இருந்தவன். இப்படிப்பட்ட ஒரு நண்பன், தன் கட்சியைச் சேர்ந்தவன் கொலை செய்யப்பட்டான் என்னும் செய்தியைக் கேள்விப்பட்டால் அவன் மனம் துடியாமலிருக்குமா? அச்சமயத்தில் அவனுடைய பகைவர் யாரேனும் அவன் எதிரிலிருந்தால் அவரை அப்பொழுதே மென்று தின்று விடுவான் போல் அவ்வளவு கோபம் அடைந்தான்.

அதே சமயத்தில் அவன் மனதில் ஒரு சந்தேகம் தோன்றியது. பகைவரிடம் சிறைபட்டிருக்கும் தன்னையும், சந்தாசாகிபைப் போலவே கொலை செய்து விடுவார்களோ என்று அவன் நினைத்தான். உடனே அவனுக்கியற்கையாயிருக்கும் தைரியம் அவனுக்குத் துணை வந்தது. அடுத்த நிமிடத்தில், "என் அருகில் வரக்கூடிய மனிதனும் உண்டா?" என்று திடம் செய்து கொண்டான்.

இச்சமயத்தில் சிறைச்சாலையின் கதவு திறக்கப்பட்டது. ஜானி பாச்சா சாப்பாட்டுப் பெட்டியைத் தூக்கித் தலைமேல் வைத்துக் கொண்டு வெளியே போனான். கதவு மூடப்பட்டு பூட்டப்பட்டது.

ஜானிபாச்சா ஷெய்க் ஹாஸனுக்குச் சொல்லிய செய்தி யாவும் உண்மையே. சந்தாசாகிப் கொலை செய்யப்பட்ட விஷயம் காட்டுத் தீபோல் ஊரெங்கும் பரவிவிட்டது. இச் செய்தி, சந்தாசாகிபின் கட்சியைச் சேர்ந்த புதுச்சேரி கவர்னரான டூப்ளே காதிலும் எட்டிற்று. இத்துக்ககரமான செய்தியைக் கேட்டதும் டூப்ளே அசைவற்று உட்கார்ந்து விட்டார். அவரால் துக்கம் பொறுக்க முடியவில்லை. அவன் அன்று, வழக்கம் போல் காலை வேளையில் ஜெபம் செய்யக் கோயிலுக்கும் போகவில்லை. அன்று முழுவதும் சாப்பிடவும் இல்லை.

சந்தாசாகிப்பைக் கொலை செய்துவிட்டபடியால் அதற்கு ஈடாக, ஷெய்க் ஹாஸன் முதலிய பிரெஞ்சுக் கைதிகளைச் சிறையிலிருந்து விட்டுவிட வேண்டும் என்று டூப்ளே மதராஸ் கவர்னருக்கு ஒரு கடிதம் எழுதினார். அதற்குத் தந்திரசாலியான மதராஸ் கவர்னர், பிரெஞ்சு சிப்பாய்களைத் தாம் சிறைப் பிடித்து வைத்திருக்கவில்லை என்றும் முகமத் அலிகானிடம் அவர்கள் சிறைப்பட்டிருக்கிறார்கள் என்றும் இவ்விஷயத்தில் தமக்கு யாதொரு தொடர்பும் இல்லை என்றும் பதிலெழுதி விட்டார். அதன்மேல் டூப்ளே யாதொரு நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள முடியவில்லை.

செய்ன்ட் டேவிட் கோட்டையில் இரவு எட்டு மணிக்கு வழக்கம் போல் பீரங்கி வெடி கணீரென்று வெடிக்கப்பட்டது. அதே சமயத்தில் சிறைச்சாலைக் கதவு திறக்கப்பட்டதும் ஜானிபாச்சா பெட்டியுடன் உள்ளே நுழைந்தான். கதவு பூட்டப்பட்டது. ஜானிபாச்சா சாப்பாட்டுப் பெட்டியைக் கீழே வைத்ததும் ஷெய்க் ஹாஸன் அவன் கையைப் பிடித்துக் கொண்டு, கதவிடுக்கின் வழியாய் ஒருவரும் பார்க்காதபடி ஒரு மூலையில் அவனை அழைத்துக் கொண்டு போய் உட்கார வைத்தான். பிறகு "சத்தம் செய்யாதே. நான் சொல்வதைக் கவனமாய் கேள்" என்று மெதுவாகச் சொன்னான். ஜானிபாச்சா ஆச்சரியத்தோடு அவன் முகத்தைப் பார்த்தவண்ண மிருந்தான். ஷெய்க் ஹாசன் தன்னிடமிருந்த கல்லிழைத்த மோதிரங்களை அவன் கையில் கொடுத்து "இதைப் பார், இவை இரண்டும் 150 ரூபாய் பெறும். இதை நீ வைத்துக்கொள்" என்றான்.

"எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!" என்று ஆச்சரியத்தோடும் சந்தேகத்தோடும் கேட்டான் ஜானிபாச்சா.

"விளங்கும்படிச் சொல்லுகிறேன், கவனமாய்க் கேள். நான் உன்னை நம்பியிருக்கிறேன். நீ எனக்கு ஒரு உதவிசெய்ய வேண்டும். என் உயிரை நீ காப்பாற்ற வேண்டும்" என்றான் ஷெய்க் ஹாஸன்.

"தெரிந்தது. சிறைச்சாலையிலிருந்து நீ தப்பித்துக்கொள்ள உதவி செய்ய வேண்டும் என்கிறாய்! இது முடியாத காரியம். ஒரு சிறு வேலைக்காரனாகிய என்னால் இவ்வளவு பெரிய உதவி எப்படிச் செய்ய முடியும்? மேலும் எனக்குப் பெண்டாட்டி பிள்ளைகள் இருக்கிறார்கள். வயது சென்ற என் தாயார் இருக்கிறார். நான் உனக்கு உதவி செய்யும் விஷயம் அதிகாரிகளுக்குத் தெரியுமானால் என்னைக் கொன்று விடுவார்கள். நான் போய் விட்டால் என் குடும்பத்தின் கதி என்னாவது? ஓ! ஓ! என்னால் முடியாது. எஜமானே என்னைப் போன்ற முஸ்லிமாகிய உம்மை இந்த நிலையில் பார்ப்பதற்கு என் மனம் எவ்வளவோ கஷ்டப்படுகிறது. என்ன செய்வது? உமக்கு உதவி செய்தால் என் உயிர் போய்விடும். என் குடும்பம் அழிந்துவிடும்" என்றான் ஜானிபாச்சா.

"அதெல்லாம் எனக்குத் தெரியும். நீ யோசிக்காமல் பேசு கிறாய், நான் யார் என்பதையும் எனக்குள்ள நிலைமையும் செல்வாக்கும் என்ன என்பதையும் நீ யோசிக்காமல் பேசுகிறாய். நான் இங்கே அடிமையாக, கைதியாக ஜெயிலில் அடைக்கப் பட்டு இருந்தாலும் இக்கோட்டையை விட்டு வெளியேறினால் என் நிலைமை எப்படிப்பட்டதென்பதை நீ இன்னும் தெரிந்து கொள்ளவில்லை" என்றான் ஷெய்க் ஹாஸன்.

"எஜமானே, கோபிக்க வேண்டாம் தங்களைப்பற்றி எனக்கு நன்றாய்த் தெரியும். தாங்கள் செல்வந்தர் என்பதும், செல்வாக்குள்ளவர் என்பதும் எனக்கு நன்றாய்த் தெரியும். தாங்கள் புதுச்சேரி கவர்னரான டூப்ளேயினுடைய ஜமேதார் என்பதும் தாங்கள் 300 சிப்பாய்களுக்குத் தலைவரென்பதும் தங்கள் வீரப் பிரதாபங்களையும் நான் அறிவேன். ஆனால்..."

"நான் சொல்வதை முழுவதும் கேள். என்னைச் சிறைச் சாலையிலிருந்து வெளிப்படும்படி உதவி செய்தால் ஆயிரம் ரூபா உனக்கு இனாம் அளிப்பேன். புதுச்சேரிக்குச் சென்றவுடன் உன்னை என் சிப்பாய்களில் ஒருவனாக ஏற்படுத்திக் கொண்டு மாதச் சம்பளம் கொடுத்து வருவேன். இது நிச்சயம், சத்தியம். யோசித்துப் பார்! எத்தனை நாளைக்கு இந்த சொற்ப சம்பளத்தில் இந்த இழிவான வேலையில் உன் குடும்பத்துடன் நித்திய தரித்திரனாய் இருக்கப் போகிறாய்? கைமேல் ஆயிரம் ரூபாய் கிடைக்கிறது. அதிக சம்பளத்தில் சிப்பாய் வேலை கிடைக்கிறது. கவலையில்லாமல் குடும்பத்தோடு சுகமாய்

காலந்தள்ளலாம். உன்னைப்போல் முஸ்லிமாகிய என்னைக் காப்பாற்றிவிட்ட புண்ணியமும் உனக்கு உண்டு. யோசித்துப் பார். தடை சொல்லாதே" என்று சொல்லி எழுந்து போய் பணப்பையை எடுத்துக் கொண்டு வந்து 350 ரூபாய் ஓசைப் படாமல் எண்ணி வைத்து விட்டு ஜானிபாச்சாவைப் பார்த்து "இதோ பார் 350 ரூபாய்; இந்த இரண்டு மோதிரங்கள் 150 ரூபாய்க்குக் குறையாது. ஆகமொத்தம் 500 ரூபாய். இவைகளை முன்பணமாக, நம்பிக்கைக்காக வைத்துக் கொள். என்னைத் தப்பித்துப் போகச் செய்த பிறகு மீதி 500 ரூபாயும் சிப்பாய் வேலையும் சத்தியமாய் உனக்குத் தருவேன் என்று சொன்னான்.

மிகச் சொற்ப சம்பளமுடைய நித்திய தரித்திரனாகிய ஜானிபாச்சா 500 ரூபாயை மொத்தமாக அவன் ஆயுசுவரையில் பார்த்தவனல்ல. விளக்கு வெளிச்சத்தில் அவ்வளவு தொகையை, அதுவும் தனக்கே இனாமாகக் கொடுக்கப்பட்ட அத்தொகை யைக் கண்டு மனம் பூரித்தான். கடைசியாக "சரிதான் நான் உமக்கு எப்படி உதவி செய்வது? எனக்கு ஒன்றும் தோன்றவில்லையே!" என்றான்.

'ஆ! வழிக்கு வந்து விட்டான்' என்று தனக்குள் நினைத்துக் கொண்டு ஷெய்க் ஹாஸன் அதைப் பற்றி உனக்குக் கவலை வேண்டாம். நான் சொல்லுகிறபடி நீ நடந்தால் காரியம் சரிவர யாதொரு கஷ்டமும் இல்லாமல் நடைபெறும்" என்றான்.

"அதைச் சொல்லும், நான் அப்படியே செய்கிறேன்" என்றான்.

"அப்பால் சொல்லுகிறேன். அதைச் சொல்வதற்கு முன் நீ வாக்குதத்தம் செய்து கொடுக்க வேண்டும்."

"அப்படியே செய்கிறேன், தடையில்லை."

"அப்படியல்ல. குரானை வைத்துக் கொண்டு சத்தியம் செய்தால்தான் நான் நம்புவேன். நாளைக்கு வரும்போது குரானைக் கொண்டு வரமுடியுமா?"

"ஆஹா! அப்படியே!"

"சரி! நேரமாய்விட்டது. இந்த ரூபாய்களை இந்த உருமாலில் சத்தப்படாமல் முடிந்து பெட்டிக்குள் வைத்துக் கொள்" என்றான் ஷெய்க் ஹாஸன்.

ஜானிபாச்சா மனம் பூரித்தவனாய் உருமாலில் பணத்தை முடிந்து பெட்டியில் வைத்தான். பிறகு "உங்கள் சாப்பாட்டு வேலையாகட்டும்" என்றான்.

"எனக்குச் சாப்பாடு வேண்டாம். கதவு திறக்கும் நேரம் ஆய்விட்டது. நீ சாப்பாட்டை எடுத்துக் கொண்டு போய் சாப்பிட்டு விடு. கொஞ்சம் சாராயம் மாத்திரம் இந்தக் கிண்ணத்தில் விடு" என்றான் ஷெய்க் ஹாஸன்.

ஜானிபாச்சா கிண்ணத்தில் சாராயத்தை ஊற்றினான். ஷெய்க் ஹாஸன் அதைக் குடித்துவிட்டு கிண்ணத்தைக் கீழே வைத்தான். அப்போது வெளிக்கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டது. ஷெய்க் ஹாஸன் ஜானி பாச்சாவைப் பார்த்தான். இருவர் கண்களும் சந்தித்தன. இதற்குள் கதவு திறக்கப்பட்டது. ஜானிபாச்சா பெட்டியைத் தூக்கித் தலைமேல் வைத்துக் கொண்டு பேசாமல் வெளியே நடந்தான்.

ஜானிபாச்சா கோட்டை வாயிலைத் தாண்டினதும் யோசித்தவண்ணம் நடந்தான். அவன் நேரே வீட்டுக்குப் போய் தன் மனைவியோடு அன்றிரவெல்லாம் யோசனை கேட்டான். கடைசியாக ஷெய்க் ஹாஸன் எதிர்பார்த்த முடிவுக்கு வந்தார்கள். அதாவது ஷெய்க் ஹாஸனுக்கு உதவி செய்து அவனைச் சிறையில் இருந்து வெளிப்படுத்த வேண்டும். பிறகு அவன் வாக்குத் தத்தம் செய்தபடி மீதியுள்ள 500 ரூபாயையும் பெற்றுக் கொண்டு புதுச்சேரிக்குக் குடிபோய்விட வேண்டும். புதுச்சேரிக்குப் போய் அங்கு ஏதாவது நிலம் வாங்கிக் கொண்டு, ஷெய்க் ஹாஸன் சிபாரிசினால் கிடைக்கப் போகும் சிப்பாய் உத்தியோகத்தில் காலந்தள்ள வேண்டும் என்பதே அவர்கள் செய்து கொண்ட முடிவு. ஆனால், ஜானி பாச்சா ஷெய்க் ஹாஸனுக்குக் குரான் மீது சத்தியம் செய்து கொடுப்பதைப் போலவே ஷெய்க் ஹாஸனும் குரான் மீது ஜானிபாச்சாவுக்குச் சத்தியம் செய்து கொடுக்க வேண்டும் என்று முடிவு செய்து கொண்டார்கள்.

அடுத்த நாள் மத்தியானம் ஜானிபாச்சா சாப்பாடு கொண்டு வந்தான். சாப்பாட்டுடன் குரான் புஸ்தகம் கொண்டு போக மறந்துவிடவில்லை வெளியில் கதவு பூட்டப்பட்டதும், ஷெய்க் ஹாஸன் மெதுவாகச் சொன்னான்.

"எல்லாம் சம்மதந்தானே. சந்தேகமாவது தடையாவது ஒன்றும் இல்லையே? பரிசுத்த குரான் கொண்டு வந்தாயா?"

"கொண்டு வந்தேன், யாதொரு தடையுமில்லை."

"சரி, அதை எடுத்துக் கொண்டு இந்த மூலையில் வா" என்று ஒரு மூலையைக் காட்டினான்.

"நீ என்னை வஞ்சிக்கமாட்டாய் என்றும் சத்தியமாய் நடந்து கொள்ளவதாகவும் சத்தியம் செய்" என்றான்.

"ஆகா! தயார். ஆனால்..."

"என்ன? ஆனால்-"

"தாங்களும் சத்தியம் செய்து கொடுக்க வேண்டும்."

"ஓ! நீ கேட்பது எனக்குத் தெரியும். நான் வாக்களித்த ரூபாயையும் உத்தியோகத்தையும் உனக்குக் கொடுக்க வேண்டும் என்பதுதானே? அதற்கென்ன அப்படியே செய்கிறேன். அந்தப்

புஸ்தகத்தை இப்படிக் கொடு" என்று சொல்லி அதை வாங்கி முத்தமிட்டு, தான் சொன்ன வாக்கைத் தவறுவதில்லை என்று சத்தியம் செய்தான் ஷெய்க் ஹாஸன்.

பிறகு, ஜானிபாச்சா குரானை வாங்கிச் சத்தியம் செய்தான்.

பிறகு ஷெய்க் ஹாஸன், ஜானிபாச்சா கையைப் பிடித்து அந்த மூலையில் உட்கார வைத்துக் கொண்டு ஏதேதோ குசுகுசுவென்று நெடுநேரம் பேசினான். ஜானிபாச்சா அவன் சொன்னதையெல்லாம் கருத்தோடு கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான். கடைசியாக ஷெய்க் ஹாஸன் "தெரிந்ததா? இதில் ஏதேனும் உனக்குக் கஷ்டமிருக்கிறதா?" என்று கேட்டான்.

"ஒன்றுமில்லை. ஆனால் அறையைச் சுத்தம் செய்ய வருகிற முனியனை மாத்திரம் வழிக்குக் கொண்டுவந்துவிட வேண்டும். அது என் வேலை. அவனை நான் சரிப்படுத்திக் கொள்வேன்" என்றான்.

"சரி, ஜாக்கிரதை நான் சொன்னதையெல்லாம் கவனம் வைத்துக்கொள். கொஞ்சமும் பிசகக்கூடாது" என்று சொல்லி பணப்பையிலிருந்து 150 ரூபாய் எடுத்துக் கொடுத்து "இந்தா இதை வைத்துக் கொண்டு முனியனையும் இன்னும் யாருடைய தயவு வேண்டுமென்று நினைக்கிறாயோ அவர்களையும் சரிப்படுத்திக்கொள்" என்று சொன்னான்.

"அப்படியே ஆகட்டும் எஜமானே! சீக்கிரம் சாப்பிடுங்கள்."

"ஓ! நேரமாய் விட்டது; எனக்கு வேண்டாம்."

ஜானிபாச்சா பணத்தைப் பெட்டிக்குள் ஓசைபடாமல் வைத்து விட்டான். இதற்குள் கதவு திறக்கப்பட்டது. ஜானி பாச்சா பெட்டியுடன் வெளியே சென்றான்.

மூன்று நாட்கள் கழிந்தன. ஷெய்க் ஹாஸன் மிகவும் பலவீனமாய் தலைவலியோடு கட்டிலில் கிடக்கிறான். அவனுக்கு உதவியாக முனியன் அவன் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறான்.

வாசகர்களுக்கு ஒன்று சொல்ல வேண்டும். உண்மையில் ஷெய்க் ஹாஸனுக்குத் தலைவலியில்லை. ஆனால் தலைவலி போல் நடிக்கிறான். ஆனால் உண்மையில் அவன் 5 நாள் பகலும் இரவும் வேண்டுமென்றே சாப்பிடவில்லை யாகையால் மிகவும் இளைத்துவிட்டான். ஆனால் ஜானிபாச்சா இந்த ஐந்து நாளைக்குள் கொழுத்து பலசாலியாகக் காணப்பட்டான்.

வெள்ளிக்கிழமை இரவு எட்டு மணி; பீரங்கி வெடியின் ஓசை இன்னும் அடங்கவில்லை. சிறைச்சாலைக் கதவு திறக்கப் பட்டதும் ஜானிபாச்சா சாப்பாட்டுப் பெட்டியுடன் உள்ளே நுழைந்தான். உடனே கதவு வெளிப்புறம் பூட்டப்பட்டது.

உடனே ஷெய்க் ஹாஸன் கட்டிலிலிருந்து குதித்தெழுந்து மெதுவாக "எல்லாம் சரியாயிருக்கிறதா, ஒன்றும் பய மில்லையே?" என்று கேட்டான்.

"ஒன்றும் பயமில்லை" என்று ஒரு வார்த்தையில் திடமாகப் பதிலளித்தான் ஜானிபாச்சா. பிறகு முனியன், ஜானிபாச்சா, ஷெய்க் ஹாஸன் மூவரும் குசுகுசுவென்று பேசிக் கொண்டிருந் தார்கள். கதவு திறப்பதற்கு 5 நிமிஷத்திற்குமுன் ஷெய்க் ஹாஸன் தன் உடுப்புகளைக் களைந்து முனியனுக்கு உடுத்தி விட்டான். முனியன் முகத்தை மூடிக் கொண்டு கட்டிலில் படுத்துக் கொண்டான். பிறகு அவன் கையையும் காலையும் இருவரும் சேர்த்துக் கட்டிவிட்டார்கள். துணியைப் பந்துபோல் சுருட்டி அவன் முகத்தருகில் வைத்து விட்டார்கள். பிறகு ஷெய்க் ஹாஸன் பெட்டிக்குள் கஷ்டத்தோடு புகுந்து கொண்டான். பெட்டியின் துணியை ஜானிபாச்சா மூடிவிட்டான். கதவைத் திறக்க இன்னும் இரண்டே நிமிஷம் இருக்கிறது. இந்த இரண்டு நிமிஷத்திற்குள் அந்த மூவர் மனதும் என்ன நிலைமையி லிருக்கும் என்பதை வாசகர்களே அறிய வேண்டும்!

வெளிப்புறம் பூட்டைத் திறக்கும் சப்தம் கேட்டது. ஜானிபாச்சா உடனே பெட்டியைத் தூக்கித் தலைமேல் வைத்துக் கொண்டான். உடனே கதவு திறக்கப்பட்டது. ஜானிபாச்சா பேசாமல் விர் என்று வெளியே நடந்தான். பாரா நின்ற சிப்பாய் கதவை மூடிப் பூட்டிக்கொண்டே "என்ன அப்பா அவசரம். சற்று நில்லேன்" என்றான். இதைக் கேட்டதும் ஜானிபாச்சாவுக்கு வியர்த்துவிட்டது. பெட்டிக்குள் இருந்த ஷெய்க் ஹாஸனுக்கு உயிரே போய்விட்டது போல் தோன்றிற்று. ஜானிபாச்சா சமாளித்துக் கொண்டு தைரியமாக நின்றான்.

"என்னப்பா அவசரம், இன்றைக்கு ஆசாமிக்குத் தலைவலி எப்படி இருக்கிறது?" என்றான் பாராக்காரனாகிய சிப்பாய்.

"கொஞ்சம் சௌக்கியம்தான். இன்றைக்குக் கூட சாப்பிடவில்லை. மணி 9 ஆய்விட்டது. எனக்குப் பசிக்கிறது. நான் போய்வருகிறேன்" என்று சொல்லிவிட்டு ஜானிபாச்சா நடந்தான்.

"அப்பா தப்பித்தோம்" என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டான் ஷெய்க் ஹாஸன்.

கோட்டை வாயிலில் நுழைந்த போது கோட்டை வாயிற் காவலன் "யாரப்பா அது?" என்று அதிகாரமாய்க் கேட்டான்.

"என்ன அண்ணே நான்தான்" என்று விடை அளித்தான் ஜானிபாச்சா.

"ஓ! நீயா இருட்டில் தெரியவில்லை" என்று சொல்லிக் கொண்டே கதவைத் திறந்துவிட்டான் சிப்பாய். கோட்டை

வாயிலுக்கு அப்புறம் வந்தவுடன் ஜானிபாச்சாவுக்கும் பெட்டிக் குள்ளிருக்கும் ஷெய்க் ஹாஸனுக்கும் தங்கள் மெலிந்த பெரும் பாரம் நீங்கியது போல் தோன்றியது. பேசாமல் மடமடவென்று வெளியே நடந்தான் ஜானிபாச்சா.

இரவு வேளையாகையால் ஒருவரும் எதிர்படவில்லை. இருந்தாலும் யாராவது பார்த்துவிடப் போகிறார்கள் என்று வெகு ஜாக்கிரதையாகப் பாதையை விட்டுக் காட்டுக்குள் நுழைந்தான். பெட்டிக்குள்ளிருக்கும் ஷெய்க் ஹாஸனாவது பெட்டியைத் தூக்கிக் கொண்டு போகிற ஜானிபாச்சாவாவது ஒன்றும் பேசவில்லை. எங்கும் அமைதியாகவிருந்தது. வானத்தில் விளங்கும் நட்சத்திரங்களும் அமைதியாகவே காணப்படுகின்றன. அவர்கள் செல்லும் காடு அமைதியாகவே காணப்படுகிறது. இருட்டாயிருந்த போதிலும் ஜானிபாச்சா அக்காட்டு வழிகளை நன்கு அறிந்தவனாதலால் சந்தேக மில்லாமல் நடந்தான். சுமார் ஒரு மணி நேரம் வரையில் காட்டின் வழியே நடந்த பிறகு கடைசியாக மணற்றரை காணப்பட்டது. காற்று அதிகமாக வீசத் தொடங்கியது. தண்ணீரில் அலைகள் பலமாக மோதுவது போன்ற சத்தம் கேட்டது. ஜானிபாச்சா கடற்கரைக்கு அருகில் வந்து விட்டான். பிறகு நாற்புறமும் திரும்பிப்பார்த்து அங்கு ஒருவரும் இல்லை என்பதை அறிந்து மெல்ல பெட்டியைக் கீழே இறக்கி வைத்து மூடியைத் திறந்தான். ஷெய்க் ஹாஸனால் பெட்டிக்குள் இருந்து வெளியே வரமுடியவில்லை. நெடுநேரம் உடம்பை ஒடுக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தபடியால் அவன் கைகால் களை அசைக்க முடியவில்லை. ஜானிபாச்சா அவனைத் தூக்கி வெளியே விட்டான். ஐந்து நாள் பட்டினியிருக்கும் ஷெய்க் ஹாஸன் நெடுநேரம் பெட்டிக்குள் அடைப்புண்டிருந்த படியால் களைப்பு அதிகமாயிருந்தது. ஆனால் சுகமாக வீசும் கடற்காற்று விரைவில் அவன் களைப்பைப் போக்கிவிட்டது.

ஷெய்க் ஹாஸன் அடைபட்டிருந்த பெட்டியின் அடிப் புறத்தில் சிறு துவாரங்கள் செய்யப்பட்டிருந்தன. துவாரங்கள் செய்யப்படாமலிருந்தால் அவன் பெட்டிக்குள்ளேயே இறந்து விட்டிருப்பான்.

ஷெய்க் ஹாஸன் பெட்டியைத் தூக்கிச் சமுத்திரத்தில் எறிந்து விட்டான். பிறகு ஜானிபாச்சாவைப் பார்த்து "வா! போகலாம்" என்றான்.

"எஜமானே நாம் இப்போது எங்கே போக வேண்டும்?"

"அரியாங்குப்பம். அங்கிருந்து மேலகிரி பண்டிதர் சத்திரத் திற்குச் செல்ல வேண்டும். சத்திரத்தில் எனக்குச் சினேகிதர்கள் இருக்கிறார்கள்" என்றான் ஷெய்க் ஹாஸன்.

கடற்கரை வழியாகவே இருவரும் அரியாங்குப்பம் நோக்கி நடந்தார்கள். வழியில் ஷெய்க் ஹாஸன், ஜானி பாச்சாவைப் பார்த்து "உன் குடும்பத்தாரை புதுச்சேரிக்கு அனுப்பிவிட்டாயா?" என்று கேட்டான்.

"ஆம் நேற்றைய தினமே புதுச்சேரிக்குப் போய் விட்டார்கள்."

"எல்லாம் நாம் நினைத்ததுபோல் முடிந்துவிட்டது. நண்பனே நீ எனக்குச் செய்த உதவியை மறக்க மாட்டேன். புதுச்சேரிக்குச் சென்றதும் என் பட்டாளத்தில் உன்னைச் சேர்த்துக் கொள்கிறேன்" என்றார் ஷெய்க் ஹாஸன்.

பிறகு இருவரும் நெடுநேரம் நடந்தார்கள். இரவு மணி 10, 11 ஆயிற்று. இன்னும் ஒரு மணிநேரம் கழிந்தது. 12 ஆயிற்று. நமது பிரயாணிகள் இன்னும் வழி நடக்கிறார்கள். ஒரு மணியும் ஆயிற்று. இன்னும் வழி நடக்கிறார்கள். கடைசியாக 2 மணியாயிற்று. அரியாங்குப்பம் வந்து சேர்ந்தார்கள். ஆனால் அரியாங்குப்பம் இன்னும் ஓசையடங்கியிருந்தது. ஊர் முழுதும் தூங்குகிறது. திண்ணையில் படுத்துத் தூங்குவோரின் குரட்டைச் சத்தம் இந்த இருட்டு வேளையில் பயங்கரமாகக் கேட்கிறது. நமது பிரயாணிகளைக் கண்டு சில நாய்கள் குலைக்கின்றன. பிரயாணிகள் அரியாங்குப்பத்தில் தங்கவில்லை. நேராக மேலகிரி பண்டிதர் சத்திரத்திற்கு நடந்தார்கள்.

"மேலகிரி பண்டிதர் சத்திரம் இன்னும் 5 மைல் தூரமிருக்கிறது. பொழுது விடிவதற்குள் போய்ச் சேர்ந்து விடலாம்" என்றான் ஷெய்க் ஹாஸன்.

நெடுநேரம் நடந்து சத்திரம் வந்து சேர்ந்தார்கள். பொழுது விடிந்தது. ஊரெல்லாம் விழித்துக் கொண்டது.

ஷெய்க் ஹாஸன் சத்திரத்திலிருக்கும் தன் நண்பனைக் கண்டான். நண்பன் ஷெய்க் ஹாஸனைக் கண்டு ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்தவனாய் கட்டித் தழுவிக்கொண்டான். பிறகு ஷெய்க் ஹாஸன் ஒரு கடிதம் எழுதி அதை ஒரு ஆள்வசம் கொடுத்து புதுச்சேரியின் கவர்னரான டூப்ளேக்கு அனுப்பினான். கடிதம் கொண்டுபோன ஆள் புதுச்சேரியில் டூப்ளே வசிக்கும் மாளிகையில் நுழைந்தான். மாளிகையில் இருந்த வேலைக்காரன் கடிதத்தை வாங்கிக்கொண்டுபோய் வெகு மரியாதையோடு கவர்னர் கையில் கொடுத்தான். கவர்னர் முழுதும் படித்துப் பார்த்தார். அவர் முகம் மலர்ந்தது. அவர் சந்தோஷமாகக் காணப்பட்டார். பிறகு அவர் பணியாளனைப் பார்த்து, 'ரங்காப் பிள்ளையைக் கூப்பிடு' என்றார்.

பணியாளன் பணிவுடன் வெளியே சென்றான். சற்று நேரத்திற்குள் கவர்னரின் துபாஷியும் காரியதரிசியுமான

ரங்கப்பிள்ளை - இவருடைய முழுப்பெயர் ஆனந்தரங்கப் பிள்ளை - டூப்ளேக்கு எதிரில் வந்து வணங்கி நின்றார்.

டூப்ளே சந்தோஷத்துடன் அவரைப் பார்த்து, "இந்தக் கடிதத்தைப் பார்த்தாயா? நமது வீரன் ஷெய்க் ஹாஸன் செய்ன்ட் டேவிட் கோட்டையிலிருந்து தப்பித்துக் கொண்டு வந்து மேலகிரி பண்டிதர் சத்திரத்தில் தங்கியிருப்பதாக அவன் கைப்பட எழுதியிருக்கிறான். நீர் போய் அவனைக் கெளரவமாகப் பல்லக்கில் ஏற்றிக் கொண்டுவா" என்றார்.

ரங்கப்பிள்ளை கவர்னரை வணங்கி வெளியே வந்தார். உடனே ஆட்களை அழைத்துப் பல்லக்கைக் கொண்டுவரச் சொல்லி அதில் ஏறிக்கொண்டு சத்திரஞ் சென்றார். பல்லக்கிலிருந்து இறங்கியதும் ஷெய்க் ஹாஸன் ஓடிவந்து ரங்கப் பிள்ளையைக் கட்டிக் கொண்டு தழுவி சந்தோஷத்தினால் கண்ணீர் வடித்தான். பிறகு இருவரும் பல்லக்கில் ஏறிக் கொண்டார்கள். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் புதுச்சேரி முழுவதும் "ஜபேதார் ஷெய்க் ஹாஸன் வந்துவிட்டார், வந்துவிட்டார்" என்னும் பேச்சு எங்கும் பேசப்பட்டது. கவர்னர் மாளிகையை அடைந்ததும் ஷெய்க் ஹாஸன் பல்லக்கிலிருந்து இறங்கி நேராக டூப்ளே இருக்கும் ஹாலில் சென்றான். டூப்ளே அவனை அருகில் உட்காரச் செய்தார்.

ஷெய்க் ஹாஸன் மரியாதைக்காக 21 ரூபாய் நாசர் (Nazar) கவர்னருக்குக் காணிக்கை கொடுத்து, தான் தப்பித்துக் கொண்ட விதத்தைத் தெரிவித்தான். கவர்னர் மிகவும் சந்தோஷப்பட்டு, தன் சந்தோஷத்திற்கு அறிகுறியாக ஒரு விலையுயர்ந்த சொக்காயை அவனுக்கு அளித்தார்.

அடுத்த நாள் ஜானிபாச்சா சிப்பாய் உடை தரித்து ஷெய்க் ஹாஸனுடைய சிப்பாய்களில் ஒருவனாகக் காணப்பட்டான்.

*ஆரம்பாசிரியன்,* மலர் 5, இதழ் 8–9, 1929

# மலையாள மொழி

[*கேரள பாணினீயம், பாஷா பூஷணம், விருத்த மஞ்சரி* முதலான நூல்களை மலையாள மொழியில் இயற்றிய ஏ.ஆர். ராஜராஜவர்மா, எம்.ஏ., எம்.ஆர்.எ.எஸ்., கோயித்தம்புரான் அவர்கள் எழுதிய *பாஷாஸ்வரூபம்* என்னும் கட்டுரையின் மொழிபெயர்ப்பு]

மனிதர்களுள் சாதிப் பிரிவுகள் காணப்படுவதுபோல, பாஷைகளிலும் பிரிவுகள் உண்டு. நாம் மலையாளிகள் என்னும் பிரிவைச் சேர்ந்தவர்களல்லவா? நம்முடைய மொழி திராவிட வகுப்பைச் சேர்ந்தது. இந்தத் திராவிட வகுப்பில் மலையாளத்தைத் தவிர, தமிழ், தெலுங்கு, கன்னடம், துளு என்னும் நான்கு பிரிவுகள் உண்டு. இவைகள் எல்லாம் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. தமிழ் மொழி முதல் தமக்கையும், மலையாளம் கடைசித் தங்கையும் ஆகும். பண்டைக் காலத்தில் மலையாள மொழியானது பெரிய தமக்கையான தமிழ் மொழியின் பாதுகாப்பில் இருந்தது. அக்காலத்து தமிழ் எழுத்துக்களல்லாமல், தனக்கென சொந்த எழுத்துக்கள் மலையாள மொழிக்கு இருந்ததில்லை. நெடுங் காலத்துக்குப் பிறகு, வட்டெழுத்தென்றும் கோலெழுத் தென்றும் பெயருள்ளவையும் தமிழினின்று அதிக மாறு பாடில்லாதவையுமான எழுத்துக்கள் மலையாள மொழிக்கு உண்டாயிருந்தன. மலையாள மொழி குழந்தைப் பருவத்தி லிருந்த அக்காலத்தில் எழுதப்பட்ட நூல்கள் இப்பொழுது இல்லையென்றே சொல்ல வேண்டும். வைதீகத் தொடர்பான சில பாட்டுக்கள் மாத்திரம் அங்கும் இங்கும் காணப்படு கின்றன. பின்னர், குழந்தைப் பருவம் கழிந்தபிறகும், மலையாள மொழியைப் பாதுகாக்கும் பொறுப்பு தமிழ் மொழிக்கே யிருந்தபடியால், மலையாள மொழி தனித்து நின்று இயங்க முடியவில்லை. நடை உடை பாவனை பழக்க வழக்கங்கள் எல்லாம் தமிழ் மக்களுக்கிருந்தது போலவே மலையாளப் பெண்ணுக்கும் இருந்தது. பாட்டுக்கள் முதலிய செய்யுள்களும் தமிழ்ப் பாட்டினைப் பின்பற்றியே மலையாளத்தில் இயற்றப் பட்டன. பாவாணர்கள் தங்களுக்கு வேண்டிய சொற்றொடர் களையும் கருத்துக்களையும் தமிழிலிருந்தே எடுத்துக்

கையாண்டார்கள். குழந்தைப் பருவம் நீங்கி வாலிபப் பருவம் அடைந்த பிற்காலத்தில் இயற்றப்பட்ட சில நூல்கள் இப் போதும் வழக்காற்றில் உள்ளன. இந்த மலையாளத்தைப் `பழைய மலையாளம்' என்னலாம். முன் சொன்ன குழந்தைப் பருவத்து மலையாளத்தை `ஆதி மலையாளம்' என்று கூறலாம். *ராமசரிதம்* என்னும் நூல் பழைய மலையாள காலத்தின் தொடக்கத்தில் இயற்றப்பட்டதும், *கண்ணஸ்ஸ ராமாயணம்* என்னும் நூல் அக்காலத்தின் கடைப்பகுதியில், இயற்றப் பட்டதும் ஆகும்.

கண்ணஸ்ஸப் பணிக்கருக்குப் பிறகுள்ள மலையாளந் தான் இப்போதைய மலையாளம். இப்போதும் இதை நாம் பேசி வருகிறபடியால், இந்த மலையாளத்துக்கு வேறுபெயர் கூறவேண்டியதில்லை. இப்போதைய மலையாளம், பண்டைக் கால நிலையிலிருந்து பெரிதும் மாறுபட்டுள்ளது. இதற்குக் காரணம், சம்ஸ்கிருதத்தின் கூட்டுறவு ஆகும். பழைய மலையாளம் வழக்காற்றிலிருந்த காலத்திலேயே ஆரியராகிய நம்பூதிரிமார் கேரள நாட்டில் வந்து வாழ்ந்திருந்தார்கள்; என்றாலும், நாட்டு மொழியை அவர் போற்றவில்லை. காலப்போக்கில், சம்ஸ்கிருதம் பேசியிருந்த நம்பூதிரிகளும், பழைய மலையாளம் பேசி வந்த கேரள நாட்டு மக்களும் தம்மில் ஒருவரோடொருவர் கலந்து உறவாடத் தொடங்கிய பிறகு, இருதிறத்தாருடைய மொழிகளும் கலந்து உண்டாகிய ஒரு கலப்புப் பாஷையாகும் இப்போதைய மலையாள மொழி. மலையாள மொழி வயதடைகிற வரையில், அதாவது குழந்தைப் பருவத்திலும் வாலிபப் பருவத்திலும் தமிழ் மொழியின் பாதுகாப்பிலும், தொடர்பிலும் இருந்ததென்று சொன்னோமல்லவா? அதன் பிறகுதான் அது சம்ஸ்கிருதத்தின் சம்பந்தத்தைப் பெற்றது. சம்பந்தம் என்றால் உண்மையான சம்பந்தந்தான். அதாவது மணமகளுக்கும் மணமகனுக்கும் உள்ள தொடர்புதான் (மலையாள மொழியில் சம்பந்தம் என்றால் திருமணம் என்பது பொருள்). அன்று முதல் மலையாள மொழி, பெரிய தமக்கையாகிய தமிழின் பாது காப்பிலிருந்து விலகிப்போய்விட்டது. என்ன வேண்டும் என்றாலும் கணவனை (சம்ஸ்கிருதத்திலிருந்து) கேட்டு வாங்கிக் கொள்வதேயல்லாமல், `தரவாட்டி'லிருந்து (உடன் பிறந்த தமிழிலிருந்து) வாங்குகிற வழக்கம் இல்லாமற் போய்விட்டது. சொற்கள், சொற்றொடர்கள், கருத்துக்கள், விருத்தம் முதலிய பாட்டுக்கள் என்பனவற்றை மட்டுமல்ல, எழுத்துக்களையுங்கூட சம்ஸ்கிருதத்திலிருந்தே பெற்றுக் கொண்டது. சம்ஸ்கிருதத்திலிருந்து எழுத்துக்களைப் பெற்றுக்

கொண்ட பிறகு, தமிழரைக் குறித்து 'அக்ஷரவியக்தி இல்லாதவர்' என்று ஏளனம் செய்யவும் தொடங்கிவிட்டது. சம்ஸ்கிருதத்தின் செல்வாக்கு இவ்வளவு அதிகமாக முதிர்ந்து விட்டதென்றாலும், தொடர்பு (சம்பந்தம்) மருமக்கத்தாய முறையாகையால், கோத்திரத்தை மாற்றிக் கொள்வதற்கு முடியவில்லை. மலையாள மொழி இன்றும் திராவிட கோத்திரத்தில்தான் இருக்கிறது. வேண்டாதவைகளும், வேண்டியவைகளுமான அனேக சொற்களைச் சம்ஸ்கிருதத்தி லிருந்து எடுத்துக்கொண்ட போதிலும், விருத்தம், அலங்காரம் முதலான ஆடம்பரங்களையெல்லாம் சம்ஸ்கிருதத்திலிருந்து வாங்கிக் கொண்டபோதிலும், மலையாள மொழியின் இலக் கணத்தை இன்றுவரையில் சம்ஸ்கிருத முறைப்படி அமைத்துக் கொள்ள முடியவில்லை. அன்வயக்கிரமம், வேற்றுமைத் தொடர்புகள் (வியக்தி சம்பந்தம்), விசேஷண விசேஷியங்களின் நிலை, ரூப பேதம் இவையெல்லாம் தமிழ் இலக்கணத்தை யொட்டித்தான் மலையாளத்திலும் காணப்படுகின்றன. சுருக்க மாகச் சொல்வதென்றால், தமிழ் இலக்கணத்திலே கூறப் பட்டுள்ள இலக்கண விதிகளை, இன்னின்ன பாகத்தில் இன்னின்ன விதமாகச் சிறிது மாறுதல் செய்துவிட்டால், அதுவாக இருக்கும் மலையாள மொழியின் இலக்கண நூல் என்று சொல்வது அமையும். இதை எப்பொழுதும் மனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

இனி, தேச வேறுபாட்டினால் மலையாள மொழியில் சில வேறுபாடுகள் (நாட்டு வழக்கு) உண்டு. ஆனால், அந்த வேறுபாடுகள் பேச்சளவில் உள்ள நாடோடிப் பாஷையை யன்றி, இலக்கியங்களை அதிகமாய்ப் பற்றமாட்டா. (1) வடக்கன் மலையாளம் (வடமலையாளம்) (2) தெக்கன் மலையாளம் (தென் மலையாளம்) (3) மத்திய மலையாளம் (நடு மலையாளம்) எனத் தேசத்தின் மூன்று பகுதிகளைக் கொண்டு இந்த வேறுபாடுகள் காணப்படுகின்றன. இது அவரவர்களின் சுவையைப் பொறுத்ததாகலின், ஒரு நாட்டு வழக்கு இன்னொரு நாட்டு வழக்கைப் பார்க்கிலும் சிறந்ததென்று சொல்வதற் கில்லை. என்றாலும், மத்திய நாட்டு மலையாளந்தான் சிறந்ததென்பது பண்டைக்கால முதல் அனைவருக்கும் ஒப்ப முடிந்த கருத்து. இதற்குக் காரணந்தேடத் தொலைதூரம் போகவேண்டியதில்லை. தென் மலையாளம் தமிழின் செல் வாக்கினாலும், வட மலையாளம் கன்னடத்தின் செல்வாக்கி னாலும், மாறிப்போயிருக்கின்றன. வேறு மொழிகளின் தொடர் பின்மையால் மத்திய மலையாளம் அதிகத் தூய்மையுடைய தாகும். இந்த மத்திய மலையாளந்தான் எல்லாத் தேசத்தவர்

களாலும் முக்கியமாகக் கையாளப்படுகிறது. எனினும், அந்தந்த நாட்டில் வழக்காற்றிலுள்ள விசேஷச் சொற்களும் (திசைச் சொற்கள்) சிறுபான்மை உபயோகப்படுத்தப்படுகின்றன. பேர்பெற்ற குஞ்சன் நம்பியார் தம் மொழியின் தூய்மையைப்பற்றி அதிகமாகக் கருத்து வைக்கவில்லை. அவருடைய நூல்களில் தேசியப் பிரயோகங்கள் (திசைச் சொற்கள்) அதிகம் உண்டு.

[குறிப்பு: தமிழராகிய நாம் மலையாள மொழியைத் தமிழின் புதல்வி என்று சொல்லுகிறோம். அதாவது, தமிழ் மொழியிலிருந்து மலையாளம் உண்டாயிற்று என்று கூறுகிறோம். ஆனால், இந்தக் கட்டுரையின் ஆசிரியர் மலையாள மொழியைத் தமிழின் தங்கையாகச் சொல்லுகிறார். எல்லா மலையாளிகளும் இவ்வாறுதான் தமிழையும் மலையாளத்தையும் சகோதரிகள் என்று சொல்வர்.]

*செந்தமிழ்ச் செல்வி,* சிலம்பு 16, 1937–38

# கண்ணன் பிறந்த மாட்சி

*[மயிலை. சீனியுங்கூடக் கவிதை இயற்றுகிறாரா என்று வியப்படையாதீர்கள். எனக்குக் கவி பாடத் தெரியாது. இந்தச் செய்யுள் என்னுடைய சொந்தச் சரக்கு அல்ல. ஒரு மலையாள நூலைப் படித்துக் கொண்டிருந்தபோது, அதில் இதன் மூலச் செய்யுளைப் படித்துப் பெரிதும் விம்மிதமுற்றேன். அதனைத் தமிழில் தழுவித் தமிழ் மக்களுக்குத் தர எண்ணி னேன். அதன் விளைவுதான் இந்தச் செய்யுள். இரயிம்மன் தம்பி (கி. பி. 1783-1856) அவர்கள் மலையாள மொழியில் பாடிய ஓமனத் திங்கள் கிடாவோ என்னும் தொடக்கத்தையுடைய செய்யுளின் தழுவலே இது. தலைப்பு மட்டும் என்னுடையது.]*

ஓமனத் திங்கள் பிறையோ - நல்ல
கோமளத் தாமரைப் பூவோ? 1

பூவில் நிறைந்த நறவோ - பொங்கும்
முழுமதித் தண்ணொளி நிலவோ? 2

புதிய பவழக் கொடியோ - பசுங்
கிளிகள் கொஞ்சும் மொழியோ? 3

சாய்ந்தாடி இயங்கும் மயிலோ - வாய்
ஓயாமல் இசைக்குங் குயிலோ? 4

துள்ளும் இளமான் பிடியோ - தளிர்
கொள்ளும் இளம்பூக் கொடியோ? 5

ஈஸ்வரன் தந்த நிதியோ - பர
மேஸ்வரி யேந்துங் கிளியோ? 6

பாரிஜா தத்தின் தளிரோ - யான்
பண்ணிய புண்ணியப் பயனோ? 7

விலையிலா நன்மணி வைக்கும் - வெகு
வியப்புள்ள தங்கநற் செப்போ? 8

கண்ணுக் கினியதோ ரமுதோ - செறி
காரிருள் நீக்குநல் விளக்கோ? 9

கீர்த்திக் கொடிக்கொரு வித்தோ - என்றும்
கேடு உறாதநன் முத்தோ? 10

ஆசை இருளைக் களைந்து - மன
மாசு அகற்றும் விளக்கோ? 11

தெளிந்து கொண்டநற் பொருளோ - மிகத்
தெள்ளிய வீணையின் ஒலியோ? 12

இன்பத்தில் படர்ந்தமா வல்லீ - அன்புக்
கொம்பிலே பூத்தபூ வல்லீ? 13

பிச்சக நறமலர்ச் செண்டோ - நாவில்
இச்சை சுரக்குங் கற்கண்டோ? 14

கஸ்தூரி வீசும் மணமோ - நல்ல
ஸத்துகட் குள்ள குணமோ? 15

பூமணம் ஏந்திய காற்றோ? - நல்ல
பொன்னுக் குரியநன் மாற்றோ? 16

காய்ச்சிச் சுண்டிய பாலோ - மணம்
கமழுந் தண்பனி நீரோ? 17

நன்மை விளையும் நிலமோ - அற
நலங்கள் வளரும் மனையோ? 18

தாகந் தீர்க்கும் நன்னீரோ - வழித்
தணலைப் போக்கும் தண்ணிழலோ? 19

வாடாத மல்லிகைப் பூவோ - நாளும்
வற்றாமல் ஓங்கும் வளமோ? 20

கண்ணுக் கினியநன் மணியோ - என்
கைவந்த சிந்தா மணியோ? 21

நீரொழுக் கறாதநல் லாறோ - கண்ணன்
நிகரற்ற மணிவண்ணச் சீரோ? 22

லக்ஷ்மி பகவதி தேவி - திரு
நெற்றிமேல் இட்டநற் பொட்டோ? 23

குழந்தை கண்ணன் பிறந்தான் - அவன்
இப்படி வடிவங்கள் கொண்டான்? 24

பத்ம நாபன்தன் அருளோ - நல்ல
பாக்கியத் தால்வரும் பொருளோ? 25

*பாரதி மாநாட்டு மலர்*, தமிழ் எழுத்தாளர் பதினோராவது மாநாடு,
தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை, டிசம் 21–22, 1963

# ஆனந்தரங்க பிள்ளை

துபாஷ் ஆனந்தரங்க பிள்ளையைப் பற்றி பெரும் பான்மையோருக்கு ஒன்றும் தெரியாது. இவர் யார்? எங்கிருந்தார்? என்ன உத்தியோகஞ் செய்தார்? அவர் செய்த நன்மை என்ன? என்பவைகளைப் பற்றி இக்காலத்துத் தமிழ் மக்கள் அறிந்துகொண்டார்களில்லை. சுமார் 160 ஆண்டு களுக்கு முன் வாழ்ந்திருந்த ஆனந்தரங்க பிள்ளையைப்பற்றி அறிந்து கொள்ள நம்மவர் கவலைகொள்ளாமலிருப்பது இயல்புதான்.

ஆனந்தரங்க பிள்ளை புதுச்சேரியில் கவர்னராயிருந்த டூப்ளே (M. Duplix) யிடத்தில் துபாஷியாக (Courtier or Chief Dubash) இருந்தவர். நாணயம், யோக்கியத் தன்மை, உண்மை, நேர்மை முதலிய உயரிய குணங்களையுடையவர்; உபகார குணமுள்ளவர். இவர் தமிழ்நாட் டிற்குச் செய்துள்ள நன்மை என்னவென்றால் 1736ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 6ஆம் தேதி முதல் 1770ஆம் வருஷம் வரையில் அக்காலத்தில் நடைபெற்ற சரித்திரக் குறிப்புகள், ராஜீய விஷயங்கள், முக்கிய நிகழ்ச்சிகள், பழக்க வழக்கங்கள் முதலிய பல விஷயங்களையும் தினசரிக் குறிப்பாக (Diary) எழுதி வைத்ததுதான். இத்தினசரிக் குறிப்பிலிருந்து, பிரிட்டிஷ் ஈஸ்ட் இந்தியா கம்பெனி, பிரெஞ்ச் ஈஸ்ட் இந்தியா கம்பெனி, கர்நாடக நவாப்புகள், பாளையக் காரர்கள் முதலியவர்களின் சரித்திரங்களை வெகு தெளி வாகவும் விரிவாகவும் நன்கறியலாகும். ஆனந்தரங்க பிள்ளை யவர்கள் எழுதியுள்ள இத்தினசரிக் குறிப்புப் புத்தகத்தின் இன்னொரு விசேஷம் என்னவென்றால், இக்குறிப்புகளை யெல்லாம் அவர் தமிழிலேயே எழுதி வைத்ததுதான். தமிழர் களுக்குத் தேச சரித்திர விஷயத்தில் ஊக்கமில்லாமலிருக்கும் போது, 160 வருஷங்களுக்கு முன் இருந்த தமிழர் ஒருவர் தமிழ் மொழியிலேயே சரித்திரம் எழுதி வைத்தது மிகுந்த ஆச்சரிய மாகத்தானிருக்கிறது? அப்படியிருந்தும் இவர் எழுதி வைத்த சரித்திரக் குறிப்பின் பெருமையை அவர் குடும்பத்தாராவது அல்லது வேறெந்தத் தமிழராவது ஒருபோதும் தெரிந்து கொள்ள வில்லை. கடைசியாக 1892ஆவது வருஷத்தில் தென் இந்தியாவில் அரசியல் உத்தியோகஸ்தர்களாயிருந்த

ஐரோப்பியர்களுக்கு இவர் எழுதிய தமிழ் தினசரிக் குறிப்பு சரித்திர விஷயம் தெரியவந்த பிறகு அரசாங்கத்தின் கவனத் திற்குக் கொண்டுவரப்பட்டு, தமிழிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு இப்போது புத்தக உருவமாக வெளி வந்திருக்கிறது. ஆனால் அந்தோ! தமிழ் மொழியில் எழுதப் பட்ட இச்சரித்திரக் குறிப்புகள் தமிழில் புத்தக வடிவமாக இன்னும் அச்சிடப்படவேயில்லை! அனந்தரங்க பிள்ளையின் தமிழ் சரித்திரக் குறிப்பின் ஆங்கில மொழிபெயர்ப்பை அரசாங்கத்தின் உத்தரவுப்படி Sir, J. Frederick Price, K.G.S.I., I.C.S. அவர்கள் *The Private Diary of Ananda Ranga Pillai* என்னும் பெயரோடு 12 வால்யூம்களாக (புத்தகங்களாக) அச்சிட்டிருக் கிறார். நிற்க.

ஆனந்தரங்க பிள்ளையவர்களின் சரித்திரத்தை எழுதுமுன் அவர் முன்னோருடைய சரித்திரங்களையும் இங்கு எழுத வேண்டியது அவசியமாகிறது. அதனை இங்கு சுருக்கமாகக் கூறுவோம்.

M. Hebert (ஹெபர்ட்) என்பவர் புதுச்சேரியின் கவர்னராகவிருந்தார். இவரிடத்தில் நைநியா பிள்ளை என்பவர் ஒரு முக்கிய உத்தியோகஸ்தராயிருந்தார். புதுச்சேரி கவர்னர், கம்பெனியின் வியாபாரத்தை பலப்படுத்த விரும்பி நைநியா பிள்ளையிடம் சொல்லி சில வியாபாரிகளைப் புதுச்சேரிக்குத் தருவிக்கும்படி கேட்டுக்கொண்டார். அதன்மேல் நைநியா பிள்ளை, சென்னப்பட்டணத்தில் பிரம்பூரில் குடியிருந்த வரும் வியாபாரியுமாகிய தமது மைத்துனர் திருவேங்கிட பிள்ளை என்பவரையும் இன்னும் சில வியாபாரிக்ளையும் புதுச்சேரிக்கு வந்து வியாபாரம் செய்யும்படி கேட்டுக் கொள்ள, அவ்விதமே திருவேங்கிடபிள்ளை தமது குடும்பத் துடன் மற்றும் சில வியாபாரிகளை அழைத்துக் கொண்டு புதுச்சேரிக்கு வந்து வியாபாரம் செய்யத் தொடங்கினார். இந்தத் திருவேங்கடபிள்ளை என்பவரின் மகன்தான் நமது துபாஷ் ஆனந்தரங்க பிள்ளை என்பவர். நைநியா பிள்ளைக்கு குருவப்பிள்ளை என்னும் ஒரு பிள்ளை உண்டு. இவர்கள் புதுச்சேரியிலிருக்குங் காலத்தில் துக்ககரமான ஒரு நிகழ்ச்சி உண்டாயிற்று. அது என்னவெனில், கவர்னருக்கும் அவரிடம் உத்தியோகத்திலிருந்த நைநியா பிள்ளைக்கும் யாது காரணத் தாலோ மனத்தாங்கல் நேரிட்டு அதன் பலனாக கவர்னர், நைநியா பிள்ளையைச் சிறைச்சாலையில் இட்டுக் கொடுமை செய்துவர, நைநியா பிள்ளை சிறைச்சாலையிலேயே இறந்து போனார். அதன்மேல் நைநியா பிள்ளை மகன் குருவப் பிள்ளையும், திருவேங்கட பிள்ளையும் சென்னைக்கு

ஓடிவந்துவிட்டார்கள். ஆனால் சென்னைக்கு வந்த குருவப் பிள்ளை தன் தகப்பனார்மேல் சுமத்தப்பட்ட குற்றத்தைப்பற்றி பிரான்ஸ் தேசத்து அரசனிடம் முறையிட்டு நீதி வழங்கும்படி கேட்டுக்கொள்ள வேண்டுமென்று உறுதிப்படுத்திக்கொண்டு, இங்கிலீஷ் கப்பல் ஒன்றில் ஏறி இங்கிலாந்து வழியாகப் பிரான்ஸ் தேசஞ்சென்றார். அச்சமயத்தில் Duke of Orleans என்னும் பிரபு, பிரான்ஸ் தேசத்தின் ரீஜன்டாக விருந்தார். குருவப்பிள்ளை, அவரிடஞ் சென்று புதுச்சேரி கவர்னர் ஹெபர்ட் என்பவர் தமது தந்தைக்குச் செய்த கொடுமை களையும் அநியாயங்களையும் எடுத்துச் சொல்லி நீதி வழங்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். இதன் பலனாக புதுச்சேரி கவர்னர் உடனே புறப்பட்டு பிரான்ஸ் தேசம் வரவேண்டும் என்று உத்தரவு செய்யப்பட்டது.

அந்த உத்தரவுப்படி புதுச்சேரி கவர்னர் ஹெபர்ட் 1719ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் காவல் பந்தோபஸ்துடன் பிரான்ஸ் தேசத்திற்குக் கொண்டு போகப்பட்டார். பிரான்ஸ் தேசத்திற்குச் சென்று நியாயந் தீர்த்துக்கொண்ட குருவப் பிள்ளை அங்கேயே கிறிஸ்துவர் ஆய்விட்டார். அவருக்கு பிரஞ்சு அரசாங்கத்தாரால் Chevalia of St. Michael என்னும் பட்டம் கொடுக்கப்பட்டது. இந்தப் பட்டம் பிரஞ்சுக்காரர் களுக்குள் மிகவும் உன்னதமான ஒரு கௌரவம். இந்தப் பட்டம் பெற்றவர்களுக்கு லார்ட்ஸ் என்று சொல்லப்படும் பிரபு களுக்குரிய மரியாதையும் அந்தஸ்தும் உண்டு. அன்றியும் இப்பட்டம் பெற்றவரின் பிள்ளைகளும் பெண்களும், பிரபுக்கள் குடும்பத்தில் கலியாணம் செய்து கொள்ளலாம். குருவப்பிள்ளைக்கு இத்தகைய உயர்ந்த பட்டமளித்ததோடு, அவரைப் புதுச்சேரியிலுள்ள பிரஞ்சு அரசாங்கத்துக்குட்பட்ட இந்திய மக்களின் தலைவராகவும் ஏற்படுத்தினார்கள். இவ்வித கௌரவங்களோடு குருவப்பிள்ளை புதுச்சேரிக்கு வந்து சிறப்பாக வாழ்ந்திருந்தார்.

ஹெபர்ட் என்னும் புதுச்சேரி கவர்னருக்குப் பிறகு கவர்னராக வந்தவர் M. De La Prevostiere என்பவர். இவர் சென்னைக்கு ஓடிவிட்ட திருவேங்கிடபிள்ளையை மீண்டும் புதுச்சேரிக்கு வரும்படி அழைத்து அவரை புதுச்சேரியில் குடியேற்றி வைத்து முன்போலவே வியாபார விஷயங்களைக் கவனிக்கும்படி ஏற்பாடு செய்தார்.

குருவப்பிள்ளை 1724ஆம் வருஷத்தில் புதுச்சேரியில் சந்ததியில்லாமலே இறந்துவிட்டார். 1726ஆம் வருஷம் ஜூன் மாதத்தில் திருவேங்கிடபிள்ளை தமது மகன் அனந்தரங்க பிள்ளையை விட்டுவிட்டு இறந்துபோனார்.

1726ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் M. Lenoir என்பவர் புதுச்சேரிக்குப் புது கவர்னராக வந்தார். இவர் முன்னமே புதுச்சேரியில் ஒரு உத்தியோகஸ்தராக இருந்தவராதலால் ஆனந்தரங்க பிள்ளையின் யோக்கிதை, நற்குணம் முதலியவை களை நன்கறிந்திருந்தார். ஆகவே, அவர் ஆனந்தரங்க பிள்ளையை அவர் தகப்பனார் பார்த்து வந்த வியாபார விஷயத்தைக் கவனிக்கும்படி ஏற்பாடு செய்தார். அக்காலத்தில் சிறுவயதாயிருந்த ஆனந்தரங்க பிள்ளை தாம் மேற்கொண்ட வேலையை சாமார்த்தியத்தோடு செய்துவந்தபடியால், கவர்னர் இவரைப் பறங்கிப்பேட்டையில் (Porto Novo) உள்ள பிரெஞ்சு தொழிற்சாலைக்குத் தலைவராக நியமித்தார். இந்த வேலையை ஏற்றுக்கொண்ட ஆனந்தரங்க பிள்ளை, தமது சொந்தப் பொறுப்பில் லாலாபேட்டை, ஆற்காடு முதலிய இடங்களில் வியாபாரச் சாலைகளை ஏற்படுத்தித் திறமையாக நடத்திக் கொண்டு வந்தார். 1735ஆம் வருஷத்தில் M. Dumas என்பவர் புதுச்சேரிக்குப் புது கவர்னராக வந்தார். இந்த கவர்னரும் ஆனந்தரங்க பிள்ளைமேல் நன்னம்பிக்கையும் நல்லெண்ணமும் கொண்டிருந்தார். இக்காலத்தில் பிரெஞ்சு வியாபாரம் பலப்பட்டிருந்தது. ஆனால் 1740இல் மராட்டி யர்கள் தென்னிந்தியாவில் படையெடுத்து வந்து அடிக்கடி ஆங்காங்கே சண்டை செய்து கொண்டிருந்தபடியால் வியாபாரம் நழுக ஆரம்பித்தது. புதுச்சேரிக்குச் சுற்றுப்புறத்தி லுள்ள நாடுகளில் அடிக்கடி சண்டைகளும் குழப்பங்களும் ஏற்பட்டன. இச்சமயத்தில் அதாவது 1742இல் டூப்ளே (M. Duplix) என்பவர் புதுச்சேரிக்கு கவர்னராக வந்தார். இவர் முன்னமேயே 1720 முதல் 1731 வரையில் புதுச்சேரியில் இருந்தவர். ஆகையால் ஆனந்தரங்க பிள்ளையைப் பற்றி இவரும் நன்கறிந்திருந்தார். இந்த கவர்னர் காலத்தில்தான் ஆனந்தரங்க பிள்ளைக்குச் செல்வாக்கும் அதிகாரமும் ஏற்படலாயின. (Courtier or Chief Dubash) துபாஷி வேலை டூப்ளே காலத்தில்தான் இவருக்குக் கொடுக்கப்பட்டது. இந்த கௌரவ மான வேலையை இதற்கு முன்னர் குருவப் பிள்ளையும் அவருக்குப் பிறகு கனகராய முதலியார் என்னும் ஒரு கிருஸ்துவரும் பார்த்து வந்தனர். கனகராய முதலியாருக்குப் பிறகு 1747ஆம் வருஷக் கடைசியில் ஆனந்தரங்க பிள்ளை இந்த வேலையில் அமர்த்தப்பட்டார். இவர் யோக்கியமாகவும் நியாயமாகவும் நடந்து கொண்டபடியால் டூப்ளேயினால் நம்பிக்கையோடு கௌரவமாக மதிக்கப்பட்டார். டூப்ளே பிரான்ஸுக்குத் திரும்பிப் போய்விட்ட பிறகு M. De Leyrit என்பவர் கவர்னராக வந்தபோது அவர் காலத்திலும் இந்த

உத்தியோகத்திலேயே இருந்தார். ஆனால் இந்த கவர்னர் காலத்தில் இவர் செல்வாக்குக் குறைய ஆரம்பித்தது. அன்றியும் உடம்புக்கும் அடிக்கடி அசௌக்கியம் உண்டாயிற்று. இக்காரணங்களால் பிள்ளையவர்கள் 1756ஆம் வருஷத்தில் தமது உத்தியோகத்திலிருந்து விலகிக் கொண்டார். ஆனால் புதுச்சேரிவாசிகள் மாத்திரம் இவர் இறக்கும் வரையில் இவரைப் பெரிய தலைவராகக் கருதிவந்தனர். ஆனந்தரங்க பிள்ளை 1761ஆம் வருஷம் புதுச்சேரியில் காலமானார். அதாவது கானல் கூட் என்பவரிடம் புதுச்சேரி சரண் அடைந்த நாலு நாட்களுக்கு முன்னர் இவ்வுலகை நீத்தார். இவர் சென்னை பெரம்பூரில் 1697ஆம் வருஷம் மார்ச்சு மாதம் 30ஆம் தேதி பிறந்தவர்.

இவர் தமிழில் எழுதிய சரித்திரக் குறிப்பு தமிழிலேயே அச்சிடப்படாதது மிகவும் வருந்தத்தக்கது. ஆனால் அதன் ஆங்கில மொழிபெயர்ப்பு ஒவ்வொரு புத்தகச் சாலையிலும் வைக்கப்பட்டிருக்கின்றது. முழுவதும் அழிந்து போகாமல் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தாவது புத்தகமாக அச்சிட்டு வெளிப்படுத்திய அரசாங்கத்தாருக்கு நமது வந்தனத்தைச் செலுத்துகிறோம். ஏனென்றால் ஆனந்தரங்க பிள்ளை எழுதிய நமது நாட்டுச் சரித்திரத்தைத் தமிழில் படிக்க நமக்கு அதிர்ஷ்டமில்லாவிட்டாலும் ஆங்கிலத்திலாகிலும் படித்து அறிந்து கொள்ள வழி ஏற்பட்டிருக்கிறதல்லவா?

*ஆரம்பாசிரியன்*, மலர் 5, இதழ் 7, 1929

# திப்பு சுல்தான்

திப்பு சாயப், திப்பு சுல்தான் என்று வழங்கப்படும் பெத்அலிகான் (Feth-aly-khan) என்பவர் ஹைதர் அலிகான் என்பவருடைய பிள்ளை. இவர் 1740-ல் பிறந்தார். மைசூர் ராஜ்ஜியத்துக்கு அரசனாயிருந்த ஹைதர் அலிகான் 1782ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 7ஆம் தேதி இறந்தவுடன் திப்பு சுல்தான் மைசூர் அரசனானார். அப்பொழுது இவருடைய இராஜ்யம் 27 ஆயிரம் சதுர மைல் உள்ளதும் ஒரு லக்ஷத்து ஐம்பதினாயிரம் சிப்பாய்களையுடைய சேனைப் பலமும் உள்ளதாயிருந்தது. ஹைதர் அலி இறந்த செய்தியறிந்ததும் ஆங்கிலேயர் ஜெனரல் மாத்யூஸ் என்னும் தளகர்த்தரின் தலைமையில் மைசூரைத் தாக்கினர். அச்சமயத்தில் திப்பு சுல்தான் கர்னாடக தேசத்தில் போர் செய்து கொண்டிருந்தார். ஹைதர் அலி இறந்ததும் ஆங்கிலேயர் மைசூரை முற்றுகை யிட்டதும் ஆகிய செய்திகளையறிந்தவுடன் திப்பு சுல்தான் உடனே மைசூருக்குச் சென்றார். சென்று கன்னட தேசத்தில் வைத்து ஆங்கிலேய சேனைகளை முறியடித்து ஜெனரல் மாத்யூஸ் என்னும் தளகர்த்தரின் சேனைகளில் பெரும் பான்மையோரைச் சிறைப்படுத்தி மைசூரில் அச்சேனைகள் இழைத்த கொடுஞ்செயலுக்கு வஞ்சம் தீர்த்துக் கொண்டார். அதன் பிறகு நிகழ்ந்த சிற்சில போரில் அவர் வெற்றியடைந்தார். பின்னர் ஆங்கிலேயருடன் சமாதானம் செய்து கொண்டார். இந்தச் சமாதானம் எட்டு வருஷங்கள் வரை நிலைத்திருந்தது. இந்த எட்டு வருஷ காலத்துக்குள் தன் ராஜ்ஜியத்திலுள்ள உள்நாட்டு விவகாரங்களைக் கவனித்து வந்தோடு மைசூர் அரசுக்கும் பிரஞ்சுக்காரருக்கும் முன்பிருந்த பழைய சிநேகிதத்தை விருத்தி செய்தார். பின்னர் தமது பழைய வெற்றிகளை எண்ணி போருக்குத் தொடங்கி ஆங்கிலேயரை இந்தியாவை விட்டுத் துரத்த முயற்சி செய்தார். இந்த எண்ணத்தோடு மூன்று தூதர்களை பிரான்ஸ் தேசத்துக்கு அனுப்பி நெப்போலியனுடைய உதவியை நாடினார். அவர்கள் பிரான்ஸ் தேசத்தில் நன்கு வரவேற்கப்பட்டார்கள். ஆனால் இவர்கள் கேட்ட உதவியை அவர்கள் செய்ய உடன்பட வில்லை.

1790இல் திப்பு சுல்தானுக்கும் இங்கிலீஷ்காரருக்கும் திருவாங்கூரில் போர் நடந்தது. இந்தப் போரில் திப்பு சுல்தான் முறியடிக்கப்பட்டார். இந்தப் போரில் அநேக பீரங்கிகளையும் தலைப்பாகை, நகைகள், பல்லக்கு ஆகிய இவைகளையும் இழந்துவிட்டார். அடுத்த ஆண்டில் ஆங்கிலேயர் பெங்களூரை முற்றுகையிட்டு அந்த ஊரைக் கைப்பற்றினர். இந்தச் சண்டையில் திப்பு சுல்தானுடைய தளகர்த்தன் உயிர்துறந்தார். பிறகு ஆங்கிலேயர் கார்ன்வாலிஸ் என்பவர் தலைமையில் திப்பு சுல்தான் இருந்த ஸ்ரீரங்க பட்டணத்தை எதிர்க்கச் சென்றனர். ஆனால் பஞ்சத்தினாலும், வெள்ளப் போக்கினாலும் தொத்து நோய் பரவியிருந்தபடியால் முற்றுகையிடக் கூடாமற் போயிற்று.

அதன் பின்னர் திப்பு சுல்தானுக்கும் ஆங்கிலேயருக்கும் நடந்த மூன்றாவது சண்டை திப்பு சுல்தானுக்குத் துன்பமாய் முடிந்தது. மராட்டியரும் தக்ஷண தேசத்தின் சூபாவும் ஆங்கிலேயருக்கு உதவி செய்தார்கள். பெங்களூரில் இருந்த அநேகக் கோட்டைகள் பிடிபட்டன. சாவன்துர்க்கம் என்னும் கோட்டையை ஒருவரும் கைவசப்படுத்த முடியாது என்று ஒரு நம்பிக்கையிருந்தது. ஆனால் அந்தக் கோட்டையையும் ஆங்கி லேயர்கள் பிடித்துவிட்டார்கள். அதன் பிறகு மைசூர் சேனை களுக்குத் தைரியம் குறைந்துவிட்டது. பிறகு பக்கபலமுள்ள ஆங்கிலேயர் இரண்டாம் முறையாக ஸ்ரீரங்க பட்டணத்தை 1792ஆம் வருஷம் ஜனவரி மாதம் தாக்கினார்கள். திப்பு சுல்தான் வேறு வழியில்லாமல் சமாதானம் செய்து கொண்டார். அந்த உடன்படிக்கைப்படி திப்பு சுல்தான் தமது இரா்ஜ்யத்தில் சரிபாகத்தை ஆங்கிலேயருக்குக் கொடுத்ததோடு லக்ஷக் கணக்கான ரூபாயும் கொடுக்க வேண்டியதாயிற்று. அது மாத்திரமல்லாமல் உடன்படிக்கை நிலைத்திருக்கும் பொருட்டு தமது இரண்டு பிள்ளைகளையும் ஆங்கிலேயரிடம் ஒப்படைக்க நேர்ந்தது.

இவ்விதம் தோல்வியடைந்த திப்பு சுல்தான் கோபம் ஆறாதவராய், தமது சமஸ்தானத்தில் நடைபெற்றிருந்த வேடிக்கை, கேளிக்கை முதலிய எல்லா வினோதங்களையும் சுகங்களையும் நீக்கிவிட்டு தனக்கு நேர்ந்த தோல்வியை எவ்விதம் தீர்த்துக்கொள்வது என்னும் யோசனையில் ஆழ்ந்தார். ஆங்கிலேயருக்கு விரோதமாகக் கிளம்பும்படி சில அரசர்களைக் கேட்டார். மறுபடியும் ஒரு முறை பிரான்ஸ் தேசத்துக்குத் தூதனுப்பி உதவிபுரியும்படி கேட்டார். கவர்னர் ஜெனரலாயிருந்த மார்க்குவிஸ் வெல்லஸ்லி என்பவர் திப்புவின் போர் முயற்சியையறிந்து 75,000 பேர் அடங்கிய சேனையை

ஜெனரல் ஹாரிஸ் என்னும் தளகர்த்தரின் தலைமையில் அனுப்பினார். திப்பு சுல்தான் 60,000 சேனை வீரர்களைத் தானே அழைத்துக் கொண்டு ஆங்கில சேனையை எதிர்த்தார். ஆனால் முறையடிக்கப்பட்டு தமது கோட்டையில் புகுந்து கொண்டார். பிறகு உடன்படிக்கை செய்து கொள்ள விரும்பினார். ஆனால் ஆங்கிலேயர் கேட்ட உடன்படிக்கை திப்பு சுல்தானுக்கு அவமானத்தையுண்டுபண்ணக் கூடியதாய் இருந்தபடியால் அவர் போர் செய்தே தன் உயிரை மாய்த்துக் கொள்வதென்று தீர்மானித்தார். ஸ்ரீரங்கபட்டணத்தை ஆங்கிலேயர் தாக்கி னார்கள். திப்புவின் சேனைகள் தீரமாகச் சண்டை செய்து கோட்டையைப் பாதுகாத்தார்கள். திப்பு சுல்தான் தானே போரை நடத்தினார். வெகு மும்முரமாகச் சண்டை நடந்தது. 1799ஆம் வருஷம் மே மாதம் 4ந்தேதி ஸ்ரீரங்கபட்டணம் ஆங்கிலேயர் கைக்குள் சிக்கியது. அன்றைய தினம் திப்பு சுல்தான் அஞ்சா நெஞ்சுடன் சுத்த வீரனைப்போல் போரிட்டார். அவர் குதிரை மேலிருந்தபோது ஒரு குண்டுபட்டு கீழே விழுந்தார். அவருடைய சவம் பல போர்வீரர்களின் பிணக்குவியலின் கீழ் கண்டெடுக்கப்பட்டது.

திப்பு சுல்தான் தமது நாற்பத்தைந்தாம் வயதில் இவ்விதம் வீரப்போர் செய்து உயிர்துறந்தார். அவர் போர்க்களத்தில் அஞ்சா நெஞ்சினராய் போர் செய்து வந்தது, அவருக்கு இந்துஸ்தானம் முழுவதும் பிரபல பிரக்கியாதியைத் தந்தது என்று மிச்சாட் என்னும் பிரஞ்சுக்காரர் எழுதியிருக்கிறார்.

திப்பு சுல்தான் 5 அடி 8 அங்கலம் உயரம் உள்ளவர். பருத்துக் குறுகிய கழுத்தும் திரண்டு வாட்டமான தோள்களும் உடையவர். கைகளும் கால்களும் சிறியவை. பெரிய கண்களும் வளைந்த புருவமும் உடையவர். அவருக்கு ஐரோப்பிய பாஷைகளில் பல பாஷைகளைப் பேசத் தெரியும். அக்காலத் தில் இந்தியாவில் கற்றிருந்த சாஸ்திரங்களையெல்லாம் அறிந்தவர். மிகுந்த தைரியமும் துணிச்சலும் உள்ளவர். ஆனால் சமயோசித புத்தியும் தைரியத்தை சாதகமான வழியில் உபயோகிக்கும் திறமையும் இல்லாதவர்.

*ஆரம்பாசிரியன்,* மலர் 7, இதழ் 4, 1931

# ஐதர் ஆலியும் போர்வீரனும்

ஐதர் ஆலி மைசூரை அரசாண்ட காலத்தில் அவ்வரசன் செய்த பல செய்கைகளைப்பற்றி அனேகக் கதைகள் சொல்வதுண்டு. பெரும்பாலும் அவன் செய்த கொடுமையான காரியங்களைப் பற்றிய கதைகளே வழங்குகின்றன. 'ஐதர் என்றால் அழுகிற குழந்தையும் வாயடங்கும்' என்னும் பழமொழியும் வழங்குகிறது. ஐதரின் கொடுஞ் செய்கை களைப்பற்றிப் பல கதைகள் வழங்குவது போலவே அவனுடைய சிறந்த குணங்களைப் பற்றிய கதைகளும் உண்டு. அக்கதைகளில் இதுவும் ஒன்று:

பூனா தேசத்தில் மராட்டியப் போர்வீரன் ஒருவன் இருந் தான். அவ்வீரன், தன் ஆற்றலையறிந்து அதற்குத் தகுந்தபடி உத்தியோகம் தரக்கூடிய அரசன் யார் என்று யோசித்துக் கடைசியில் ஐதராலியிடம் போவதே சரியானதென்று தேர்ந்தான். ஆகவே அவன் ஒரு நாள் மைசூருக்குப் போகப் புறப்பட்டு தன்னிடமிருந்த தன் அந்தஸ்துக்குத் தகுந்ததான உயர்ந்த ஆடைகளையும் கத்தி, கேடயம் முதலிய ஆயுதங் களையும் எடுத்துக் கொண்டு புறப்பட்டான். புறப்பட்டு பூனா நகரத்துக் கடைத்தெரு வழியாக வரும்போது ஒரு கடையில் பாப்பாசு சோடு (முகம்மதியர் அணியும்படியான பாதரக்ஷை) விற்கிறதைக் கண்டு, வேலைப்பாடமைந்த அழகான ஒரு ஜதை சோடு வாங்கி அதையும் தன் மூட்டையில் வைத்துக் கட்டிக்கொண்டான்.

கடைசியாய் மைசூர் நாட்டையடைந்து ஐதர் ஆலி இருந்த ஸ்ரீரங்கப்பட்டணத்தை அடைந்து, தான் கொண்டு வந்த ஆடைகளையுடுத்து, புதிதாக வாங்கின சோட்டையும் காலில் அணிந்து ஐதராலியைக் காணச் சென்றான். அரண்மனையுள் சென்று ஐதராலியைக் கண்டு, சோட்டை யணிந்தபடியே மைசூர் அரசனை வணங்கினான். ஐதர் ஆலி, தன்னை வணங்கி எதிரில் நிற்கும் போர் வீரனைப் பார்த்து நீ யார், எங்கிருந்து எதற்காக வந்தாய் என்று வினவினான்.

அதற்கு மராட்டிய வீரன், "ஊழியன் இருக்கிறது பூனா தேசம். தேவரீரிடம் சேவிக்கிறவர்களின் வல்லமையையறிந்து அதற்குத் தக்கபடி சம்பளம் கொடுத்து ரக்ஷிக்கிறீர்களென்று

கேள்விப்பட்டு தங்களுடைய சந்திதானத்துக்கு வந்தேன்" என்றான்.

ஐதராலி அப்போர்வீரன் நிற்கும் மிடுக்கையும் பிகுவையும் அவன் அலங்கார உடைகளையும் கண்டு அவனை ஏற இறங்கப் பார்த்து, கடைசியாய், அந்த வீரன் காலிலணிந்த சோட்டைக் கழற்றாமலே தன் எதிரில் தைரியமாய் நிற்பதைப் பொறுக்க முடியாமல், அந்த வீரனை அவமானம் செய்து அனுப்பவேண்டும் என்று நினைத்தார். ஆகவே ஐதர் ஆலி அந்த மராட்டிய வீரனைப் பார்த்து, "ஓய் போர் வீரா! உன் முகத்தைப் பார்க்கிலும் உன் காலிலிருக்கிற பாப்பாசு சோடு மெத்தவும் அழகாயிருக்கிறது" என்றார்.

அதைக் கேட்ட அந்த சுத்த வீரன், "மகாப் பிரபுவே! ஆம்! ஒரு வேளை நீர் சொல்லுவது மெய்யாயிருக்கலாம். ஆனால், என்னுடைய கால் சோட்டின் அழகு உம்முடைய முகத் தழகுக்குச் சரியாயிருக்கிறது" என்று சற்றும் அஞ்சாமல் அலட்சியமாகச் சொன்னான்.

இந்த வார்த்தையைக் கேட்டவுடனே, ஐதருக்குக் கண் சிவந்தது; கோபம் மூண்டது; ஐதர் தன் பக்கத்தில் அமர்ந்திருந்த குண்டு குலாமலிகான் என்னும் பிரபுவைப் பார்த்து, இவன் என்ன செய்யப்படத் தக்கவன் என்று கேட்க, குண்டு குலாமலிகான், "ஐயா, இவன் உம்முடைய படைத்தலைவர்களுக்கெல்லாம் தலைவனாகச் செயல்படத் தக்கவன்" என்றான்.

ஐதர், "என்னை மதியாமல் இகழ்ந்த இவனுக்கு என்ன தண்டனை விதிக்கலாம் என்று கேட்டால் இவனுக்குச் சேனைத்தலைவர் உத்தியோகம் கொடுக்க வேண்டுமென்று சொல்லுகிறீர்" என்று சினம் பொங்கக் கேட்டான்.

குண்டு குலாமலிகான், ஐதரைப் பார்த்துச் சொல்வார்: "அரசே! தேவரீருடைய ஆக்கினைகளிப்படிப்பட்டவை என்றும் தங்களுடைய தண்டனைகள் இப்படிப்பட்டவை என்றும் உலகப் பிரசித்தமாயிருக்க, அவைகளையறிந்தும் இந்தச் சேவகன், தான் ஜீவனத்துக்காகத் தங்களை அடுத்து வந்திருப்பதையும் கவனியாமல் தங்கள் வார்த்தையின் பேரில் இடித்தாற்போல் இப்படிப் பதில் சொன்னவனைப் பார்க்கிலும் பெரிய வீரன் இவ்வுலகத்திலிருப்பானா? உலகம் புகழும் மைசூர் அரசராகிய தங்களிடத்திலேயே அஞ்சாமல் பதில ளித்த இந்த வீரன், சேனைத் தலைவன் பதவிக்குத் தகுந்தவன் என்று என் புத்திக்குத் தோற்றியபடியால் இப்படிச் சொன் னேன்" என்று விடையளித்தார்.

ஐதர், குண்டு குலாமலிகான் சொன்னதைக் கேட்டு சந்தோஷமடைந்து அந்த மராட்டிய வீரனுக்குச் சேனாதிபதி உத்தியோகம் கொடுத்து, தகுந்த சம்பளமும் கொடுத்து வந்தார். அந்த மராட்டிய சேனாதிபதியும் பிற்காலத்தில் அனேக வீரச் செயல்களைச் செய்து வந்ததை ஐதர் கண்டு அவனைப் புகழ்ந்து மெச்சினார்.

*ஆரம்பாசிரியன்,* மலர் 7, இதழ் 11, 1931

இக்கட்டுரையின் வேறுவடிவம் 'பாப்பாசு ஜோடு' என்னும் தலைப்பில் *தாமரை,* மலர் 2, இதழ் 3, 1960இல் வெளி வந்துள்ளது.

# கிறீன் வைத்தியர்

அமெரிக்கன் மிஷன் என்னும் கிறிஸ்தவச் சங்கம் 1816-ம் ஆண்டில் யாழ்ப்பாணத்தில் நிறுவப்பட்டது. இந்த அமெரிக்கன் மிஷன் சங்கத்தார் உயர்தரக் கல்வியையும் சையன்ஸ் என்னும் சாத்திரங்களையும் கற்பிப்பதற்காக 1823-ல் வட்டுக்கோட்டை என்னும் இடத்தில் 'செமினாரி' யொன்றை ஏற்படுத்தி னார்கள். இந்தச் செமினாரி அக்காலத்தில் சர்வகலாசாலைக் கொப்பாகச் சிறப்புற்று விளங்கிற்று. உயர்தரக் கல்வியைக் கற்பித்த இந்தச் செமினாரியின் விசேஷம் என்னவென்றால், இதில் தமிழ், சமஸ்கிருதம், கிரேக்கு, எபிரேய பாஷைகளும், நில அளவை சாஸ்திரம், வான சாஸ்திரம், மாலுமி சாஸ்திரம் முதலிய சாஸ்திரங்களும் கற்பிக்கப்பட்டமை ஒருபுறமிருக்க, இதில் வாசித்த பிள்ளைகளுக்கு உணவு முதலியவை இலவசமாகக் கொடுக்கப்பட்டதும் இலவசமாகக் கல்வி கற்பிக்கப்பட்டதுமேயாகும். இந்தக் கலாசாலை, அக்காலத்தில் ஆசியா கண்டத்திலேயிருந்த கலாசாலைகளில் தலைசிறந்து விளங்கிற்று. இவ்விதம், அமெரிக்கன் மிஷன் சங்கம் தமிழிலங்கையில் அக்காலத்திற் செய்துவந்த தொண்டு போற்றற்பாலது.

இந்த அமெரிக்கன் மிஷன் சார்பாக கிறீன் வைத்தியர் (Dr. S. F. Green) யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த மானிப்பாய் என்னு மிடத்தில் ஒரு வைத்தியசாலையை 1847-ல் நிறுவி நோயாளர் களுக்குச் சிகிச்சைகள் செய்து வந்தார். அஃதன்றியும் அநேக மாணவருக்கு மேல்நாட்டு முறைப்படி வைத்திய சாஸ்திரத்தைக் கற்பித்து வந்தார். அமெரிக்க மிஷன் சங்கத்தார் எல்லாக் கல்வியையும் சாஸ்திரங்களையும் தேசபாஷையில் கற்பிக்க வேண்டும் என்னும் உயர்ந்த கருத்துள்ளவர்களா யிருந்தார்கள். அக்கொள்கையைப் பின்பற்றி கிறீன் வைத்தியரும் வைத்திய சம்பந்தமான சாஸ்திரங்களை யெல்லாம் அறிஞர் பலரின் உதவிகொண்டு தமிழில் மொழிபெயர்த்து எழுதினார். வைத்திய சம்பந்தமான 'சையன்ஸ்' நூல்களை முதல்முதல் தமிழில் வெளிப்படுத்தியவர் இவர்தாம். இதன் பொருட்டுத் தமிழுலகம் இவருக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது.

1856-ல் கிறீன் வைத்தியர் வைத்திய நூல் ஒன்றைத் தமிழில் எழுதி அதனை அச்சிடும் செலவை அரசாங்கத்தாரை ஏற்றுக் கொள்ளும்படி கேட்டார். அரசாங்கத்தார், அந்த நூலை ஆங்கில மொழியில் எழுதினால் தமது செலவில் அச்சிடுவதாகத் தெரிவித்தார்கள். அமெரிக்க மிஷன் சங்கத்தின் நோக்கம் எல்லா சையன்ஸ்களையும் சாத்திரங்களையும் தேச பாஷையில் எழுதப்படவேண்டும் என்பதாகையால் கிறீன் வைத்தியர் அந்த வைத்திய நூலை ஆங்கிலத்தில் எழுத மறுத்துவிட்டார். ஆகையால், அரசாங்கத்தார் அந்த நூலை அச்சிடுவதற்குப் பொருளுதவி செய்ய முடியாதென்று சொல்லிவிட்டார்கள்.

கிறீன் வைத்தியர் தமிழ் மொழியில் இயற்றிய வைத்திய சம்பந்தமான நூல்கள்:

*அங்காதிபாதம்* (Human Anatomy), *சுகரணவாதம், உற்பாலனம்.* இம்மூன்று நூல்களும் ஒரே புத்தகமாக 1872 -ல் யாழ்ப்பாணத்தில் அச்சிடப்பட்டன. *கெமிஸ்தம்* (Chemistry) "இது வெல்சு பண்டிதர் இங்கிலீஷில் இயற்றிய நூலிலிருந்து, பாஷாந்தரமாக்கலில் த. வி. சப்மன் வைத்தியனுடைய உதவியையும் பரிபாஷையாக்கலில் ர. சுவாமிநாதன் வைத்திய னுடைய உதவியையும் கொண்டு சமுபல், பி. கிறீன் வைத்தி யனால் மொழிபெயர்க்கப்பட்டது. யாழ்ப்பாணம் அமெரிக்க இலங்கை மிஷனுக்காக நாகர்கோவில் லண்டன் மிஷன் அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது. 1875."

*Vocabularies of Malaria Medicate and Pharmacy.* இந்த நூல் 1875-ல் நாகர்கோவில் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது. இதனையும் கிறீன் வைத்தியர் தமிழில் எழுதி வெளியிட்டார். இந்நூலை யான் பார்த்ததில்லை. ஆகையால் இதன் தமிழ்ப் பெயர் இன்னதென்று தெரியவில்லை.

கிறீன் வைத்தியர் வைத்திய சம்பந்தமாக, மேலைத் தேசத்துச் சிகிச்சை முறைப்படி ஒன்பது நூல்களைத் தமிழில் எழுதி வெளியிட்டார் என்று தெரிகிறது. அவற்றில் மேற் சொன்ன ஐந்து நூல்கள் இப்போது அருமையாகச் சிற் சிலரிடத்தில் கிடைக்கும். ஏனைய நான்கு நூல்களின் பெயர் தானும் தெரியவில்லை. அந்நூல்களைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியது தமிழ் மொழி முன்னேற்றத்தில் கருத்துடையவர் களின் கடமையாகும். அன்றியும் கிறீன் வைத்தியர் எழுதி வெளியிட்ட அந்த ஒன்பது நூல்களும் மீண்டும் அச்சிடப்பட வேண்டும். இத்தகைய வேலையை, சென்னை மாகாணத் தமிழர் சங்கம் போன்ற பெரிய சங்கங்கள் செய்ய மேற்கொள்ள வேண்டும்.

இவையன்றியும், இலங்கையிலிருந்த அமெரிக்கன் மிஷன் சங்கத்தாரின் சார்பாக *வீசகணிதம், நியாயசாஸ்திரம்* (தர்க்க நூல்), *வானசாத்திர* முதலிய நூல்களும் தமிழில் பல ஆண்டுகளுக்குமுன் அச்சிடப்பட்டன. அந்த நூல்களும் இப்போது கிடைப்பது அருமை.

*செந்தமிழ்ச் செல்வி,* சிலம்பு 15, பரல் 6, 1937

# நான் கண்ட பெருந்தமிழன்

தமிழறிஞர் உலகத்திலே, பல்லாவரம் என்றால் மறைமலை அடிகள் என்றும் மறைமலை அடிகள் என்றால் பல்லாவரம் என்றும் எண்ணம் உண்டாவது மரபு. பல்லாவரத்திற்குச் சென்று மறைமலை அடிகளைக் கண்டு அவருடன் அளவளாவித் திரும்பி வரும்போது, ஒரு புனிதமான இடத்திற்கு யாத்திரை சென்று வழிபட்டு மன அமைதியோடு திரும்பி வருவதுபோன்ற உணர்ச்சி எனக்கு ஏற்படுவது உண்டு. இதன் காரணம் யாது? சமயப் பற்றா? அன்று. சாத்திரப் பற்றா? அதுவும் அன்று. பின்னை என்னை எனின், அப்பெரியாரிடத்தில், அவரது பேச்சிலும் எழுத்திலும் காணப்பட்ட தூய தனித்தமிழ்! கலப்பற்ற நல்ல இனிய தமிழ்! அடிகளார் பேசும் மெல்லிய இனிய அழகிய தமிழைக் கேட்கும்போது, அவரது கலப்பற்ற தூயதமிழைச் செவிமடுக்கும்போது, உள்ளத்தில் வியப்பும் மகிழ்ச்சியும் உணர்ச்சியும் பெருகும். நாமும் தனித்தமிழ் பேசவேண்டும் என்னும் ஊக்கம் பிறக்கும். அடிகளார் இயற்றிய நூல்களைப் படிக்குந்தோறும் இவ்வித உணர்ச்சிகளே உண்டாகின்றன. மறைமலையைக் கண்டு அளவளாவியது எனது வாழ்நாட்களில் ஐந்து தடவை மட்டுந்தான். (அடிகளார் சொற்பொழிவுகளைப் பலமுறை கேட்டு அவரது 'செந்தமிழால் செவி கழுவி' யுள்ளேன்.) ஒவ்வொரு தடவையும், அடிகளாரிடம் குடிகொண்டிருந்த தூய தனித்தமிழ், அவரிடம் பெருமதிப்புக் கொள்ளச் செய்தது. அவரைப்பற்றி நினைக்கும்போதெல்லாம், அடிகள் ஒரு பெருந்தமிழன் என்று என் உள்ளம் சொல்லிக் கொண்டது.

சில ஆண்டுகளுக்கு முன்னர், பல்லாவரத்தில், அடிகளார் மாளிகையில், பொதுநிலைக் கழக விழா நடைபெற்றது. அடிகளார் தலைமை தாங்கினார்கள். பல பேச்சாளர்களுள் திரு. மறை. திருநாவுக்கரசு அவர்களும் ஒருவர். திருநாவுக்கரசு அவர்கள், தமது சொற்பொழிவில், உரிமையோடு அடிகளாரைப்பற்றிச் சில கூறினார்கள். அவற்றில் "அடிகளார் மிக்க கெர்வமுடையவர்," என்பதும் ஒன்று. உடனே, தலைமை தாங்கிய அடிகளார் மலர்ந்த முகத்துடன் "கர்வம் என்று சொல்லாதே இறுமாப்பு என்று சொல்," என்று திருத்தி

னார்கள். தம்மைக் குறைகூறுவதாக இருந்தாலும் அதனைத் தூய தனித் தமிழிலே கூறவேண்டும் என்பது அத்தமிழ்ப் பெரியாரின் தனிமாண்பு. "பைந்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் பெருமான்" என்று ஒரு பெரியார் தமது வழிபடு கடவுளைப் பற்றிக் கூறியது அவ்வமயம் நினைவுக்கு வந்தது.

தனித்தமிழ் இயக்கத்தைத் தோற்றுவித்து, அதனைத் தமது வாழ்நாள் வரையில் பேச்சிலும் எழுத்திலும் வாழ்க்கையிலும் இடைவிடாது நிறைவேற்றிய பெருந்தமிழன் மறைமலையடிகளாரின் பருவுடல் மறைந்துவிட்டது. ஆனால், அவரது புகழுடம்பு தமிழ்நாடெங்கும் தமிழ்க் காற்றுடன் கலந்து வீசுகிறது. வாழ்க அவர் புகழ்.

மறைமலையடிகளின் அமைதியான தோற்றமும், இனிய குரலும், தனித்தமிழ்ப் பேச்சும் எமது மனத்தை விட்டகலா. அவரை நினைக்கும்போதெல்லாம் என் மனம், அடிகள் ஒரு பெருந்தமிழன் என்று கூறுகிறது.

*செந்தமிழ்ச் செல்வி,* சிலம்பு 25, 1950

# தமிழறிஞர் ச. முனிசாமிபிள்ளை அவர்கள் மறைவு

தென் ஆபிரிக்கா நெட்டால் நாட்டைச் சேர்ந்த டர்பன் நகரத்தில் வாழ்ந்திருந்த திரு. ச. முனிசாமி பிள்ளையவர்கள் மறைந்த செய்தியைக் கேட்டுப் பெரிதும் வருந்துகிறோம். தமிழறிஞராகிய பிள்ளையவர்கள், இலங்கையில் 1903இல் பிறந்தார். திரு. சங்கரன் பிள்ளை அவர்கள் இவர் தந்தையார். *விவேகபானு* பத்திராசிரியர் திரு. சி.வி. பிள்ளை அவர்களிடம் தமிழ் பயின்றார்.

டர்பன் நகரத்திலே வாழ்ந்துவரும் தமிழர்களுக்காகச் *செந்தமிழ்ச் செல்வன், பிரசமலர், தமிழ்மணி* என்னும் இதழ்களின் ஆசிரியராக இருந்தார். அந்நகரத்தில் உள்ள இந்து தமிழ்ப் பாடசாலையின் அதிபராகவும் இருந்தார். தேசீய கவி சுப்பிரமணிய பாரதியாரைப் பாராட்டி விழாக்கள் கொண்டாடி, டர்பன் தமிழருக்குப் பாரதியாரை அறிமுகப்படுத்தி வைத்தார். பர்மா, மலாயா, இந்தியா, இலங்கை முதலிய நாடுகளில் உள்ள தமிழ் இதழ்களில் கட்டுரைகளை எழுதிவந்தார்.

*திருமண மந்திரம், சரஸ்வதி, உலகெலாம், பாலர் பாடல், வில்விதுரன் கொல், பகைவரும் நண்பரும்* முதலிய நூல்களை எழுதினார். ஷேக்ஸ்பியர், டால்ஸ்டாய், தாகூர் முதலிய பேராசிரியர்களின் நூல்கள் சிலவற்றை மொழிபெயர்த்தார்.

தமிழறிஞர் முனிசாமி பிள்ளையவர்கள், தமது 53ஆவது அகவையில், 1956ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 10ஆம் நாள் டர்பன் நகரில் காலமானார். அவர் ஆன்மா அமைதியுறுக.

*செந்தமிழ்ச் செல்வி,* சிலம்பு 31, 1956–57

# செயற்கரிய செய்த பெரியார்

பெரியார் என்னும் கேள்விக்கு விளக்கம் கூறுகிற திருவள்ளுவர், "செயற்கரிய செய்வார் பெரியர்" என்று கூறுகிறார். எனவே, செய்வதற்கு அருமையான செயல்களைச் செய்தவர்கள் பெரியர் ஆவர். எந்தத் துறையாக இருந்தாலும் அந்தத் துறையில் அருமையான செயல்களைச் செய்த பெரியார்களைப் பாராட்டிப் போற்ற வேண்டுவது மனிதத் தன்மையுடைய மக்களின் கடமையாகும்.

ஜீவபந்து டி.எஸ். ஸ்ரீபால் அவர்கள் செயற்கரிய செயலைச் செய்த பெரியார் ஆவார் என்பதில் ஐயமில்லை. சமயத்தின் பேரால் மூடநம்பிக்கையோடு மக்கள் செய்து வந்த கோழி, ஆடு, மாடு, பன்றி முதலியனவற்றைப் பலியிடுதல் என்னும் கொடிய செயலை நிறுத்தியவர் டி.எஸ். ஸ்ரீபால் அவர்கள். பாமர மக்களிடத்தில் ஒரு பழக்கம் ஏற்பட்டுவிடுமானால் அதனை நிறுத்துவது முடியாத காரியம். அவ்வழக்கம் பல நூற்றாண்டுகளாக நிலைபெற்று விடுமானால் அவ்வழக்கத்தைக் களைவது அருமையாகும். அந்த வழக்கம் சமயம், தெய்வங்களுடன் தொடர்புடையதாக அமைந்துவிடுமானால், அவ்வழக்கத்தை நிறுத்துவது பெருங்கஷ்டமாகும். மதச் சார்பாகவும் தெய்வச் சார்பாகவும் பல நூற்றாண்டுகளாக வேரூன்றிக் கிடந்த கொடிய பழக்கந்தான் உயிர்ப்பலி முதல் என்னும் கொடுஞ்செயல்.

பல ஆண்டுகளாக உயிர்ப்பலி நிறுத்தம் செய்யும் பிரசாரத்தைச் சென்னை ஜீவரக்ஷகப் பிரசார சபையின் ஆதரவில் செய்து பலியிடுவதைக் கைவிடுமாறு செய்து, அதனை அறவே நிறுத்திய பெருமை டி.எஸ். ஸ்ரீபால் அவர்களுக்கே உரியது. திரு. ஸ்ரீபால் அவர்கள் ஊர்ஊராகச் சென்று பலி நிறுத்தப் பிரசாரம் செய்து கடைசியாக அதில் வெற்றி பெற்றார். தக்கவர்களின் உதவியைக் கொண்டு, உயிர்ப் பலியிடுவது சட்டப்படிக் குற்றமாகும் என்னும் சட்டத்தையும் நிறைவேற்றி வைத்தார் திரு. ஸ்ரீபால் அவர்கள். இது அவருடைய குன்றாத ஊக்கத்தினாலும் முயற்சியினாலும் ஏற்பட்ட அருஞ் செயலாகும்.

ஜீவபந்து ஶ்ரீபால் அவர்கள் செய்துள்ள பல தொண்டு களில் அவர் பலி நிறுத்தம் செய்த தொண்டு முதன்மையானது; போற்றத் தக்கது; பெருமைப்படத் தக்கது. செயற்கரிய செய்த இப்பெரியாருக்கு மணிவிழாக் கொண்டாடுவது தகுதியும் முறையும் கடமையும் ஆகும். அவரைப் பாராட்டி அவருடைய சேவையைத் தெரிவிக்கிறது மணிவிழா நினைவு மலர். இம் மலரில் அவருடைய அரும்பெருந் தொண்டுகளைப் படித்து மகிழலாம்.

ஜீவபந்து டி.எஸ். ஶ்ரீபால் அவர்கள் மணிவிழா இனிது நிறைவேறுக. மணிவிழாத் தலைவர் நெடுங்காலம் வாழ்வாராக.

*டி.எஸ். ஶ்ரீபால் மணிவிழா மலர்,* **1959**

# உயிர்ப்பலி நீக்கிய உத்தமர்

திருவொற்றியூர் 'வட்டப்பாறை நாச்சியார்' என்னும் காளி நெடுங்காலமாக எருமைக்கடாவைப் பலிகொண்டு வந்தாள். இக்கொடுஞ் செயலைக் கண்டு மனம் வருந்திய திரு. டி.எஸ். ஸ்ரீபால் அவர்கள் 18 ஆண்டுகளுக்கு முன்னே, 1936ஆம் ஆண்டில் இந்த பலியை நிறுத்துவதற்காக இக்கோயிலின் முன்னர் உண்ணாவிரதம் இருந்தார். 'பலியிடுவதை நிறுத்துங்கள்; பலியிட விரும்பினால் என்னை பலிகொடுங்கள் எருமைக் கடாவைப் பலியிடாதீர்கள்' என்று அவர் உறுதியாகக் கூறினார். அப்போது கோயில் தர்மகர்த்தர் வந்து அடுத்த ஆண்டிலிருந்து பலியிடுவதை நிறுத்திவிடுவதாகவும் உண்ணா விரதத்தை நிறுத்திக் கொள்ளும்படியாகவும் கேட்டுக் கொண்டார். அதன்படியே ஸ்ரீபால் அவர்கள் உண்ணா விரதத்தை நிறுத்திக்கொண்டார்.

ஆனால் தர்மகர்த்தர் கொடுத்த வாக்குறுதியைத் தவறிவிட்டார். பலியைத் தொடர்ந்து செய்தார். திரு. ஸ்ரீபால் அவர்கள் வாளா இருக்கவில்லை. பலியை நிறுத்த வேண்டு மென்று கிளர்ச்சி செய்து பொது ஜனங்களின் ஆதரவைத் தேடினார். ஸ்ரீபால் அவர்களுக்குப் பொது ஜனங்களின் ஆதரவு அதிகமாகக் கிடைத்தது. திருவாளர்கள் திரு. வி. கலியாண சுந்தர முதலியார், கோ. வடிவேல் செட்டியார், சுவாமி அருணகிரிநாதர், டி. சண்முகம் பிள்ளை, சிவஞான கிராமணியார் முதலிய பல பெரியார்கள் ஸ்ரீபால் அவர்களுக்கு ஆதரவு அளித்தார்கள். ஆகவே, கோயில் தர்மகர்த்தர் எருமைக்கடா பலியை நிறுத்த வேண்டியதாயிற்று. 1940ஆம் ஆண்டு (விக்கிரம ஆண்டு) வட்டப்பாறை நாச்சியார் என்னும் காளிக்கு எருமைக்கடா பலி நிறுத்தப்பட்டது. திரு. ஸ்ரீபால் அவர்கள் கொண்ட முயற்சி நிறைவேறிற்று. நெடுங்காலமாக நடைபெற்று வந்த எருமைக்கடா பலி இப்பொழுது நடைபெறுவதில்லை.

திரு. டி.எஸ். ஸ்ரீபால் அவர்கள் திருவொற்றியூரில் மட்டுந்தான் பலி நிறுத்தம் செய்தார் என்று கருத வேண்டாம். தமிழ்நாட்டில் பல வட்டங்களில் (District) பற்பல ஊர்களில் நடைபெற்று வந்த ஆடு, மாடு, கோழி, பன்றி முதலிய

உயிர்ப்பலிகளை அடியோடு நிறுத்தியிருக்கின்றார். அவர் பலி நிறுத்தம் செய்த ஊர்களின் பெயரையும் நிறுத்திய முறை களையும் எழுதினால் இடங்கொள்ளா. பரம்பரைபரம்பரை யாக பல நூற்றாண்டுகளாக நடைபெற்று வருகிற பழக்கத்தை நிறுத்துவது எளிதன்று. தொன்றுதொட்டு நடைபெற்று வந்த பழக்கத்தைத் தடுத்து நிறுத்துவதென்றால் அது செயற்கரிய செயலாகும். 'செயற்கரிய செய்வார் பெரியார்' என்கிறபடி செயற்கரிய செயலை - பலிநிறுத்தத்தை ஸ்ரீபால் அவர்கள் செய்து வெற்றிகண்டார். இவரது அரும்பெருந் தொண்டு களைப் பாராட்டி, தென்னிந்திய ஜீவரக்ஷக பிரசார சபையினர் இவருக்கு 'ஜீவபந்து' என்னும் சிறப்புப்பெயர் சூட்டியது போற்றுதற்குரியது.

ஜீவபந்து டி.எஸ். ஸ்ரீபால் அவர்களின் முயற்சியினால் பலி நிறுத்தச் சட்டம் சட்டசபையில் கொண்டுவரப்பட்டு சட்டமாக்கப்பட்டுள்ளது. எளிதில் செய்ய முடியாத, செயற்கரிய செயல்களைச் செய்து வெற்றிபெற்றவர் மிகச் சிலரே. அச்சிலரில் நமது ஸ்ரீபால் ஒருவராவார்.

*டி.எஸ். ஸ்ரீபால் மணிவிழா மலர்,* 1959

இக்கட்டுரை ஜய ஆண்டு, சித்திரைத் திங்கள் வெளியான *அருளாட்சி* என்னும் இதழில் இடம்பெற்றது. இவ்விதழ் நேரிடையான பார்வைக்குக் கிடைக்கவில்லை. *டி.எஸ். ஸ்ரீபாலின் மணிவிழா மலரில்* கட்டுரையின் சுருக்கம் இடம் பெற்றிருந்தது. அது அப்படியே இங்கு தரப்பட்டுள்ளது.

# தத்துவக்கலைப் பேராசிரியர் சக்கரவர்த்தி நயினார்

தத்துவ சாத்திரங்களை நன்கறிந்தவரும், ஜைன சமய சித்தாந்தத்தைக் கரை கண்டவரும், ஆங்கிலம், சமஸ்கிருதம், பிராகிருதம், தமிழ் முதலிய மொழிகளைப் பயின்றவரும் பாரத நாட்டிலுள்ள ஜைனத் தலைவர்களில் ஒருவரும் ஆக விளங்கிய பேராசிரியர் சக்கரவர்த்தி நயினார் அவர்கள் 12-2-60இல் காலமான செய்தி கேட்டு அறிஞர் உலகம் மனம் கலங்கு கின்றது. பேராசிரியர் சக்கரவர்த்தி நயினார் அவர்கள் சென்னை இராயப்பேட்டையில் புதுப்பேட்டைத் தோட்டத் தெருவில் வாழ்ந்திருந்தார். காலஞ்சென்ற தமிழ்ப் பெரியார் திரு.வி.க. அவர்களின் உற்ற நண்பர். திரு.வி.க. அவர்களுக்கு ஜைன சமய நுட்பங்களை விளக்கிக் கூறிய பெரியார். பேராசிரியர் சக்கரவர்த்தி நயினார் அவர்களின் பிரிவு ஈடு செய்ய முடியாத பெரிய இழப்பு ஆகும்.

தென் ஆர்க்காடு மாவட்டத்தில் திண்டிவனம் தாலுக் காவில் வீடூர் என்னும் ஊர் ஜைனக் கிராமம் ஆகும். இவ்வூரில் அப்பாசாமி நயினார் என்பவர் அச்சம்மாள் என்னும் அம்மை யாரை மணந்து இல்லறம் நடத்தி வந்தார். இவர்களுக்கு இரண்டாவது மகனாய்ப் பிறந்தவர் நமது பேராசிரியர் சக்கரவர்த்தி நயினார் அவர்கள். விக்கிரம வருஷம் வைகாசி மாதம் 6ந் தேதிக்குச் சரியான 17-5-1880இல் திங்கட்கிழமை காலை 10 மணிக்கு மேல் திரு. சக்கரவர்த்தி நயினார் அவர்கள் பிறந்தார்கள்.

தந்தையாராகிய அப்பாசாமி நயினார் அவர்கள் தமிழ் மொழியிலும் வடமொழியிலும் நிறைந்த புலமையுள்ளவர்கள். ஜைன சமய நூல்களை நன்கு பயின்றவர். *சீவக சிந்தாமணி, சூளாமணி, மேருமந்தர புராணம், யசோதர காவியம்* முதலிய காவியங்களுக்கு விரிவுரை நிகழ்த்துவதில் வல்லவர். *மேருமந்தர புராணம்* என்னும் ஜைன காவியத்துக்கு இவர்பால் பயின்ற ஒரு தலைசிறந்த மாணவரால் உரை எழுதப்பட்டதென்பதை யாவரும் அறிவர்.

திரு. சக்கரவர்த்தி நயினார் குழந்தைப் பருவத்தைத் தமது வீடூர் கிராமத்தில் கழித்தார். இளமையிலேயே கல்வி கற்பதில்

ஊக்கம் உள்ளவராக இருந்தார். ஆகவே, கல்வி கற்பதற்காகச் சென்னைக்கு வந்து இராயப்பேட்டையில் தங்கினார். இராயப்பேட்டை வெஸ்லி உயர்நிலைப் பள்ளியில் படித்துத் தேறிய பின்னர் வெஸ்லி காலேஜில் F.A. படித்துத் தேறினார். பிறகு சென்னைக் கிறிஸ்துவக் கல்லூரியில் படித்து 1902ஆம் ஆண்டு B.A. பரீட்ஷையில் தேர்ந்தார். சென்னை மாகாணத்திலே தத்துவ சாஸ்திரக் கலையில் முதல்வராகத் தேர்ச்சி பெற்று மில்லர் தங்கப் பதக்கத்தைப் பரிசு பெற்றார். 1905ஆம் ஆண்டு M.A. பரீட்க்ஷையிலும், 1909ஆம் ஆண்டு L.T. பரீட்ஷையிலும் தேர்ந்தார்.

1905ஆம் ஆண்டில், வெஸ்லியின் மிஷன் பெண்கள் உயர்தரப் பாடசாலையில் ஆசிரியராக ஓராண்டு பணியாற்றினார். 1906ஆம் ஆண்டு அகௌண்டெண்டு ஜனரல் அலுவலகத்தில் கணக்காளராக அலுவல் செய்தார். இந்த அலுவலில் இவர் அதிகக் காலம் இருக்கவில்லை. சென்னை மாகாணக் கல்லூரியில் தத்துவக்கலையில் உதவிப் பேராசிரியராக ஏற்படுத்தப்பட்டு 1906 முதல் 1909 வரையில் பணியாற்றினார். பிறகு கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் 1913 வரையில் தத்துவப் பேராசிரியராக இருந்தார். பின்னர் இராசமகேந்திரபுரம் கலைக் கல்லூரியில் 1917 வரையில் பணியாற்றினார். பின்னர் மீண்டும் சென்னை மாகாணக் கல்லூரியில் தத்துவக்கலைத் தலைமைப் பேராசிரியராக நியமிக்கப்பட்டு 1929 வரையில் பணியாற்றினார். 1922இல் இந்தியக் கல்விச் சேவை என்னும் I.E.S. ஆனார். பின்னர் இராசமகேந்திரபுரம் கலைக் கல்லூரியின் முதல்வராக (பிரின்ஸ்பால்) நியமிக்கப்பட்டு 1929 முதல் 1932 வரையில் பணியாற்றினார். அதன் பின்னர் 1932 முதல் 1938 வரையில் கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் முதல்வராகச் சேவை செய்தார்.

இவ்வாறு முப்பத்திரண்டு ஆண்டுகளாகக் கல்வித் துறையில் சிறந்த பணி செய்து 1938ஆம் ஆண்டில் ஓய்வு பெற்றார். இந்த ஆண்டிலேயே இவருக்கு இராவ்பகதூர் பட்டம் அளித்தனர்.

ஓய்வு பெற்ற பிறகும் இவர் பல கல்வி நிலையங்களில் தொடர்புகொண்டு கல்வித்தொண்டு செய்துகொண்டிருந்தார். சென்னைப் பல்கலைக்கழகம், ஆந்திரப் பல்கலைக்கழகம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சென்னை முத்தியாலுபேட்டை உயர்நிலைப்பள்ளி, கோபாலபுரம் பெண்கள் உயர்நிலைப்பள்ளி, சௌகார்பேட்டை ஜெயின் உயர்நிலைப்பள்ளி இவைகளின் நிர்வாக அங்கத்தினராக இருந்தார். திண்டிவனம் ஜெயின் ஹாஸ்டல் தலைவராகவும் தென் இந்திய ஜீவரக்ஷக சபையின் முக்கிய உறுப்பினராகவும் இருந்தார்.

*மேருமந்தர புராணத்தினை* உரையுடன் முதன்முதல் பதிப்பித்தவர் இவரே. அன்றியும் *நீலகேசி* என்னும் நூலுக்குச் சமயதிவாகரமா முனிவர் எழுதிய உரையைப் பதிப்பித்ததோடு அதற்கு ஆங்கிலத்தில் சிறந்த முகவுரையும் எழுதியிருக்கிறார். திருக்குறளுக்கு ஆங்கிலத்தில் சிறந்த உரை எழுதியிருக்கிறார். ஜைன சமயத் தத்துவ நூல்களாகிய *பஞ்சாஸ்திகாயம், சமயசாரம்* என்னும் நூல்களுக்கு ஆங்கில விளக்கம் எழுதி வெளியிட்டிருக்கிறார். இராமகிருஷ்ண மிஷன் வெளியிட்டுள்ள *தொகை நூலில்* ஜைன சமயத்தைப்பற்றி சக்கரவர்த்தி நயினார் அவர்கள் எழுதிய கட்டுரை சிறந்ததாகும். *The Religion of Ahimsa* என்று ஆங்கிலத்தில் எழுதிய நூல் ஜைன சமயத்தை யறிவதற்குச் சிறந்த நூலாகும்.

நமது பாரத சர்க்கார் கல்வி இலாகா சார்பில் இந்தியத் தத்துவங்களைக் கொண்ட ஒரு நூல் வெளியிட ஏற்பாடு செய்தார்கள். அந்நூலில் ஜைன தத்துவங்களைப் பற்றி எழுதப் பேராசிரியர் அ. சக்கரவர்த்தி நயினார் அவர்களே தகுதி யுடையவர்கள் என முடிவு செய்து மத்திய சர்க்கார் கல்வி மந்திரி அபுல்கலாம் ஆசாத் அவர்கள் நமது பேராசிரியர் அவர்களை 'ஜைன தத்துவம்' என்ற கட்டுரை எழுதுமாறு வேண்டிக்கொண்டார். அவ்வாறே அனுப்பினார். அக்கட்டுரை யைப் படித்த அபுல்கலாம் ஆசாத் அவர்களும் மற்றும் பலரும் பேராசிரியரைப் பலபடப் புகழ்ந்து கட்டுரையைப் பாராட்டி யுள்ளார்கள். இதுபோன்றே மேல்நாடுகளிலும், குறிப்பாக ஜெர்மனியிலும் உள்ள தத்துவ மேதாவிகள் பேராசிரியரின் நூல்களைப் படித்துப் பாராட்டிக் கடிதம் எழுதியுள்ளார்கள்.

சென்னை மாகாணக் கல்லூரியிலும், கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியிலும் இராசமகேந்திரபுரத்துக் கல்லூரி யிலும் தலைமைப் பேராசிரியராக இருந்து கல்வித்தொண்டு புரிந்த சக்கரவர்த்தி நயினார் அவர்களிடம் படித்த பல மாணவர்கள் அமைச்சராகவும் உயர்தர உத்தியோகஸ்தராகவும் திகழ்கிறார்கள்.

தமது 79 ஆவது வயதில் 12-2-60 இல் பேராசிரியர் அவர்கள் இராயப்பேட்டையில் தமது இல்லத்தில் காலமானார். அவர் ஆன்மா சாந்தியடைவதாக.

*நல்லறம்,* 15–3–60

# எடுத்த செயலை இனிது முடிப்பவர்

கடவுளுக்குத் தொண்டு செய்வதைவிட மக்களுக்குத் தொண்டு செய்வது சிறந்த நற்றொண்டாகும். மக்கட்குத் தொண்டு இயற்றும் வாய்ப்பு எல்லோருக்கும் வாய்ப்பது இல்லை. காஞ்சி மணிமொழியார் மக்களுக்குத் தொண்டு செய்யும் வாய்ப்புப் பெற்றார். அந்த நல்ல வாய்ப்பினை நல்ல முறையில் பயன்படுத்தித் தொண்டாற்றினார். அவருடைய வாழ்க்கை தமிழரின் பொதுநலத் தொண்டாக அமைந் திருந்தது. பழகுவதற்கு இனியவர். ஊக்கமும் உறுதியும் உடையவர். எடுத்துக்கொண்ட செயலை இனிது முடிக்கும் இயல்பினர். பொதுப்பணி புரிவதில் ஆர்வமும் சுறுசுறுப்பும் உடையவர். இப்பெரியாருடன் பழகும் நல்வாய்ப்பு எனக்குப் பல ஆண்டுகளாகக் கிடைத்துவருகிறது. மணிமொழியார் நல்லாசிரியராகவும் திகழ்ந்தார். சொற்பொழிவுகள் பல செய்து சீர்திருத்தக் கருத்துக்களைப் பரப்பினார். சோர்ந்து கிடந்த சமூகத்தை விழிப்படையச் செய்ய நீதிக்கட்சி ஏற்பட்ட காலத்தில், காஞ்சி மணிமொழியார் அக்கட்சியின் இயக்கத்தில் ஈடுபட்டு உழைத்தார். அரசாங்கத்தார் கட்டாயமாக இந்தி மொழியைத் தமிழ்நாட்டில் திணித்தபோது (1938ல்) நாட்டில் ஏற்பட்ட இந்தி எதிர்ப்பு இயக்கத்தில் மணிமொழியார் பெரும்பங்கு கொண்டார். 1949ம் ஆண்டில் ஈ.வெ.ரா. பெரியார் அவர்கள் சென்னையில் நடத்திய திருவள்ளுவர் மாநாட்டின் செயலாளராக இருந்து காஞ்சி மணிமொழியார் திறம்படச் செயலாற்றினார். செங்குந்த மகாஜன சங்கத்தின் பிரசாரகராகவும், *செங்குந்த மித்திரன்* பத்திரிகையின் ஆசிரியராகவும் இருந்து சமூகத்திற்குப் பெருந்தொண்டாற்றி யுள்ளார். ஈ.வெ.ரா. பெரியாரின் சுயமரியாதை இயக்கத்திலும் ஈடுபட்டிருந்தார். இவ்வாறு பொதுத்துறைகள் பலவற்றில் பலகாலம் பெரும் பணிசெய்து அறுபது ஆண்டை அடைந் துள்ள காஞ்சி மணிமொழியாருக்கு மணிவிழா நடத்துவது மாண்புடையது. இப்பெருந்தகையாருக்கு மணிவிழா நடத்து வதில் எனக்குப் பெருமகிழ்ச்சியுண்டு. தக்கார் ஒருவருக்குப் பாராட்டு விழா நடத்தி அவருக்கு நமது நன்றியைத் தெரிவிக்க வேண்டுவது நமது கடமையல்லவா? மணிவிழா நிறைவுறுக. மணிமொழியார் வாழ்க!

*காஞ்சி மணிமொழியார் மணி விழா மலர்,* சென்னை 17–5–1960

# தமிழறிஞர் த.வே. முருகேசனார்

தமிழ் அறிஞர் திரு. த.வே. முருகேசனார் அவர்கட்கு மணி விழாக் கொண்டாடுவது பற்றி மட்டிலா மகிழ்ச்சியடை கின்றேன். திரு. முருகேசனார் அவர்கள் நாற்பது ஆண்டு களாகத் தமிழ்த் தொண்டும், பொதுஜனத் தொண்டும் செய்து வருகிறார். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னுங் குறிக்கோளுடன் தொண்டு புரிந்து வருகிற ஒரு நல்லவரைப் பாராட்டுவது கடமையும் முறைமையுமாகும். தொழிலாளரின் நன்மைக்காகவும், தாய்மொழிக்காகவும் இப்பெரியார் தொண்டு செய்து வருவதை உலகம் அறியும். தொழிலாளர் களிடையே தமிழ்க் கல்வியைப் பரப்புவதற்கு இவர் அரும்பாடுபட்டு வருகிறார். தொழிலாளர்கள் நாட்டின் முன்னேற்றத்துக்கு முக்கியமானவர்கள். அவர்கள் கல்வி கற்று அறிவுள்ளவர்களாக இருக்கவேண்டியது இன்றியமையாத தாகும். அவர்களுக்குக் கல்வியைப் புகட்டுவதற்கு திரு. முருகேசனார் அவர்கள் பயன் கருதாமல் பல்லாண்டுகளாகப் பாடுபட்டு வருவதோடு, சென்னைக் கல்விச் சங்கத்தை நிறுவி தொண்டாற்றி வருகிறார். இந்தப் பொதுநலத் தொண்டரை, நல்லறிஞரைப் பாராட்டுவது மிகவும் பொருத்தமாகும். அறிஞர் முருகேசனாரின் நற்றொண்டுகளை மனமுவந்து பாராட்டுகிறேன் - வாழ்த்துகிறேன். இவ்வறிஞர் எல்லா நலன்களையும் பெற்றுப் பல்லாண்டு வாழ்ந்து மேன்மேலும் இந்நல்ல தொண்டுகளைத் தொடர்ந்து செய்வதற்கு இறைவன் திருவருள் புரியுமாறு இறைஞ்சுகின்றேன். வாழ்க முருகேசனார்! வாழ்க கல்விச் சங்கம்!!

*த.வே. முருகேசனார் மணிவிழா மலர்,* சென்னைக் கல்விச் சங்கம், 1964

# முத்தமிழ் வள்ளல்

தமிழ்ச் சமுதாயத்திலே நாட்டுக்கோட்டை நகரத்தாருக்கு முக்கிய இடம் உண்டு. தொன்று தொட்டுத் தமக்கென ஒரு நாகரிகமும் பண்பாடும் படைத்துக்கொண்டு வாழ்ந்து வருகிற தமிழ்ச் சமுதாயத்திலே அன்று தொட்டு இன்று வரையும் நாட்டுக்கோட்டை நகரத்தார் ஒரு சிறந்த அங்கமாக இருந்து வருகிறார்கள். இருந்து வருவதுமட்டுமல்ல, தொல்காப்பியர் காலமுதல் இன்றளவும் இந்தச் சமூகத்தார் தமிழர் நாகரிகம், பண்பாடு, கலை முதலியவற்றைப் போற்றிப் பாதுகாத்து வருகிறார்கள். பழைய பண்பாடுகளைப் போற்றி வருவது நகரத்தார்க்குரிய சிறந்த இயல்பாக இருந்து வருகிறது. இதற்குப் பல சான்றுகளைக் காட்டலாம். ஆனால் இப்போது அதுபற்றி ஆராய வேண்டுவதில்லை. நகரத்தாரின் பண்பாடுகளை ஆராய்வதற்கென்றே அமெரிக்காவிலிருந்து ஒருவர் வந்திருப்ப தாக எனது நண்பர் திரு. 'சோமலெ' அவர்கள் கூறினார்கள்.

காடுகளிலும் மலைகளிலும் ஒதுங்கி வாழும் மக்களைப் பற்றி ஆராய்ச்சிக்காரர்கள் ஆராய்வது உண்டு. ஆனால், நாகரிகமும் நற்பண்பும் பெற்று செல்வம் படைத்து நல்வாழ்வு வாழ்கிற ஒரு முக்கிய சமுதாயத்தைப்பற்றி ஆராய்வதற்கென்று மேல்நாட்டிலிருந்து ஒரு ஆராய்ச்சிக்காரர் வந்திருக்கிறார் என்றால் அது நகரத்தாரிடம் ஏதோ தனிப் பண்பு இருக்கிறது என்பதைச் சுட்டுகிறதல்லவா?

நாட்டுக்கோட்டை நகரத்தார் அந்தந்தக் காலங்களுக் கேற்பவும் சூழ்நிலைகளுக்கேற்பவும் அந்தந்தத் தேவைகளுக்கு ஏற்பவும் தமிழ்நாட்டிலே நல்லறங்களைச் செய்து வந்திருக்கி றார்கள் என்பதை வரலாற்றை அறிந்தவர் அறிந்திருக்கிறார்கள். நகரத்துப் பெரியார்கள் காலந்தோறுஞ் செய்துள்ள அறச் செயல்களை எழுதப் புகுந்தால் அது பெரியதோர் விரிவுரை யாக நீண்டுவிடும். ஆனதுபற்றி காலஞ்சென்ற கலைவள்ளல், செட்டிநாட்டரசர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் தமிழகத்துக்குச் செய்துள்ள கலைத் தொண்டுகளை மட்டும் நினைவுகூர்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

செட்டி நாட்டரசர் அண்ணாமலைப் பெருமானடிகள், முத்தமிழ் வள்ளலாகத் திகழ்ந்து அம்முத்தமிழ் என்றென்றும்

வளர்ந்தோங்குவதற்கு வழி வகுத்துச் சென்றார்கள். இவ்வரும் பெருந்தொண்டுகளைச் செய்து மறைந்த அப்பெரியாரின் புகழ் உடம்பு என்றும் அழியாது. அவர் தமிழகத்தில் அமரராக விளங்குகின்றார்.

இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்னும் முத்தமிழை, தொன்றுதொட்டு வளர்த்து வந்தனர் தமிழ்ப் பெரியோர். முத்தமிழை வளர்ப்பது தமிழ்ப் பண்பாட்டை வளர்ப்பதற்கொப்பாகும். ஏனென்றால், தமிழரின் கலை, நாகரிகம் முதலிய பண்பாடுகள் இந்த முத்தமிழிலே ஊடுருவி யுள்ளன. அதனால்தான் பழங்காலத்திலிருந்த சேர சோழ பாண்டியர்களும் அவர்கள் காலத்துக்குப் பின்னர் ஆண்ட குறுநில மன்னர்களும் முத்தமிழ்க் கலைகளைப் போற்றிப் பாதுகாத்து வந்தனர்.

பிற்காலத்திலே தமிழ் மன்னர்கள் மறைந்து குறுநில வேந்தரும்போய் தமிழகம் அயல் நாட்டவருக்கு அரசியலில் அடிமைப்பட்டுக் கிடந்த காலத்திலே, முத்தமிழ் போற்றுவார் இன்றி அல்லல்பட்ட நேரத்திலே, வாடிக் கிடக்கும் பயிருக்குக் கார் மேகம் மழை பெய்தது போல், முத்தமிழ் வள்ளல் அண்ணாமலைப் பெருமானடிகள் தோன்றி முத்தமிழ்க் கலைக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தார்கள்.

முத்தமிழ்க் கலைகளில் ஒன்றான இயற்றமிழ்க்கலை காலந்தோறும் வளர்ந்துகொண்டே இருக்கும் இயல்பினை யுடையது. ஆனால் அதைத் தகுந்த முறையில் போற்றுவா ரின்றி இருந்தபோது, நமது செட்டி நாட்டரசர் இக்கலை வளர்ந்தோங்குவதற்கு வழிகோலினார். அண்ணாமலைச் செட்டியாரவர்கள் அண்ணாமலை நகரிலே அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தைப் புதுமையாக நிறுவி இயற்றமிழ்க் கலைகள் வளர்வதற்கு ஆக்கம் அளித்துள்ளார்கள். அவர்கள் அமைத்த அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தமிழ்ப் பல்கலைக்கழகம் என்னும் பெயருடன் விளங்குகிறது.

சென்னைப் பல்கலைக்கழகம் தமிழ்நாட்டின் பல்கலைக் கழகமல்லவா என்று சிலர் கேட்கக்கூடும். சென்னைப் பல்கலைக்கழகம் பாரத நாட்டின் பழைய பல்கலைக் கழகங்களில் ஒன்றாக இருந்தும், உலகப் புகழ் பெற்ற பல்கலைக்கழகமாக இருந்தும் அது தமிழ்ப் பல்கலைக்கழகம் என்னும் பெயரைப் பெறவில்லை. அண்ணாமலைப் பல்கலைக்கழகம் ஒன்றே தமிழ்ப் பல்கலைக்கழகம் என்னும் சிறப்புப் பெயர் பெற்று விளங்குகிறது. 'தமிழ்ப் பல்கலைக் கழகம்' என்று தமிழர் ஆர்வத்தோடு, பெருமையோடு செம்மாந்து இறுமாந்து பேசும் உயர்நிலையைப் பெற்றுள்ளது,

ப: ஆழமாகப் படித்து அறியும் ஆர்வம் அன்று இருந்தது. இன்று கல்வி உத்தியோகத்திற்காக என்றிருக்கிறது. எனவே மேம்போக்காகத்தான் கற்கிறார்கள். இது தவிர்க்க முடியாத குறை.

கே: *நன்னூல்,* நிகண்டு முதலியவற்றை மனம் செய்து படித்த காலத்திற்கும் இன்றைக்கும் வேறுபாடு இருக்கிறதா?

ப: இவற்றை மனனம் செய்வதால் பல சொற்களைக் கற்று தமிழில் நல்ல செய்யுள், கட்டுரை எழுத வாய்ப்பிருந்தது. இன்று அத்தகைய வாய்ப்பில்லை. தமிழில் புதுச்சொற்களை ஆக்குகிறார்கள். இது சில வேளைகளில் நன்கு அமையவும் கூடும். ஆனால் பழைய சொற்கள் இருக்கும்போதே புதிய சொற்களை ஆக்க வேண்டிய தேவையில்லை. அவற்றையே பயன்படுத்தலாம் என்பதும் என் கருத்து.

கே: தமிழார்வம் பெருகியிருக்கிற அளவுக்கு தமிழறிவு இன்று உண்மையிலேயே வளர்ந்திருக்கிறதா?

ப: தமிழறிவு ஓரளவுக்கு வளர்ந்திருப்பது உண்மை. அதற்கு உதாரணமாக தலை நகரில் நடந்த உலகத் தமிழ் மாநாட்டைக் குறிப்பிடலாம். இன்னும் பரவலாக வளர வேண்டும்.

கே: பழைய நூல்களுக்கு உரையாசிரியர்கள் உரை கண்டதற்கும் இக்காலத்தினர் சிலர் பழைய நூலுக்கு உரை காண்பதிலும் தராதரம் வேறுபடுவதாகக் கருதுகிறீர்களா?

ப: பழைய உரையாசிரியர்கள் இலக்கணமும் பொருளும் ஆழமாகத் தெரிவித்தார்கள். இன்று நிலை அப்படி இல்லை. படிக்கிற மாணவர்களுக்கு அவர்கள் தரத்திற்குச் சொல்லப் படுகிறது. நுனிப்புல் மேயும் பாங்கு தெரிகிறது.

கே: பழைய நூல்களைப் பதிப்பிப்பதில் தாங்கள் என்ன வரைமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று கருது கிறீர்கள்?

ப: நம்முடைய நாட்டுப் பாடல்கள், *தேசிங்கு ராஜன் கதை, யூசுப்கான் கதை, முத்துப்பட்டன் கதை கட்டபொம்மு கதை* ஆகியவற்றைச் சரித்திர ஆராய்ச்சியோடு பார்த்து பொருள் எழுதிப் பதிப்பிக்க வேண்டும். தமிழ் ஆராய்ச்சிக் கழகம் தக்கவர்களைக் கொண்டு இந்தப் பணியைச் செய்யலாம். இது வரையில் இந்த முயற்சியில் யாரும் ஈடுபடவில்லை.

கே: ஆராய்ச்சிப் பேரறிஞர் வையாபுரிப் பிள்ளையவர் களின் ஆராய்ச்சிகளைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

ப: அவர் என்னுடைய நல்ல நண்பர். பாடபேதங்களோடு பிழையின்றிப் புத்தகங்களை வெளியிட்டிருக்கிறார். இதற்கு உதாரணமாக *புறத்திரட்டு, சங்கஇலக்கியம்* போன்றவற்றைச் சொல்லலாம். ஆனால் ஒரு சரித்திர ஆராய்ச்சியாளர் என்ற

முறையில் அவர் எண்பது சதவிகிதம் தோல்வி கண்டிருக்கிறார் என்பது என் கருத்து. இதற்குக் காரணம் சரித்திர ஆராய்ச்சி செய்யும்போது அவர் தன்னை வக்கீலாக மாற்றிக் கொண்டது தான். ஒரு பொருளை எடுத்துக்கொண்டால் ஆராய்ச்சியாளன் அதற்குச் சாதக, பாதகமான இரண்டு பக்கத்து உண்மை களையும் பார்க்க வேண்டும். ஆனால் வையாபுரிப் பிள்ளை அப்படிச் செய்வதில்லை. ஒரு பக்கம் மட்டும் பார்த்து அதற்குத் தேவையான சான்றுகளை மட்டும் ஆராய்ந்து சொல்லுவார்.

*சிலப்பதிகாரத்தில்* பங்களர் என்ற பிரிவாரைப்பற்றிப் பேசப்படுகிறது. இவர்கள் சங்ககாலந்தொட்டு தமிழகத்தில் வாழ்ந்திருந்ததைப் பல சான்றுகள் மூலம் அறியலாம். வங்காளத்தைச் சேர்ந்தவர்களையே இப்படி பங்களர் என்று குறித்திருப்பதாக திரு. வையாபுரிப் பிள்ளையும் அவரைத் தொடர்ந்து திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியும் சொல்லி யிருக்கிறார்கள். அதை எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? ஒரு நீதிபதியின் நிலையில் இருந்து சரித்திர ஆராய்ச்சி செய்தல் வேண்டும்.

கே: ஆழ்ந்து நுணுகிக் கற்கும் முறை இன்று குன்றி வருவதாகக் கூறப்படுகிறதே, இது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

ப: கல்வியின் நோக்கம் பொருளாதார வாழ்க்கையைக் குறியாகக் கொண்டிருக்கிறது. எனவே அப்படித்தான் இருக்கும். வசதியுள்ளவர்கள் நுணுகிக் கற்கலாம். ஆனால் அவர்களும் செய்வதில்லை.

கே: இலக்கண முறைப்படி பேசவும், எழுதவும் இன்றைய தமிழ் கற்கும் மாணவர்களுக்கும், இலக்கிய கர்த்தாக்களுக்கும் ஏனையோருக்கும் என்ன அறிவுரை கூறுகிறீர்கள்,

ப: இதற்குத் தமிழில் அடிப்படை அறிவு அவசியம். மொழி வளர வேண்டுமென்றால் பிழையின்றி எழுதத்தான் வேண்டும். புதிய சொற்கள் வரும்போது அவை தமிழில் இல்லை யென்றால் ஏற்றுக்கொள்ளலாம். அப்படி ஏற்றுக் கொள்வது வளருகிற மொழிக்கு ஆக்கம் கொடுக்கும்.

கே: தங்களுடைய கல்வெட்டு ஆராய்ச்சி அனுபவங் களைப்பற்றிச் சொல்ல முடியுமா?

ப: தமிழில் சுமார் 50,000 கல்வெட்டுக்கள் வரை உள்ளன. இவற்றில் 5,000 கல்வெட்டுக்களை ஆராய்ந்து பதிப்பித்திருக் கிறார்கள்.

கி.மு. இரண்டாம் நூற்றாண்டுக்கும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்திய பிராமி எழுத்துக் கல்வெட்டுக்களைப் பற்றி விரிவாக ஆராய்ந்திருக்கிறேன். திருநெல்வேலியிலும் கொங்கு நாட்டிலும் இத்தகைய

கல்வெட்டுகள் காணப்படுகின்றன. என்னுடைய ஆராய்ச்சி முடிவுகளை வெளியிட வாய்ப்பில்லை. லாப நோக்கத்தோடு செயல்படும் பதிப்பகங்கள் மூலமாக இதை வெளியிட முடியாது. அரசாங்க ஆதரவுடன் செய்யலாம்.

தமிழ் வரலாற்றுக் கழகம் பாண்டியர் செப்பேடுகளை ஆராய்ந்து வெளியிட்ட நூலில் எனக்குப் பெரும் பங்கு உண்டு. முன்பே பதிப்பிக்கப்பட்ட செப்பேடுகள்தான் என்றாலும் முந்தைய வெளியீட்டில் இருந்த சில தவறுகளை நீக்கி வெளியிட முடிந்தது. 'இண்டையும்' என்று வருகிற ஒரு வார்த்தையை முந்தைய நூலில் 'இரண்டையும்' என்று கொண்டு வெளியிட்டிருந்தார்கள். இதற்குக் காரணம் அந்தச் சொல்லுக்குப் பொருள் தெரியாததுதான்! அந்த நாளில் அணியப்பட்ட ஒரு வகைத் தலமாலையைக் குறிக்கும் சொல் இது.

உதகையில் இருந்த 'எபிகிராபி' துறைக் காரியாலயத்தைப் பெங்களூருக்கு மாற்றி விட்டார்கள். இது மத்திய அமைச்சைச் சேர்ந்த காரியாலயம். எனவே நமது அரசு எதுவும் செய்ய முடியவில்லை. கல்வெட்டுக்களில் பெரும் பகுதி தமிழகத்தில் இருக்கிற காரணத்தால் இந்தத் துறை இங்கே இருப்பதுதான் நியாயம்.

கே: வரலாற்று ஆராய்ச்சி அனுபவங்களைப் பற்றி வாசகர்களுக்குச் சிறிது கூறலாமல்லவா?

ப: தமிழ் உரை நடை வளர்ச்சிக்கு கிறிஸ்தவர்கள் பெரும் பணியாற்றியிருக்கிறார்கள். அதை ஆராய்ந்து *கிறித்தவமும் தமிழும்* என்ற ஆராய்ச்சி நூல் எழுதியிருக்கிறேன். இதைப் போலவே பௌத்த ஜைன சமயங்களால் தமிழ் பெரும் பயன் பெற்றிருக்கிறது. இவற்றை ஆராய்ந்து *பௌத்தமும் தமிழும், சமணமும் தமிழும்* போன்ற நூல்களை எழுதியிருக்கிறேன். *மகேந்திரவர்மன். நரசிம்மவர்மன், மூன்றாம் நந்திவர்மன்* ஆகியவை பல்லவப் பேரரசர்களின் வரலாற்றைச் சொல்லும் நூல். இரண்டாம் நந்திவர்மன் பற்றியும் எழுதியிருக்கிறேன். இது இன்னும் அச்சாகவில்லை.

*மறைந்து போன தமிழ் நூல்கள்* என்ற தமிழாராய்ச்சி நூல் நல்ல பாராட்டைப் பெற்றிருக்கிறது. *இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம்* என்ற நூல் ஆடல் தெய்வம் நடராஜர் பற்றிய கலை நூல். *தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்* என்ற நூலில் தமிழர்களின் சிற்பம், கல்வெட்டு, ஓவியம், இசை போன்ற நுண்கலைகளைப்பற்றி விரிவாக எழுதியிருக்கிறேன்.

இன்னும் ஆராய்ச்சி செய்த கொண்டிருக்கிறேன். *ஆராய்ச்சி* என்ற தமிழ் ஏட்டில் என் கட்டுரைகளை வெளியிட்டு வருகிறேன்.

கே: தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவராக இருந்ததைப் பற்றி சொல்லக் கூடியது ஏதாவது உண்டா?

ப: செக், ரஷ்ய நாட்டு அறிஞர்களைச் சந்திக்கும் வாய்ப்பு அப்போது கிடைத்தது *ரஷ்ய - தமிழ் அகராதி* வெளியிட என்னாலான உதவிகளைச் செய்தேன். இதைத் தவிரக் குறிப்பிட்டுச் சொல்ல ஒன்றுமில்லை.

கே: *தீபம்* பற்றித் தங்கள் கருத்து என்ன?

ப: ஆசிரியர் நா. பா. நன்கு தமிழறிந்தவர். இலக்கியப் பத்திரிகைகளில் தமிழுணர்வோடு தனித்து நிற்கிறது *தீபம்*. கதைகளையெல்லாம் நான் படிப்பதில்லை. அதற்கு எனக்கு நேரமில்லை. புதிய சிந்தனைகள் வளர *தீபம்* வழி செய்து வருகிறது. அதற்கு என் பாராட்டுக்கள்.

திரு. சீனி. வேங்கடசாமி நிறை குடத்திற்கு ஒரு நல்ல உதாரணம். இன்னும் படித்துக் கொண்டிருக்கிறேன் என்று ஒரு மாணவனுக்குரிய அடக்கத்தோடு அவர் சொல்லும்போது இதை நன்கு உணர முடிகிறது. தமிழ் இலக்கிய வரலாற்று, கல்வெட்டுத் துறைகளில் இவர் ஆற்றியுள்ள பணி போற்றத் தக்கது. *தீபம்* சார்பில் இந்த ஆராய்ச்சி அறிஞரைச் சந்தித்துப் பேசும் வாய்ப்புக் கிடைத்தது குறித்து எனக்கு மகிழ்ச்சி. இருக்கிற இடம் தெரியாமல் அமைதியாக இருந்துகொண்டு தமிழ்ப் பணி செய்யும் இத்தகைய அறிஞரைப் பெற்றிருப்பது தமிழ் நாட்டிற்கே பெருமையாகும். - பேட்டி கண்டவர் சுந்தர ராமச்சந்திரன்.

*தீபம்*, மார்ச், 1970

# பாராட்டுரை

ஜீவபந்து திரு. T.S. ஸ்ரீபால் அவர்கள் எழுதிய *இளங்கோ அடிகள் சமயம் யாது?* என்னும் நூலைப் படித்து மகிழ்ந்தேன். இந்நூல், *சிலப்பதிகார* ஆசிரியராகிய இளங்கோ அடிகளைச் 'சைவ சமயத்தவர்' என்று சிலர் தக்க காரணமின்றி எழுதியிருப்பதைக் கண்டிப்பதோடு, *சிலப்பதிகார* நூலில் காணப்படும் ஜைன சமயக் கருத்துக்களை விளக்கிக்காட்டி இளங்கோ அடிகள் ஜைன சமயத்தவர் என்பதை அங்கை நெல்லிக்கனியெனத் தெளிவாக்குகின்றது. தமிழரின் ஆதிகாவியமாகிய *சிலப்பதிகாரம்* தமிழ் மொழியின் தனிச் சிறப்பையும் தமிழரின் கலை, நாகரிகம் முதலிய பண்புகளையும் இனிதெடுத்தோதுகின்ற ஒப்புயர்வற்ற சிறந்த நூல். இச்சீரிய நூலைத் தமிழருக்குத் தந்தருளிய தமிழன்னையின் அருந்தவச் செல்வராகிய இளங்கோ அடிகள், சமயக் கொள்கையில் சமணராக இருந்தார் என்பதில் வரும் இழுக்கு யாது? சமணர் தமிழ் மொழிக்குச் செய்துள்ள தொண்டுகள் மிகப் பல. அவர்கள் ஆற்றிய அரும்பெருந் தொண்டுகளை அறிந்து அவரைப் போற்றாத தமிழன் தமிழனாவானோ? நிற்க. செய்ந்நன்றி மறந்தவராய்ச் சிலர் ஜைன ஆசிரியர் இயற்றிய நூல்களைச் சிதைத்தும் திருத்தியும் மாற்றியும் மாறுபொருள் கற்பித்தும் அச்சிட்டு வெளிப்படுத்துகின்றனர். இச்செயல் வன்மையாகக் கண்டிக்கத்தக்கது. திரு. T.S. ஸ்ரீபால் அவர்கள் இந்நூலில் இத்தகைய செயல்களைக் கண்டித்தும், இளங்கோ அடிகள் ஜைன சமயத்தார் என்பதையும் நிறுவியுள்ளார். காய்தல் உவத்தல் அகற்றி நடுநின்று நோக்குவார்க்கு இவரது ஆராய்ச்சி உடன்பாடாகும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

சென்னை
10-10-43

*மயிலை. சீனி. வேங்கடசாமி*

***இளங்கோவடிகள் சமயம் யாது?***
T.S. ஸ்ரீபால், பாரிநிலையம், ஏப்ரல், **1957**

# அணிந்துரை

*நாலடியார்*, சமண சமய முனிவர் இயற்றிய சமண சமய நூல் என்பதைத் தொன்றுதொட்டு எல்லோரும் அறிவர். இக்காலத்து, *நாலடியாரை* நன்கு அறியாத சிலர், அது ஆசிவகமத நூல் என்று கூறத் துணிந்தனர். இவ்வாறு மனம்போனபடி எல்லாம் எழுதுவது 'ஆராய்ச்சி' என்று சிலர் கருதுகிறார்கள். இவர்களுடைய தவறுகளையறியாத பாமர மக்கள் இவர்கள் எழுதுவதை உண்மை என்று நம்பி விடுகின்றனர். அவ்வாறு மயங்காமல், உண்மையை உணர்த்து வதற்கும் போலி ஆராய்ச்சியை மறுப்பதற்கும் ஜீவபந்து T.S. ஸ்ரீபால் அவர்கள் இச்சிறு ஆராய்ச்சி நூலை எழுதியிருக் கிறார்கள். இதில் *நாலடியார்* ஆசிவகமத நூல் அன்று, ஜைன சமய நூலே என்பதைத் தெளிவாக உறுதிப்படுத்தியுள்ளார்கள். திரு. T.S. ஸ்ரீபால் அவர்கள் கூறும் காரணங்களும் ஆதாரங் களும் எல்லோரும் ஒப்புக் கொள்ளத்தக்க உண்மைகளாகும்.

சென்னை சீனி. வேங்கடசாமி

1-10-58

*ஜைன முனிவர்கள் இயற்றிய நாலடியார் கடவுள் வாழ்த்தின் வானவில் ஆராய்ச்சி,*

T.S. ஸ்ரீபால், ஜைன இலக்கிய ஆராய்ச்சிக் கழகம், சென்னை, 1958

# அணிந்துரை

ஜீவபந்து T.S. ஸ்ரீபால் அவர்கள் எழுதிய *திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன்* என்பது இந்நூல். இந்நூலின் பெயரே இந்நூலின் கருத்தை ஒருவாறு தெரிவிக்கிறது. *திருக்குறள்* க்டவுள் வாழ்த்திலே முதற்குறளிலே கூறப்படுகிற 'ஆதிபகவன்' என்பதை விளக்குகிறது இந்நூல். ஆதிபகவன் என்பது ஆதி நாதராகிய பகவான் விருஷபதேவரைக் குறிக்கிறது என்பதை நன்கு விளக்குகிறார் திரு. ஸ்ரீபால் அவர்கள். இதற்கு ஆதாரமாகப் பல மேற்கோள்களைக் காட்டியுள்ளார். *திருக்குறள்* கடவுள் வாழ்த்துச் செய்யுட்களையெல்லாம் ஒருங்கே சேர்த்துப் பார்க்கும்போது அருகக் கடவுள் வணக்கம் என்றே தோன்றுகிறது. இந்நூலிற் கூறப்படுகிற அக்கருத்து கொள்ளத்தக்கது. திருவள்ளுவர் கடவுள் வாழ்த்தில் தமது வழிபடுகடவுளை வாழ்த்தினாலும், அவர் நூலில் கூறும் கருத்துக்கள் எல்லா மதத்தாரும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாகப் பொதுத் தன்மை வாய்ந்தவை. இந்நெறியும் இந்நூலில் நன்கு விளக்கப்பட்டுள்ளது.

திருவள்ளுவரைப்பற்றி இக்காலத்தில் பல ஆராய்ச்சி நூல்கள் எழுதப்படுகின்றன. அவற்றில் இந்நூலும் ஒன்று. மாறுபட்ட கருத்துக்களுக்கும் மதிப்புத் தந்து செவிசாய்த்துக் கேட்பது மக்களுக்குள் இருக்க வேண்டிய நற்பண்பாகும். "எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப் பொருள் காண்பதறிவு" என்று திருவள்ளுவர் கூறிய நெறியில் நின்று ஆராய்ந்து தெளிந்து மெய்ப்பொருள் காண்போமாக.

சென்னை
26-4-59

சீனி. வேங்கடசாமி

*திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன்,*
T.S. ஸ்ரீபால், திருத்தக்க தேவர் இலக்கிய மன்றம், சென்னை, 1958

# அணிந்துரை

பேராசிரியர் திரு. ந. சஞ்சீவி அவர்கள் தமிழுலகத்துக்குப் புதியவர் அல்லர். சஞ்சீவி அவர்கள், இலக்கியம் பற்றியும் வரலாறு பற்றியும் எழுதியுள்ள நூல்களைத் தமிழுலகம் அறிந்திருக்கிறது. இப்போது, *செந்தமிழ் வளர்க்கும் சிந்தனைகள்* என்னும் பெயருள்ள இச்சிறு நூலைச் சிந்தனைக்கு விருந்தாக அளித்திருக்கிறார். இந்நூல், தமிழ்நாட்டின் இலக்கியம், வரலாறு, கலை, பண்பாடு முதலியவற்றையும் புதிய கலைகளையும் ஆராய்ந்து செயலாற்றவேண்டிய ஆக்க வேலைகளைப்பற்றி யோசனை கூறுகிறது. தமிழ் மொழியை, தமிழர்களை அறிவுத் துறையில் வளர்ப்பதுபற்றி இந்நூல் கூறும் யோசனைகள் போற்றத்தக்கன; ஏற்கத்தக்கன; செய லாற்றத்தக்கன. இந்த ஆக்க வேலைகளைப் பற்றி நூற்றுக்கு மேற்பட்ட யோசனைகளை உடையது இந்நூல்.

பாரத தேசம் சுய ஆட்சி பெற்ற பிறகு, நாடெங்கும் உணர்ச்சியும் எழுச்சியும் காணப்படுகின்றன. பாரத தேசத்திலே பற்பல மொழிகளைப் பேசுவோர், தத்தம் தாய் மொழியைப் பல்துறைகளிலும் வளப்படுத்த முயன்று செயலாற்றி வருகிறார்கள். ஒரு மொழியை வளப்படுத்துவது அம்மொழி பேசுகிற மக்களை வளப்படுத்துவதாகும். மொழியில் வளர்ச்சி இல்லையேல் மக்களில் வளர்ச்சி இல்லை என்பது மறுக்க முடியாத உண்மை. தமிழ்நாட்டிலும் மொழி வளர்ச்சிபற்றி ஓரளவு உணர்ச்சியும் எழுச்சியும் காணப்பட்டாலும், மற்ற மொழியாளருடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, நம்மவரின் ஊக்கமும் எழுச்சியும் குறைவானதுதான். இதற்குக் காரணம், பலருடைய ஒத்துழைப்பை ஒன்று சேர்த்துச் செயற்படுத்தும் வாய்ப்பு ஏற்படாததுதான்.

தமிழகத்தின் தலைநகரம் முதல் பட்டிதொட்டி வரையில் உள்ள எல்லோரும் தமிழ் வளர்ச்சிக்குப் பணிபுரிந்து தொண்டாற்ற ஆர்வங் கொண்டிருக்கிறார்கள். அரசாங் கத்திலே முன் அணியில் இருக்கிற அமைச்சர்கள் முதல் குக்கிராமத்தில் உள்ள தொண்டர்கள் வரையில் எல்லோரும் தமிழின் ஆக்கத்திற்கும் வளர்ச்சிக்கும் தம்மால் இயன்ற தொண்டு செய்ய ஆர்வத்துடன் இருப்பதைக் காண்கிறோம்.

ஆனால், இந்த ஊக்கத்தையும் உழைப்பையும் பயன்படுத்திச் செயலாற்றுகிற நிலையம் ஒன்று இல்லாதபடியினாலே, இவை யாவும் பயன்படாமலே வீணாகப் போகின்றன. இத்துறையில், எல்லோருடைய அனுபவத்தையும் ஆராய்ச்சியையும் ஒன்று சேர்த்துப் பயன்படுத்த ஒரு நிலையம் இன்றளவும் ஏற்பட வில்லை. இந்தத் தேவையை இந்நூல் சுட்டிக் காட்டுகிறது. இந்நூலில் கூறப்படுகிற யோசனைகளும் கருத்துக்களும் பகற்கனவல்ல; செய்ய முடியாதவை அல்ல; நிறைவேற்றக் கூடியவை; செய்யக் கூடியவையே.

இந்நூலிலே பல துறைகளைப் பற்றிய கருத்துக்களும் யோசனைகளும் கூறப்படுகின்றன. எல்லோருக்கும் எல்லாத் துறைகளிலும் ஆராய்ச்சியும் அனுபவமும் இருக்க முடியாது. ஆனால், ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் பயிற்சியும் அனுபவமும் ஆராய்ச்சியும் பெற்றிருக்கக் கூடும். அவ்வத் துறையில் பயிற்சியும் அனுபவமும் பெற்றவர்கள் அவ்வத்துறை பற்றித் தமது கருத்தைத் தெரிவித்தால், இந்நூலில் கூறப்பட்ட யோசனைகள் எல்லாம் நிறைவேறும் என்பதில் ஐயம் இல்லை. தனிப்பட்டவர்களின் உதவிமட்டும் அல்லாமல் கல்லூரிகள், ஆராய்ச்சிக் கழகங்கள், தமிழ்ச் சங்கங்கள் முதலிய நிறுவனங்களின் ஒத்துழைப்பினாலும் இக்காரியங்களைச் செவ்வனே செய்து முடிக்கலாம்.

போதிய பொருள் வசதி இல்லை என்னும் காரணத்துக் காக இந்த இன்றியமையாத ஆக்க வேலையை ஒத்தி வைப்பது, கடமையைத் தட்டிக் கழிப்பதாகும். கிடைக்கிற சிறு பொரு ளுதவியைக் கொண்டேனும் செயலாற்றத் தொடங்கினால், பிறகு போதிய பொருள் கிடைக்கும் போது இப்பணியை முழுதும் நிறைவேற்றிக் கொள்ளலாம். ஆனால், இந்தத் தொண்டு உடனே செயற்பட வேண்டும் என்பதுதான் எமது விருப்பம்.

*செந்தமிழ் வளர்க்கும் சிந்தனைகள்* என்னும் இந்நூலை எல்லோரும் ஆழ்ந்து படித்து இதில் கூறப்பட்ட துறைகளிலே யாருக்கு எத்துறையில் பயிற்சி உண்டோ அவர்கள் அத்துறையில் தம்மாலான உதவியைச் செய்து தமிழ் வளர்க்க ஒத்துழைப்பாராக. தமிழை வளர்ப்பது தமிழ் மக்களை வளர்ப்பதாகும். தமிழ் மொழி உயர்ந்தால், தமிழன் உயர்கிறான், வளர்கிறான், முன்னேறுகிறான். எனவே தமிழ் வளர்ப்பது என்பது தமிழ் மக்களைத் தமிழ்நாட்டை வளர்ப்பது ஆகும்.

தமிழ்நாட்டைச் சூழ்ந்துள்ள சுற்றுப்புற நாடுகள் எல்லாம் விழிப்படைந்து வேகமாகச் செயலாற்றுகின்றன. ஏன்? உலகம் முழுவதும் அந்தந்த மொழி பேசும் மக்கள் எல்லோரும் விரைந்து செல்கின்றனர். அதிலும் மேல் நாட்டினர் விஞ்ஞானத்

துறையில் (ஆக்கத் துறையிலும் அழிவுத் துறையிலும்) செல்லும் வேகம் சொல்லும் தரத்தது அன்று. உலகத்தில் மற்ற மக்கள் இயங்கும் வேகத்தோடு தமிழ்நாடும் இயங்காமல் பின்தங்கி விடுமானால், தமிழா! உலக அரங்கத்தில் உன் நிலை என்ன என்பதைச் சிந்தித்துப் பார். மற்ற விஞ்ஞான வளர்ச்சிகள் இருக்கட்டும். எல்லா வளர்ச்சிக்கும் அடிப்படையான மொழி வளர்ச்சியைக்கூட, இன்னும் செய்யத் தொடங்காமல் இருக் கிறாய். உடனே உன் ஆக்க வேலையைச் செயற்படுத்து. செயற்படுத்துவாயானால், மற்ற வளர்ச்சிகள் எல்லாம் தாமே வந்து அமைந்துவிடும்.

*செந்தமிழ் வளர்க்கும் சிந்தனைகள்* என்னும் இந்நூல் படிப்பவரின் சிந்தனையைத் தூண்டிவிடும் என்பதில் ஐயமில்லை. தமிழ் வளர்ச்சிக்கு இன்றியமையாத அடிப்படை யான கருத்துக்களை இந்நூல் கூறுகிறது. தகுந்த காலத்தில் இந்நூலை உதவிய திரு. சஞ்சீவி அவர்களுக்கு எமது நன்றி உரியது. இந்நூலைப் படிக்கும் ஒவ்வொருவரும் அவரவர் களுக்கு விருப்பமான துறையில் ஆராய்ந்து தமிழை வளர்ப் பாராக.

வாழ்க தமிழகம்! வளர்க தமிழ் மொழி!

மயிலாப்பூர்,
சென்னை
25-08-59

சீனி. வேங்கடசாமி

*செந்தமிழ் வளர்க்கும் சிந்தனைகள்,*
ந. சஞ்சீவி, பாரிநிலையம், 1959

# அணிந்துரை

திரு. மா.சு.. சம்பந்தன் அவர்கள் எழுதிய அச்சுக்கலை என்னும் நூலைப் படித்து மகிழ்ந்தேன். இது, அச்சுக்கலை தோன்றி வளர்ந்ததைக் கூறுகிற வரலாற்று நூல். பண்டைக் காலத்து எழுது கருவிகள், சீன நாட்டில் அச்சுக்கலை தோன்றியது, அக்கலை ஐரோப்பா கண்டத்தில் வளர்ச்சி யடைந்தது, அச்சுக்கலை மற்ற நாடுகளில் பரவியது, தமிழ்நாட்டில் அச்சுக்கலை ஏற்பட்ட விதம், புத்தகக் கட்டடம், படங்களைப் பதிப்பித்தல் முதலிய பல செய்திகள் இதில் கூறப்படுகின்றன. பல அரிய படங்கள் சேர்க்கப் பட்டுள்ளன. இந்நூலினை எழுதுவதற்கு இந்நூலாசிரியர் பெருமுயற்சி செய்திருக்கிறார். இந்நூல் நன்றாகவும் அழகாகவும் அச்சிடப்பட்டுள்ளது. அச்சுக்கலை வரலாறு பற்றிய எல்லாச் செய்திகளையும் இந்நூலில் காணலாம்.

சென்னை 6-1-1961 மயிலை சீனி. வேங்கடசாமி

*திரு. மா.சு. சம்பந்தன் எழுதிய அச்சுக்கலை என்னும் நூலுக்கு அளித்த இந்த அணிந்துரை அவரது நூலில் இடம் பெறவில்லை. இது தற்போது முதன் முறையாக இந்நூலில் இடம் பெறுகிறது.*

# அணிந்துரை

கார்த்திகை மாதத்தில் மழை பெய்து நிலம் குளிர்ந்த பிறகு, தை மாதத்தில் பனிபெய்யும். பனி பெய்கிற தை மாதத்திலே விடியற்காலையில் படுக்கையைவிட்டு எழுந்திருப்பது துன்பமாக இருக்கும். குளிரைப் பொருட்படுத்தாமல் விடியற் காலையில் எழுந்து, காலைக் கடனை முடித்துக் கடவுளைத் தொழுவது தமிழ்நாட்டு மரபு. அதிலும் முக்கியமாக இளம் பெண்கள் - வயது வந்த மணமாகாத கன்னிப் பெண்கள், விடியற்காலையில் எழுந்து நீராடித் தை நோன்பு நோற்பது பண்டைக் காலத்தில் தமிழ்நாட்டு வழக்கம். மணமாகாத கன்னிப் பெண்கள் மார்கழி மாதத்தில் நோற்று வந்த நோன்புக்குப் பாவை நோன்பு என்பது பெயர்.

தை மாதம் முழுவதும் கிராமத்துக் கன்னிப் பெண்கள் விடியற்காலையில் விழித்தெழுந்து ஒன்று கூடுவார்கள். வராத பெண்களின் வீட்டுக்குப் போய் அப்பெண்களை எழுப்பி அழைத்துக்கொண்டு ஊர்க்குளத்துக்கு அல்லது ஏரிக்குப் போய், சில்லென்றிருக்கும் நீரிலே படிந்து நீராடுவார்கள். நீராடிய பிறகு பூக்களைப் பறித்துக்கொண்டு கோவிலுக்கு வந்து கடவுளை வழிபடுவார்கள். தை மாதம் பாவை நோன்பு காலத்தில் அப்பெண்கள் ஒரே வேளை உணவு கொள்வார்கள். இது கன்னிப் பெண்களுக்கு மட்டும் ஏற்பட்ட நோன்பாகும். சாதி பேதம், மத பேதம் இல்லாமல் இந்நோன்பு தமிழ்நாட்டுப் பெண்கள் கொண்டிருந்த ஒரு மரபாகும்.

இந்தப் பாவை நோன்பை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டது *திருவெம்பாவை* அல்லது *திருப்பாவை* என்னும் செய்யுள் இலக்கியம். வைகறையில் எழுந்து குளத்தில் நீராடி, வழிபடு கடவுளை வணங்குவோம் வாருங்கள் என்று பாவை நோன்பு நோற்கும் பெண்கள் கூறுவது போலத் *திரு வெம்பாவைச்* செய்யுள் அமைக்கப்பட்டுள்ளது. வைணவர், சைவர், ஜைனர் ஆகிய சமயத்தவருக்குத் தனித்தனியே திருப்பாவை நூல்கள் உள்ளன.

ஜைன சமயத்துக்குரிய இந்தத் *திருவெம்பாவை* அவிரோதியாழ்வார் என்னும் பெரியார் இயற்றியது என்ப. இந்நூலின் ஒரு செய்யுளிலே 'அவிரோதி' என்னுஞ்சொல்

வந்துள்ளது. அச்சொல், நூலாசிரியரைக் குறிக்கவில்லை யாயினும் குறிப்பாக அவிரோதியாழ்வாரைக் குறிக்கிறது என்று கருதப்படுகிறது. *திருநூற்றந்தாதி* என்னும் சிறந்த நூலைச் செய்தவர் அவிரோதியாழ்வார். *திருநூற்றந்தாதியில்*, சிறப்பாக நேமிநாத தீர்த்தங்கரரை இவர் கூறுவது போலவே, இத் *திருவெம்பாவையிலும்* நேமிநாதரையே சிறப்பாகப் போற்று கின்றார். இத்திருவெம்பாவை, மற்றத் *திருப்பாவை*, *திருவெம்பாவைகளைப்* போலவே சிறந்த இலக்கியமாக விளங்குகின்றது.

இந்நூல் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு அச்சிடப்பட்டது. இப்போது மீண்டும் அச்சிடப்பட்டு வெளிவருகிறது. இதற்குப் புலவர், கு. பாலசுந்தர முதலியார் அவர்கள் உரை எழுதியுள்ளார்கள். செய்யுட் கருத்தை இவ்வுரை நன்கு விளக்குகின்றது. சிறந்த புலவராகிய இவர் வேறு சில சிறந்த நூல்களையும் எழுதியுள்ளார். ஜைனர்கள் இதைப் பக்தி நூலாகப் படிக்கலாம். ஜைனரல்லாதவர் இதனைத் தமிழ் இலக்கியமாகக் கற்கலாம். ஜைனர்கள் அளித்த தமிழ் இலக்கியங்களில் இதுவும் ஒன்று.

இந்நூலை அச்சிட்டு வெளிப்படுத்திய காஞ்சி ஜைனத் தமிழ் இலக்கிய மன்றத்தாருக்கும் இதற்கு உரை எழுதிய புலவருக்கும் தமிழரின் நன்றி உரித்தாகும்.

சென்னை *மயிலை சீனி. வேங்கடசாமி*
15-1-63

*அவிரோதிநாதர் இயற்றியருளிய திருவெம்பாவை,*

**கு. பாலசுந்தர முதலியார் (உ–ர்)**

**ஜினகாஞ்சி ஜைனத் தமிழ் இலக்கிய மன்ற வெளியீடு, காஞ்சிபுரம், 1963**

# அணிந்துரை

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலே தோன்றி வாழ்ந்த தமிழ்க் கவிஞர்களிலே பெரும்புகழும் படைத்த சிறந்த கவிஞன் மகாகவி சுப்பிரமணிய பாரதி. சுப்பிரமணிய பாரதி உணர்ச்சிமிக்க இனிய எளிய கவிதைகளைக் கொடுத்திருக் கிறார். பாரதி வாழ்ந்த காலத்திலே இந்திய நாட்டிலே தேசிய இயக்கம் மும்முரமாக இருந்தது. ஆங்கில அன்னிய ஆட்சியை எதிர்த்து மக்கள் கிளர்ச்சி செய்தனர். சுதந்தரம் சுதந்தரம் என்ற கூக்குரல் நாடெங்கும் எழுந்தது. மகாத்மா காந்தியடிகளின் தலைமையில் ஆங்கில ஆட்சியுடன் மக்கள் அறப்போர் நிகழ்த்திய காலம் அது. பாரத நாட்டிலே, இமயம் முதல் குமரி வரையில் உள்ள ஒவ்வொரு நாட்டிலும் தேசிய சுதந்தர முழக்கம் பொங்கி எழுந்தது. அக்காலத்தில் பாரதி தேசிய உணர்ச்சியை யூட்டுகிற பாடல்களையும் கவிதைகளையும் இயற்றி நாட்டு மக்களின் உணர்ச்சியைத் தூண்டி தேச விடுதலைப் போராட்டத்தை வலியுறுத்தினார். ஆகவே அவர் தேசியகவி சுப்பிரமணிய பாரதியார் என்று பெயர் பெற்றார். பாரதியின் தேசியப் பாடல்கள் இப்போதும் படிக்கப்படு கின்றன; பாடப்படுகின்றன. அவர் பாடிய தேசியப் பாடல் களுக்கு விளக்கங்களும் விமர்சனங்களும் எழுதப்பட்டுள்ளன.

சுப்பிரமணிய பாரதி சுதந்தரப் பாடல்களை மட்டும் பாடவில்லை, தெய்வங்களைப்பற்றியும் மதங்களைப்பற்றியும் பாடல்களைப் பாடியுள்ளார். ஆனால், இப்பாடல்கள் அதிகமாகப் படிக்கப்படுவது இல்லை. மிகச் சிலரே படிக்கின்றனர். இந்தக் கவிதைகளுக்கு விளக்கங்களும் விரிவுரைகளும் எழுதப்படவில்லை. இந்த முயற்சியில் முதல் முதலாகத் தலையிட்டவர் வடக்கன்குளம் திரு. ம. செல்வராசன் அவர்கள். *பாரதியாரின் பரம்பொருட் பாதை* என்னும் பெயருள்ள இந்த நூலில் பாரதியாரின் பரம் பொருட் கருத்தைப்பற்றி இவர் ஆராய்கின்றார். இது ஒரு புதிய முயற்சி.

பரம்பொருள் அறிவு, பரம்பொருள் நிலையம், பரம் பொருள் வேட்டல், பரம்பொருள் விதி, பரம்பொருள் உணர்வு, பரம்பொருட் சக்தி விளக்கம் என்னும் பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு இந்நூலை இவர் ஆராய்கிறார். தோற்று

வாயில் ஜாதிகளின் விளக்கம் மதங்களின் நிலைமைகளைக் கூறுகிறார்.

*பாரதியின் பரம்பொருட் பாதை* என்னும் இந்நூலிலே கௌதமபுத்தர், இயேசுநாதர், திருவள்ளுவர், முகம்மது நபிநாயகம், தாயுமான அடிகள், இராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்தர், இராமலிங்க அடிகள் முதலிய பெரியோர் களின் போதனைகளுடன் பாரதியாரின் பாடல்களைப் பொருத்திக் காட்டி இவ்வாசிரியர் விளக்கங் கூறுகிறார். சக்தியின் விளக்கத்தில் யோக தத்துவத்தை விளக்குகிறார். உயிரிரக்கமே உண்மைக் கம்யூனிசம் என்பதைப் பாரதியின் வாக்குடன் விளக்குகிறார். கணபதி என்பதற்குத் தத்துவப் பொருள் கூறி விளக்குகிறார். இவருடைய இந்த நூலிலே சித்தர் பெருமக்களின் போக்கு புலனாகிறது. கடைசியில் வேதாந்தி களின் யோக நிலையுடன் பாரதியாரின் 'சக்திப் பாடலை'ப் பொருத்திக் காட்டுகிறார்.

*பாரதியின் பரம்பொருட் பாதை* என்னும் இந்நூல் பாரதியாரின் தெய்வம் - மதம் சம்பந்தப்பட்ட பாடல்களுக்கு ஒரு புதிய விளக்கம் போன்றிருக்கிறது. இப்பாடல்களுக்குப் பல கருத்துக்களையும் கொள்கைகளையும் வெவ்வேறு சமயங்களி லிருந்து எடுத்துப் பொருத்திக் காட்டி விளக்குகிறார் திரு. ம. செல்வராசன் அவர்கள். இவருடைய எழுத்துநடை விளக்க மாகவும் தெளிவாகவும் அழகாகவும் இருக்கிறது. இது இவருடைய முதல் முயற்சி; இவருடைய முயற்சிகள் வெற்றி பெறுவதாக.

மயிலாப்பூர், மயிலை சீனி. வேங்கடசாமி
சென்னை,
2-12-63

*பாரதியின் பரம்பொருட்பாதை,*
**வடக்கன்குளம் ம. செல்வராசன்,**
**இந்திராணி பதிப்பகம், சென்னை, 1963**

# முகவுரை

புலவர் சாமி. சிதம்பரனார் அவர்கள் புலவர் மட்டும் அல்லர்; அவர் சீர்திருத்தக்காரராகவும் வாழ்ந்தார். சாமி. சிதம்பரனாரின் தமிழ் தொண்டுகள் பாராட்டுதற்குரியன, போற்றுதற்குரியன. அவருடைய முற்போக்குக் கருத்துக்களை அவருடைய நூல்களிலும் கட்டுரைகளிலும் காணலாம். நூல்கள் வாயிலாகவும் கட்டுரைகள் மூலமாகவும் அவர்கள் செய்துள்ள சமூகத் தொண்டும் தமிழ்த் தொண்டும் உலகம் அறிந்ததேயாகும். சிதம்பரனார் அவர்கள் பல நூல்களை எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். புத்தகவடிவமாக வெளிவராத பல கட்டுரைகள் உள்ளன. *தமிழர் வீரம்* என்னும் இந்நூல் அவ்வறிஞர் விட்டுச் சென்ற கட்டுரைகளின் தொகுப்பாகும். *அறிவுக்கொடி*, *தாமரை* என்னும் பத்திரிகைகளில் அவர் எழுதிய கட்டுரைகளே இவை. அவருடைய வாழ்க்கைத் துணைவியார் திருமதி. சிவகாமி சிதம்பரனார் அவர்கள் இக் கட்டுரைகளைத் தொகுத்து நூல் வடிவமாக வெளியிட்டுள் ளார்கள். இவர்களுடைய முயற்சியைப் பாராட்டுகிறோம்.

*தமிழர் வீரம்* என்னும் இந்நூலிலே சங்ககாலத்துத் தமிழரின் வீரச்செயல்கள் கூறப்படுகின்றன. வீரம் என்பது போர்க்களத்தில் போர் வீரர் காட்டும் வீரம் மட்டும் அன்று, கோடை, கடமை, நீதி, ஒழுக்கம் முதலியவைகளிலும் வீரம் உண்டு. இவ்வீரங்கள் எல்லாம் இந்நூலில் விளக்கப்படுகின்றன. இந்நூலிலுள்ள போர் வெறி என்னுஞ் செய்யுள் யுத்தங் களினால் நாட்டு மக்களுக்கு உண்டாகும் துன்பங்களையும், கொடுமைகளையும், கஷ்டநஷ்டங்களையும் விளக்குகிறது. தமிழர் கண்ட இன்ப வாழ்வு என்னும் கட்டுரையில் ஆசிரியரின் முற்போக்குக் கருத்துக்களைக் காணலாம்.

இது பொதுவாக மாணவரும் மற்றவரும் படிக்க வேண்டிய நூலாகும். இந்நூலைப் படித்துப் பயன் பெறுவார்களாக. அறிஞர் சாமி. சிதம்பரனார் அவர்களின் ஏனைய கட்டுரை களும் இது போன்று நூல் வடிவில் வெளிவருமானால் பொது மக்களுக்கும் பயனுடையதாக இருக்கும்.

*மயிலாப்பூர், சென்னை 4* *மயிலை சீனி. வேங்கிடசாமி*
12-3-64

***தமிழர் வீரம்,***
**சாமி. சிதம்பரனார், என்சிபிஎச், 1964**

# கருத்துரை

எனது நண்பர் ஜீவபந்து T.S. ஸ்ரீபால் அவர்கள் *எம்மான் கோயில்* என்னும் பெயருள்ள இந்நூலை எழுதியுள்ளார். சென்னைக்கு அருகேயுள்ள புழலேரிக்குச் செல்லும் வழியில் புழல் கிராமத்தில் அமைந்து இருப்பது ஆதிநாதர் கோயில் என்னும் ரிஷபதேவர் கோயில் ஆகும். இந்தக் கோயிலுக்கு எம்மான் கோயில் என்னும் பெயர் வழங்குகிறார்கள். இது, ஜைன சமயம் சிறப்புற்றிருந்த பண்டைக் காலத்தில் அமைக்கப் பட்ட பழங்கோயில் ஆகும். இந்நூலில், இக்கோயிலை வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தி அறநெறிச் செய்திகள் சிலவற்றையும் விளக்குகிறார் இதன் ஆசிரியர். மேலும், *திருக்குறள்* கடவுள் வாழ்த்து ஜைன சமயக் கடவுளை வாழ்த்து கிறது என்பதையும் ஆதிநாதரும், சிவபெருமானும், விஷ்ணுவும் ஒருவரே என்பதையும் நன்கு விவரிக்கிறார்.

கைலாஸே பர்வதே ரம்யே விருஷபோயம் ஜினேஸ்வரா:
சகாரா ஸ்வாவதாரம் யா ஸர்வக்ஞ ஸ்வர்க்க சிவா:

என *சிவபுராணத்திலும்*,

"இஹஹி இக்ஷ்வாகு குல வம்ஸோ[3] த்[4] பவேனா[4] நாபி
ஸுதேனா மருதே[3]வ் யானந்த[3]னேனா மஹாதே[3]
வேணா ரிஷபே[4]ணா தசப்ரகாரோ த[4]ர்ம: ஸ்வயமே
வாசீர்ணா: கேவல ஞான லபே[2] தச்ச பிரவர்த்தித:"

என *பிரம்மாண்ட புராணத்திலும்* மற்றும் *பாகவதம்* முதலிய வைதிக சமய நூல்களிலும், பகவான் விருஷபதேவர் போற்றப்பெறுவதால் இந்நூலாசிரியர் கருத்துக்கள் ஏற்கக் கூடியவையே. மாணவரும் ஆசிரியரும் உரையாடுகிற முறையில் எல்லோருக்கும் விளங்குகிறபடி எளிய நடையில் பல வரலாற்றுண்மைகளுடன் எழுதப்பட்ட இந்நூல் பலரும் படித்துப் பயன்பெறத்தக்கது.

மயிலை சீனி. வேங்கடசாமி

***எம்மான் கோயில்,***
**T.S. ஸ்ரீபால், Jain Mission Society, Madras, 1970**

# முன்னுரை

நமது பாரத தேசம் பல மொழிகளைப் பேசுகிற பெரியதோர் உபகண்டம். இந்தப் பெரிய நாட்டில் வாழ்கிற மக்கள் மொழி, நடையுடைபாவனை, பழக்க வழக்கம் முதலானவற்றில் வேறுபாடுள்ளவராகக் காணப்பட்டாலும், அடிப்படையில் இவர்களிடையே ஒரே விதமான பண்பாடு ஊடுருவிக் காணப்படுகிறது. தமிழர், தெலுங்கர், மலையாளி, கன்னடர், மராட்டியர், வங்காளர் முதலான பாரத தேசத்து மக்களிடையே ஒரே பண்பாட்டு உறவு தொன்றுதொட்டு இருந்து வருகிறதென்றாலும், சுதந்திரம் பெற்றதற்குப் பிறகு இந்தப் பண்பாடு மேலும் ஒன்றி இணைந்து நெருங்கிக் காணப்படுகிறது. பாரத நாட்டில் வாழும் எல்லா மொழி யாரும் தம்மைச் சூழ்ந்துள்ள சகோதர மொழியாரோடு நட்புறவு கொண்டு ஒன்றுபட்டு இணைந்து வாழ முனை கின்றனர். ஒவ்வொரு மொழியாரும் தங்களுக்கு அருகில் வாழ்கிற மற்ற மொழியாளரின் பண்பாடுகளை அறிந்து ஒன்றுபட்டு வாழ முயல்கிறார்கள். ஒருவரையொருவர் புரிந்து கொண்டு நெருங்கிப் பழகி நட்போடு வாழ விழைகிறார்கள். இந்த நிலையில் *தமிழும் பிற பண்பாடும்* என்னும் இந்நூல் வெளிவருகிறது. பன்மொழிப் புலவர் பேராசிரியர் டாக்டர் தெ. பொ. மீ. அவர்கள் தேவையான நேரத்தில், தேவையான இந்த நூலை எழுதியுதவியுள்ளார்கள். தமிழர், தம்மையும் தமக்குப் பக்கத்தில் வாழ்கிற மற்ற மொழியாளரையும் புரிந்து கொண்டு அவர்களோடு ஒன்றுபட்டு இணைந்து வாழ இந்நூல் வழிகாட்டுகிறது.

*தமிழும் பிற பண்பாடும்* என்னும் இந்த நூல், தமிழ் மொழியிலும் ஏனைய பாரத நாட்டு மொழிகளிலும் ஊடுருவிக் காணப்படுகிற கடவுள் வழிபாட்டு (பக்தி பண் பாட்டு) ஒற்றுமையை வெள்ளிடைமலைபோல் விளக்குகிறது. தமிழிலும் ஏனைய பாரத நாட்டு மொழிகளிலும் காணப் படுகிற பக்திப் பண்பாட்டுத் தொடர்பை இந்நூல் செவ்வனே சுருக்கமாக விளக்குகிறது.

சிந்தனைக்குரிய பல உண்மைகள் இந்நூலில் ஆங்காங்கே சிறப்பாகக் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, "தமிழ்

தவிர்த்த பிற திராவிட மொழிகள் பிராகிருதமே என்றும் இந்தோ - ஆரிய வடமொழியின் சிதைந்த வடிவங்களே எனவும் மக்கள் தவறாக உணர்ந்து வாதிக்கத் தலைப்பட்டனர். எனவே, ஊடாட்டமாகப் பரந்து விளங்கும் இப்பண்பாட்டுறவினைக் கண்டறிய முதலில் தமிழையே கொள்வது எளிதானது. அதிலும் திராவிடக் கூறுகளைக் கண்டறிந்து கொள்ளத் தமிழிலிருந்து தொடங்குவது எளிதாகிறது. ஆனால், அதே போது தமிழ்ப் பண்பாட்டிலும் பிற கூறுகளின் பிணைப்பு உண்டு என்பதையும் நாம் மறக்கவில்லை. இன்னொன்றையும் நாம் நினைவிற்கொள்ள வேண்டும். வடமொழியை நாட்டின் எல்லாப் பகுதியைச் சேர்ந்த மக்களும் கருத்துப் பரிமாற்ற மொழியாகப் பயன்படுத்தினர். இதனால் ஒரு நூல் வடமொழியில் எழுதப்பட்டிருக்கின்றது என்பதாலேயே அது முழுதும் ஆரியப் பண்பாட்டினையே விளக்கி நிற்கின்றது என்று கொள்ள வேண்டியதில்லை." - இது போன்ற சிறந்த பேருண்மையைக் கூறுவது ஆழ்ந்த அனுபவமுள்ள பன்மொழிப் புலவருக்குத்தான் இயலும்.

இந்நூலுள் தமிழர் பண்பாடு, தமிழும் பிற பண்பாடு களும், தமிழ்ச் செல்வாக்கு, தமிழும் கேரளமும், தமிழில் கன்னடச் செல்வாக்கு, தெலுங்கும் தமிழும், தமிழ்ச் செல்வாக்கு, இலங்கையிலும் தொலைகிழக்கு நாடுகளிலும், தமிழில் பிறமொழிச் சொற்கள் முதலான தலைப்புகளில் . பல ஆராய்ச்சிக் கருத்துக்கள் உள்ளன. பதினேழு பதினெட்டாம் நூற்றாண்டுகளில் தமிழ் மன்னர் ஆட்சி மறைந்து அயல் மொழிக்காரர் ஆட்சிக் காலத்தில் தமிழ் போற்றுவாரற்று இருந்த காலத்தில் தோன்றிய அம்மானைப் பாடல்கள் முதலான எளிய இலக்கியங்கள் தோன்றின வரலாறு இந்நூலின் இறுதியில் காணப்படுகிறது. தமிழர் ஒவ்வொரு வரும் படித்துப் பயன்பெறத்தக்க இந்நூலை வெளியிட்டு உதவிய நியூ செஞ்சுரி புக் ஹவுஸுக்கும் இந்நூலை எழுதியுதவிய பேராசிரியர் டாக்டர் தெ. பொ. மீ. அவர்களுக்கும் நன்றி கூறுகிறோம்.

மயிலாப்பூர், சென்னை - 4 மயிலை சீனி. வேங்கடசாமி
22-4-1973

*தமிழும் பிற பண்பாடும்,*
தெ. பொ. மீ, என்சிபிஎச், 1973

# சிறப்புரை

தமிழகத்துக்கு மிகவும் தேவையாக இருந்த காலத்திலே நீதிக் கட்சி என்றும் சுயமரியாதை (பகுத்தறிவு) இயக்கம் என்றும் இரண்டு இயக்கங்கள் தோன்றி, தமிழ்நாட்டு அரசியலிலும் தமிழ்ச் சமுதாயத்திலும் பெரிய புரட்சிகளைச் செய்து வெற்றியடைந்தன. ஜஸ்டிஸ் பார்ட்டி (நீதிக்கட்சி)யை 1916ஆம் ஆண்டு சர். பி. தியாகராச செட்டியார் தோற்றுவித்துத் திராவிட மக்களை (பார்ப்பனரல்லாதாரை) உறக்கத்திலிருந்து விழிக்கச் செய்தார்.

1928ஆம் ஆண்டில் ஈ.வெ.ரா. பெரியார் சுயமரியாதை (பகுத்தறிவு) இயக்கத்தை உண்டாக்கிப் பார்ப்பனரல்லாத திராவிட மக்களை இழிவிலிருந்து உயரச் செய்தார்.

இரண்டு இயக்கங்களும், காங்கிரசு கட்சியைத் தங்களுக்கு ஆதரவாகப் பயன்படுத்திக்கொண்டு பார்ப்பன இனம் பார்ப்பனரல்லாதவரைக் கட்டுப்பாடாக அரசியலிலும் சமுதாயத்திலும் உயராமல் அடக்கி அழுத்தி வைத்துக் கொண்டிருந்த காரணத்தினால் தோன்றியவை. நீதிக்கட்சி, அரசியலில் பார்ப்பனரல்லாதாரை உயர்த்துவதை நோக்கமாகக் கொண்டிருந்தது. அரசியலிலும் ஆட்சியிலும் திராவிட மக்கள் பங்கு பெற உழைத்த நீதிக்கட்சி 'அரசியல் பார்ப்பனர்களை நம்பாதே' என்று குரல் கொடுத்து மக்களை எழுப்பிற்று. பார்ப்பனரல்லாத திராவிட மக்களைச் சமூகத் தாழ்விலிருந்து உயர்த்துவதை நோக்கமாகக் கொண்ட சுயமரியாதை இயக்கம், திராவிட மக்களை மூடப் பழக்க வழக்கங்களில் அழுத்தி, அவர்களை முன்னேறவிடாமல் தடைசெய்துகொண்டிருப்பவர் வைதிகப் பார்ப்பனர் என்று கண்டு 'வைதிகப் பார்ப்பனனை நம்பாதே' என்று குரல் எழுப்பிற்று. மதம், சாமி, கோயில், குளம், வேதம், புராணம் இவைகளைக் காட்டி, தமிழரை முன்னேறவிடாமல் வைதிகப் பார்ப்பனர் அமிழ்த்திக் கொண்டிருந்ததைச் சுயமரியாதை இயக்கம் விளக்கிப் பாமர மக்களுக்குச் சுயமரியாதை உணர்வை ஊட்டியது.

இந்த இரண்டு இயக்கங்களும் நாட்டில் செல்வாக் கடைந்து தாங்கள் கண்ட கொள்கைகளில் வெற்றிபெற்றன.

பிற்காலத்தில் ஜஸ்டிஸ் கட்சியைப் பெரியார் ஈ.வெ.ரா. ஏற்றுக்கொண்டு திராவிடர் கழகம் என்னும் பெயரினால் நடத்தினார். அதாவது அரசியல் கட்சியையும் சமுதாய முன்னேற்ற இயக்கத்தையும் ஒன்றாக இணைத்து நடத்தினார். ஜஸ்டிஸ் கட்சி என்னும் நீதிக் கட்சியை வளர்த்தவர்கள் பலர். அவர்கள் எல்லோரும் ஆங்கிலத்தில் பேசியே கட்சியை வளர்த்தார்கள். ஜே. எஸ். கண்ணப்பர் (ஜனக சங்கர கண்ணப்பர்), ஜே.என். இராமநாதன், டி.வி. சுப்பிரமணியம் ஆகிய மூவர் மட்டும் அக்காலத்தில் நீதிக்கட்சியின் பிரசாரகர்களாக இருந்து தமிழில் பேசி நீதிக்கட்சியை வளர்த்தார்கள். ஜஸ்டிஸ் கட்சியின் சார்பாக *ஜஸ்டிஸ்* என்னும் ஆங்கில தினசரிப் பத்திரிகையும் *திராவிடன்* என்னும் தமிழ் தினசரிப் பத்திரிகையும் ஒரு தெலுங்கு தினசரிப் பத்திரிகையும் வெளியிடப்பட்டன. பார்ப்பனர் ஆண் பெண்களும் குஞ்சு குட்டிகளும்கூட தமிழரைச் சூத்திரர் என்று கூறுவது சர்வ சாதாரணமான தினசரிப் பேச்சாக இருந்தது. அப்போது 'சூத்திரன் என்றால், ஆத்திரங்கொண்டடி' என்று நாட்டில் சுலோகங்கள் எழும்பின.

ஈ.வெ.ரா. பெரியார் அமைத்த சுயமரியாதை இயக்கம் நாட்டில் தாய்மொழியாகிய தமிழில் பேசிப் பிரசாரம் செய்தது. *குடி அரசு* என்னும் வாரப் பத்திரிகையும் *பகுத்தறிவு*, *ரிவோல்ட்* என்னும் பத்திரிகைகளும் வெளியிடப்பட்டன. வைதிகப் பார்ப்பனர் சாமியின் பேரால், மதத்தின் பேரால், புராண இதிகாசங்களின் பேரால் 'உயர்ந்த சாதி', 'தாழ்ந்த சாதி'களை உண்டாக்கித் திராவிட மக்களை இழிவான தாழ்ந்த நிலையில் வைத்திருப்பதையும் 'உயர்ந்த சாதி' என்று தங்களைக் கூறிக் கொண்டு பார்ப்பனருக்கு ஆதரவு காட்டிக்கொண்டிருக்கும் 'சாதி' இந்துக்களின் அறியாமையையும் எடுத்துக்காட்டி சுயமரியாதை இயக்கம் பிரசாரஞ் செய்தது. இந்த இயக்கத்துக்கு நாட்டில் பேராதரவு இருந்தது. அதே சமயத்தில் வைதிகர்களின் எதிர்ப்பும் 'உயர் சாதி'யாரின் எதிர்ப்பும் சுயமரியாதை இயக்கத்துக்கு உண்டாயின. சுயமரியாதை இயக்கத் தலைவரைப் பற்றி இழிவாகப் பேசி வைததல்லாமல் வைதிகரும் அவரைச் சார்ந்தவர்களும் காலிகளையும் குண்டர்களையும் ஏவிவிட்டு, சுயமரியாதைக் கூட்டங்களில் சாணி உருண்டை எறிவதும் கல் வீசுவதும் குழப்பம் செய்வது மாக இருந்தார்கள்.

பெரியார் அவர்களின் சுயமரியாதை இயக்கத்தை அவருடன் சேர்ந்து வளர்த்தவர் பலர். அவர்களில் தோழர் குருசாமியும் ஒருவர். கல்லூரிப் படிப்பை முடித்துக்கொண்ட

தோழர் குருசாமி குடியரசு பத்திரிகையைத் தொடர்ந்து படித்து வந்த காரணத்தினால், சுயமரியாதைக் கட்சியில் ஈடுபட்டு, பெரியாரிடம் வந்து சேர்ந்தார்; இயக்கப் பிரசாரகர் ஆனார். சொற்பொழிவுகள் செய்வதும் கட்டுரைகள் எழுதுவதும் அவருக்குத் தினசரி வேலையாக இருந்தன. தோழர் குருசாமி அவர்கள் உயர்ந்த தமிழ்நடையில் எழுதவும் பேசவும் வல்லவர். ஆனால், எல்லோருக்கும் புரிவதற்காக அவர் சாதாரண எளிய நடையை மேற்கொண்டார். குருசாமி அவர்கள் தீவிரப் பகுத்தறிவுவாதி, சீர்திருத்தக்காரர், மூடப்பழக்க வழக்கங்களை ஒழித்தவர். பேச்சிலும் எழுத்திலும் மட்டுமல்ல, செயலிலும் செய்து காட்டியவர். தொண்டைமண்டல முதலியார் என்னும் 'உயர்ந்த' குலத்தவர் என்று கருதப்பட்ட குலத்தில் பிறந்த இவர், தாழ்ந்த குலம் என்று கருதப்பட்ட இசைவேளாளர் இனத்தில் பிறந்த குஞ்சிதம் அம்மாளைத் தம்முடைய குலத்தவரின் எதிர்ப்புகளுக்கு அஞ்சாமல் திருமணம் செய்து கொண்டார். இவர் செய்தது கலப்பு மணம் மட்டும் அன்று; வைதீகச் சடங்கு இல்லாத சீர்திருத்தத் திருமணம் ஆகும். குஞ்சிதம் அம்மையார் குருசாமியைப் போலவே பி.ஏ. பட்டம் பெற்றவர்.

குஞ்சித அம்மாளின் தங்கையும் குருசாமியின் மைத்துனியும் ஆகிய திருமதி காந்தம் அம்மாளும் கல்லூரியில் உயர்தரப் படிப்புப் படித்துப் பட்டம் பெற்றவர். காந்தம் அம்மாளைத் திருமணம் செய்துகொண்டவர் தோழர் சுந்தரவடிவேலு அவர்கள் (இப்போது 'பத்மஶ்ரீ' என்னும் தாமரைச் செல்வர் விருதுபெற்று சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராக இருக்கிறார்). சுந்தரவடிவேலு அவர்கள் 'உயர்ந்த' முதலியார் குலத்தில் பிறந்தவர். இவர் சுயமரியாதைக் கொள்கையுடையவர், பகுத்தறிவுவாதி. இவரும் காந்தம் அம்மையாரைக் கலப்பு மணம் செய்து கொண்டார். கலப்புமணம் மட்டும் அன்று, சீர்திருத்தத் திருமணம், அதிலும் பதிவுத் திருமணம் செய்து கொண்டவர். இவர்களைப் போல பல தோழர்களும் தோழியரும் கலப்புத் திருமணங்களையும் சீர்திருத்தத் திருமணங்களையும் அக்காலத்தில் செய்து கொண்டார்கள். கலப்புத் திருமணங்களைச் செய்துகொண்ட பல தம்பதிகளின் படங்கள் அச்சிடப்பட்ட 'காலண்டர்' அக்காலத்தில் இயக்கத் தோழர்களின் வீடுகளை அலங் கரித்தன. இக்காலத்தில் கலப்புத் திருமணங்களும் சீர்திருத்தத் திருமணங்களும் சாதாரணமாகிவிட்டன. அக்காலத்தில் கலப்புத் திருமணங்கள் செய்து கொள்வதற்கு மனவுறுதியும் தைரியமும் வேண்டியிருந்தது.

இக்காலத்தில் பகுத்தறிவு இயக்கம், சுயமரியாதை இயக்கம் என்றால் கவுரவமாகவும் சிறப்பாகவும் கருதப்படுகிறது.

சமுதாயத்தில் நன்கு மதிக்கப்படுகிறது. ஆனால், அந்தக் காலத்தில் சுயமரியாதைக்காரருக்குச் சமுதாயத்தின் ஏளனமும் ஏச்சும் பேச்சுந்தான் கிடைத்தது.

இவ்வாறு சுயமரியாதை, பகுத்தறிவு இயக்கங்களை வளர்த்து வந்தவர்கள் பலரில் தோழர் குருசாமி, பெரியார் ஈ.வெ.ராவுக்கு அடுத்தபடியாகக் கருதப்பட்டார். இயக்கத்தில் ஆழ்ந்த பற்றும், உறுதியும், தன்னலமில்லாத தியாகமும், பிரசாரமும், தொண்டும், எழுத்தும் ஆகிய இவையெல்லாம் தோழர் குருசாமியைப் பெரியார் அவர்களுக்கு அடுத்த நிலையில் உயர்த்திவிட்டன. தோழர் குருசாமி எண்ணி யிருந்தால் அரசாங்க உத்தியோகத்தில் உயர்ந்த பதவியைப் பெற்று, தன்னளவில் சுகமாகவும் சிறப்பாகவும் வாழ்ந் திருக்கலாம். ஆனால், இயக்கக் கொள்கைகளைப் பரப்பு வதையே குறிக்கோளாகக் கருதியபடியால் பெரிய உத்தி யோகப் பதவியை நாடவில்லை. எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தார். தமிழ்நாட்டில் சுயமரியாதை இயக்கத்தைப் பரவச் செய்து வளர்க்கக் காரணமாக இருந்தவருள் முன்னோடி இவரே.

1928 முதல் 1965ஆம் ஆண்டு வரையில் 37 ஆண்டுகளாக இயக்கத்தை வளர்த்த தோழர் குருசாமி மறைந்துபோனார். அவர் மறைந்து பத்து ஆண்டுகள் ஆகின்றன. சுயமரியாதை இயக்கம், பகுத்தறிவு இயக்கங்களின் ஆதரவாளன் என்னும் முறையில் இயக்கத் தலைவர்கள், தொண்டர்கள் முதலான பலர் எனக்கு அறிமுகமானவர்கள். அவர்களில் தோழர் குருசாமியுடன் நான் நெருங்கிப் பழகியவன்.

இயக்கத்துக்காக உழைத்துப் பாடுபட்ட தொண்டர்கள் பலர் மறைந்து போனார்கள். அவர்களுடைய பெயர்கள்கூட மறக்கப்பட்டுவிட்டன. குருசாமியின் பெயர்கூட மறக்கப் படுமோ என்று நான் அடிக்கடி கருதியதுண்டு. இந்தச் சமயத் தில், குருவிக்கரம்பை திரு. வேலு அவர்கள் தோழர் குருசாமி அவர்களின் வாழ்க்கை வரலாற்றை எழுதி வெளியிடுவதைக் கண்டு உவகையடைந்தேன். திரு. வேலு அவர்கள் இந்த நூலை எழுதி வெளியிடாமலிருந்தால், தோழர் குருசாமியின் பெயரே காலப்போக்கில் மறக்கப்பட்டு மறைந்துபோயிருக்கும். குருசாமி அவர்களின் வாழ்க்கை வரலாறு அவருடைய பெயரை நிலைபெறச் செய்வதுமட்டுமல்ல, அவர் இயக்கத்துக்குச் செய்த தொண்டுகளை நினைவுகூரத்தக்க ஒரு சான்றாகும். தமிழ் இலக்கியங்களில், வாழ்க்கை வரலாறு என்னும் பகுதியில் வெளிவந்த நூல்கள் மிகச் சிலவே. அதிலும் சுயமரியாதை,

பகுத்தறிவு இயக்கத்தில் சேர்ந்தவர்களின் வாழ்க்கை வரலாறு மிகமிகச் சில.

இந்தச் சிலவற்றில் ஒன்று குருசாமியின் இந்த வாழ்க்கை வரலாற்று நூல்.

இந்த நூல், சுருக்கமும் இல்லாமல் பெருக்கமும் இல்லாமல் கச்சிதமாக எழுதப்பட்டிருக்கிறது. கடினமான நடையில் இல்லாமல் எல்லோரும் படித்துப் புரிந்துகொள்ளும் முறையில் எழுதப்பட்டிருக்கிறது. சிரமப்பட்டுச் சான்றுகளைத் தேடிப்பிடித்து இந்நூலை எழுதி அச்சிட்ட குருவிக்கரம்பை வேலு அவர்களைத் தமிழுலகம் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறது. இந்நூலைப் படிக்கும்போது, இந்நூலில் கூறப் படுகிற பல தோழர்களை நேரில் சந்திப்பது போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறது. ஏனென்றால் சுயமரியாதை - பகுத்தறிவு இயக்கத்தில் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த நான் அவர்களை எல்லாம் நன்கறிந்தவன். குருசாமியோடு பழகிய நண்பர்கள் பலர் இன்றும் உயிரோடு வாழ்கிறபடியால், அவர்களுக்கு இந்த நூல் நல்ல விருந்தாக இருக்கும். மற்றவர் களுக்கும் இந்த நூல் ஒரு பகுத்தறிவுவாதியின் வாழ்க்கையை அறிந்துகொள்ள வாய்ப்பாக இருக்கும். இது போன்ற வேறு சில நூல்களைக் குருவிக்கரம்பை வேலு அவர்கள் எழுதித் தமிழுலகத்துக்கு உதவுவார்களாக.

மயிலை சீனி. வேங்கடசாமி

குத்தூசி குருசாமி,
குருவிக்கரம்பை வேலு, வளவன் பதிப்பகம், சென்னை, 1975

# முகவுரை

*சமயங்கள் வளர்த்த தமிழ்* என்னும் இக்கட்டுரைத் தொகுப்பு நூல், நான் சில ஆண்டுகளுக்கு முன்பு அவ்வக் காலங்களில் சில திங்கள் வெளியீடுகளிலும் 'மலர்'களிலும் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பாகும். 'சமயங்கள் வளர்த்த தமிழ்' என்னும் கட்டுரையை முதலாகக் கொண்டிருப் பதனாலே இதற்கு இப்பெயர் சூட்டப்பட்டது.

ஆங்காங்கே 'சிதறிக் கிடந்த இக்கட்டுரைகளைத் தொகுத்து நூல்வடிவாக வெளியிடுவது நலம் என்று நண்பர்கள் சிலர் கூறியதற்கு ஏற்பவே இந்நூல் வெளியிடப்பட்டது. இக்கட்டுரைகள் பல பொருள் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரை கள். புதியபுதிய கருத்துகள் படிப்போரின் அறிவை வளர்க்கும் என்பதில் ஐயமில்லை. தமிழ் மொழியிலே, மேல்நாட்டு மொழிகளில் உள்ளதுபோன்று பலதிறப்பட்ட பொருள்களைக் கூறும் நூல்கள் இல்லை என்று குறை கூறப்படுகிறது. அதிலும் ஆராய்ச்சி நூல்கள் மிகச் சொற்பமாகவே உள்ளன என்றும் கூறப்படுகிறது. எனவே, புதுப்புதுக் கருத்துகளையுடைய நூல் கள் வெளிவருவது மொழியின் ஆக்கத்துக்கும் வளர்ச்சிக்கும் சிறந்ததாகும்.

ஆராய்ச்சி என்பது, எடுத்துக்கொண்ட பொருளை விருப்புவெறுப்பு இல்லாமல் நடுநின்று உண்மை காணும் நோக்கத்தோடு எழுதுவதாகும். இப்படி இல்லாமல், தாம் கொண்ட கருத்தை நிலை நாட்டும் பொருட்டுத் தவறான வையும் பொய்யானவையுமான சான்றுகளைக் காட்டுவது நல்ல ஆராய்ச்சியாகாது. ஆராய்ச்சிக்காரருக்கு உண்மையைக் காணும் செம்மனம் இருக்கவேண்டும்.

இந்நூல் மாணாக்கருக்கும் மற்றவருக்கும் சிந்தனையைத் தூண்டிவிடும் கருவியாக இருக்குமென்று நம்புகிறேன்.

இந்நூல் அச்சேறும்போது அச்சுப் பிழைகளைச் செம்மையாகத் திருத்தி உதவிபுரிந்த என்னுடைய நண்பர் களான வித்துவான் திரு. சி.பி. ஞானசம்பந்தம் அவர்களுக்கும், திரு. ஊ. ஐயராமன் அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகும்.

இந்நூலை வெளியிட்ட சிதம்பரம் மணிவாசகர் நூலகத் தாருக்கும், நன்றாக அச்சிற் பதிப்பித்துத் தந்த நாவல் ஆர்ட்

பிரிண்டர்ஸ் அச்சகத்தின் உரிமையாளர் திரு. நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கும் எனது நன்றியுரியதாகும்.

தமிழ் மொழி வளர்ச்சியில் நாட்டமுடைய அறிஞர்கள் இந்நூலை ஆதரித்துப் போற்றுவார்கள் என்று நம்புகிறேன்.

மயிலாப்பூர், சென்னை
1-10-1966

இங்ஙனம்,
மயிலை சீனி. வேங்கடசாமி

*சமயங்கள் வளர்த்த தமிழ்,*
**மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1966**

# முன்னுரை

அஞ்சிறைத் தும்பி என்பது, அழகான வண்ணச் சிறகுகளுடைய பட்டாம்பூச்சிகளுக்குப் பெயர். மலர்கள் அலர்ந்த பூஞ்சோலையிலே அஞ்சிறைத் தும்பிகள் பூக்கள் தோறும் பறந்து சென்று, தேனையுண்டு மகிழ்வது போல, தமிழ் இலக்கியப் பூங்காவிலே நுழைந்து இலக்கியத் தேனைப் பருகி மகிழ்ந்தபோது, இடையிடையே எனக்குக் கிடைத்த சொல் ஆராய்ச்சியாகையால், இச்சிறு நூலுக்கு *அஞ்சிறைத் தும்பி* என்னும் பெயர் சூட்டப்பட்டது. அன்றியும்,

> கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
> காமம் செப்பாது கண்டது மொழிமோ

என்று இறையனார் கூறியதுபோல, ஒரு சார்பாகக் காமம் செப்பாமல், கண்டதைக் கண்டபடியே, உள்ளதை உள்ள படியே கூறுவதுபற்றி இப்பெயர் சூட்டப்பட்டது.

நூல்களைப் படிக்கும்போது என் மனத்தில் தோன்றிய கருத்துக்களை ஆராய்ந்து அவ்வப்போது எழுதப்பட்டவை இக்கட்டுரைகள்.

தமிழ் இலக்கியம் வளம் மிக்க பெரிய பூஞ்சோலை. அவ்விலக்கியப் பூஞ்சோலையில் புகுந்து ஆராய்ந்து தேடினால், அங்குப் பலப்பல அழகான பொருள்கள் கிடைக்கின்றன. அவ்வாறு கிடைக்கும் பொருள்களில் ஒன்று, சொல் ஆராய்ச்சி. சொல் ஆராய்ச்சி மிகப் பெரியது. அதில் ஒரு சிறு துணுக்கு இந்த *அஞ்சிறைத் தும்பி.*

சொற்கள் எவ்வாறெல்லாம் உருமாறுகின்றன என்பதும், எவ்வாறெல்லாம் புதுப்புதுப் பொருள்களைப் பெறுகின்றன என்பதும் இதில் கூறப்படுகின்றன.

சில நோய்களின் பெயர்கள் என்னும் கட்டுரையில், சில பிராணிகளின் பெயர்கள் நோய்களுக்குப் பெயராக அமைந் திருப்பது கூறப்படுகிறது. அறவாழி அந்தணன், மலர்மிசை ஏகினான் என்னும் கடைசி இரண்டு கட்டுரைகளில், திருக் குறள் ஆசிரியரின் சமயக் கொள்கை சமண சமயச் சார்பு டையது என்பது ஆராயப்படுகிறது.

திருவள்ளுவ நாயனார் சமண சமயச் சார்புள்ளவராக இருந்தபடியினாலேயே அவரது *திருக்குறள்* சமண சமயக் கருத்துள்ளது என்பது பொருள் அல்ல. திருவள்ளுவர், *திருக்குறளை* ஒரு சமயத்தாருக்காகவோ, ஒரு இனத்தாருக் காகவோ, ஒரு நாட்டாருக்காகவோ எழுதவில்லை. உலக மக்கள் அனைவருக்காகவும் உலகப் பொதுமறையாக எழுதப் பட்டது *திருக்குறள்* என்பதில் ஐயம் இல்லை. ஆகவே, திருவள்ளுவர் சமண சமயக் கொள்கையுடையவர் என்பது பற்றித் *திருக்குறளின்* பொதுத்தன்மை போய்விடவில்லை.

சொற்களைப்பற்றிய ஆராய்ச்சி தேவைப்படுகிறது. இவ்வா ராய்ச்சியினால் பல செய்திகளும் கருத்துக்களும் புலனாகின்றன என்பதை இக்கட்டுரைகளினால் அறியலாம். ஆர்வம் உள்ளவர் சொல் ஆராய்ச்சியில் ஈடுபடுவார்களாக.

*அஞ்சிறைத் தும்பி* என்னும் இச்சொல் ஆராய்ச்சிக் கட்டுரைகள், சொல் ஆராய்ச்சி செய்ய வாசகர்களைத் தூண்டி விடுமானால், அதுவே இந்நூல் எழுதியதன் நோக்கம் முற்றுப் பெற்றதாகும்.

இந்நூலினை அச்சிட்டு வெளியிட்ட ஸ்டார் பிரசுரத் தாருக்கு எனது நன்றி உரியது.

*சீனி. வேங்கடசாமி.*

*அஞ்சிறைத் தும்பி,*
ஸ்டார் பிரசுரம், சென்னை, 1958

தாம் வாழ்ந்த காலத்தில் கிடைக்கப் பெற்ற இலக்கியங்கள், வாய்மொழிக் கதைகள், ஓலைச்சுவடிகள், கல்வெட்டுக்கள், அகழ்வாய்வுச் சான்றுகள், நாணயங்கள், கலைப் பொருள்கள், கட்டட – சிற்ப – ஓவியச் செல்வங்கள், இன்ன பிற ஆவணங்கள் என அனைத்துத் தரவுகளையும் முழுமையாகப் பயன்படுத்தித் தமிழியல் ஆய்வுகளில் ஈடுபட்டிருந்த மயிலை சீனி. வேங்கடசாமி அவர்களின் ஆய்வு முடிவுகள் தனித்தன்மை கொண்டவை எனலாம். கிடைத்த தரவுகளைப் பயன்படுத்திக்கொண்ட முறைமையும் அவர்தம் ஆய்வு முடிவுகளின் மேன்மையை உறுதிப்படுத்துகின்றன.